


உ

கணபதி துணை.

# தத்துவப்பிரகாசசுவாமிகள்

அருளிச்செய்த

# தத்துவப்பிரகாசம்

## மூலமும் உரையும்.



———:o:———

யாழ்ப்பாணம் வேலணை

சைவப்பிரகாசவித்தியாசாலை அதிபதி

**வி. கந்தப்பிள்ளையால்**

பரிசோதித்து

———

கொக்குவில்

சந். இரகுநாதையர் அவர்களது

சோதிடப்பிரகாசயந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

———◆———

நந்தன ௵ மாசிமீ.

இதன் விலை ரூபா ௨



உ

# முகவுரை.

சரியை கிரியை யோகம் ஞானமென்னும் நான்குபாதங்களையும் அறியவேண்டுவோர் சைவாகமங்களையும் அவற்றின் வழிநூல் சார்பு நூல்களையுங் கற்றுலன்றி அறியக்கூடாமையானும், அதுவும் சம்ஸ்கிருதத்திலும் வல்லார்க்கன்றி ஏனையோர்க்கு முற்றுமறிதல் கூடாமையானும், அவர்க்கு மவையனைத்துங் கற்றுணர மிக்ககாலம் வேண்டுதலானும், எவருமுணர்தல் அரிதென்பது நோக்கி, யாவரு மதனையறிந்து உண்மைநிலையினின்று வீடுபெற்றுய்யுமாறு கருணைகூர்ந்து மெய்கண்டசந்ததியிற் பொய்யினையகற்றி மெய்யினைக்கண்ட உத்தமசீலரும், சீகாழியைத் தமக்கு வாசத்தானமாகக் கொண்டவரும், சிற்றம்பலநாடிஞரது சிஷருமாகிய ஸ்ரீமத். தத்துவப்பிரகாசசுவாமிகள் முந்நூலின்வழியே சரியைமுதலான்குபாதங்களையும் ஒவ்வொன்றின் நான்காய்ப் பதினறுபாதமாக விரித்து முந்நூற்றுமுப்பத்தேழு திருவிருத்தத்தால் தத்துவப்பிரகாசமென்னும் பெயர்தந்து இந்நூலை அருளிச்செய்தார். இந்நூலையாராய்ந்தோர் சரியையாதி நான்குபாதங்களின் பகுதிகளையும் பரசமய உட்சமயபேதங்கள் நாற்பத்தெட்டினையும் சித்தாந்தபேதம் எட்டினையும் உணர்ந்து சைவசித்தாந்த உண்மைநெறியினின்று வீடுபெற்றுய்வரென்பதறிக.

இந்நூலிலே பதியிலக்கணம், பசுவிலக்கணம், பாசவிலக்கணம், பொதுவிதி, சிறப்புவிதியாக வகுத்து, பதியிலக்கணத்திற் பதித்திறமும் பஞ்சகிருத்தியவியல்பும் சத்திபேதங்களும், பசுவிலக்கணத்தில் மூவகை ஆன்மாக்களியல்பும், பாசவிலக்கணத்தில் ஆணவமுதலிய மலங்களினியல்பும், பொதுவிதியில் சரியையாதி நான்கிற்கும் பொதுவான சவுசம் தந்தசுத்தி நானவிதிகளும், சிறப்புவிதியில் சரியையிற் சரியையாதி பதினறில் சரியையிற்சரியையில் வீசங்கூடாமற் சடங்கநியாசமுதலியனவும், கிரியையிற்சரியையில் வீசங்கூட்டி அங்கநியாசகரநியாசமுதலியனவும், யோகத்திற்சரியையில் பூரகரேசகரும்பக இயமநியமங்களும், ஞானத்திற்சரியையில் சூக்குமதேக தரிசன முதலியனவும், சரியையிற்கிரியையில் திருக்கோயிலிற் றிருவலகிடன்முதலியனவும், கிரியையிற்கிரியையில் சூரியபூசை சிவபூசை அக்கினிகாரியம் போசனவிதி அவுத்திரிதீட்சைக்குரிய ஆசாரியனிலக்கணம் சிடனிலக்கணம் மண்டபம் மண்டலம் குண்டவிலக்கணம் சமயதீக்ஷை விசேஷதீக்ஷை நிருவாணதீக்ஷை அபிடேகம் அந்தியேட்டியும், யோ

கத்திற்கிரியையில் ஆசனவகை பிராணுயாமவகைகளும், ஞானத்திற் கிரியையில் ஞானபூசை சத்தியநிருவாணதீக்ஷை ஞானஅபிடேகம் ஞானஅந்தேட்டியும், சரியையில்யோகத்தில் மந்திரமூர்த்தி தியானுதி யும், கிரியையில்யோகத்தில் பிராசாதவகை முதலியனவும், யோகத் தில்யோகத்தில் நிராதாரயோகமும், ஞானத்தில்யோகத்தில் பஞ்சாக் கர செபநிலேயும், சரியையில்ஞானத்தில் சிவனேயுமடியாரையும் வழிப டுமுறைமையும், கிரியையில்ஞானத்தில் மானதபூசையும், யோகத்தில் ஞானத்தில் ஒளிக்குள்ளொளி தரிசனமும், ஞானத்தில்ஞானத்தில் புறச்சமயமாறும் அவற்றின்பேதம் பதினெட்டும் ஆகிய இருபத்துநா லும், முதனூல்வழியே பன்னிரண்டு சூத்திரமாகப் பகுத்து முதற்சூ த்திரம் இரண்டாஞ்சூத்திரங்களில் அகச்சமயமாறும் அவற்றின் பே தம் பதினெட்டும் ஆகிய இருபத்துநாலும், சித்தாந்தபேதம் எட்டும் ஆகிய ஐம்பத்தாறு சமயங்களின் சங்கற்ப நிராகரணமும், மூன்ருஞ் சூத்திரமுதல் ஒன்பதாஞ்சூத்திரம்வரையில் சித்தாந்ததசகாரியத்தை ப் பஞ்சபூதப்பழிப்புமுதல் முப்பதவதரமாக விரித்தும், பத்தாஞ் சூத்திரமுதற் பன்னிரண்டாஞ்சூத்திரம் வரையும் சிவஞானநிட்டை யுடைய ஞானிகள்தன்மையும் உபாயநிட்டைகளும் கூறப்படும்.

சமயம் விசேடம் நிருவாணமென்னும் மூன்றுதீக்கையும்பெற்று சித்தாந்தநூல்களே ஐயந்திரிபறவுணர்த்தவல்ல ஆசிரியரிடத்தே இத னேக் கற்பவரே இதனுண்மையையுணர்வார்.

இது சைவசமயிகளுக்கு ஆவசியகம் வேண்டிய நூலாயிருந்தும் இதுகாறும் அச்சில் வெளிவராமையால் இதனே எவர்க்குமுபயோகப் படுத்தக் கருதி, எம்மிடமிருந்ததும் இங்கேகிடைத்ததும் வேதாரணி யம்முதலிய இடங்களிற் கிடைத்ததுமாகிய பல பிரதிகளேக்கொண்டு எமது சித்தாந்த ஆசிரியராகிய இணுவில் ஸ்ரீமத். நடராஜஐயரவர்கள் சந்நிதானத்தில் இயன்றளவு திருத்தி வெளிப்படுத்தினேம். வேதா கமநூல்களில் வல்ல உத்தமசிலர்களே! இந்நூலுரைப் பிரதிகளிலு ள்ளவைகளில் விடுபட்டிருக்க அல்லது மாறுபட்டிருக்கக் காண்பீரா யின் அதனே எமக்கு எழுதியனுப்பிவைத்தால் மறுமுறை திருத்தி வெளிவிட ஆவலுடையவனுயிருக்கிறேன்.

வேலணே. }
நந்தனஹு மாசிமீ உ௨. }

இங்ஙனம்,
☞ வி. கந்தப்பிள்ளே.

உ




# விஷயசூசனம்.

———:o:———

உ

சிவமயம்.

# தத்துவப்பிரகாசம்

## மூலமும் உரையும்.

---

## பாயிரம்.

### விநாயகர் வணக்கம்.

பரையீன்றதனியொளியேவடிவாய்ஞானம்
பகரிச்சைகிரியையுமம்மதமாய்ப்பண்டை
வரையீன்றவுமையீன்றவைங்கைநால்வாய்
வளர்முக்கணிருசெவியோர்வலியகோட்டு
நிரையீன்றகிம்புரிக்கும்பக்களிற்றை
நெஞ்சகத்தில்வஞ்சகத்தைத்தவிர்ந்துநாளு
முரையீன்றசொல்லினல்விரையீன்றமலரா
லுரைத்தரிச்சிப்பவர்வினையின்வருத்தமறுப்பவரே.

(இதன்பொருள்.) பரையீன்ற தனியொளியே வடிவாய் - பராசத்தியிற் றோற்றப்பட்ட பரப்பிரகாசமே தனக்கு வடிவாய்—ஞானம் பகரிச்சை கிரியையும் மதமாய் - அறிவிச்சைதொழிலென்னும் மூன்றும் மூன்று மதமாய்—பண்டை வரையீன்றவுமையீன்றவைங்கைநால்வாய் வளர்முக்கணிருசெவியோர் வலிய கோட்டு நிரையீன்ற கிம்புரிக் கும்பக் களிற்றை - பழையதாகிய இமவான்றரப்பட்ட உமையிடத்தே வெளிப்படத் தோன்றிய துதிக்கையுடன் ஐந்துகரத்தினையும் நான்றவாயினையும் மூன்றுகண்ணினையும் இரண்டுசெவியினையும் ஒருகோட்டினையும் அக்கோட்டினிரைபட அடியிற் சேர்க்கப்பட்ட கிம்புரிப்பூணினையும் கும்பத்தலத்தினையுமுடைய யானைப்படிவத்தானை—நெஞ்சகத்தில் வஞ்சகத்தைத் தவிர்ந்து நாளுமுரையீன்ற சொல்லினல் விரையீன்ற மலரா லுரைத்தரிச்சிப்பவர் வினையின் வருத்தமறுப்பவரே - இதய வஞ்சகத்தைத் தவிர்ந்து நாடோறும் பொருட்டெரிசொல்லானும் மருப்பயின்மலரானும் அருச்சித்துத் தோத்திரஞ்செய்யும் அடியார் பிராரத்தவினையின் வருத்தமுமொழிப்பார். என்றவாறு. தனியொளி - கேடுபடாதவொளி. பரையீன்றும் உரையீன்றும் என்பது நிஷ்களவடிவுஞ் சகளவடிவுங் கூறியது. (௧)

## பரசிவவணக்கம்.

திருந்துபரைவடிவாகியிச்சாஞானந்
    திகழ்கரணமாய்க்கிரியைச்செயலதாகிப்
பொருந்துபரதிரோதானமாணையாகிப்
    போதுமிதுசூக்குமமாய்த்தூலபோதம்
வருந்துபரமந்திரமாம்பதம்வன்னஞ்சாங்கம்
    வருபுவனமுபாங்கமுயிரவைபொறிகள்கலைக
டெரிந்தபரகரணங்களாகிவையந்
    திருமேனியாமரன்றன்றிருப்பாதமுரைப்பாம்

(இ-ள்.) திருந்துபரைவடிவாகியிச்சாஞானந் திகழ்கரணமாய்க் கிரியைச் செயலதாகிப் பொருந்துபரதிரோதானமாணையாகிப் போதுமிது சூக்குமமாய்த் தூல போதம் வருந்துபர மந்திரமாம் பதம் வன்னஞ் சாங்கம் - சிவனுக்குச் சூக்குமவடிவாவது பராசத்தியே திருமேனியாகவும் அச்சத்தியிற்றோன்றிய இச்சாஞானங்களே அந்தக்கரணமாகவும் அதிற்றோன்றிய கிரியாசத்தியே தொழிலாகவும் அச்சத்தியிற் பொருந்தப்பட்ட மேலான திரோதானசத்தியே தனது ஆஞ்ஞையாகவும் இப்படிப் போதுமுறைமை இது சூக்குமதேகமாகவும் அந்தச் சிவனுக்குத் தூலவடிவாவது மந்திரங்கள் பதினொன்றும் அறிவாகவும் பதங்களெண்பத்தொன்றும் அக்கரங்களைம்பத்தொன்றும் கைகாலுறுப்பாகிய சாங்கமாகவும் — வருபுவனமுபாங்க முயிரவைபொறிகள் கலைகடெரிந்த பரகரணங்களாகி வையந் திருமேனியாமரன்றன் றிருப்பாத முரைப்பாம் - புவனங்களிருநூற்றிருபத்துநாலும் ஆயுதம் ஆபரணமாகவும் உயிருமுடம்பும் இட்டமாகிய தத்துவமுப்பத்தாறும் ஞானேந்திரிய கன்மேந்திரியங்களாகவும் கலைகளைந்துந் தெரித்துச் சொல்லப்பட்ட மேலான அந்தக்கரணங்களாகவும் பிரபஞ்சந் திருமேனியாகவுங் கொள்ளப்படுமாதலால் இப்படிச் சூக்கும தூல வடிவையுடைய சிவனது திருவடித்தாமரைகளையே வழுத்தாநின்றோம். எ-று. உயிரவையென்றது உயிரையும் உயிர்க்கூட்டமாகிய தத்துவங்களையுமென்றறிக. (உ)

## சிவசத்திவணக்கம்.

அருபரையப்பராபரனுலருளுண்டாயதுதா
    னுயிரத்திலொருகூறுயதிலிச்சாஞானம்
வருபரமாங்கிரியையவைமலரகிதமாகி
    வந்ததற்பினங்கவற்றினிச்சைவடிவாகித்
தருபரனுகருத்தானைதனுகரணபுவனந்
    தானுகிவையமெலாந்தானுக்கியழித்து
மருபரமகினைவுவருமுயிர்க்கிறையையளிக்கு
    மாதுமைதன்றிருப்பாதப்போதுளத்தின்வைப்பாம்

(இ - ள்.) அருபரை யப்பராபரனு லருளுண்டாய் - வாக்கு மனதிற் கெட்டுதற்கரிய பராசத்தியிற் பரமசிவனாலே திரோதானசத்தியுண்டாய் — அதுதானாயிரத்திலொருகூறாய் - அத்திரோதானசத்திதான் பராசத்தி நிறைவி லாயிரத்திலொரு கூறாய்—அதிலிச்சாஞானம் வருபரமாங்கிரியையவை மலரகித மாகி வந்ததற்பின் - அத்திரோதானசத்தியி லாயிரத்தொருகூறு இச்சையாக வும், இச்சையி லாயிரத்தொருகூறு ஞானமாகவும், ஞானத்தி லாயிரத்தொரு கூறு கிரியையாகவும் சத்திகள் மூன்றும் நிருமலவடிவாக வுண்டாயபின் — அங்கவற்றினிச்சை வடிவாகி - அந்தச் சத்திகளின் செயலால், தனக்குவேண் டும் வடிவுகொண்டு — தருபரனுக்குத் தானே தனு கரண புவனந் தானாகி - தனக்கு அறிவுதரப்பட்ட சிவனுக்கு அந்தப் பராசத்திதானே உடலுங் கரண மும் உலகமுமாகி—வையமெலாந் தானாக்கியழித்தும் - அச்சிவனோடு கூடி நின்று உலகத்தையுண்டாக்கியும் அழித்தும்—மருபரமநினைவு வருமுயிர்க்கிறை யையளிக்கும் - அப்படித் தோற்றியழிக்கப்பட்ட உயிர்களிற் பரத்திலே பொருந்துங் கருத்தையுடைய வுயிர்களுக்குச் சிவனது திருவடிநீழலினிலைப்பா றுந்தன்மை புரிவிக்கும்—மாதுமைதன்றிருப்பாதப்போதுளத்தில் வைப்பாம் - உமைமாதினுடைய திருவடித்தாமரைகளையே அறிவின்பயனாக வைத்து வண ங்காநின்றேம். எ-று. (௬)

## சந்தானகுரவர் வணக்கம்.

நந்திசனற்குமரன்சத்தியஞானியடிசேர்
நாதனும்பரஞ்சோதிமெய்கண்டதேவன்
முந்துசண்பையர்தலைவன்கொற்றவன்குடியே
முதுபதியாமுமாபதியிம்முறைமையிலேயாண்ட
செந்திருவின்பயன்சிற்றம்பலநாடினன்மெய்ச்
சிவஞானவடிவானதிருமேனியடைவாய்த்
தந்தவிவர்சந்தானகுரவரிவர்மலர்த்தா
டப்பாமலென்மனத்திலொப்பாகவைப்பாம்.

(இ - ள்.) நந்தி—வைப்பாம் - ஸ்ரீ நந்திகேசுரநாயனார் அவரிடத்தருள் பெற்ற சனற்குமாரபகவான் அவரடிபேணிய சத்தியஞானதரிசனிகள் அவரடி பேணி யுலகத்திற்கு நாதனாகிவந்த பரஞ்சோதிமகாமுனிவர் அவரது தாளைப் பொருந்திய வெண்ணெய்நல்லூரையாளுஞ் சுவேதவனப்பெருமாளாகிய மெய்க ண்டதேவநாயனார் அவரது திருவடியார் நாற்பத்தொன்பதின்மரின் சிரேஷ்டரா கியசண்பையர்தலைவநாயனார் இம்முறைமையிற் போந்தநெறியிற் றில்லைமூவாயி ரவரிலொருவராகிய உமாபதிதேவரென்னும் அபிடேகநாமமும் கொற்றவன்குடி யிலிருக்கையாற் கொற்றவன்குடி முதலியாரென்னுந் திருநாமமுமுடையார் இந் தமுறைமையிலே புகுந்து ஒன்றுக்கும் பற்றாத எம்மை யடிமைக்கொண்ட செம்

மையழகின் பயனாகிய சிற்றம்பலநாடினார் இப்படியே சிவஞானமே வடிவாகச் சந்தானக்கிரமமாக எழுந்தருளிய இவர்களே சந்தானகுரவரெனப்படுவர். இவர்கள் திருவடியை ஒருகாலத்தும் தவறாமல் என்னிதயத்தில் ஒருபொருளாக வைத்து வணங்காநின்றேன். எ-று. (௪)

## சமயகுரவர்வணக்கம்.

துருவாசன்பிருகுவியாக்கிரபாதன்றதீசன்
சொல்லரியபதஞ்சலிநாரதனெடுபமனிய
னுருவாதிமுனிவர்கவுணியநாதர்நாவுக்
கரசருயராரூரர்வாதவூரர்
கருவாதிலழுந்தாமலெழுந்தருளியருளிற்
கருதுபத்தியினிறைந்தகாதலோர்க
டருவார்மிக்கருளெமக்குமெம்போல்வார்க்குஞ்
சமயகுரவர்களிவர்கடமையுளத்திற்றரிப்பாம்.

(இ-ள்.) துருவாசன்—தரிப்பாம் - துருவாசமுனிவர் பிருகுமுனிவர் வியாக்கிரபாதமுனிவர் ததீசிமுனிவர் பதஞ்சலிமுனிவர் நாரதமுனிவர் உபமன்னியமுனிவர் முதலாக எண்ணப்பட்ட முனிவரும், திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் திருநாவுக்கரசுநாயனார் சுந்தரமூர்த்திநாயனார் திருவாதவூர்நாயனார் இவர்களுமே யாம் பிறவிவேதனையிலழுந்தாது வடிவுகொண்டெழுந்தருளித் திருவருளாற் பத்திநெறி முறைமைகாட்டியருளிய கருணைநெறியுடையோர்கள், எமக்குமெம்போல்வார்க்கும் திருவருளைத் தருவார்கள். இவர்கள் சமயகுரவர்களாம். இவர்களையே உள்ளத்தில்வைத்து வணங்காநின்றேம். எ-று. சொல்லரியவென்பதனை யெப்பெயரினுங் கூட்டுக. (௫)

## குருவணக்கம்.

மனநினைவில்வாக்கிலனைவருக்குமறிவரிய
வள்ளல்கள்ளத்தினான்மறுகுமறிவிலியேன்
றனைநினைவிலுட்கொண்டேயவனவளோடதுவாந்
தன்மையினின்மலவடிவுதன்னைமன்னித்
தினையனையவளவிலிருவினைதுலையொப்பறிந்து
சீர்காழிமன்னுசிற்றம்பலநாடினனென்
முனைவினையுமுடல்வினையும்வருவினையுமறுத்து
முத்தியளிப்பவன்மலர்த்தாள்சித்தமுறவைப்பாம்.

(இ-ள்) மனநினைவில் வாக்கிலனைவருக்குமறிவரிய வள்ளல் - அந்தக்கரணங்களுக்கும் வாக்குக்கும் மூவகையுயிருக்கும் அறிவரிதாய தலைவன்—கள்ளத்

தினுன் மறுகுமறிவிலியேன்றனை நினைவிலுட்கொண்டே - அவனவளோடதுவா ந்தன்மையி னின்மல வடிவுதன்னை மன்னி - தன்முறைமைதெரியாது நிற் கையினுலே என்முறைமை மிகுத்துப் பிறவியிற்றடுமாறும் அறிவிலேன்றன்னை யும் ஒருபொருளாகத் திருவுள்ளத்து அவனவளதுவென்னும் பிரபஞ்சத்துக்கப் பாற்பட்டிருக்கவும் அதற்குடன்பட்டவன்போல ஒரு நின்மலவடிவையெடுத்து க்கொண்டு — இருவினை துலையொப்பறிந்து சீர்காழி மன்னு சிற்றம்பலநாடி ஞன் - எனது புண்ணியபாவத் துலையொப்பையும் மலபரிபாகத்தையும் அறிந் தருளிச் சீர்காழி திருப்படைவீடாகவும் சிற்றம்பலநாடிஞரென்னுந் திருநாம முங்கொண்டருளி — தினையனையவளவில் என்முனைவினையும் உடல்வினையும் வருவினையு மறுத்து முத்தியளிப்பவன் மலர்த்தாள் சித்தமுற வைப்பாம் - இனைப்போதிற் றிருக்கண்சாத்திச் சஞ்சிதமும் பரிசித்துப் பிராரத்தமுந் தரிசிப் பித்து ஆகாமியமும் நீக்கியருளி நீங்காத முத்தியுந் தருபவனது தாமரைமலர்த் தாளை இதயத்திலுற நாடோறும் வைத்து வணங்காநின்றேம். எ-று. நின்மல வடிவின்மன்னியென்பது நின்மலவடிவுபோலப் பொருந்தியென்றுமாம். (௬)

## அவையடக்கம்.

மிகுமுணர்விலுத்தமர்களிந்நூல்கண்டான்
மிகைகளைந்துகுறைநிரப்பிப்பாராட்டிவிடுவார்
நகுமுணர்வின்மத்திமர்களெழுத்துச்சொற்பொருள்கோ
ணற்செயலுளலங்காரச்சொற்கொப்புக்கொள்வர்
தொகுமுணர்வுசொற்பாடொன்றற்றுலுங்கொள்ளார்
தொடர்ந்திவர்போலொப்புமைகொள்ளவுமறியாவதமர்
பகுமுணர்வின்பாலினராயொத்தபொழுதொத்துப்
பழித்தபொழுதுடன்பழிப்பர்வழுக்கிலுளமிலரே.

(இ-ள்.) மிகுமுணர்விலுத்தமர்களிந்நூல்கண்டால் மிகைகளைந்து குறை நிரப்பிப் பாராட்டி விடுவர் - அறிவுமிகு முத்தமரானவர்கள் இப்பொழுதுண் டாகிய இந்நூலைக் கண்டால் யாப்பிற் பொருளின் மிகையுள்ளது நீக்கிக் குறை யுள்ளது நிறைத்து நற்பொருளாகக் கைக்கொண்டுவிடுவர்—நகுமுணர்வின் மத் திமர்கள் எழுத்துச் சொற்பொருள் கோள் நற்செயலுளலங்காரச் சொற்கொப்பு க்கொள்வர் தொகுமுணர்வு சொற்பாடொன்றற்றுலுங் கொள்ளார் - அறிவி ஞன் மகிழு மத்திமராயினர் பஞ்சவதிகாரச்சொற்கு நேர்வரில் இந்நூலைக் கைக் கொள்வர் அவற்றிற்குப் பொருள் கோள் குறையினும் சொற்பகுதி குறையினும் மகிழ்ந்து பாராட்டார்—தொடர்ந்திவர்போ லொப்புமைகொள்ளவுமறியா அத மர் பகுமுணர்வின்பாலினரா யொத்தபொழுதொத்துப் பழித்தபொழுதுடன் பழிப்பர் வழுக்கிலுள மிலரே - இம் மத்திமர்போலச் சொற்பொருளோடு கூட்டி யொப்புநோக்கி விழுமியதறிந்து கைக்கொள்ளமாட்டாத அதமர் இர

ண்டபெட்ட அறிவினராய் நன்னெறியோர் பாராட்டியவிடத்து ஒக்கப்பாராட்டியும் தீநெறியோரிகழ்ந்தவிடத்து ஒக்கவிகழ்ந்துஞ் செய்வர் குற்றமறக்கொள்ளுங் கருத்தையுடையரல்லராதலால். எ-று. (எ)

## நூன்முறையும் நூற்பெயரும்.

நற்பொருளாம்பரன்பாலினந்தியருணூலு
நல்வழியாமெய்கண்டான்சண்பையர்தனுத
னற்புதமாமுமாபதிதாமிவருரைத்தநூலு
மாகமத்தினுட்பொருளுமளப்பில்பரசமயப்
புற்புதமாநிலையில்பொருளனைத்தும்பார்த்துப்
பொருண்மைப்பாலறியாதமருண்மைப்பாலுடையேன்
சொற்பொருளாற்றத்துவப்பிரகாசமெனச்சொன்னேன்
சொல்லிரவியொளியைமின்மினிதொடருநெறியே.

(இ-ள்.) நற்பொருளாம் பரன்பாலி னந்தியருணூலும் - பரமசிவனிடத்துக் கேட்கப்பட்டு நந்திகேசுரநாதனுர் அருளிச்செய்யப்பட்ட வடமொழிச் சிவஞானபோதமும்—நல்வழியாமெய்கண்டான் சண்பையர்தன்நாதன் அற்புதமாமுமாபதிதா மிவருரைத்தநூலும் - நன்னெறிவழியாக மெய்கண்டதேவநாயனுர் அருளிச்செய்யப்பட்ட தென்மொழிச் சிவஞானபோதமும் சண்பையர்தலைவநாயனுர் அருளிச்செய்த சிவஞானசித்தியும் ஆச்சரியமாக உமாபதிதேவநாயனுர் அருளிச்செய்த சிவப்பிரகாசமும்—ஆகமத்தினுட்பொருளும் அளப்பில் பரசமயப் புற்புதமாம் நிலையில்பொரு ளனைத்தும்பார்த்துப் பொருண்மைப்பாலறியாத மருண்மைப்பாலுடையேன் - ஆகமங்களிலுள்ள நெறியும் எல்லைப்படாது நீர்க்குமிழிபோலும் நிலையில்லாத பரசமயங்களனைத்தும் பார்த்துப் பொருள்கொள்ளப்படும் பகுதியறியாது மருள்கொள்ளப்படும் பகுதியினைக்கொள்ளும் யானும் — சொற்பொருளாற் றத்துவப்பிரகாசமெனச் சொன்னேன் - சொற்பொருள்படும் பகுதியையுடையதுபோலத் தத்துவப்பிரகாசமென வெனதாசையாலொருநூல் செய்தேன் அது என்போலவெனில்—சொல்லிரவியொளியை மின்மினிதொடருநெறியே - இந்நூல் முந்நூல்கட் கொப்புவருந்தன்மை ஆதித்தியப்பிரகாசத்தை மின்மினிப் பிரகாசமொக்குமென்று நினைக்குந்தன்மையாம். எ-று. தத்துவங்கட்கும் ஆன்மாவுக்கும் சிவனுக்கும் தத்துவமென்று பெயராதலால் தத்துவப்பிரகாசமென்று பெயராயிற்று. தத்துவ மென்பது உண்மை. தத்துவரூபமாகுந்தருமுருவருவமெல்லாம் என்பதினுனுங் காண்க.

பாயிரமுற்றிற்று.

---

## அளவைகூறுகின்றார்.

மேலளவைகாட்சியொடுகருதலிவைமூன்று
மிகுகாட்சியையமேதிரிபுவிகற்பத்தோ
டேலும்வாயிற்காட்சிமனக்காட்சிதன்வே
தனைக்காட்சியோடியோகக்காட்சியெனவேழாம்
மேலையுலகிற்சிவனேவாசானிந்த
வியனுலகனேவென்பதையமகனென்று
மாலுறுதறிரிபுபேர்சாதிகுணங்கன்ம
மருவுபொருளாற்காண்டல்விகற்பமாமதியே.

(இ-ள்.) மேலளவை காட்சியொடு கருதலுரை மூன்றும் - ஆராய்ந்தமேலாமுணர்வு சிவஞானத்தைத் தெரிசிப்பது சிவஞானத்தைச் சிந்திப்பது சிவஞான நூலோதிக் கண்டுணர்வதென மூன்றுபேதமாம்—மிகுகாட்சி யையமே திரிபு விகற்பத்தோடேலும் வாயிற்காட்சி மனக்காட்சி தன்வேதனைக்காட்சியோடியோகக்காட்சியெனவேழாம் - மிகுந்த காட்சிபேதமாவது ஐயக்காட்சி திரிபுக்காட்சி விகற்பக்காட்சியுடனே அசையுந்தொழிலையுடைய விந்திரியக்காட்சி மானதக்காட்சி தன்வேதனைக்காட்சியோ டியோகக்காட்சியென வேழுபேதமாம்—மேலையுலகிற் சிவனேவாசானிந்த வியனுலகனே வென்பதையம் - இவற்றி னடைவே யுன்னுமளவில் புறத்துக் குற்றியோ மகனோ தோன்றுகின்றவுருவென் றையுறுவது அகத்து நமக்குணர்த்துவதான ஆசாரியனாய் வந்தவன் தேவுலகிற் சிவனோ பூவுலகில்மானுடனோ வென்றையப்படுவது ஐயக்காட்சி—மகனென்றுமாலுறுதறிரிபு - புறத்துக் குற்றியை மகனென்று காண்பது அகத்துத் தேவனை மானுடனென்று காண்பது திரிபுக்காட்சியாம்—பெயர் சாதி குணங் கன்மம் மருவுபொருளாற் காண்டல் விகற்பமாமதியே - புறத்து ஒரு பிறப்பின் பெயரானுஞ் சாதிபேதத்தானும் தன்குணத்தானும் தொழிலின் பேதத்தானும் அருத்தாபத்தியானு முணர்வது அகத்து மானுடப்பெயரானும் குலத்தின் பேதத்தானுந் தொழிலின் பேதத்தானும் பொருளின் பேதத்தானும் காண்பது விகற்பக்காட்சியாம். எ-று. (க)

மதிவாயிற்பொறிவழியிற்கரணங்கள்கூட்டி
மதிப்பதுவாயிற்காட்சியதின்மதித்தபொருளைக்
கதுவிமனுதிகளினாற்காண்டன்மனக்காட்சி
கரணங்கள்வாயில்வழிக்கண்டதன்றித்
திதமுறவிச்சாஞானச்செயலிலிராகாதி
செலுத்துதறன்வேதனையாஞ்சிவன்செயலிற்கூடி
யதிகமாஞ்செல்காலங்கழிகாலமெல்லா
மறிந்துணர்வததுயோகக்காட்சியாவறையே.

(இ-ள்.) மதிவாயிற் பொறிவழியிற் கரணங்கள் கூட்டி மதிப்பது வாயிற் காட்சி - இன்னுங் காட்சிபேதத்தில் புறத்துமனுதிகளை இந்திரியங்களோடு கூட்டிப் புறப்பொருளை நன்று தீதெனவறிவது அகத்துத் தன்முதலாகிய குருவை நன்று தீதென்று மதிப்பது வாயிற்காட்சியாம்—அதின் மதித்த பொருளைக் கதுவி மனுதிகளினுற் காண்டல் மனக்காட்சி - புறத்து அந்த வாயிற்காட்சியாற் கண்டு மதித்தவுருவேதாயினும் அதனைக் கண்டபடி மனத்தாலே குறித்துணர்தல் மனக்காட்சி அகத்துப்புறப்பொருளுமாம்—கரணங்கள் வாயில்வழிக் கண்டதன்றித் திதமுறவிச்சாஞானச் செயலிலிராகாதி செலுத்துதறன் வேதனையாம் - மனுதிகளாலும் பொறிகளாலும் காணு முறைமையின்றிக் கலைவித்தை இராகாதியாலறிந்து ஆசைப்பட்டு விளக்கமுற்று இராகாதியுறுவது தன் வேதனைக்காட்சியாம் அது பிறவாசை முதலியனவும் ஞானதிசையிலாசை முதலியனவுமாம்—சிவன்செயலிற் கூடியதிகமாஞ் செல்காலங்கழிகாலமெல்லா மறிந்துணர்வதது யோகக்காட்சியா வறையே - சிவன்செயலாகிய கிரியாசத்தியின் வழியிலே கூடி யதன்செயலாகியே முன்னையுகத்தினீங்கினவையும் பின்னையுகத்தில் வருமவையும் நடக்குமுகத்தி லுள்ளவையும் எல்லாமறிந் துணர்வது யோகக்காட்சியாகச் சொல்லப்படும். எ-று. (உ)

அறிகருதறன்னியல்புபொதுவெனவோரிரண்டா
மவைதாமும்பக்கமூன்றின்மூன்றேதுவாலே
செறிபொருளைத்தானறிதல்பிறர்க்கறிவிப்பதுமாஞ்
சேர்பக்கங்குறித்தபொருடெரிக்குமிடமாகுங்
குறிமலையினெருப்பென்றன்மலைப்பக்கமாகுங்
கோலுமடுக்களைபோலுமென்றனிகர்பக்கம்
நிறைநீரினெருப்பென்றனிகராப்பக்கம்
நிலையேதுமூன்றினையும்நிகழ்த்தக்கேளே.

(இ-ள்.) அறிகருதல் தன்னியல்பு பொதுவெனவோரிரண்டாம் - அறியப்பட்ட கருதலனுமானமாவது தன்னியல்பென்றும் பொதுவியல்பென்று மிரண்டுவகையாம்—அவைதாமும் பக்கமூன்றின் மூன்றேதுவாலே செறிபொருளைத் தானறிதல் பிறர்க்கறிவிப்பதுமாம் - அவையிரண்டும் மூன்று பக்கத்தின் மூன்றேதுக்கொண்டு தானறிவதும் பிறர்க்கறிவிப்பதுமாம்—சேர்பக்கம் குறித்தபொரு டெரிக்குமிடமாகும் - அந்தப்பொருளுக்குட்பட்ட பக்கமாவது குறித்தபொருடோன்றுமாதாரமாம்—குறிமலையின் நெருப்பென்றல் மலைப்பக்கமாகும் - புறத்துப் பக்கங்கொள்ளுமிடத்து மலையிலே நெருப்புண்டென்றல் நெருப்பிருத்தற் கிடம் மலையாம். ஞானக்குறியிற் கன்மமிருக்கு மென்றல் மாயைப்பக்கமாம்—கோலுமடுக்களைபோலு மென்ற னிகர் பக்கம் - நிகர் பக்கமாவது ஒப்பாகும்பக்கமாம் அஃதாவது கொள்ளப்பட்ட அடுக்களையென்றல் அக்கினிக்கிடமாம் என்பது நிகர்பக்கமாம். ஞானத்திற் கொள்ளப்படுமிடத்து

மனத்திற் கன்மந் தோற்றப்படு மென்றால் அது * துல்லியபக்கமாம்—நிறைநீரி னெருப்பென்றா னிகராப்பக்கம் - நிறைந்த நீரிலே நெருப்பிருக்கு மென்றால் அஃது ஆதாரமல்லவாதலாலே ஒவ்வாதபக்கமாம். ஞானத்தில் சிவனுக்காதா தாரம் சுத்தமாயை அசுத்தமாயைக ளென்றால் அது நிகராப்பக்கமாம்— நிலை யேது மூன்றினையும் நிகழ்த்தக் கேளே - நிலைமையான வேதுக்கள் மூன்றினை யும் விளங்க (ச் சொல்வாம்) கேட்பாயாக. எ-று. * துல்லியம் - ஒத்தபக்கம். (௩)

கேளேதுமூன்றாகையியல்புகாரியமேற்
 கிளருமனுபலத்தியாமியல்புமாவு
நீளுங்கைமாவும்வருமென்றான்மாவை
 நிகழ்குதிரையெனமதித்தனிகழ்காரியவேது
மூளுபுகைகொண்டனலைமுன்னலனுபலத்தி
 முற்றத்துங்குளிரிலையாற்பனியில்லென்ற
லாளவிவையைவகையாற்றான்குறிப்பதன்றி
 யபற்குமிக்குறியறிவிப்பதுமாகவறியே.

(இ-ள்.) கேளேதுமூன்றாகையியல்புகாரியமேற் கிளருமனுபலத்தியாம் - ஏதுக்கள் மூன்றினையும் கேட்பாயாக அவை இயல்பேது வென்றும் காரிய வேதுவென்றும் அனுபலத்தியேதுவென்றும் தோன்றுவதாம்—இயல்புமாவும் நீளுங் கைமாவும் வருமென்றால் மாவை நிகழ் குதிரையென மதித்தல் - புற த்தியல்பேதுக் கூறில் மாக்களும் கைமாக்களும் இனமாக வந்ததென்றால் மாவென்ற சொல்லைக் குதிரையென்று மதிப்பதாம் அகத்தியல்பேது தத்துவமெ ன்றாற் பொதுவாயினும் விந்துவிலைந்து தத்துவமென்றால் சுத்ததத்துவங்களையும் வடிவுகளையுங் கொள்ளப்படும்— நிகழ்காரியவேது மூளுபுகைகொண்டனலைமு ன்னல் - விளங்கப்பட்ட காரியவேதுவாவது புறத்துப் புகைந்ததுகொண்டு அனலை அறிந்ததாம் அகத்து அறியாமைகண்டே ஆணவமுண்டென்று குறிப்ப தாம்—அனுபலத்தி முற்றத்துங் குளிரிலையாற் பனியில்லென்றல் - அனுபல த்தியேது புறத்து முன்றிலினும் குளிர்ந்ததில்லையாதலாற் பனியில்லையென்று கொள்வது. அகத்து அறிவின்மிகுதிகண்டால் ஆணவம் நீங்கிற்றென் றறிவது —ஆளவிவையைவகையாற்றான் குறிப்பதன்றி யயற்கு மிக்குறியறிவிப்பதுமாக அறியே - ஆட்சியால் இவை புறத்தும் அகத்தும் இவ்வேதுக்களை யைந்து வகையாக அன்னுவயங்கூட்டித் தான் குறித்தறிவதும் தான் குறித்தவகையே பிறர்க் கறிவிப்பதும் ஆக இரண்டுவகைப்படும். எ-று. ஐவகையன்னுவயமா வது: பிரதிஞ்ஞை ஏது திட்டாந்தம் உபநயம் நிகமனம் என்பனவாம். பிரதிஞ் ஞை மலைநெருப்புடைத்தெனல்; ஏது காரியமாகிய புகைகாண்டலாலெனல்; திட்டாந்தம் புகையுள்ளவிடத்தனலுண்டு அடுக்களைபோலெனல்; உபநயம் மலை புகையுடைத்தெனல்; நிகமனம் மலை புகையுடைத்தாதலால் நெருப்புண்

டென ஏதுவை வலியுறுத்துதலாம். உபநயமும் நிகமனமும் முன்னைய மூன்றி னுமடங்கும். வெதிரேகமாவது அனலில்லாதவிடத்துப் புகையில்லை நீரிற் புகையில்லையெனக் கூட்டியுணர்வது. (௬)

அறையுமுரைதந்திரமந்திரங்களுபதேசங்க
ளாகமூன்றுமவற்றிற்றந்திரமாகமத்தா
னெறியறிதன்மந்திரந்தான்பதம்வன்னங்கூட்டி
நிச்சயித்தமந்திரத்தைச்செபித்தநேர்நிற்றல்
பிறிவிலுபதேசமதுபூருவஞ்சித்தாந்தம்
பேதித்துப்பூருவத்தையகற்றிச்சித்தாந்தத்
துறைவதுவாமபாவமேபொருளொப்போடொழிபே
யோங்குண்மையைதியியல்பவைபிறவுமுரைப்பாம்.

(இ-ள்.) அறையுமுரை தந்திரமந்திரங்க ளுபதேசங்களாக மூன்றும் - சொல்லப்பட்ட உரையளவையாவது தந்திரவுரை மந்திரவுரை உபதேசவுரை யென மூன்றுபேதமாம்—அவற்றிற்றந்திர மாகமத்தானெறியறிதல் - அம்மூன் றில் தந்திரவுரையாவது ஆகமவேதங்களால் புராணங்களால் உலகநெறியாகிய அறமுதலியவற்றை யறிவதாம்—மந்திரந்தான் பதம்வன்னங்கூட்டி நிச்சயித்த மந்திரத்தைச் செபித்தநேர்நிற்றல் - மந்திரவுரையாவது அக்கரங்களைப் பதங் களாகக் கூட்டிச்செபித்துத் தானினைத்த வடிவைத் தியானித்தந் நேரிலேநிற்ப தாம் அது மந்திரம் பதினொன்றையும் அக்கர மைம்பத்தொன்றையும் எண்பத் தொரு பதமாகக்கூட்டி அப்பதமூர்த்திகட்கு நாமமுடிவு நமவென்றும் சுவாகா வென்றும் வௌஷடு வென்றும் வஷடு என்றும் சுதாவென்றும் படுவென்றும் உம்மென்றும் இவ்வேழுவகையும் ஈருக எழுகோடிமந்திரஞ் செபிப்பதாம்— பிறிவிலுபதேசமது பூருவஞ்சித்தாந்தம் பேதித்துப்பூருவத்தையகற்றிச் சித்தாந் தத்துறைவதுவாம் - நீக்கமில்லாத உபதேசவுரையாவது ஞானநூல் பூருவமெ ன்றும் சித்தாந்தமென்றும் இரண்டாம்; பூருவமாவது புறநூலைத்தள்ளுவது சித்தாந்தமாவது புறநூலுடையார் சொல்லுந் தர்க்கங்களை முன்னேநாட்டி யத னையடைவே யுத்தரஞ்சொல்லித்தள்ளி யுண்மைநிலையைக் கூறுவதாம்—அபா வமே பொருளொப்போடொழிபே ஓங்குண்மையைதியியல்பவை பிறவுமுரை ப்பாம் - இம்மூவகையளவையன்றி வேறுமளவை சிலவுள. அவைவருமாறு: அபா வம் பொருள் ஒப்பினோடு ஒழிபு உண்மை ஐதிகம் இயல்புஎன இவை விளங்கச் சொல்லப்படுவனவாம் எ-று. பிறவுமென்றது பாரிசாதமும் பாரிசேடமுமுத லாயின. (௫)

உரையானைநின்றவிடத்தின்மையாற்காண்ட
லோதபாவம்பொருள்கங்கையிருப்பரென்றுற்
கரையிருப்பரெனலொப்பாப்போலாமாவென்றல்
கருதொழிபுகீழ்ச்சேரிவென்றதென்றுன்மேலைத்

தெரிசேரிதோற்றதென்றலிரும்புகாந்தம்வலித்தல்
　　சேருண்மையைதியால்பேயெனக்கேட்டுன்னல்
வருமியல்புநால்வரைக்கள்வனென்றால்
　　வரைந்துமூவரன்றென்றல்மேற்போலிவகுப்பாம்.

(இ-ள்.) உரையானை நின்றவிடத்தின்மையாற் காண்டலோத பாவம் - முன்சொல்லப்பட்ட அபாவமுத லியல்பீறான ஏழினுள் அபாவஅளவையாவது யானைநின்றவிடத்தைக் கண்டமாத்திரத்திலே நிற்பதுபோலத் தோன்றுவதென உரைப்பதாம் இதுபுறம் அகத்துங் கண்ணாலிமையா தொருபொருளைநோக்கி மீளவும்மாறி ஓரிடத்தே பார்த்தாலும் அவ்வுருப் புலப்படுவதுபோலத் தோன்றுவதாம் அஃதேனை யிந்திரியத்திற்கு மொக்கும்—பொருள்கங்கை யிருப்பரென்றாற் கரையிருப்பரெனல் - பொருளளவையாவது கங்கையிருப்பரென்றாற் கங்கைக்கரையிலிருப்பரென அர்த்தங்கொள்ளுதல். இது புறம் அகத்து உலகமெல்லாம் படைப்பவ னொருவனுண்டென்றால் படைப்பவ னுலகங் கடந்தவனென்று அர்த்தங்கொள்ளுவதாம் — ஒப்பு ஆப்போலாமாவென்றல் - ஒப்பு அளவையாவது புறத்து ஆப்போலும் ஆமாவென்பதாம்; அகத்துக் காலம்போலே சிவனென்றால் காலத்தினியல்புபோலத் தொழின்மூன்றும் சிவனாலே செய்யப்பட்டதென்றும்—கருதொழிபு கீழ்ச்சேரி வென்றதென்றால் மேலைத் தெரிசேரி தோற்றதென்றல் - குறிக்கப்பட்ட ஒழிபாவது புறத்துக் கீழ்ச்சேரிவென்றதென்றால் அதனோடொக்கத் தோன்றப்பட்ட மேலைச்சேரி தோற்றதென்று கொள்வதாம்; அகத்தும் உலகம் அசித்தென்றால் சிவன் சித்தென்பதாம்—இரும்புகாந்தம்வலித்தல் சேருண்மை - உண்மையளவையாவது புறத்து இரும்பைக் காந்தம்வலித்ததென்றால் உண்மையென்றறிவது; அகத்து சுகதுக்கப்படுவது ஆன்மாவென்றால் அது உண்மையென்றறிவது—ஐதியால் பேயெனக் கேட்டுன்னல் - ஐதிகவளவையாவது புறத்து ஆலிலேபேயுண்டென்றால் காணாயினும் உண்டென்றே கருதலாம்; அகத்து இவ்வடிவிலே சிவனுறைவனென்றால் உண்டெனக்கருதலாம்—வருமியல்பு நால்வரைக் கள்வனென்றால் வரைந்துமூவரன்றென்றல் - இயல்புவருமிடத்துப் புறத்து முன்னின்ற நால்வரைக் கள்வனென்றால் நாங்கள் மூவரும் அன்றென்றல்; அகத்து ஒடுக்குமவனே தலைவனென்றால் ஒடுக்காதவர்க்குத் தலைமையில்லையென்பதாம்—மேற்போலி வகுப்பாம் - மேலே போலியளவையுஞ் சில வகுத்துச் சொல்வாம். எ-று. (சு)

வகைப்போலிப்பக்கநான்மண்ணீர்தீக்கால்கள்
　　மருவிடமாம்வரைநாவாய்புகைமணங்கட்கென்பர்
மிகுத்தேதுமூவேழதடையாளஞ்சேர்வை
　　விரும்புபொருளிருதுவினைகாரணந்தன்மாதன்மி
தொகுத்தியல்புகாரியமாயையிலணுவோடதிகள்
　　சோறுசுக்கிலமுடலுந்தோன்றிடுவாயுவுமா
மிகுத்தவனுபலத்தியவையேழுங்கூறின்
　　மெய்வாய்கண்மூக்குடனேசெவிமனம்புத்தியுமே.

(இ-ள்.) வகைப்போலிப் பக்கநான்மண்ணீர் தீக்கால்கள் மருவிடமாம் வரைநாவாய் புகைமணங்கட்கென்பர் - மேலும் போலியளவையுள் வகைசேர்ந்த மண் நீர் தீ காலென்னும் நாற்பூதமும் புறத்து வரைப்பக்கம் மண்ணும் நாவாய்ப்பக்கம் நீராம் புகைப்பக்கம் தீயாம் மணத்திற்குப் பக்கம் வாயுவாம் அகத்து புலனுக்குப் பக்கம் பொறி பொறிக்குப்பக்கம் முடல் உடலுக்குப்பக்கம் அணு அணுவுக்குப்பக்கம் மாயையென்பதாம்—மிகுத்தேது மூவேழ் - மிகுத்துச் சொல்லப்பட்ட ஏதுக்கள் மூன்றில் போலியளவை ஒவ்வொன்றிலேழாக இருபத்தொன்றும் — அது - இவற்றியல்பேது ஏழாவது—அடையாளம் - அடையாளவியல்பு புறத்தும் அகத்தும் கமலத்தோன் சூலபாணியென்பதாம்—சேர்வை - சேர்வையியல்பு அகத்தும் புறத்தும் மும்மூர்த்தி முக்குணமென்பதாம்—விரும்பு பொருள் - விரும்பப்பட்ட பொருளியல்பு புறத்தும் அகத்தும் காராளரென்றால் வேளாளரென்பதும் உள்ளம் என்றால் ஆன்மாவென்பதுமாம்—இருது - இருதுவியல்பு புறத்தும் அகத்தும் கார்காலம் பனிக்காலம் சிருட்டிகாலம் திதிகாலம் என்பதாம்—வினை - வினையியல்பு புறத்தும் அகத்தும் வணைந்தானென்றால் குயவனும் சங்கரித்தானென்றால் சிவனும்—காரணம் - காரணவியல்பேதுவாவது புறத்தும் அகத்தும் செந்நீர்வந்தால் குடகின்மழையெனவும் நித்திரைவந்தால் ஆணவமேலிட்டதெனவுமாம்—தன்மாதன்மி - தன்மாதன்மியியல்பேதுவாவது புறத்தும் அகத்தும் புகையியல்பாக அனல் உணர்ச்சியியல்பாகக் கரணஞ்சேவித்தலாம்—தொகுத்தியல்பு காரியமாயையிலணு ஓடதிகள்சோறு சுக்கிலமுடலுந்தோன்றிடும் வாயுவுமாம் - தொகுத்துச் சொல்லப்பட்ட காரியவியல்பு ஏழாவது புறத்தும் அகத்தும் மாயையிற்காரியம் அணு; அணுவிற்காரியம் ஓடதிகள்; ஓடதியிற்காரியம் அன்னம்; அன்னத்திற்காரியம் உடல்; உடலிற்காரியம் சுக்கிலம்; சுக்கிலத்திற்காரியம் வாயுவாம்—மிகுத்த அநுபலத்தியவை ஏழுங் கூறில் மெய் வாய் கண் மூக்குடனே செவி மனம் புத்தியுமே - அநுபலத்தி யியல்பேழாவது புறத்தும் அகத்தும் சுரோத்திரம் தொக்கு சட்சு சிங்குவை ஆக்கிராணம் மனம் புத்தியெனவேழாம். இவற்றில் அநுபவித்தறிவது. எ-று. (எ)

மேலுவமமீரொன்பான்வினைபயமெய்யுருபு
மிகுதிறலேகுணஞ்சாதிகருமமொடுபொருளே
மாலுறுதறனிவடிவேசெயலியலேமார்க்கம்
வருமெண்ணேதொகைமூலம்வகைப்போலியாகுந்
தோல்வியதுபதினென்றுஞ்சொற்றர்க்கமிருவர்
சொல்லும்வாக்கினிலெழுவததுசிவனுண்டென்றுற்
சாலவுடன்படாதெதிர்த்துத்தோற்றறோலாத்
தகைகேட்டல்கூறறியாத்தணிச்சொற்சார்வதுவே.

(இ-ள்.) மேலுவமமீரொன்பான் - மேலுவமைப் போலியளவை பதினெட்டாம் (அவை வருமாறு:)—வினை பயம் மெய்யுருபு மிகுதிறலே குணம் சாதி கரு

மமொடு பொருளே மாலுறுதல் தனிவடிவே செயல் இயலே மார்க்கம் வருமெ ண்ணே தொகை மூலம் வகைப்போலியாகும் - வினையுவமம் பயனுவமம் மெய் யுவமம் உருவுவமம் மிக்க விறலுவமம் குணவுவமம் சாதியுவமம் கருமவுவமம் பொருளுவமம் மயக்கவுவமம் தனியுவமம் வடிவுவமம் செயலுவமம் இயல்புவமம் மார்க்கவுவமம் எண்ணுவமம் தொகையுவமம் மூலவுவமம் எனப் பதினெட்டாம். இவற்றில் வினையுவமமாவது: சிவன் நகங்கொண்டு அயன்றலையறுத்தது கருவி யாற் செய்ததுபோலுமென்பது. பயனுவமமாவது இந்திரியக் காட்சிபோலும் மனக்காட்சியென்பது. மெய்யுவமமாவது ஆதித்தனொளிபோலும் உள்ளொளி யென்பது. உருவுவமமாவது மனிதர் வடிவுபோலுங் குருவடிவென்பது. விற லுவமமாவது யானைச்செயல்போலும் அகங்காரமென்பது. குணவுவமமாவது பசுப்போலும் ஒருவன் குணமென்பது. சாதியுவமமாவது காணம்போலுமான் மாவென்பது. கருமவுவமமாவது வாக்காற்சொன்னது காயத்தாற் செய்ததுபோ லுமென்பது. பொருளுவமமாவது நீர்போலுந் திருவுள்ளமென்பது. மயக்கவுவம மாவது ஆன்மாப்போலும் பிரகிருதியென்பது. தனியுவமமாவது கல்லுப்போ லும் நெஞ்சு என்பது. வடிவுவமமாவது ஆதித்தன்போலுஞ் சிவனென்பது. செய லுவமமாவது நனவிற்செயல்போலிருந்தது கனவிற்செயலென்பது. இயல்புவம மாவது அதீதம்போலுஞ் சாக்காடென்பது. மார்க்கவுவமமாவது சந்ததிபோலுங் குருவடைவென்பது. எண்ணுவமமாவது ஒரு மகேச்சுரருக்கிட்டது கோயிலா யிரங்கண்டதற் கொக்குமென்பது. தொகையுவமமாவது அருளஞ்சுபோலும் எழுத்தஞ்சும் ஆத்துமதத்துவம்போலும் வித்தியாதத்துவமென்பது. மூலவுவம மாவது நெல்லின் முளைபோலுங் கன்மாங்குரமென்பது. ஆகவுவமம் பதினெட் டாம்—தோல்வியது பதினொன்றும் சொற்றர்க்கம் இருவர் சொல்லும் வாக்கி னில் எழுவது - நிக்கிரகத்தானம் பதினொருபேதமாம் (அவை வருவாறு:) இர ண்டுபேர் தம்மின் மாறுபட்டுச் சொல்லும் வாக்கில் வாதம் சேற்பம் விதண் டை ஏதுவென்னும் நால்வகைத் தருக்கத்தால்வரும் பேதங்கள் பதினொன்றும் அவையிருவகைக்கும் ஒக்கும் இருபத்திரண்டாம். (அவை வருமாறு:) —அது சிவனுண்டென்றால் சாலவுடன்படாதெதிர்த்துத் தோற்றல் - சிவனுண்டெ ன்று ஒருவன் சொன்னால் அவனெதிரி சிவனில்லைக் காணப்படாததாலென்று மறுத்தால் அதற்குடன்பட்டுத் தோற்றிருப்பதாம்—தோலாத் தகை கேட்டல் - உடன்பட்டும் உத்தரஞ்சொல்லாது தோற்பதாம்—கூறறியாத் தணிச்சொற்சார் வதுவே - சொல்லப்புக்குத் தண்ணியசொற் சொல்லித் தோற்பதாம். எ-று. ()

சாற்றியசொற்றவறுதறன்சொற்சாதியாதே
சாற்றினேனிலையென்றல்கல்வியாலழித
லேற்றவுரையாலழிதல்சொல்லுதவாதழித
லேன்றுவமைபடாதழிதலிழிசொல்லாலழிதன்

மாற்றியமானத்தினனழிதலிந்த
வகைபதினொன்றுந்தனக்குமாற்றூர்க்குமாகு
மாற்றினிருபத்திரண்டாமவைபோலிவகைகள்
அறுபத்தைந்தாம்விரிக்கினனேகமுளவாமே.

(இ-ள்.) சாற்றிய சொற் றவறுதல் - தான் சொன்ன சொல்லுத் தவறு பட்டு முடிதல்—தன்சொல் சாதியாதே சாற்றினேனில்லையென்றல் - தான்சொன்ன தருக்கஞ் சாதியாததுகொண்டு நான்சொன்னதப்படியன்றென்றல்—கல்வியால் அழிதல் - கல்விமிகுதியாலழிந்து தோற்றல்—ஏற்றவுரையா லழிதல் - ஒருசொற்கு நாலுசொல்லாக ஏற்கச்சொன்ன அளவிலே அதற்குத் தோற்றிருத்தல்—சொல்லுதவாதழிதல் - தருக்கத்திற்குத்தரஞ்சொல்லச் சொல்லுமுகஞ் செய்யா தழிதல் — என்றுவமைபடாதழிதல் - தானியன்று சொன்னசொல்லுவமைக்கொவ்வாம லழிந்துதோற்றல்—இழிசொல்லாலழிதல் - சொல்லுமச்சொல் இழிந்தசொல்லாகச்சொல்லித் தோற்றிருப்பதாம்—மாற்றிய மானத்தினலழிதல் - தருக்கத்தைமாற்றி இலச்சையாலே தோற்றல்—இந்தவகை பதினொன்றும் தனக்கும் மாற்றூர்க்குமாகும் - இந்தப் பதினொருவகையும் தனக்கும் எதிரிக்குமாகும்—ஆற்றினிருபத்திரண்டாம் அவைபோலிவகைகள் - இச்சொல்வகையிலே நிற்கும்வகை இருபத்திரண்டுபேதமாம்; அவை போலிவகையாம்—அறுபத்தைந்தாம் விரிக்கில் அநேகமுளவாமே - இவை விரிக்கினறுபத்தைந்தாம் அவைதன்னை விரிக்கிலநேகமுள. அவை பாட்டம் பிரபாகரமுதலிய தருக்கநூலுட் காண்க. எ-று. (கூ)

அளவை முற்றிற்று.

ஆ செய்யுள் கஎ.

---

## பதியிலக்கணம்.

கருதுபுறநூலாறின்விரிவுபதினெட்டுங்
கரவிலுட்சமயத்தினிரைகள்பதினெட்டு
மிருதெரிவுங்கூட்டியோர்நாற்பத்தெட்டு
மெந்நூலேமெய்நூலென்றிசைக்குமிதற்கெல்லா
மரிதுபொருளாயணுகாதகச்சமயநேரா
யப்பாலாய்க்கண்ணொளியுமலரிபடிகமும்போற்
பெரிதுபொருளாஞ்சைவசித்தாந்தநெறியைப்
பேதமையாலறிந்தவகைகாதலினலுரைப்பாம்.

(இ-ள்) கருதுபுறநூலாறின் விரிவுபதினெட்டும் கரவிலுட் சமயத்தில் நிரைகள்பதினெட்டும் - ஆறுகக் கருதப்பட்ட புறச்சமயங்களிற் பேதம்பதினெட்டும் மறைப்பில்லாத உட்சமயங்களிற் பேதம்பதினெட்டும்—இருதெரிவுங் கூட்டி ஓர் நாற்பத்தெட்டும் - உட்சமயம் புறச்சமயங்களாகிய பன்னிரண்டும் இவ்விருவகையானுமுள்ள பேதங்கள் முப்பத்தாறும் ஆகத்தொகைவிரி நாற்பத்தெட்டும்—எந்நூலே மெய்ந்நூலென் றிசைக்கும் - எனது நூலே உண்மைநூலென்று அவரவர் சொல்லப்படும்—இதற்கெல்லாம் அரிதுபொருளாய் அணுகாதகச்சமயநேராய் அப்பாலாய்க் கண்ணொளியுமலரி படிகமும்போற் பெரிதுபொருளாம் சைவசித்தாந்த நெறியைப் பேதமையாலறிந்தவகை காதலினுரைப்பாம் - இச்சமயத்தோர்க்கெல்லாம் அணுகுதற்கரிதாய பொருளாய் உட்சமயங்கட்கு நேர்பட்டபொருளாயினும் முடிவிலெட்டாதபொருளாய்க் கண்ணும் ஒளியும்போலவும் படிகமும் ஆதித்தனும்போலவு மிக்கபொருளாஞ் சைவசித்தாந்தவழியையென தறியாமையினாலே ஆசையின்மிகுதிகொண்டு அறிந்தமுறைமை சொல்லாநின்றேன். எ-று. புறச்சமயப்பொருள்களு மின்னேசொல்லுதும்.

பூதங்களிறையென்பார்புத்தனென்பார்
புகழ்பிரமமேயென்பார்புருடனென்பார்
வேதங்களிறையென்பார்சத்தியென்பார்
மிகுமருகனேயென்பார்விண்டுவென்பார்
போதந்தானரனென்பார்வடிவுகளையுரைப்பார்
புகழுமருவென்பார்போயருவுருவமென்பார்
நாதங்களென்பார்கட்கப்பாலாகு
நாதன்றன்றிருப்பாதநாமறிந்தபுகல்வாம்.

(இ-ள்.) பூதங்களிறையென்பார் - முன்னெண்ணிய சமயத்துள்ளாரில் உலோகாயதன் சாருவாகன் முதலாயினோர் காணப்பட்ட பூதமே தெய்வமென்பார்—புத்தனென்பார் - சவுத்திராந்திகன் யோகசாரன் மாத்துமிகன் வைபாடிகன் என்னும் புத்தர் நால்வரும் பிடகநூல்நாலினும் ஆசாரியராகிய இருபத்துமூவகைப் புத்தருமே தெய்வமென்பார்—புகழ் பிரமமேயென்பார் - வேதாந்தி மாயாவாதி நிரீச்சுரசாங்கியன் பிரபாகரன் மீமாஞ்சன் முதலாயினோர் பிரமமே தெய்வமென்பார்—புருடனென்பார் - வைகானசன் மாசோபவாசி சாங்கியன் முதலாயினோர் புருடதத்துவமே சிவமென்பார்—வேதங்களிறையென்பார் - பாட்டன் சத்தப்பிரமவாதி முதலாயினோர் வேதமே கர்த்தாவென்பார் — சத்தியென்பார் - வாமர் காளாமுகர் மிச்சிரசைவர் முதலாயினோர் சத்தியே தெய்வமென்பார்—மிகுமருகனென்பார் - ஆசீவகனி நிகண்டவாதி இவர்கள் அருகனைத் தெய்வமென்பார்—விண்டுவென்பார் - பாஞ்சராத்திரி வைஷணவன் முதலாயினோர் விட்டுணுவே தெய்வமென்பார்—போதந்தானரனென்பார் - ஆன்மவாதி

அவுசுதவாதி கன்மவாதி முதலாயினோர் ஆன்மாவே தெய்வமென்பார்—வடிவு களையுரைப்பார் - சந்திரவாதி சூரியவாதி அசுத்தசைவர்முதலாயினோர் சகளவடிவுகளே தெய்வமென்பார்—புகழுமருவேயென்பார் - மாவிரதர் பாசுபதர்முதலாயினோர் நிஷ்களவடிவே தெய்வமென்பார்—போயருவுருவமென்பார் - சுத்தசைவர் முதலாயினோர் சகள நிஷ்களவடிவைத் தெய்வமென்பார்—நாதங்கள் என்பார்கட்கு - யோகிகள் முதலாயினோர் விந்து நாதங்களைத் தெய்வமென்பார் இவர்களுக்கும்—அப்பாலாகும் நாதன்றன் திருப்பாதம் நாமறிந்த புதல்வாம் - இப்பெற்றிப்பட்ட சமயத்தோர்கட்குளதாயும் அப்பாற்பட்டிருக்கும் தலைவனது திருவடிகளை யானறிந்தமுறைமையை இந்நூலகத்தே சொல்லாநின்றேன். எ-று. (௨)

உருவுமருவுங்கலப்புமாயன்றிக்குறியு
முரையுமுணர்ந்தறிவரிதாய்க்குணமெல்லையிலவா
யருபரமாயானந்தக்குறியாயற்புதமா
யநாமயமாய்நிராமயமாயசலமாயின்பாய்த்
தெரிவரிதாயனுபவமாய்முத்தசித்தாயணுவாய்ச்
செல்கதியாய்ப்பல்லுருவாய்த்தீமைநன்மையின்றா
யுரையிறந்துகரையிறந்தவொளியாகிவெளியா
யோங்குவதுதற்சிவமென்றாங்குரைக்குநூலே.

(இ-ள்.) உருவுமருவுங் கலப்புமாயன்றிக்குறியும் உரையுமுணர்ந்தறிவரிதாய் - உருவமும் அருவமும் உருபாருபமும் என்று மூன்றுமாய் அல்லவுமாய் ஓரடையாளப்படாததுமாய் வாக்குமனத்துக்கெட்டாததுமாய்—குணமெல்லையிலவாய் - இராசததாமசசாத்துவிகமென்னும் முக்குணங்கட்குட்பட்டதுபோலிருப்பினும் உட்படாததுமாய்—அருபரமாய் - நிஷ்களவடிவுகள் போலவிருப்பினும் அவற்றிற்கு மேற்பட்டதுமாய்—ஆனந்தக்குறியாய் - பரமானந்தமே அடையாளமுமாய்—அற்புதமாய் - ஆச்சரியமுமாய் — அநாமயமாய் - மலரகிதமுமாய் — நிராமயமாய் - ஓர் ஆதாரமுமில்லாததுமாய்—அசலமாய் - ஒருகாலத்துஞ் சலிப்பற்றதாய்—இன்பமாய் - சுகமேவடிவாய்—தெரிவரிதாய் - ஒருவராலுமறிதற்கரிதுமாய்—அனுபவமாய் - உவமையில்லாததுமாய்—முத்தசித்தாய் - அஞ்ஞானங் கூடாத ஞானமுமாய்—அணுவாய் - அதிசூக்குமமாய்—செல்கதியாய் - சர்வான்மாக்களுக்கும் முத்தித்தானமுமாய்—பல்லுருவாய் - பலபேதமான வடிவமுமாய்—தீமை நன்மையின்றாய் - ஒருகாலத்து மிதாகிதமில்லாததுமாய்—உரையிறந்து கரையிறந்த ஒளியாகி வெளியாய் - வாக்கிறந்து கேடுபடாத ஒளியுமாய்ப் பரமாகாசமுமாய்—ஓங்குவது தற்சிவமென்றாங்குரைக்கு நூலே - இப்படி விளங்காநிற்பது அந்தச் சிவமென்று திவ்வியாகமங்கள் சொல்லும். எ-று. (௩)

அப்பரமானந்தம்பின்னின்பினெடுபரமா
யருபரையேவடிவாகியானந்தநடஞ்செய்
தொப்பில்சதாசிவமாகிமகேசனுருத்திரனு
யுயர்விண்டுபிரமனுயுருவையைந்தாகித்
தப்பில்வடநிழல்மருவியருமறையாகமங்கடா
னுரைத்தந்நூலுண்மைதலையறியாமையினன்
மெய்ப்படியாமிம்முறையிலப்படியைநிகழ்த்தி
விளக்கியவன்சிவனன்றியளப்பரிதுபிறர்க்கே.

(இ-ள்.) அப்பரமானந்தம் பின்னின்பினெடு பரமாய் - அப்பெற்றிப்பட்ட பரமானந்தம் பின் இன்பசத்தியோடும் பரமென்பதோரியல்பாய்—அருபரையே வடிவாகி யானந்த நடஞ்செய்து - அந்தப்பரன் தன்னிடத்துத் தோற்றப்பட்ட பராசத்தியே தனக்கு வடிவாகக்கொண்டு ஆனந்தக்கூத்தாடுவதுஞ் செய்து (சிவம் சத்தி நாதம் விந்து என்னும் நிஷ்களவடிவம் நான்குமாய்)—ஒப்பில் சதாசிவமாகி - நிஷ்கள சகளங்களிரண்டும் கூடப்பட்ட பஞ்சசாதாக்கியமாகிய சதாசிவ வடிவுமாய்—மகேசன் உருத்திரனுய் உயர் விண்டு பிரமனுய் - சதாசிவத்திலே மகேசுரராய் மகேசுரத்திலே உருத்திரனுய் உருத்திரனில் விட்டுணுவாய் விட்டுணுவிற் பிரமாவாய்—உருவையைந்தாகி - அந்த மகேசுரத்தில் இருபத்தைந்து விக்கிரகமாய்—தப்பில் வடநிழல் மருவி யருமறையாகமங்கள் தானுரைத்து - கேடுபடாத வடவிருக்ஷநிழலிலே தக்ஷிணாமூர்த்தமா யெழுந்தருளியிருந்து வேதாகமங்களை அருளிச்செய்து—அந்நூலுண்மை தலையறியாமையினல் மெய்ப்படியா மிம்முறையி லப்படியை நிகழ்த்தி விளக்கியவன் சிவனன்றி யளப்பரிது பிறர்க்கே - அப்படியருளிச்செய்யப்பட்ட வேதாகமங்களின் நெறியை யொருவராலளந்தறியாமையினல் அவ்வடிவின்றன்கைமையாகிய அந்த விக்கிரகங்களைக்கொண்டு அந்தச் செய்கையைச் செய்துகாட்டித் தொழில்களைந்தையுந் தெரிவித்தவன் சிவனே; அவனன்றி யொருவராலும் அளவுபடுத்தவரிது.எ-று.

பரமென்பது அந்த ஆனந்தவெல்லைக்குக்கீழ்ப்பட்டவியல்பாம்; கீழ்ப்படலாவது ஆனந்தவடிவின் திருவடியாம். சாதாக்கியமாவது சந்ததமும் சிவபாவத்தை யுடையது. சாதாக்கியம் ஐந்தாவன: சிவசாதாக்கியம் அமூர்த்திசாதாக்கியம் மூர்த்திசாதாக்கியம கர்த்திருசாதாக்கியம் கன்மசாதாக்கியம் என்பன. இருபத்தைந்து மகேசுரபேதங்களாவன: கல்யாணசுந்தரம், காமாரி, காலாரி, அர்த்தநாரீசுரம், காளிமர்த்தனம், கெசமத்தனம், திரிபுரதகனம், நிருத்தவிக்கிரகம், ஏகபாதம், திரிபாதம், அரிபாகம், பிரமபாகம், யானையுரித்தது, தாண்டவம், ஊர்த்ததாண்டவம், இலிங்கோற்பவம், திரிபுவனசுந்தரம், இடபவாகனம், பிரமம், விட்டுணு, உருத்திரர், மகாகணபதி, இடபாரூடம், காலாக்கினிருத்ரம், நபஞ்சகரூபம் என்பனவாம். (௪)

உலகொருவனொருத்தியொன்றுமூன்றுவகையா
லுணர்வின்றிநின்றழிதலாற்பாசமிறையுண்
டலகில்குணநிறைகுறைவாலருகனன்று
மரும்பிறப்பிலடைதலாற்புத்தனுமன்றுகு
மிலகுமொருவன்செயலால்வேதமுமன்றுகு
மிறைவேண்டாவெனிலுயிர்தானுடலெடுக்கவறியா
பலவகைப்பாசங்களுயிர்பாற்கூடவறியா
பரனொருவன்வேண்டுமிவைபடைத்துநடத்திடவே.

(இ-ள்.) உலகொருவனொருத்தி ஒன்றும் மூன்றுவகையால் உணர்வின்றி நின்றழிதலாற் பாசமிறையுண்டு - முதநூல் வழிநூல் சார்புநூல் என்னுமுறைமையில் இது வழிநூலாதலால் முன்னூலிற் கருத்தாகிய பன்னிரண்டுசூத்திரத்தில் பதிநியமமாகிய முதற்சூத்திரத்து அவன் அவள் அது ஆகிய உலகத்திற்குக் கர்த்தாவுண்டென்பது கருத்தாதலால் உலகமென்று சொல்லப்படுவது தேவர் முதன கரீறுய அன்னிறுதியாகிய வாண்பாலும் சத்திமுதல் ஆதாரசத்தியீறு கிய அள்ளிறுதியாகிய பெண்பாலும் அத்துவாக்கண்முதற் றுவரங்களிறுதியாகிய உயர்திணைப்படாத அஃறிணைப்பகுதியுமாகிய மூவகையாய் அசேதனமாய் காணத்தக்கதாய்த் தோற்றமொடுக்கத்தையுடையதா யழிந்துவருதலானும் பாசமென்று பெயரையுடையவாதலானும் பிரபஞ்சங் கர்த்தாவல்லவாம். இப்பிரபஞ்சத்தை நடத்துவானொரு கர்த்தாவுண்டாம்—அலகில்குண நிறைகுறைவாலருகனன்றும் - அக்கர்த்தா அருகபரமனெனில், சிலகுணமேறிச் சிலகுணங் குறைந்து நிற்றலாற் கர்த்தாவல்லவாம், (ஏறிக்குறைதல் அனந்தஞானாதிகூடுதல் பதினெண்வகையும் பிறவுமான குற்றம்நீங்கல்)—அரும்பிறப்பிலடைதலாற் புத்தனுமன்றும் - யோனிகடோறும் பிறந்துவந்திருபத்துமூன்றுபேருஞ் சாத்திரஞ்செய்தார்க ளென்றலாற் புத்தர்வகையுங் கர்த்தாவல்லவாம்— இலகுமொருவன்செயலால் வேதமுமன்றும் - ஒருவனாற் சொல்லப்பட்டு வழங்கிவருதலால் வேதமுங் கர்த்தாவல்லவாம்— இறைவேண்டாவெனில் உயிர்தானுடலெடுக்கவறியா - ஆன்மாத்தானேபோதும் ஒருகர்த்தா வேண்டாவென்னின் ஆன்மாவுக்குத் தானுகவறியுமறிவில்லையாதலாற் தாந்தாஞ்செய்த கன்மங்களையறிந்து உடலெடுக்கவறியா—பலவகைப் பாசங்களுயிர்பாற் கூடவறியா - பிரவஞ்சங்கர்த்தாவென்னிற் சடமாய்ப் பலபேதப்படலாற் றானுய்ச்சென்று உயிரின்பகுதியைக் கூடவறியாது—பரனொருவன் வேண்டுமிவை படைத்து நடத்திடவே - ஆதலாற் பாசத்தை ஆன்மாக் கூடிநிற்கக் காண்கையா லிப்பாசத்துக்குமான்மாவுக்கு மேலாகிய சிவனே யிவற்றைப் படைக்கவும் நடத்தவும்வேண்டும். எ-று.

படைப்பவனுமுலகுகாப்பவனுமிறையென்னிற்
பரிந்திவர்செயுலகினையுமிவர்வடிவுகளையுந்
துடைப்பவனேயிறைமீளவுண்டாக்கவிவரைத்
தோற்றியளிப்பவர்களிவரேற்றமவன்பாலாங்

தடைப்படாதிவன்பாலிலவரொடுங்கிவரலாற்
றலைவனவன்றனையொக்கவிவர்தம்மைச்சாற்று
ருடைத்தாமைகேழனரசிங்கமீன்பிரம
னுயர்தலைகளரன்றரிப்பதுலகறியும்வழக்கே.

(இ-ள்.) படைப்பவனுமுலகு காப்பவனுமிறையென்னில் - உலகத்தை யுண்டாக்குவானும் வளர்ப்பானும் பிரமாவும் விட்டுணுவுமாதலால் அவர்களே கர்த்தாவென்று நீ கூறில்—பரிந்திவர்செய்யுலகினையு மிவர்வடிவுகளையுந் துடைப்பவனே யிறை - இவர்களாற் பரிந்துகாத்தளிக்கப்பட்ட உலகத்தினையு மிவ்வரி பிரமா வடிவினையுஞ் சங்கரிக்குமவன் சிவனாதலால் அவனே கர்த்தாவாம்—மீள வுண்டாக்கவிவரைத் தோற்றியளிப்பவர்களிவர் - அப்படிச் சங்கரித்தவனே மீளவுமிவர்களையுண்டாக்க இவர்களுமவனாற் றோற்றுவிக்கப்பட்டுத் தந்தந்தொழிலாகிய சிருட்டி திதிகளைச் செய்வர்—ஏற்றமவன்பாலாம் - ஆதலாற்றலைமைப்பாடு சிவனுக்கே யுள்ளதாம்—தடைப்படாதிவன்பாலி லவரொடுங்கிவரலாற் றலைவனவன்றனையொக்க விவர்தம்மைச் சாற்றுார் - அத்தன்மையுமன்றி அநேக யுகந்தோறும் இவர்களாற்றடுக்குமுறையின்றிச் சிவனது பகுதியிலே அந்தப் பிரமன் மால் சங்காரப்பட்டு மீளவுந் தோற்றப்படுதலால் அந்தக் கர்த்தாவுக்குச் சமமாக இவர்களை ஒருவருஞ் சொல்லார்—உடைத்தாமை கேழல் நரசிங்கம் மீன் பிரமனுயர்தலைகள் அரன்றரிப்பதுலகறியும் வழக்கே - அந்தப் பிரமா விட்டுணுக்கள் கொண்ட வடிவுகளை நீக்கினதற்கடையாளமாக ஆமையோடு பன்றிக் கொம்பு சிங்கத்தோல் மீனங்கம் பிரமசிரசு இவை சிவன் தரித்திருப்பது உலகத்தோரெல்லாருமறியும் வழக்காமாதலால் சிவனுக்கொப்பாக இவர்களைச் சொல்லார்கள். எ-று. (௯)

அரன்வடிவமொன்றலவேயென்றுரைக்கிலவைதா
மானின்வடிவனேகம்பாலொன்றுருகுமதுவு
மொருதீபத்தநேகதீபங்களெல்லாமோங்கி
யுலவுமதுபோலவிறைநிலவுநிலையாகும்
நிரவுமைந்தொழிலினையுமையைந்துவகையா
னித்தனேவைத்திடுவன்முத்தசித்தனுமாற்
பெருகுமறிவுடனிறையுமிச்சைநிறைகிரியை
பேணியெலாமறிபவனுன்மாணுறுமித்தொழிலே.

(இ-ள்.) அரன்வடிவமொன்றலவே யென்றுரைக்கிலவைதாம் - அப்படித் தலைமையாகிய சிவன்வடிவும் பலபேதப்படுகையால் யாதுகொள்ளுவோமென்று நீ கூறில் அப்படிக்கொண்ட வடிவுகள்தானே—ஆனின்வடிவநேகம் பாலொன்றுகு மதுவும் ஒருதீபத்தநேகதீபங்க ளெல்லாமோங்கியுலவுமதுபோல - பசுக்கள் வன்னம் பலபேதமாயினும் பாலொருவன்னமானாற் போலவும் விளக்குப் பந்த

முதலாகிய தீபங்கள் பலபேதமாயினும் அக்கினி யொருவன்னமானாற் போலவும் —இறை நிலவு நிலையாகும் - கர்த்தா இலயவடிவு போகவடிவு அதிகாரவடிவு கொண்டு நிற்குமுறைமையாம்—நிரவு மைந்தொழிலினையு மைஃயந்து வகையால் நித்தனே வைத்திடுவன் முத்தசித்தனுமால் - எப்படிக்கொண்ட வடிவும் அஞ்ஞானம் நீங்கின வடிவாதலாற் பொருந்தப்பட்ட பஞ்சகிருத்தியங்களையும் இருபத்தைந்துபேதமாக வந்தவழி அவனே செய்பவனும்—பெருகு மறிவுடனிறையுமிச்சை நிறைகிரியை பேணியெலாமறிபவனால் மாணுறுமித்தொழிலே - அஃது யாதாலெனின் நிறைந்த அறிவும் நிறைந்த கிரியையும் நிறைந்த இச்சையும் உடையனாய் உள்ளங்கையில் நெல்லிப்பழம்போல வெல்லார்தொழிலையு மறிவனாதலால் அவனாலே இப்பஞ்சகிருத்தியங்கள் செய்யப்படும். எ-று. (எ)

சத்திகடன்படைப்புயிர்கள்படைப்புப்பாச
சாலங்கடனைவிரித்தன்மந்திராதிதன்னை
வைத்தனித்தலும்படைத்தலெனவைந்தாம்படைப்பு
வளர்ப்பதுவுமொடுக்குவதும்வகையிவையையைந்தா
முத்தமமாந்திரோதானம்வெளியையிருளாக்க
லுயர்பொய்யைமெய்யாக்கல்கலாதிகளினிறுத்த
லெத்தனையோதத்துவத்துமிறையுணராதாக்க
லிச்சையினச்சுறுவித்தலெனவைந்தாம்வகையே.

(இ-ள்.) சத்திகடன்படைப்புயிர்கள்படைப்புப் பாசசாலங்கடனைவிரித்தல் மந்திராதிதன்னை வைத்தனித்தலும் படைத்தலென வைந்தாம் படைப்பு - முன்சொன்ன பஞ்சகிருத்தியங்க ளிருபத்தைந்து வகையென்றதனுள் பரமசிவனிடத்திலே பராசத்தி தோன்றி இதில் ஆதிசத்திதோன்றி இதில் இச்சாசத்தி தோன்றி இதில் ஞானசத்திதோன்றி இதிற் கிரியாசத்திதோன்றி இவற்றிற் சத்திவிந்துச்சத்தி மனோன்மணி மகேசை உமை திருவாணி மனோன்மணி பேதங்கள் மகேசுவரிபேதங்கள் ஆகிய சத்திபேதங்கள் படைப்பொருவகையாகவும் மூவகையுயிர்களும் அவற்றின் பேதமாகிய உயிர்த்தோற்றமு மொருவகையாகவும் ஆணவம் மாயை காமியம் வையிந்தவம் திரோதாயியென்னும் பாசங்களின் பேதங்கள் படைப்பொருவகையாகவும் மந்திரம் பதம் வன்னம் புவனமாகிய இவற்றின் பேதங்கள் படைப்பொருவகையாகவும் நால்வகைத்தோற்றமும் எழ்வகைப்பிறப்பும் எண்பத்துநான்கு நூறாயிரம் யோனிபேதங்களுமாகிய நாடோறுஞ் செய்யும் படைப்பொருபேதமாகவும் படைப்பைந்துவகையாம்—வளர்ப்பதுவு மொடுக்குவதும் வகையிவையையைந்தாம் - திதியும் சங்காரமும் முன்சொன்ன ஐவகையையும் வளர்ப்பதும் ஒடுக்குவதுமாம்—உத்தமமாந் திரோதானம் வெளியையிருளாக்க லுயர்பொய்யை மெய்யாக்கல் கலாதிகளினிறுத்தல் எத்தனையோ தத்துவத்து மிறையுணராதாக்க லிச்சையி னச்சுறுவித்த லென

வைந்தாம் வகையே - அவற்றுள் உத்தமமான திரோதானமும் பிரபஞ்சத்தை மெய்யாக்கல் சிவனைப் பொய்யாக்கல் தத்துவங்களிற் செலுத்துதல் அந்தத் தத்துவங்களோடே கூடியறியச்செய்தே அறிவிக்கும் பொருளைக் காட்டாமல் மறைத்தல் கன்மத்தையே ருசிப்பித்தலாக ஐந்துவகைப்படும். எ-று. சங்காரமுமைந்தென்பதற்கு உதாரணம். ''அறிவார்தமக்கறிவாய்நிற்றலாமயன்மாலவர்கள் பிறவாகிமீளவவர் வினைக்கூட்டல்பிறங்குபாச முறையாயவைதனைநீக்கன் முறைமறைப்பித்தல்பின்னும்நெறியாலெவற்றையுநீக்கல் சங்காரத்தினிதிகளே'' என்னுஞ் சூத்திரத்தாற் காண்க. (அ)

உண்ணிலையினின்றளித்தலுருவுகொண்டேயளித்த
லோருருவில்வெளிப்படநின்றளித்தனுளு
மெண்ணமறக்கூட்டன்மந்திரத்தினாளித்த
லெனவைந்தாமனுக்கிரகமிவையிருபத்தைந்துங்
கண்ணுதறன்னிறைதன்மைபடர்க்கைமுன்னிலையாக்
காணுமவைதனிலியற்றுங்கருதுமகரந்தான்
றிண்ணமைம்பானென்றின் முதலுமாயுயிராய்ச்
சேர்ந்துடனேநிற்பதுபோற்சிவனுஞ்சேர்ந்தே.

(இ-ள்.) உண்ணிலையினின்றளித்தல் - அனுக்கிரகமும் விஞ்ஞானகலர் முதலாயினார்க்குப் பிராணனாய் நிற்கிற முறைமையிலே நின்று தன்னையுணர்த்துதல்—உருவுகொண்டே யளித்தல் - பிரளயாகலர் முதலாயினார்க்கு மானும் மழுவும் சதுர்ப்புயமும் திரிநேத்திரமுமாகிய தன் வடிவுகொண்டு முன்னின்றிரட்சித்துவிடுதல்—ஒருருவில் வெளிப்படநின்றளித்தல் - சகலருக்குச் சித்தசித்தெங்கும் பூரணமானவனானபடியால் தன்வடிவெல்லாங் கரந்து மானுடனாக வெளிப்படவந்திரட்சித்தல் — காளு மெண்ணமறக் கூட்டல் - தேவர் மானுடர் முதலாயினார்க்குப் பக்குவ மிகுதியாலே வேடமாறித் தோன்றி மெய்யறிவித்தல்—மந்திரத்தினாலளித்தல் - மந்திரஞ் செபந் தவமிகுதிகளினால் ஆங்குத்தோன்றி யனுக்கிரகித்தல்—எனவைந்தாமனுக்கிரகம் - என்றிந்த முறைமையிலே அனுக்கிரகமு மைந்துபேதமாம் —இவை யிருபத்தைந்துங் கண்ணுதறன்னிறை தன்மை படர்க்கை முன்னிலையாய்க் காணுமவைதனிலியற்றும் - இந்தக் கிருத்திய மைந்துவகையாகிய இருபத்தைந்தும் நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான் தன்மை முன்னிலை படர்க்கையென்னும் முறைமையிலே நடத்திச்செய்யாநிற்பன்—கருதுமகரந்தான் றிண்ணமைம்பானென்றின் முதலுமா யுயிராய்ச் சேர்ந்துடனே நிற்பதுபோற் சிவனுஞ்சேர்ந்தே - விசாரிக்கப்பட்ட அகரமென்னும் அக்கரம் ஏனையெழுத்துப்போல வடிவுபடினும் இவ்வக்கரங்கட்கெல்லாம் முதலுமாய் உயிருமாய் நிற்குமுறைமைபோலச் சிவன் எல்லா மூர்த்திகளுக்கும் முதலுமாய்ப் பிராணனுமாய் நிற்பன். எ-று.

தன்மை முன்னிலை படர்க்கை மூன்றில் தன்மையாவது பிரமா விட்டுணு உருத்திரன் மகேசுரன் சதாசிவன் என்னும் பஞ்சமூர்த்திகளாயும், அகார உகார மகார விந்து நாதம் என்னும் அக்கரங்களாயும் நடத்துகை; முன்னிலையாவது அவன் அவள் அதுவென்னும் பிரபஞ்ச முன்னிலையாக நடத்துகை; படர்க்கையாவது பூரணமான வகையிலே அசரீரியாயும் திருமேனி வியாபித்தும் நடத்துகை. அகரம் ஐம்பத்தோரட்சரமாகிய உயிர்க்கும் மெய்க்கும் முதலாம். அகரம் விந்துவாதலால் ஏனை உயிரின் உச்சாரணமுடிவில் விந்துவே முடியுமாதலால் எல்லா எழுத்துக்குமுயிருமாம். (சு)

பழுப்பாயகல்லுமணலரக்குச்சேர்ந்த
பணைசாணையதுவுமொளிபடிகந்தானு
மழுக்கிலிரவியுங்கண்ணுமாணவமுமுயிரு
மலைகடனீருப்புமுடனலருமதனறையுந்
தழற்பாயவயமுமுடன்காட்டமுமவ்வனலுந்
தருமனலும்புனலும்போற்றற்பரமுமுயிரும்
முழுப்பான்மையொத்தலாற்சொல்வார்சொல்லு
முறைமையெலாமொப்பனபோல்முடிந்துமுடிவிலவே.

(இ-ள்.) தற்பரமுமுயிரும் - சிவனும் ஆன்மாவும் நிற்குமுறைமை யென்போலவென்னில்—பழுப்பாய கல்லும் மணலரக்குச் சேர்ந்த பணைசாணையதுவும் - சிவப்பேறிய கல்லுப்போலவும் மணலும் மெழுகுஞ்சேர்ந்த சாணைபோலவும்—ஒளி படிகந்தானும் அழுக்கிலிரவியுங் கண்ணும் - படிகஞ்சேர்ந்த வன்னம்போலவும் கண்ணுமாதித்தனும் போலவும்—ஆணவமுமுயிரும் அலைகடனீருப்பும் - ஆணவமலமு மான்மாவும் போலவும் கடலுமுப்பு நீரும்போலவும் — உடனலருமதன் நறையும் தழற்பாயவயமுமுடன் காட்டமுமவ்வனலும் - புதிய பூவுங் கந்தமும்போலவும் எரியும் பொதிந்த இரும்பும்போலவும் விறகும் அக்கினியும்போலவும்—தருமனலும் புனலும்போல் - நீருமனலும்போலவும்—முழுப்பான்மை யொத்தலாற் சொல்வார் - முழுத்தன்மையுமொத்திருத்தலாற் சொல்வார்கள்— சொல்லுமுறைமையெலா மொப்பனபோல் முடிந்து முடிவிலவே - இப்படிச்சொல்லு முவமைகளெல்லாமொக்குமென முடிந்தாலும் ஒத்துமில்லாது மேற்பட்டுநிற்குந்தன்மை முதல்வனுக்குள்ளதாதலால் அவனாலே பஞ்சகிருத்தியம் நடத்தப்படும். எ-று. (௧௦)

சகம்படைத்தல்விளையாட்டுத்தானெனலுமாகுந்
தன்கருணையேயதுவுஞ்சாற்றக்கேணீ
மிகும்பவத்தாலரனையறியாக்கன்மமுளவான்
மிக்கவிருளதுதீர்க்கமேலழுக்காங்கலைக்குத்

தரும்படியேயுவர்சாணியிட்டறுக்குமதுபோற்
றனுகரணபுவனபோகஞ்சார்மாயை
தொகும்படியுட்படுத்திப்பின்பெல்லாஞ்சுத்த
மாய்த்துடைத்துப்பரவுண்மைபார்த்திடவைத்திடுமே.

(இ-ள்.) சகம்படைத்தல் விளையாட்டேத்தானெனலுமாகும் - இப்படியாகிய சிவன் இந்தப் பஞ்சகிருத்தியஞ் செய்யவேண்டிய தென்னையென்னில் இவன் பஞ்சகிருத்தியஞ்செய்வதனை வேதமார்க்கத்துள்ளார் லீலையென்பார்கள்; அதற்கு ஆன்மாக்களை இதாகிதப்படுத்தியோ விளையாடுவதென்னும் பக்கம் வருமாதலால் ஆன்மாக்களை அனுக்கிரகம்பண்ணுதல் காரணமாகும்—தன்கருணையேயதுவுஞ் சாற்றக்கேணீ - இந்நூலுடையார்க்கந்தக் கிருத்தியம் கருணையாலாகிய கிருத்தியமென்பது கருத்து. அவைவருமாறு நீ கேட்பாயாக—மிகும்பாவத்தாலரனையறியாக் கன்மமுளவால் - ஆணவமேலீட்டாலே சிவனையறியானாக அதுவே மிக்க பாவமாதலால்—மிக்கவிருளது தீர்க்க - இந்த மிக்கபாவம் போகவேண்டி — மேலழுக்காங் கலைக்குத் தரும்படியே யுவர் சாணியிட் டறுக்குமதுபோல் - மேலழுக்கான புடைவைக்கு அவ்வழுக்கு நீக்கவேண்டிச் சாணகம் உவர்முதலிய பிசைந்து மீளக்கழுவுமளவில் அவ்வழுக்குக் கூடப்போவதுபோல —தனுகரணபுவனபோகஞ் சார்மாயை தொகும்படியுட்படுத்தி - தனுகரணபுவனபோகமாக மாயையைவிரித்து ஆன்மவகையை இதற்குள்ளாக்கி— பின்பெல்லாஞ் சுத்தமாய்த்துடைத்துப் பரவுண்மைபார்த்திட வைத்திடுமே - பின்பு ஆணவம் மாயை கன்மமெல்லாஞ் சேரநீக்கிப் பரஞானத்தைத் தரிசித்திருக்கவும் வைக்கும் அந்தச் சிவம். எ-று. (கக)

படைப்பானேனனந்தவறியாமைபோக்குதற்காம்
பலயோனிவளர்ப்பானேன்வினைப்பான்மையறியத்
துடைப்பானேன்பிறந்துழன்றவிளைப்புமாறத்
தோன்றுமலாக்குவதென்றொடர்ச்சிதொலைவளவா
யெடுத்தணைப்பதென்னேரேகருணைகண்டா
யிவையோதானெனினிதற்கேயிசையச்செய்யும்
படித்தனவாற்கருணைவழிப்பாலவாகும்
பாரமோவெனிற்பரைக்குமிறைக்குமடப்பணியே.

(இ-ள்.) படைப்பானேனனந்தவறியாமை போக்குதற்காம் - கருணையாலே சிவன் பஞ்சகிருத்தியஞ் செய்யில் ஆன்மாக்களை மாயாவுடலிலே யிடவேண்டுவானேனென்று வினவில் அவ்விடத்தான்மாக்களுக்கு அறியாமையாகிய மலம் நீக்குதல் காரணமாகவாம்—பலயோனி வளர்ப்பானேன் வினைப்பான்மையறிய- ஆன்மாக்களைத் திதிசெய்யவேண்டுவானே னென்றவிடத்து அவரவர் செய்த வினை துய்ப்பித்து நீக்குதற்காம்—துடைப்பானேன் பிறந்துழன்றவிளைப்புமாற -

சங்காரம்பண்ணுவது எந்தக் கருணையென்று வினவியவிடத்து மாயையிலே மொத்துண்டுதிரியு மிளைப்புமாற வைப்பதாம்—தோன்றும லாக்குவதென் தொடர்ச்சி தொலைவளவாம் - திரோதானஞ் செய்வானேனென்றவிடத்து இப்படிப் போதுந் தொடர்ச்சியில் வினைதொலையுமளவுஞ் செய்த காவலாம்— எடுத்தணைப்பதென்னேரே கருணைகண்டாய் - அனுக்கிரகமேதென்னின் நேரே அருள் செய்து திருவடிவைப்பதாம்—இவையோதானெனி னிதற்கேயிசையச்செய்யும் படித்தனவாற் கருணைவழிப்பாலதாகும் - இந்த நாலுகன்மமுங் கருணையான படி கன்மந்தொலைக்கை திருவருட்கிடமாதலால் அது கருணையின்பகுதியேயாமாதலாலே செய்கின்றதாம்—பாரமோவெனில் - இப்படிக் கிருத்தியஞ்செய்யுமளவில் விகாரப்படுகின்றானோவென்று வினவில்—பரைக்கு மிறைக்கும் நடுப்பணியே - அந்த விகாரம் பரமாகிய பராசத்திக்குஞ் சிவனுக்கும் நடுநிகழ்ச்சியாகுந் தொழிலாம். எ-று. (கஉ)

மண்விகற்பமறநிற்பவெவ்வுயிருமுண்டாய்
 வளர்ந்திறந்துபோவதுவும்வளிரவிநிற்ப
வுண்ணெருப்புக்கற்காலவரவிந்தமலர
 வுறைகரக்குமதுமொருவனுதரத்துள்ளா
வெண்ணிலுயிர்பிறந்துவளர்ந்திறப்பதுவும்பலா
 மிருங்கடல்மீன்பிறந்துவளர்ந்திறப்பதுவும்நராம்
வண்ணவுயிர்வாய்ச்சொல்லாய்வளர்ந்திறப்பதுவும்போல்
 வசமறவிவ்விறைநிற்பவுயிரிறந்துவருமே.

(இ-ள்.) மண்விகற்பமறநிற்பவெவ்வுயிருமுண்டாய் வளர்ந்திறந்துபோவதுவும் - பூமியாதாரமாய்ச் சலியாதுகிடப்பச் சர்வான்மாக்களுமதிலே தோன்றி வளர்ந்திறந்துபோந் தன்மைபோலவும்—வளிரவிநிற்பவுண்ணெருப்புக்கற்கால வரவிந்த மலரவுறை கரக்குமதும் - அதுவுமன்றிச் சூரியன் சலியாதுநிற்பச் சூரியகாந்தத்து நெருப்புப்பிறக்கவும் தாமரைமலரவும் நீர்சுவறவும் நடக்குந்தன்மைபோலவும்—ஒருவனுதரத்துள்ளா எண்ணிலுயிர் பிறந்துவளர்ந் திறப்பதுவும் - ஒருவனுதரத்துள்ளே அநேக ஆன்மாக்கள் அவன் சலிப்பற்றிருக்க உண்டாய் வளர்ந்திறந்துபோந் தகுதிபோலவும்—பாலாமிருங்கடல் மீன்பிறந்து வளர்ந்திறப்பதுவும் - பெரிய பாற்கடலிற் பால் சலிப்பற்றிருக்க அதிலே மீன்கள் பிறந்து வளர்ந்திறந்துபோந் தன்மைபோலவும்—நராம் வண்ணவுயிர்வாய்ச் சொல்லாய் வளர்ந்திறப்பதுவும்போல் - மனிதராகிய அழகிய ஆன்மாக்கள் விகாரமற்றிருப்ப அவர்வாய்ச்சொல்லாய் அநேகஞ்சொற்றோன்றி வளர்ந்திறக்குமதுபோலவும்—வசமறவவ்விறைநிற்ப வுயிரிறந்துவருமே - அந்தக் கர்த்தா மண்போலவும் சூரியன்போலவும் உதரம்போலவும் பாற்கடல்போலவும் வாக்குப்போலவும் வசமறநிற்ப ஆன்மாக்கள் கிர்த்தியப்பட்டு வருமுறைமை இப்படியாம். எ-று. (கந)

தந்தைதாய்தம்மகவைத்தம்வழியினிறுத்தத்
தளையிட்டுமடித்துமவர்தன்கண்ணினோய்க்கு
மூந்தவேபொருளுமீய்ந்துரிப்பிக்குநெறியு
முடிமன்னன்றன்மகவைத்தானூர்ந்தமுறையு
மந்தவர்கள்செயலெல்லாங்கருணையாகு
மப்புதல்வர்க்குத்துக்கம்போலப்பின்சுகமா
மிந்தவகைசிவன்றன்னையறிவளவுமெல்லாக்
கன்மமுஞ்செய்வித்தகற்றியின்பாக்கியிடுமே.

(இ-ள்.) தந்தை தாய் தம்மகவைத் தம்வழியினிறுத்த - உலகத்து மாதாவும் பிதாவும் புத்திரரைத் தமதுவழியி னிறுத்தவேண்டி — தளையிட்டுமடித்துமவர்தன் கண்ணினோய்க்கு மூந்தவேபொருளுமீய்ந்துரிப்பிக்கு நெறியும் - விலங்கிட்டும் மாறுகொண்டடித்தும் கண்ணிற் பில்லத்திற்குத் தனமீய்ந்துரிப்பித்தும்—முடிமன்னன் றன்மகவைத் தானூர்ந்த முறையும் - ஓரரசன் றன்புதல்வனைத் தேரிற்கீழ்ப்போட்டு நடத்திய அதுவும்—அந்தவர்கள் செயலெல்லாங் கருணையாகும் அப்புதல்வர்க்குத் துக்கம்போலப் பின்சுகமாம் - ஆகிய இவைகளெல்லாமவர்மேல் வைத்த அருளேயாகும் அப்புதல்வருக்குத் துக்கம்போலாய்ப் பின் சுகமாய்விளையும்—இந்தவகை சிவன்றன்னை யறிவளவு மெல்லாக் கன்மமுஞ் செய்வித்தகற்றி யின்பாக்கியிடுமே - இந்த முறைமைபோலச் சிவனுந் தன்னையறிவளவும் எந்தக்கன்மமுஞ் செய்வித்துத் தன்செயலென்றறிந்து தன் வசனுனபின்பு வினையகற்றிச் சுகத்தையனுபவிப்பிக்கும். எ-று. (கச)

பதி பசு பாசங்கட்கு உருவம் சொரூபம் சுபாவம் விசேடம் வியாத்தி
வியாபகம் குணம் வன்னம் தெரிசனம் சுத்தியாகிய
பத்தையுஞ் சொல்லத்தொடங்கிச் சிவனுக்கு
முன்னர்க் கூறுகின்றார்.

சிவனுருவமானந்தஞ்சொரூபமிச்சாஞானந்
திகழ்கிரியைசுபாவமசைவற்றுநிற்றல்
நவவிசேடமாதியந்தமறுகையேவியாத்தி
நாடுமிடமெங்குநிறைவாகும்வியாபகந்தான்
புவியிற்கல்லிற்காண்டல்குணங்கருணைநிறந்தான்
பொருந்தினர்பொருந்தியதேயாகுங்காட்சி
யவமில்சுகாதீதத்தப்புறத்ததாகு
மருஞ்சுத்திபதையாதங்கழுந்தருனே.

(இ-ள்.) சிவனுருவமானந்தம் - இப்படி நடத்தப்பட்ட சிவனுக்கு உருவம் யாதென்னில் ஆனந்தமே வடிவமாம் —சொரூப மிச்சாஞானந் திகழ்கிரியை -

சொரூபமாவது இச்சாஞானக்கிரியைகள் கூடியதாம்—சுபாவமசைவற்று நிற்றல் - சுபாவமாவது அசைவற்றுநிற்கு முறைமையாம்—நவவிசேடமாதியந்த மறுகை - விசேடமாவது புதுமையாகத் தோற்றுதலு மீறுமற்றிருக்கை—வியாத்தி நாடுமிடமெங்கும் நிறைவாகும் - வியாத்தியாவது எங்குமென்று சொல்லப்பட்ட எவ்விடமும் நிறைந்துநிற்கை—வியாபகந்தான் புவியிற் கல்லிற்காண்டல் - வியாபகமாவது கமரிற்றோன்றியும் கல்லிற்றோன்றியும் வாளின்முனையிற் சாணையில் வியாபித்துந் தோன்றல்—குணங் கருணை - குணமாவது காருண்ணியமாகை—நிறந்தான் பொருந்தினர் பொருந்தியதேயாகும் - நிறமாவ தியாதொருவர் யாதொன்றாகக் குறித்தார் அந்தந்த நிறமாயிருக்கை—காட்சியவமில் சுகாதீதத் தப்புறத்ததாகும் - தரிசனமாவது சிவப்பேறென்னுந் தரிசனத்தறிக —அருஞ்சுத்தி பதையாதங்கழுந்தறுனே - அரிய சுத்தியாவது போதம் மூனையாமலழுந்துவதாம். எ-று.

உருவம் முதலிய பத்துக்கும் உ-ம். "மேவுருபசொரூபசுபாவம் விசேடம் வியாத்தி தாவுவியாபகங்குணமேவன்னந்தான் - ஓவுந் தெரிசனஞ்சுத்தியெனச் சேர்பவைபத்து மருள்பசுபாசங்கட்குமாம்:" என்பதனாலறிக. உருவமென்றது வடிவை. சொரூபமென்றது நிலைவடிவை. வியாத்தியென்றது நிறைவை. வியாபகமென்றது நிறைவின்மேலிடுதலை. (கரு)

பராசத்திக்குருவமாதி கூறுகின்றார்.

பரைக்குருவமாதியந்தம்பரத்தல்சொரூபந்தான்
  பழுதிலாவோங்கொளியாஞ்சுபாவமப்பரனுக்
குரைத்தவிச்சாஞானக்கிரியைகொடுப்பதுவா
  முயர்விசேடஞ்சிவனுக்குன்னினதாய்நிற்றல்
தெரித்தகுணம்விட்டமறைப்பாதலேவியாத்தி
  சிவமளவும்வியாபகமைந்துருவாகித்திரிதல்
விரித்தநிறஞ்செம்மைதெரிசனமொளியாய்விரிதல்
  மிகுசுத்திபரத்தொடுயிர்மேவுதலாம்விதியே.

(இ-ள்.) பரைக்குருவமாதியந்தம் பரத்தல் - சிவனை நீங்காத பராசத்திக்கும் இப்பத்துவகையில் உருவமாவது சுத்தமாயை அசுத்தமாயையெங்கும் நிறைந்து பரனளவுண்டாகை—சொரூபந்தான் பழுதிலாவோங்கொளியாம் - சொரூபமாவது ஒருக்காலுங் கேடுபடாது நின்று பிரகாசிக்கும் பிரகாசமாம்—சுபாவமப்பரனுக்குரைத்த விச்சாஞானக் கிரியைகொடுப்பதுவாம் - சுபாவமாவது தன் முதலாகிய பரனுக்கு இச்சாஞானக் கிரியையென்னும் பேதங்களைக் கொடுப்பதாம்—உயர் விசேடஞ் சிவனுக்குன்னினதாய் நிற்றல் - மிக்க விசேடமாவது அந்தப்பர னெந்தக்கருமத்தை யெந்தவடிவை யுன்னினன் அவையவையாய் நிற்பதாம்—தெரித்தகுணம் விட்டமறைப்பாதலே - குணந்தெரிக்குங்காலத்தஞ்

ஞானங் கூடாமலிருப்பதாம்—வியாத்தி சிவமளவும் - வியாத்தியாவது அந்தப் பர னெவ்வளவுண் டவ்வளவும் நிறைதல்—வியாபக மைந்துருவாகித் திரிதல் - வியாபகமாவது பரை ஆதி இச்சை ஞானம் கிரியையெனத் தொழில்வேற்றுமை படத் திரிவது—விரித்த நிறஞ் செம்மை - நிறத்தை விரித்துச் சொல்லில் சிவந்த ஒளியாய் விளங்கல்—தெரிசன மொளியாய் விரிதல் - தரிசனமாவது ஒளியாக எங்கும் விரிதல்—மிகுசுத்தி பரத்தோடுயிர் மேவுதலாம் விதியே - மிகுந்த சுத்தியாவது இந்தப் பரையைவிட்டுச் சிவத்தோடுயிர் கூடுதலாம் விரித்துச்சொல்லில். எ-று. (கசு)

இச்சாசத்திக்குருவமுதலியன கூறுகின்றார்.

இச்சைதனக்குருவமசைவித்துநிற்ற
லெவ்வுருவுக்குஞ்சத்தியாகையேசொரூப
மெச்சுசுபாவமுயிருக்கனுக்கிரகம்புரிதல்
விசேடமுருவருக்கலப்பாய்மேவலாகு
முச்சவியாத்தியுந்திரோதமளவும்வியாபகந்தா
னுருவுகுருவாயளித்தல்குணமிறையோடுறவு
நச்சுவித்தல்காணுநிறநற்பிராசாதம்
நற்காட்சியிதுகாண்டல்சுத்திபரைநயப்பே.

(இ-ள்.) இச்சையினுக்குருவ மசைவித்துநிற்றல் - பரையில் வியாத்தமாகிய நாலுசத்திகளில் இச்சாசத்திக்கு உருவமாவது சர்வான்மாக்களுந் தன்செயலிலசையத் தான் வையிந்தவத்தை யாட்டுவித்து நிற்றல்—எவ்வுருவுக்குஞ் சத்தியாகையே சொரூபம் - சொரூபமாவது சிவன்கொண்ட வடிவுகளுக்கெல்லாம் அவற்றிற்கேற்பச் சத்தியாயிருப்பது—மெச்சு சுபாவ முயிருக் கனுக்கிரகம் புரிதல் - எல்லாராலுந் துதிக்கப்பட்ட சுபாவமாவது ஆன்மாக்களுக்குக் கிருபைசெய்கை—விசேட முருவருக் கலப்பாய் மேவலாகும் - விசேடமாவது உருவுக்குருவாய் அருவுக்கருவாய் உருவாருபமுமாகை—உச்ச வியாத்தியுந் திரோதமளவும் - உயர்ந்த வியாத்தியுந் திரோதானசத்தி யளவாகும்—வியாபகந்தான் உருவு குருவாயளித்தல் - வியாபகமாவது சாம்பவியாகிய குருவடிவாதல்—குணமிறையோடுறவு நச்சுவித்தல் - குணமாவது சிவனையறியவேண்டுமென்னு மாசையை ஆன்மாக்களுக்குண்டாக்குகை—காணு நிறம் நற்பிராசாதம் - நிறங் காணுமிடத்துப் பிராசாதவடிவு மிச்சத்தியேயாதலால் அப்பிராசாத நிறங்களே நிறமாம்—நற்காட்சியிதுகாண்டல் - இதனை நன்றாகத் தெரிசிக்குமுறைமை யெப்படியெனின் முன்னெண்ணிய எட்டுநிலைமையுமுடையதொரு சத்தியெனவறிகை—சுத்திபரைநயப்பே - சுத்தியாவது பரைநிறைவி லொடுங்குமுறைமையறிதலாம்.எ-று.

ஞானசத்திக்குருவமுதலியன கூறுகின்றார்.

ஞானத்திற்குருவறிவுசொரூபமுயிராகை
நண்ணுமுவுயிர்நடத்தல்சுபாவவிசேடந்தான்
மானபசுபாசங்கள்கூடாமைவியாத்தி
மருவிச்சையளவுவியாபகந்தானவ்வடிவுக்

கானகுணமாய்நிற்றனிறமெந்தவுருவா
மந்தவுருப்போனிற்றல்குணந்தனைக்காட்டாமை
யேனையவத்தெரிசனந்தான்றன்செயலற்றிடமா
மிதிற்சுத்திபரையுடனேயேய்வதெனவுரையே.

(இ-ள்.) ஞானத்திற்குருவறிவு - ஞானசத்திக்குருவமாவது சர்வான்மாக்களும் செய்ததனையறிவது—சொரூபமுயிராகை - சொரூபமாவது எல்லா ஆன்மாக்களுக்கும் அறிவுக்கறிவாய் நிற்றல்—நண்ணு மூவுயிர் நடத்தல் சுபாவம் - சுபாவமாவது விஞ்ஞானகலர்க்கு மிக்க அறிவாயும் பிரளயாகலர்க்கு ஒப்பறிவாயும் சகலர்க்குத் தாழ்ந்தவறிவாயுஞ் செய்கை—விசேடந்தான் மானபசுபாசங்கள் கூடாமை - விசேடமாவது தான் கூடிநின்றும் அஞ்ஞானமும் மாயையுந் தன்னுடன் கூடாமை நிற்றல்—வியாத்தி மருவிச்சையளவு - வியாத்தியாவது இச்சாசத்தியளவாம்—வியாபகந்தா னவ்வடிவுக்கானகுணமாய் நிற்றல் - வியாபகமாவது சிவன்கொண்ட வடிவுகட்குக் கரணங்கள் குணங்களாகை—நிறமெந்த வுருவா மந்தவுருப்போல நிற்றல் - நிறமாவது சிவன்கொண்ட வடிவுகளுக்கான நிறமாகை—குணந்தனைக்காட்டாமை - குணமாவது தானுயிராயிருந்துந் தன்னைத் தோன்றுமனிற்றல்—ஏனையவத் தெரிசனந்தான் தன்செயலற்றிடமாம் - இச்சத்தியின் தரிசனமாவது தன்செயலற்றவிடத்திற் பிரகாசமாம்—இதிற் சுத்தி பரையுடனே யேய்வதென வுரையே - இதன் சுத்தியாவது பரையுடனே கூடுவதெனச் சொல்லுக. எ-று. (கஅ)

கிரியாசத்திக்குருவமுதலியன கூறுகின்றார்.

கிரியையினுக்குருவுலகுகரணமாகை
கிளர்சொரூபமுயிர்த்தொழிலைக்கிளப்பலாகுந்
தெரியுமதிற்சுபாவமைந்தொழிலைச்செய்த
றிகழ்விசேடந்தான்றவங்கள்செய்துகாட்ட
லுரியகுணமுக்குணத்தைச்செலுத்தலேவியாத்தி
யுருவளவுவியாபகந்தானுருவநேகமாகை
பரவுதெரிசனமிதனைக்காண்டல்சுத்தி
பரையுடனுநிறம்பலவன்னங்களுமாய்ப்பகரே.

(இ-ள்.) கிரியையினுக்குருவுலகு கரணமாகை - கிரியாசத்திக்குருவமாவது பிரபஞ்சத்திற்குத் தற்சொரூப வடிவாயும் பிரபஞ்சம் நடத்துவார்க்குக் காரணமாகியுமிருத்தல்—கிளர்சொரூப முயிர்த்தொழிலைக் கிளப்பலாகும் - மேலாகிய சொரூபமாவது ஆன்மாக்கள் கிரியையை எழுப்புமது—தெரியுமதிற் சுபாவமைந் தொழிலைச் செய்தல் - சுபாவமாவது பஞ்சகிருத்தியங்களும் நடத்துகை—திகழ் விசேடந்தான் தவங்கள் செய்துகாட்டல் - விசேடமாவது தான் சிவனையறியாததாய் அச்சிவனைநோக்கித் தவம்பண்ணி இந்நெறிசெய்யுமெனக் காட்டல்—

உரியகுண முக்குணத்தைச் செலுத்தலே - குணமாவது ஆன்மாக்களது குணத்திரயங்களை நடத்தல்—வியாத்தியுருவளவு - வியாத்தியாவது சகளமேனியுண்டானவளவாம் —வியாபகந்தா னுருவநேகமாகை - வியாபகமாவது ஒன்று மூன்று ஐந்து எழு ஒன்பது பதினொன்று பதினாறு இருபத்தைந்து முப்பத்தெட்டாக அநேகம் வடிவமாகுதல்—பரவு தெரிசன மிதனைக்காண்டல் - மிக்க தரிசனமாவது இம்முறைமையெல்லாமறிதல்—சத்தி பரையுடனும் நிறம்பல வன்னங்களுமாய்ப் பகரே நிறம்பலவன்னங்களுமாய்ச் சத்திபரையுடனுமென மாறுக - நிறமாவது வடிவுதோறும் பேதித்தலாகவும் சத்தியாவது பரையுடனே கலப்பாகவுஞ் சொல்லுக. எ-று. (௧௬)

பதியிலக்கணமுற்றிற்று.

---

## பசுவிலக்கணம்.

ஆன்மலக்கணங் கூறுகின்றார்.

நண்ணுபசுவர்க்கமெண்ணிறந்துமலத்தாலே
நாளுமறைப்புண்டுயிராந்தாளையறிவரிதாய்ப்
பண்ணியபாவந்தன்னுன்மாயாகாரியத்திற்
பரனருளா லுருமருவியிருவினையின்பகுதி
யெண்ணுமளவால்வடிவுங்கன்மமுமாறிக்கொண்
டிறந்துபிறந்திருஞ்சுவர்க்கநரகிடையூடாடிப்
புண்ணியபாவங்கடுலையொத்தகாலைப்
பூதநாயகனருளாற்பூரணத்துற்றிடுமே.

(இ-ள்.) நண்ணுபசுவர்க்க மெண்ணிறந்து - வருகின்ற பசுவர்க்கத்தைச் சொல்லுமிடத்து அளவுகடந்து—மலத்தாலே நாளு மறைப்புண்டு - அஞ்ஞானத்தாலே எப்போது மறிவு மறைக்கப்பட்டு—உயிராந்தாளையறிவரிதாய்ப் பண்ணியபாவந்தன்னால் மாயாகாரியத்திற் பரனருளா லுருமருவி - உயிராய்நிற்குந் திருவடியையறியாது ஆணவமலத்தின் பந்தத்தினாலே அனாதியே மாயையால் உடலுங் கரணங்களுஞ் சிவனாலுண்டாக்க அவற்றைப்பற்றி — இருவினையின் பகுதி யெண்ணுமளவால் வடிவுங் கன்மமுமாறிக்கொண்டு - அதனாற் செய்யுமிதாகிதங்களாகிய புண்ணியபாவத்துக்கீடான தேகங்களை மாறியெடுத்துக்கொண்டு—இறந்துபிறந்திருஞ்சுவர்க்க நரகிடையூடாடி - செனன மரணங்களையுற்று ஆகாயம் பூமி பாதாளங்களுக்கிடையே யுலாவி—புண்ணியபாவங்கடுலையொத்த காலைப் பூதநாயகனருளாற் பூரணத்துற்றிடுமே - புண்ணியபாவமிரண்டும் துலை

யொத்தவிடத்து ஆன்மநாயகராகிய பரமசிவன் தமது திருவருளாலே மலங்க ளைநீக்கித் தன்னைத்தரிசிப்பிக்க அவ்வான்மாவும் பரிபூரணத்திலே யொன்றுபட் டுவிடும். எ-று. (௨௦)

அவ்வான்மா மலசம்பந்த வேறுபாட்டால் மூவகை
யென்று கூறுகின்றார்.

இவ்வுயிருமூவகையாம்விஞ்ஞானகலர்க
ளெழிற்பிரளயாகலர்கள்சகலர்களென்றிவரி
லவ்வகையேயாணவமுமாணவமும்வினையு
மாணவமும்வினையுமாயையுமூன்றுமாகுஞ்
செவ்வையிலத்திரோதமுடன்சுத்தமாயை
சேரமூவகைக்குமுளவவரின்முன்னோர்
கவ்வுமலத்தோர்மலம்போய்ஞானமானோ
ரெனக்காட்டுமவ்விரண்டினாலுவகைகணிக்கும்.

(இ-ள்.) இவ்வுயிரு மூவகையாம் - இப்படி யெண்ணிறந்ததாகச் சொல்ல ப்பட்ட ஆன்மவர்க்கம் மூன்றுவகையாம் இவையநாதியேயுள்ளன—விஞ்ஞான கலர்க ளெழிற் பிரளயாகலர்கள் சகலர்களென்று - அவை விஞ்ஞானகலரெ ன்றும் சிறந்த பிரளயாகலரென்றும் சகலரென்றும் மூன்றவகையாகச் சொல் லப்படும்—இவரிலவ்வகையே யாணவமும் ஆணவமும் வினையு மாணவமும் வினையு மாயையு மூன்றுமாகும் - இம்மூவரில் அடைவே விஞ்ஞானகலர் ஆண வமலத்தாரென்றும், பிரளயாகலர் ஆணவமும் கன்மமுமென்னு மிருமலத்தாரெ ன்றும், சகலர் ஆணவம் கன்மம் மாயையென்னு மும்மலத்தாரென்றுஞ் சொ ல்லப்படும்—செவ்வையிலத்திரோதமுடன் சுத்தமாயை சேரமூவகைக்குமுள - மாமாயை திரோதாயியென்னு மிரண்டுமலமும் மூவகையான்மாக்களுக்கு முள அவை கூட்டியெண்ணுமிடத்து விஞ்ஞானகலர் மும்மலத்தார் பிரளயாகலர் நான்மலத்தார் சகலர் ஐம்மலத்தாரெனப்படும்—அவரின் முன்னோர் கவ்வுமலத் தோர் மலம்போய் ஞானமானோ ரெனக்காட்டு மவ்விரண்டின் நாலுவகைகணி க்கும் - இன்னுமம்மூவரின் விஞ்ஞானகலர் தீர்ந்ததுகளோர் தீராத்துகளோ ரென இரண்டுவகையாம். அஃதாவது மலம்நீங்கினோர் மலம்நீங்காதோரென் றும். அவ்விரண்டுவகையும் ஒவ்வொன்றிலிரண்டாக நாலுவகையாம். எ-று.

விஞ்ஞானகலரென்றது ஞானத்தாலே கலையையகன்றோரை. பிரளயாகல ரென்றது பிரளயகாலத்திலே கலையையகன்றோரை. சகலரென்றது எல்லாக் கலையுங் கூடினோரை. கலையென்றது கலாதிகளை. கலை அசுத்தமாயையிலே முன்னே தோற்றப்பட்டது. கலைநீங்க ஐம்மலங்களும் நீங்குமென்பது போத ரும். விஞ்ஞானகலரின் நால்வகையும் மேலே கூறுப. (௨௧)

விஞ்ஞானகலர் பிரளயாகலர்வகை கூறுகின்றார்.

தீர்ந்ததுகளோர்வேதமுதன்ஞானமூர்த்தி
திகழட்டவித்தேசர்சிறந்தவிருவகையாஞ்
சேர்ந்ததுகளோர்சத்தகோடிமந்திரர்கள்
சேருசதாசிவராதியிருவகைச்சீர்பின்னோர்
வாய்ந்ததவப்பயனினான்மந்திரநாயகரா
மலமிரண்டோர்நால்வகையர்புவனநாயகரும்
நேர்ந்தமேலோருமார் நூற்றெருபத்தெட்டு
நீசராங்கீழ்ப்போகநிலையருமாநிறுத்தே.

(இ-ள்.) தீர்ந்ததுகளோர் வேதமுதன் ஞானமூர்த்தி திகழட்டவித்தேசர் சிறந்தவிருவகையாம் - முன்சொன்ன நால்வகையோரில் தீர்ந்ததுகளோர் வேத மூர்த்தி ஞானமூர்த்திகளாகிய மூர்த்திபேதங்களொருவகையும் அட்டமூர்த்திக ளொருவகையுமாக இரண்டுவகையாம். இவர்களுக்குத் திரோதாயியாம்—சேர்ந்ததுகளோர் சத்தகோடிமந்திரர்கள் சேருசதாசிவராதி யிருவகைச்சீர் - துகள் தீராதோரும் சத்தகோடிமந்திரர்கள் சதாசிவர்முதலிய மந்திரநாயகர் என இரு வகையினராம்—பின்னோர் வாய்ந்ததவப்பயனினால் மந்திரநாயகராம் - பின் சொல்லப்பட்ட சதாசிவர்முதலாயினோரே சிறந்த சிவபுண்ணியத்தால் மந்திர நாயகராவார்—மலமிரண்டோர் நால்வகையர் - இருமலராகிய பிரளயாகலரும் நாலுபேதமாம்— புவனநாயகரும் நேர்ந்தமேலோருமார் நூற்றெருபத்தெட்டு நீசராம் கீழ்ப்போக நிலையருமா நிறுத்தே - அந்தமலமிரண்டுடையோரில் புவ னநாயகரும் மேற்பதமிச்சித்திருப்பார் நூற்றுப்பதினெட்டு ருத்திரர்களும் கீழ்ப் போகமிச்சித்திருப்பார் நூற்றுப்பதினெட்டு ருத்திரர்கள் இரண்டுபேதமுமாக நால்வகையாம். எ-று.

ஞானமூர்த்திகள் நித்தியத்துவம் பெற்றோர். அட்டவித்தேசுரராவார் அனந்தர், சூக்குமர், சிவோத்தமர், ஏகநேத்திரர், ஏகருத்திரர், திரிமூர்த்தி, சீக ண்டர், சிகண்டி ஆகிய இவரே. மந்திரரேழுகோடியாவார் நமவொருகோடி சுவாகாவொருகோடி சுதாவொருகோடி வௌஷடு ஒருகோடி வசடு ஒருகோடி படுவொருகோடி உம் ஒருகோடியாகும். நமவென்பது இருடிகட்கும், சுவாகா வென்பது தேவர்கட்கும், சுதாவென்பது மாதிருபிதிர்கட்கும், வௌஷடுவென் பது பூதமுதலியவற்றிற்கும், வசடுவென்பது மானுடர்க்கும், படுவென்பது உக்கி ரவிக்கிரகங்களுக்கும், உம்மென்பது ஆஞ்ஞைத்தலைவர்கட்குமாம். புவனநாயகர் இருநூற்றிருபத்துநாலு புவனங்கட்குக் கர்த்தாவாவார். மேற்பதமிச்சித்தோர் பதமூர்த்திகள்; அவர் வீரேசர் சீகண்டர் முதலிய நூற்றுப்பதினெண்மர். இவ ரிருவரும் முதல்வராம். கீழ்ப்போகநிலையராவார் மேலே சொல்லும் புரியட்டகத் தோடு திரியுமிருவகையர். இந்நால்வகையும் பிரளயாகலபேதமாம். (௨௨)

சகலர்வகை கூறுகின்றார்.

குறித்தகீழோர்புத்தியாங்காரமனமுங்
கோதில்சத்தாதியாம்புரியட்டகத்தர்
நிறுத்தசகலத்தோர்களயன்மாலேமுதலா
நிகழ்நரகரீருருநிலைவித்துப்பைவேர்
மறித்துமுட்டையில்வளர்வபத்தொன்பானூர்வ
வருபதினைந்தாகுமாப்பறவைநீருறைவ
வறைத்தபஃதுபத்தமரர்பதினொன்றென்பா
னருநரரெண்பத்துநான்குநூறாயிரமாம்.

(இ-ள்.) குறித்தகீழோர் புத்தியாங்காரமனமுங் கோதில்சத்தாதியாம் புரியட்டகத்தர் - பிரளயாகலரிற் கீழ்ப்போகநிலையராவார் முன் கூறப்பட்ட மனம் புத்தி யாங்காரமும் சத்தப் பரிச ரூப ரச கந்தங்களுமாகிய வெட்டுக்கருவியுஞ் சேர்ந்த புரியட்டகதேகிகளாம்—நிறுத்தசகலத்தோர்க ளயன்மாலேமுதலா நிகழ்நரகரீருரும் - இனிச் சகலராவார் பிரமா விட்டுணு முதலாக நரகவுலகத்தாரீருகச் சொல்லப்படும்—நிலை வித்துப் பைவேர் மறித்து முட்டையில் - இச்சகலரும் நால்வகைப் பிறப்பையடைவார்கள் அவை வித்திற்றோன்றுவனவுங் கருப்பையிற்றோன்றுவனவும் வெயர்விற்றோன்றுவனவும் முட்டையிற்றோன்றுவனவுமாம்—வளர்வ பத்தொன்பான் - இந்நால்வகையில் எழுவகைப்பிறப்பையடைவார் பரிசவிந்திரியமொன்றால் வளர்வனவாகிய தாவரம் பத்தொன்பது நூறாயிரமாம் இவைவித்திற்றோன்றுவன—ஊர்வவருபதினைந்தாகும் - ஊர்வன பதினைந்துநூறாயிரமாம் இவை வெயர்வினும் முட்டையினும் பிறந்து ஈரறிவு மூவறிவுமுடையனவாம்—மாப்பறவை நீருறைவவறைத்தபஃது பத்து - நாற்காலையுடையனவும் பறப்பனவும் நீருறைவனவுமாகிய இம்மூவகையும் பத்துப்பத்து நூறாயிரமாக முப்பதுநூறாயிரமாம். இவை வெயர்விற்றோன்றுவனவும் பையிற்றோன்றுவனவும் முட்டையிற்றோன்றுவனவுமாய்ச் சத்தப் பரிச ரூப ரச கந்த மென்னும் புலன்களைந்தும் நான்கறிவு மைந்தறிவுமாயிருப்பனவாம்—அமரர் பதினொன்று - தேவர்கள் பதினொருநூறாயிரம். இவர்கள் கருப்பையிற்றோன்றி எட்டறிவுமுதல் நானூற்றைம்பது குணியறிவையுடையர்—ஒன்பானரு நரர் - மானுடர் ஒன்பதுநூறாயிர பேதமாம். இவரும் கருப்பையிற்றோன்றிச் சித்தமுதலாறறிவுடையராயிருப்பர். இவர் ஒருகாலர் நக்கினர் நீர்வாழ்வார் யானைக்காதர் காக்கைமூக்கர் முதலிய பேதமாம்—எண்பத்துநான்கு நூறாயிரமாம் - ஆகத்தொகை யெண்பத்துநான்கு நூறாயிரபேதமென்று சொல்லப்படும். எ-று.

வேர் கொம்பு கொடி கிழங்கிவையினும் பிறப்பவைகளையும் சேர்வித்தென்றார். கருப்பையினும் ஒருநாழிகைமுதல் பத்துமாதமீறாகவிருக்கும் வகை மானுடர் தேவர் நாற்காலி யிம்மூவகையுமாம். வெயர்வில் ஊர்வனவும் சிலபறவைகளும் பிறக்கும் முட்டையில் பறவையும் ஊர்வனவும் நீருறைவனவும் பிறக்கும் என அறிக. (உ௩)

ஆன்மாக்களுக்குருவமாதி கூறுகின்முர்.

உயிர்க்குருவம்ஞானுதியானெனதுசொரூப
முற்றகருவியினளவுபற்றலேசுபாவம்
வியர்க்குணங்காட்டியதறிகைகருவிதன்னின்
மேலிடுகைவிசேடமுடறன்னளவும்வியாத்தி
யயர்ப்பில்வியாபகமட்டசித்திவன்ன
மதுவேசிற்றறிவாகுமனைத்துந்தானுய்ச்
செயற்படாததுகாட்சிசுத்தியுண்மை
தெரியத்தான்றெரியாதுசிறக்குநிட்டைகாணே.

(இ-ள்.) உயிர்க்குருவம் ஞானுதி - இவ்வான்மாக்களுக்கு வடிவாவது மாயையிற்றோன்றிய இச்சாஞானக் கிரியையாம்—யானெனது சொரூபம் - சொரூபமாவது உருவத்தின்மேலிட்ட யானெனதென்பது விஞ்சுகை—உற்ற கருவியினளவு பற்றலே சுபாவம் - சுபாவமாவது கூடின கருவியுடனே பற்றுகை—வியர்க்குணங் காட்டியதறிகை - சிறப்பிக்குங் குணமாவது அறிவித்தாலறிவது—கருவிதன்னின் மேலிடுகை விசேடம் - இவற்றிற்கு விசேடமாவது கூடின கருவியுடன் மேலிட்டறிகை—உடறன்னளவும் வியாத்தி - வியாத்தியாவது பரிசமுள்ளளவும் நிறைதல்—அயர்ப்பில் வியாபகமட்டசித்தி - வியாபகமாவது சாதனைகளால் அணிமா மகிமா லகிமா கிரிமா ஈசத்துவம் வசித்துவம் பிராத்தி பிராகாமியம் என்னுமட்டசித்திகளானிறைதல்—வன்னமதுவே சிற்றறிவாகும் - நிறமாவது கிஞ்சிஞ்ஞனென்பது—அனைத்துந் தானுய்ச் செயற்படாததுகாட்சி - தெரிசனமாவது பாசமும் பசுத்துவமும் நீங்கித் தனக்கெனவோர் செயலற்றுச் சிவன்செயலலாற் றனக்கொரு செயலில்லையெனக் காண்பதாம்—சுத்தியுண்மை தெரியத் தான்றெரியாது சிறக்கு நிட்டைகாணே - சுத்தியாவது தற்போதமழுந்தச் சிவபோதம் மேலிடுகையாகிய நிஷ்டையாம். எ-று.

அட்டசித்தியாவன: அணிமா கதிரெழுதுகளினுஞ் சிறுகல்; மகிமா அண்டகோளகையினும் பெருத்தல்; லகிமா பஞ்சினும் நொய்தாதல்; கிரிமா இருப்புமலையினுங் கனத்தல்; ஈசத்துவம் எவற்றிற்குந் தலைமையாதல்; வசித்துவம் யாவரும் வணங்கநிற்றல்; பிராப்தி நினைத்தவிடத்தே செல்லுதல்; பிராகாமியம் தானிருந்தவிடத்திலே யெவற்றையுமழைத்தல். (உச)

பசுவிலக்கணமுற்றிற்று.

---

## பாசவிலக்கணம்.

ஆணவவிலக்கணங்கூறுகின்றார்.

ஆணவமாமலமுயிராயனுதியாக
வகத்துண்மணியரவுஞ்செம்பிடையமருங்களிம்பும்
பேணுநீருப்புடனேநெருப்படக்கும்விறகும்
பெருகுநெல்லிற்றவிடும்பிறங்குகண்ணிலிருளுங்
காணுமதுபோலென்றுமொன்றாகியநேகங்
கலைகள்சத்தியாய்க்காலந்தொறுங்குறைதல்செய்து
கோணுதலொன்றின்றியேயேணுயிரைமறைத்துக்
குறித்திடலாம்வகைநிற்குநிறுத்துமதுகேளே.

(இ-ள்.) ஆணவமாமலமுயிரை யனுதியாக வகத்துண்மணியரவுஞ் செம்பிடையமருங் களிம்பும் பேணுநீருப்புடனே நெருப்படக்கும்விறகும் பெருகுநெல்லிற்றவிடும் பிறங்குகண்ணிலிருளுங் காணுமதுபோ லென்றுமொன்றாகி - பாசமுறைமை சொல்லுமிடத்து ஆணவமலம் மூவகையான்மாக்களையும் மணியையடக்கிய பாம்புபோலவும் பொன்னையடக்கிய செம்பிற் களிம்புபோலவும் நீரையடக்கிய வுப்புப்போலவும் நெருப்பையடக்கிய விறகுபோலவும் அரிசியைமறைத்த தவிடுபோலவும் கண்ணைமறைத்த விருள்போலவும் எக்காலமும் அறிவைமறைத்தொன்றாகி—அநேகங்கலைகள் சத்தியாய் - அநேகந் தொழில்பொருந்திய சத்திபேதங்களையுடைத்தாய்—காலந்தொறுங் குறைதல் செய்து - பக்குவப்பட்ட ஆன்மாக்களுக்குக் காலங்கடோறுந் தன்சத்தி கெடுவதுஞ் செய்து—கோணுதலொன்றின்றியே யேணுயிரைமறைத்துக் குறித்திடலாம் வகைநிற்கும் நிறுத்துமதுகேளே - மாயை கன்மங்கள்போல மாறிவருதலின்றி வலியையுடையவுயிர்களை ஒருகாலத்துந் தோன்றாமல் மறைத்துத் தன்னைத்தரிசியாது தரிசித்தார்க்குக் குறித்தறியலாம்படி சகசமாய்நிற்கும் இம்மலத்தின் நிறுத்துங்கருமங்களும் மேலேகேட்பாயாக. எ-று. கோணுதல்-பேதித்தல். ஏண்-வலி. (உரு)

ஆணவமலத்தினுருவமாதி கூறுகின்றார்.

நித்தவுருவிருள்சொரூபமறியாமைபண்ணல்
நிலையாயசுபாவமவத்தைப்படுத்தனுளும்
வைத்தகுணமறிந்தவற்றைமீளமறப்பித்தல்
வருவிசேடமெல்லையினிற்றன்சத்திமாய்த
லொத்தவியாபகம்பரனுமுயிருமறியாம
லுடனிற்றல்வியாத்திமூவகையுயிருமுறுதல்
அத்தினிறங்கருமைதரிசனமிதனையறித
லதிற்சுத்திநீங்கியருளுடனிற்பதுவே.

(இ-ள்.) நித்தவுருவிருள் - இவ்வாணவமலத்திற்குக் கெடாதவுருவமாவது அஞ்ஞானம்—சொரூபமறியாமைபண்ணல் - சொரூபமாவது ஆன்மாக்களுக்கு அஞ்ஞானத்தைச்செய்தலாம்—நிலையாயசுபாவ மவத்தைப்படுத்தல் - நிலையாகிய சுபாவமாவது அவத்தைகளை யுண்டாக்கல்—நாளும் வைத்தகுணமறிந் தவற்றை மீளமறப்பித்தல் - நாடோறும் வைத்தகுணமாவது முன் கற்றறிந்தவற்றைப் பின் மறக்கப்பண்ணுதல்—வருவிசேடமெல்லையினிற்றன் சத்திமாய்தல் - பொருந்திய விசேடமாவது பாகப்பட்டவெல்லையிலே தனதுசத்திமீளுதல்—வியாத்திமூவகையுயிருமுறுதல் - வியாத்தியாவது மூவகை ஆன்மாக்களளவும் நிற்றல்—ஒத்தவியாபகம் பரனுமுயிருமறியாம லுடனிற்றல் - ஒப்பாகிய வியாபகமாவது தன்னையும் சிவனையும் உயிரறியாமற் கூடநின்றுமறைத்தல்—அத்தினிறங்கருமை - அவ்வாணவமலத்தின் நிறங் கருமையாம்—தரிசன மிதனையறிதல்-தரிசனமாவது இம்முறைமையெல்லா முடையது ஆணவமலமென்றறிதல்—அதிற்சுத்திநீங்கி அருளுடனிற்பததுவே - அதன் சுத்தியாவது ஆன்மா பராசத்தியுடனே சேர்ந்தவவதரமாம். எ-று. (௨௬)

இம்மலமும் ஆன்மாவும் சம்பந்தமென்பது நிறுத்திக் கூறுகின்றார்.

இறைபேதமுயிரென்னிற்சுகதுக்கம்வேண்டா
வில்லையுயிரென்னின்முத்திசொல்லவேண்டா
குறியின்மனமுதலானவுடல்புசிக்குமென்னிற்
குலவியபாசஞ்சடமாம்மலம்வினைசெய்யறியா
நிறையுமரன்சந்நிதியா லுண்டாகுமென்னி
னீடொளியுநிறையிருளுங்கூடிநிற்கவறியா
செறியுமுடலிடத்திலுயிரிலையாகின்மலங்கள்
சிவன்றனக்காம்வினைதானேதேடிச்சேர்ந்திடாவே.

(இ-ள்.) இறைபேதமுயிரென்னிற் சுகதுக்கம் வேண்டா - சிவன் சீவான்மாவாகவே யுள்ளது ஆன்மாவென்று வேறில்லையென்று கூறில் சுகதுக்கப்பட்டுவருதலாற் சிவபேதமல்லவாம்—இல்லை யுயிரென்னின் முத்தி சொல்லவேண்டா - ஆன்மாவில்லையென்று கூறிற் சாயுச்சியஞ் சேர்வாரில்லையாம்—குறியின்மனமுதலான வுடல்புசிக்குமென்னிற் குலவியபாசஞ்சடமாம் மலம்வினைசெய்யறியா - சிலர் மனமே யான்மாவென்பர் சிலர் புத்தியென்பர் சிலர் சித்தமென்பர் சிலர் புமானென்பர் சிலர் புருடனென்பர் இப்படியே பாசங்களை யான்மாவென்னில் பாசஞ் சடமாதலால் மலத்தோடுகூடிப் புண்ணிய பாவங்களைச்செய்யவு மனுபவிக்கவு மறியாவாம்—நிறையுமரன் சந்நிதியி லுண்டாகுமென்னில் நீடொளியும் நிறையிருளுங் கூடிநிற்கவறியா - அம்மனம் முதலானவை யறியுஞ் சிவனது சந்நிதியிலென்னில் மனுதிகள் இருளாகும் சிவனொளியாம் ஆதலால் இருளுமொளியுங்கூடி நிற்கமாட்டா—செறியு முடலிடத்தி லுயிரிலையாயின் மலங்கள் சிவன்றனக்காம் வினைதானே தேடிச்சேர்ந்திடாவே - பாசத்தாற்

செறிந்தவுடலிடத்தில் ஆன்மாவில்லையென்னில் சிவனுக்கு மலங்களுமுண்டாம் வினைப்பயனான சுகதுக்கங்கள் தானேதேடிச் சேர்வதில்லையாமாதலால் ஆன்மாவுண்டென்றறிவாயாக. எ-று. (உஎ)

சுத்தமாயாவிலக்கணங் கூறுகின்முர்

திகழ்சுத்தமாயைநின்மலமானவடிவாய்ச்
சேரமூவகையான்மாவளவுமுளவாகி
நிகழ்சுத்தவோங்காரமுதன்முப்பத்தொன்று
நேராகவிரிந்தட்டவித்தேசர்நிலையாய்ப்
புகழ்சுத்தவணுசதாசிவர்களுருத்திரர்கள்
புவனேசர்முதலாயபோதபதர்க்கெல்லா
மகழ்சுத்தவீடுதனுவாதியாகி
யருண்ஞானத்தால்விரிந்தங்கருட்குமிடமாமே.

(இ-ள்.) திகழ் சுத்தமாயை நின்மலமான வடிவாய் - விளங்கப்பட்ட சுத்தமாயையைக் கூறுமிடத்து நின்மலவடிவாய்—சேர மூவகை யான்மாவளவுமுளவாகி - மூவகை யான்மாக்களிடத்திலுஞ் சேர நிறைவுண்டாய் — நிகழ் சுத்தவோங்காரமுதன் முப்பத்தொன்று நேராகவிரிந்து - எவற்றிற்கும் மேலாக விளங்கப்பட்ட ஓங்காரமுதல் முப்பத்தொருபேதமாக விரிந்து— அட்டவித்தேசர் நிலையாய்ப் புகழ்சுத்தவணுசதாசிவர்க ளுருத்திரர்கள் புவனேசர் முதலாய போதபதர்க்கெல்லாம் - அட்டவித்தேச நிரூப்பளவுமாகிப் புகழப்பட்ட சுத்தத்தையுடைய ஆன்மவர்க்கமாகிய சதாசிவர்கள் நூற்றிருபத்தெட்டுருத்திரர்கள் புவனேசர்முதலாகிய அறிவையுடைய பதமூர்த்திகளாகிய இவர்களுக்கெல்லாம்— அகழ்சுத்தவீடு தனுவாதியாகி - மதிலாயும் சுத்தமான தனு கரண புவன போகம் வீடு முதலானவையாயும் — அருண்ஞானத்தால் விரிந்தங்கருட்கு மிடமாமே - மெய்ஞ்ஞானம் மிக்குங் குறைந்தும் அருளுக்குமிடமாய் நிற்கும். எ-று.

மூவகை யான்மாவளவு முளவாதல் விஞ்ஞானகலர் பிரளயாசகலர்களுக்குத் தனு கரண புவன போகமாயும் சகலர்க்கு வாக்காதி மந்திராதி கலாதிகளை நடத்தியும் கரணுதிகளைப் பிரணவத்தானடத்தியுஞ் செய்கை. முப்பத்தொருபேதமாவன: குடிலை, குண்டலி, பரம், பிரமம், வைந்தவம், மாயேயம், மாயை, விந்து, சிவம், நாதம், பிரணவம், பேரொளி, சுத்தவித்தையாதி-ரு, தனுவாதி-ச, மகாமாயை சூக்குமையாதி வாக்கு-ச, நிவிர்த்தாதி கலை-ரு, ஆக ௩௧. இவற்றினிலைமை மேலேகூறுதும். (உஅ)

சுத்தமாயாகாரியமுதிக்குமுறை கூறுகின்முர்.

பரமசிவன்றன்னுடையபராசத்தியருளாற்
பகர்குடிலைதனினுதந்தோன்றுமதில்விந்து
வருமவைகள்சிவஞ்சத்தியெனும்பேராகு
மற்றவிந்துசத்தியினிற்சாதாக்கியமதனிற்

தெரியுமகேசன்றன்னிற்சுத்தவித்தைமுன்னைத்
திகழ்விந்துசத்தியினிற்செறிபஞ்சகலைவாக்
குரையிலக்கரமைம்பத்தொன்றுமந்திரங்க
ளோரேழுகோடியுமுண்டாகுமருளுறவே.

(இ-ள்.) பரமசிவன்றன்னுடைய பராசத்தியருளாற் பகர்குடிலைதனினுதந் தோன்றும் - இந்தச் சுத்தமாயையிற்றோற்றங்களாவன: மேலான பரமசிவனுடைய பராசத்தியாஞ்ஞையினாலே யிந்தக் குடிலையாகிய சுத்தமாயையிலே யொருநாதமுண்டாம்—அதில் விந்துவரும் - அந்த நாதத்திலே விந்துதோன்றும்—அவைகள் சிவஞ்சத்தியெனும் பேராகும் - அந்த விந்து நாதங்களிரண்டும் சிவம் சத்தியென்று பெயராம்—மற்றவிந்து சத்தியினிற் சாதாக்கியம் - அந்த விந்துவாகிய சத்தியினிற் சாதாக்கியந் தோன்றும்—அதனிற்றெரியுமகேசன் - அந்தச் சாதாக்கியத்திற் காணப்பட்ட மகேசுரன் தோன்றும்—தன்னிற் சுத்தவித்தை - அந்த மகேசுரத்திலே சுத்தவித்தை தோன்றும்—முன்னைத் திகழ்விந்து சத்தியினிற் செறிபஞ்ச கலைவாக்குரையி லக்கரமைம்பத்தொன்று மந்திரங்களோரேழுகோடியுமுண்டாகு மருளுறவே - முன்சொல்லப்பட்ட விந்துவாகிய சத்திதத்துவத்திலே செறிந்த பஞ்சகலைகளும் நாலுவாக்கும் சொல்லோடுகூடிய அக்கரமைம்பத்தொன்றும் சத்தகோடி மகாமந்திரங்களும் வேதமுதற் சகலசாத்திரங்களுமுண்டாகும் சிவசத்தியதிற் பதிந்தவிடத்து. எ-று.

இந்தத் தத்துவங்களுக்குக் காலமில்லையாதலாலே தோற்றமீறில்லையானாலும் முன்பின் வருமுறைமைநோக்கித் தோற்றமொடுக்கஞ் சொல்லப்பட்டது. இந்தத் தத்துவங்களிலே சிவம் சத்தி சதாசிவம் மகேசன் உருத்திரன் நிற்கையாலே இவைகளையுமவர் வடிவுகளாகச் சொல்லப்படும். கலைகளைந்தும் சத்திபேதங்களாகிய அத்துவாக்களுக்கு முதலாய் எல்லாவுலகிற்குந் தாரகமாய் நிற்கும்.

சுத்தமாயைக்குருவமாதி கூறுகின்றார்.

ஓங்காரம்போலெல்லாம்வளைந்துநிற்றலுருவ
மொருகோடிபடமாகவிரிதல்சொரூபந்தான்
பாங்காகவொடுங்காதுநிற்றலேசுபாவம்
பகர்கிரியையளவாகும்வியாத்திவியாபகந்தான்
நீங்காதவறிவாதல்குணமுயிர்க்குஞானம்
நேரொத்துநிறைகுறைவாம்விசேடமருட்கிடமாம்
பாங்கினிறம்படிகமுதற்காட்சியிதுகாண்டல்
பகர்சுத்தியுயிரருளின்பாற்படுவதிதுவே.

(இ-ள்.) ஓங்காரம்போலெல்லாம் வளைந்துநிற்றலுருவம் - சுத்தமாயைக்குருவமாவது பிரணவம்போலெல்லாவற்றையு மடக்கிநிற்பது—ஒருகோடி படமாக விரிதல் சொரூபந்தான் - சொரூபமாவது படம்போல வெங்குங் கோடிபே

சமாக விரிகை—பாங்காகவொடுங்காது நிற்றலே சுபாவம் - இதன் முறைமை யான சுபாவமாவது ஒருகாலத்துமொடுங்காது நிற்றல்—பகர்கிரியையளவாகும் வியாத்தி - வியாத்தியாவது முன்சொல்லப்பட்ட கிரியாசத்தியளவாம்—வியாப கந்தான் நீங்காதவறிவாதல் - வியாபகமாவது வாக்குக்களாயும் அக்கரங்களாயும் கலைகளாயும் ஆன்மாவிற்கறிவித்து நிற்பது—குணமுயிர்க்கு ஞானம்நேரொத்து நிறைகுறைவாம் - குணமாவது உயிர்க்குச் சிவசத்துவமுதலியவற்ருல் ஞானமா யும் கிரியையாயும் ஞானமுங்கிரியையுமொத்தும் ஞானமேறிக் கிரியைகுறைந் தும் ஞானங்குறைந்து கிரியையேறியும் வருவிப்பதாம்—விசேடமருட்கிடமாம்- விசேடமாவது சகளம் நிஷ்களம் சகளநிஷ்களமாகிய சத்திவடிவுக்குஞ் சிவவடி வுக்குமிடமாகை—பாங்கினிறம் படிகம் - இதன்வடிவு படிகம்போல நல்லொளி யும் மந்திரத்துவங் கூடுநிறமுமாம்—முதற்காட்சியிதுகாண்டல் - தரிசனமாவது இதற்கு முதலான காட்சிகளைக் காண்டல்—பகர்சுத்தி யுயிரருளின்பாற் படுவ திதுவே - சொல்லப்பட்ட சுத்தியாவது ஆன்மாவானதருளுடன் சேரநிற்பது. எ-று. (௫௦)

அசுத்தமாயாவிலக்கணங் கூறுகின்ருர்.

விளங்கசுத்தமாயைதுடிவடிவாகிச்சலன
மேவியசுத்தஞ்சுத்தமிகவளவிச்சகலர்க்
குளங்கொள்தனுகரணமுடன்புவனபோக
முண்டாக்குங்காரணமாயொருகோடிபேதந்
துளங்கியணுக்களையொடுக்கிவிரித்துக்கன்ம
சுகதுக்கமொடுங்கவுமுற்பவிக்கவுந்தானிடமாய்க்
களங்கமதாயசுத்தமாய்நித்தமாயருளாற்
காரியப்பட்டிடுமிலதேற்கடல்வையமிலதாம்.

(இ-ள்.) விளங்கசுத்தமாயை துடிவடிவாகி - பிரவஞ்சமாக விளங்கப்பட்ட அசுத்தமாயையானது துடியினது வடிவுபோலவாய்—சலனமேவி - சஞ்சலத் தைப் பொருந்தி—அசுத்தஞ் சுத்த மிகவளவி - அசுத்தமுஞ் சுத்தமுங் கூடியிரு ப்பதாய்—சகலர்க்குளங்கொள் தனுகரணமுடன் புவனபோகமுண்டாக்குங்கார ணமாய் - சகலருக்குளங்கொள்ளப்பட்ட தனுகரணமுடன் புவனபோகமென்னு மிவை யுண்டாதற்குங் கொடுப்பதற்குங் காரணமாய்—ஒருகோடிபேதந் துளங்கி யணுக்களையொடுக்கி விரித்து - அநேக பேதமாகி விளங்கி ஆன்மாக்கள் தோன் றியொடுங்கும்படி செய்து—கன்மசுகதுக்கமொடுங்கவு முற்பவிக்கவுந் தானிட மாய் - கன்மமாகிய சுகதுக்கங்கள் தோற்றவு மொடுங்கவுமாதாரமாகி—களங்கம தாய் - அஞ்ஞானமே சுபாவமாய்—அசுத்தமாய் - அசுத்தமென்றபெயரையுடை த்தாய்—நித்தமாய் - அழியாததாய்—அருளாற் காரியப்பட்டிடு மிலதேற் கடல் வையமிலதாம் - இது திருவருளாற் காரியப்படுமிவ் இவ்வசுத்தமாயையில்லையாயிற் கடல்சூழப்பெற்ற இவ்வுலகமில்லையாம். எ-று. (௫௧)

அசுத்தமாயாகாரியமுதிக்குமுறைமை கூறுகின்றார்.

மன்னுமதோமாயைதனிலனந்ததேவரருளால்
வருங்காலநியதிகலைவித்தையாரகந்தான்
முன்னையக்கலையினுருத்திரனருளான்மூல
முக்குணங்கண்மூலமாமவ்வியத்தமதனி
லுன்னுசித்தமதிற்புத்தியாங்காரமதுதா
னுடன்மூன்றாந்தைசதம்வைகாரிபூதாதி
யென்னுமுதன்மனம்வாயிலிடைக்கருமேந்திரிய
மெழுங்கடையிற்சத்தாதியிதிற்பூதமெழுமே.

(இ-ள்.) மன்னுமதோமாயைதனி லனந்ததேவரருளால் வருங்கால் நியதி கலைவித்தையராகந்தான் - நிலைபெற்ற அசுத்தமாயையிலே அட்டவித்தியேசுரரில் அனந்ததேவர் திருவருளினாலே காலமும் நியதியும் கலையும் வித்தையும் அராகமுமாகிய வைந்துகருவிகளுந் தோன்றும்—முன்னையக்கலையினுருத்திரனருளால் மூலம் - முன்சொல்லப்பட்ட அந்தக் கலையிலே அட்டவித்தியேசுரரில் உருத்திரதேவரருளாலே மூலப்பிரகிருதி தோன்றும்—முக்குணங்கள் - அந்த மூலப்பிரகிருதியிலே முக்குணங்களுந் தோன்றும்— மூலமாமவ்வியத்த மதனிலுன்னுசித்தம் - மூலமவ்வியத்தமானவவதரத்திலே சித்தந் தோன்றும்—அதிற் புத்தி - அந்தச் சித்தத்திலே புத்திதத்துவந் தோன்றும்—ஆங்காரம் - அந்தப் புத்தியிலே ஆங்காரந்தோன்றும்—அதுதானுடன்மூன்றாந் தைசம்வைகாரிபூதாதியென்னும் - அந்த ஆங்காரந்தான் முன்னைய முக்குணங்களோடு கூடும் அது தைசதவாங்காரம் வைகாரிகாங்காரம் பூதாதியாங்காரமென மூன்றுவிதமாம்—முதல்மனம்வாயில் - இவற்றில் சாத்துவிதகுணத்தையுடைய தைசதவாங்காரத்திலே மனந்தோன்றும்; இதிலே சுரோத்திரம் தொக்கு சட்சு சிங்குவை ஆக்கிராணமாகிய ஞானேந்திரியமைந்துந் தோன்றும்—இடைக் கருமேந்திரியம் - ராசதகுணத்தையுடைய வைகாரியாங்காரத்திலே வாக்குப் பாதம் பாணி பாயுரு உபஸ்தமாகிய கன்மேந்திரியமைந்துந் தோன்றும்—எழுங்கடையிற் சத்தாதி - தாமதகுணத்தையுடைய பூதாதியாங்காரத்திலே சத்தப் பரிச ரூப ரச கந்தமாகிய பஞ்சதன்மாத்திரைகளுந் தோன்றும்—இதிற்பூதமெழுமே - இந்தத் தன்மாத்திரைகளில் சத்தத்தில் ஆகாயம் பரிசத்தில் வாயு ரூபத்தில் அக்கினி ரசத்தில் அப்பு கந்தத்தில் பிருதுவியாகப் பஞ்சபூதங்களுந் தோன்றும். எ-று. (௩௨)

உன்னுதல் - தோன்றுதல்.

அசுத்தமாயைக்குருவமாதி கூறுகின்றார்.

இதற்குருவமசைவித்துநிற்றல்சொரூபந்தா
னெழிற்றுடிபோலிருதலையும்விரிதல்சுபாவம்பொய்
யதைப்பெருகவெய்யாக்கல்வியாத்திகன்ம
வணுக்களெல்லைவியாபகமேயதினுணுவன்ன

முதற்குணமேவினைக்கீடாமாறல்விசேடந்தான்
மூலவுடறூலவுடனிறம்வெண்மைகருமை
யிதிற்காட்சிவிகற்பமெல்லாமறிதல்சுத்தி
யெழிற்பாசவறிவெல்லாமிறந்துநிற்றல்காணே.

(இ-ள்.) இதற்குருவ மசைவித்துநிற்றல் - இந்த அசுத்தமாயைக் குருவமாவது பிரபஞ்சமா யசைவித்துநிற்றல்—சொரூபந்தானெழிற்றுடிபோ லிருதலையும்விரிதல்—சிறந்த சொரூபமாவது துடிபோல இருதலையும் விரிந்துநிற்றல்—சுபாவம் பொய்யதைப் பெருகமெய்யாக்கல் - சுபாபமாவது பொய்யை மெய்யாக்காநிற்றல்—வியாத்தி கன்மவணுக்களெல்லை - வியாத்தியாவது கன்மத்தை யிச்சித்த ஆன்மாக்களளவு முண்டாயிருத்தல்—வியாபகமே யதினுவன்னம் - வியாபகமாவ ததிலே நானுவன்னமாயிருக்கை—முதற்குணமே வினைக்கீடாமாறல் - இதற்கு முதலான குணமாவது கன்மத்துக் கீடாகமாறுதலாம்—விசேடந்தான் மூலவுடறூலவுடல் - விசேடமாவது சூக்குமவுடம்பு தூலவுடம்பாகை—நிறம் வெண்மை கருமை - நிறமாவது வெண்மை கருமை கூடிநிற்றல்— இதிற்காட்சி விகற்பமெல்லாமறிதல் - இதிற் காட்சியாவது விகற்பங்களெல்லாமறிவது—சுத்தியெழிற் பாசவறிவெல்லா மிறந்து நிற்றல்காணே - சுத்தியாவது பாசவறிவு நீங்கிப் பசுஞானத்துறுதலாகக் காண்க. எ-று.

அசைவிப்பது மாயைகளால் அறிவைப் பேதிப்பது. துடிபோலாதல் பூமிகுறைந்தும் கீளேழும் மேலேழுஞ்செல்ல விரிந்துமிருத்தல். சுபாவம் தன் னைமெய்யெனத் தோற்றுவித்தல். வியாத்தி பிரளயாகலரிற் சிலர் கீழ்நோக்கினபோகத்தை யிச்சிக்கையாற் கன்மவணுக்க ளெல்லையெனப்பட்டது. நானுவன்னம் வியாபகமென்றது தேவர்கள் சந்திராதித்தர்வடிவு நின்மலமானவொளி பற்றி. வினைக்கீடாகமாறல் நால்வகைத்தோற்றத் தெழுவகைப் பிறப்பாகமாறுதல். குணம் தனு கரண புவன போகம் வினைக்கீடாதல். மூலவுடல் தூலவுடல் தூலதேகம் சூக்குமதேகம் புருடதேகம் மாயாதேகமெனப் பேதித்து நிற்பது. வெண்மை கருமை நிறமாவது சந்திர சூரியர்க்குச் சுத்ததேகமும் நரகினர் முதலோருக்குப் பாவதேகத்தையுங் கொடுத்தல். (௫௫)

கன்மமலத்திலக்கணங் கூறுகின்றார்.

கன்மந்தான்றன்மாதன்மங்கள்வடிவாகுங்
கருதுசாதிவடிவுபுசிப்பெனமூன்றுங்காணு
தொன்மையுடற்கமைத்தலுமேல்வருதலுமாமாறித்
தோன்றிநிற்குமனத்தொடுங்குஞ்சுத்தமாயையினீ
லுன்னுமனவாக்குக்காயங்களினுலுண்டா
முயருந்தெய்விகமான்மிகமுமுற்பவுதிகமு
மென்னுமிவையசேதனசேதனத்தினுரு
மிஃதுமுன்னை யூழினுமகல்விலாதென்றும்.

(இ-ள்.) கன்மந்தான்தன்மாதன்மங்கள்வடிவாகும் - கன்மமல்மானது தன்மம் அதன்மமேவடிவாம்—கருது சாதி வடிவு புசிப்பென மூன்றும் - எண்ணத்தக்க சாதி வடிவு புசிப்பென மூன்றுபேதமாம்—காணு - இது மாயையிற் சார்ந்திருக்குமல்லது தனித்து வடிவாகக் காணப்படமாட்டாது—தொன்மை உடற்கமைத்தலும் மேல்வருதலுமாமாறித் தோன்றிநிற்கும்மனத்து - உடலுக்கேதுவாகிய சஞ்சிதமும் அமைத்ததாகிய பிராரத்தமும் மேலுடற்கேதுவாகிய ஆகாமியமுமாக மாறி மனத்திலே தோன்றி நிற்கும்—ஒடுங்குஞ் சுத்தமாயையினில் - இக்கன்மஞ் சுத்தமாயையிலே யொடுங்கும்—உன்னுமனவாக்குக் காயங்களினுலுண்டாம் - நினைக்கின்ற மனத்தாலும் வாக்காலும் காயத்தாலும் வந்துதோன்றுவதாம்—உயருந் தெய்விகமான்மிகமும் உற்பவுதிகமு மென்னும் - மேலாகிய தெய்வீகமென்றும் ஆன்மீகமென்றும் பவுதீகமென்றும் மூன்று பேதமாம்—இவை அசேதன சேதனத்தினுகும் - இந்தக் கன்மமேறும்விதம் அசேதனசேதனத்தினுலாகும்—இஃது முன்னையூழினு மகல்விலாதென்றும் - இவ்வினை முன்னையூழின்பாலதாகவரும்; எப்போதும் ஆன்மாக்களை விட்டிராது. எ-று. (கூ௪)

இதுவுமது.

உடலின்றிக்கன்மமிலாக்கன்மமிலாதுடலு
முண்டாகாவிரண்டுமொக்கவுண்டானபடிதா
னடர்மலமேயனுதியுளவவ்வறியாமையதா
மதுகன்மமதனுக்காவுடலுண்டாமவைதா
முடன்மூன்றுய்நெல்லுக்குத்தவிடுமியுமுளையு
முறுசெம்பிற்களிம்புடனேசிவப்புநாற்றமும்போல்
விடவரிதாயனுதியாய்நிற்குமிவைதன்னை
மேவுமுன்பின்னென்போர்விதியறியாதவரே.

(இ-ள்.) உடலின்றிக்கன்மமிலா - கன்மமலம் உடலில்லாவிடத் துண்டாகாது—கன்மமிலா துடலுமுண்டாகா - இந்தக்கன்ம மில்லாதபோது உடலுமில்லையாம்—இரண்டு மொக்கவுண்டான படிதான் - இவ்விரண்டு முடலுங்கூட உண்டானமுறைமைதான்—அடர்மலமேயனுதியுள அவ்வறியாமையதாம் அது கன்மம் - ஆணவமலமே ஆன்மாவுக் கனுதியாயுள்ளது அம்மலத்தாற் சிவனையறியாததுவே கன்மமாம்—அதனுக்காவுடலுண்டாம் - அது நீக்குதற்கே உடலிடப்பட்டதாம்—அவைதாமுடன் மூன்றும் நெல்லுக்குத் தவிடுமியும் முளையுமுறுசெம்பிற் களிம்புடனே சிவப்பும் நாற்றமும்போல் விடவரிதாய் அனுதியாய் நிற்கும் - அம்மலங்கள் மூன்றும் கூடுமுறைமையையெண்ணுமிடத்து நெல்லுக்குத் தவிடும் உமியும் முளையும்போலவும், செம்பிற்குக் களிம்பும் சிவப்பும் நாற்றமும்போலவும் அநாதியாய்நிற்கும்—இவைதன்னை மேவும் முன்பின்னென்போர் விதியறியாதவரே - இவற்றை அநாதியென்று கூறாது முன்பின்னுகச் சொல்லுபவர்கள் சிவாகமங்களைக் கற்றறியாதவரே. எ-று.

நெல்லுக்குத் தவிடு ஆணவம்; உமி மாயை; முளை கன்மம். செம்பிற்குக் களிம்பு ஆணவம்; சிவப்பு மாயை; நாற்றம் கன்மம் என்பதறிக. (ருரு)

கன்மமலத்திற் குருவமாதி கூறுகின்றூர்.

வினைக்குருவமறம்பாவஞ்சொரூபஞ்சாதி
மிகுமாயுவுணவுசுபாவம்பிரியாதாகை
தனக்குவியாத்தியுஞ்சுத்தமாயையெல்லைதூலந்
தருசூக்குமமிரண்டுந்தக்கவியாபகயாம்
நினைப்பில்குணமனத்தைவிடாதிருத்தல்விசேடந்தா
னிறைகுறைதலுக்கீடுமுன்பின்னுவருதல்
நனிப்பினிறமிருள்வெளியேகாட்சியிதுகாண்டல்
நாளுமரன்செயலாகைசுத்தியெனநாட்டே.

(இ-ள்.) வினைக்குருவம் அறம்பாவம் - இவ்வினைக்குருவமாவது புண்ணிய பாவங்கள்—சொரூபஞ் சாதி மிகுமாயுவுணவு - சொரூபமாவது சாதி ஆயுப்போகமாம்—சுபாவம் பிரியாதாகை - சுபாபமாவது புசிப்புத் தொலையுமளவும் நீங்காது நிற்றல்—தனக்கு வியாத்தியுஞ் சுத்தமாயையெல்லை - இக்கன்மத்தின் வியாத்தியாவது சுத்தமாயையளவும்— தூலந்தருசூக்குமமிரண்டுந் தக்க வியாபகமாம் - பொருந்திய வியாபகமாவது தகுதியாகிய தூலதேகம் சூக்குமதேகமளவுமாம்—நினைப்பில்குணம் மனத்தைவிடாதிருத்தல் - இவ்வினையின் குணமாவது ஆன்மாக்கள் மனத்தை விடாதிருத்தல்—விசேடந்தானிறை குறைதலுக்கீடு முன்பின்னுவருதல் - விசேடமாவது ஏற்றக்குறைதலுக்கீடாக மாறிக்கூடுவது—நனிப்பினிற மிருள்வெளியே - பெரிதாகச் சொல்லப்பட்ட நிறம் கறுப்பும் வெளுப்புமாம்—காட்சியிதுகாண்டல் - தரிசனம் இதன் முறைமையை யறிவது — நாளுமரன்செயலாகை சுத்தியென நாட்டே - சுத்தியாவது எப்போதுந் தன் செயலற்றுச் சிவன்செயலாய் நிற்பதாம். எ-று. பொருந்திய வியாபகமாவது தகுதியாகிய தூலதேகம் சூக்குமதேகமளவுமாம். (ருசு)

திரோதானத்தினிலக்கணங் கூறுகின்றூர்.

திரோதமலமிறைசத்தியான்மாவைக்கன்மஞ்
சேருமளவாகிமலச்செறிவுநீங்களவும்
விரோதமுறைபோலொக்கமறைப்பாகநின்று
மிக்கதுதான்மிகுமாயைவிரித்தறிவுபொருந்தி
வரோதயமாம்வேதங்கள்பலகலைகளாய்ந்து
வரினுமறியாதவகைநிரவுமதனுசிப்
பராவருளைமலமெனவும்பகர்வரதுதானே
பரமனையுங்கருணையினுற்றெரிவுறப்பண்ணிடுமே

(இ-ள்.) திரோதமலமிறைசத்தி - திரோதானமாவது மலமென்றுபெயரா யினும் இறைவனது சத்தியாம்—ஆன்மாவைக் கன்மஞ்சேருமளவாகி - ஆன்மா க்களைக் கன்மம்மேவுமளவும் மறைத்து—மலச்செறிவுநீங்களவும் விரோதமுறை போலொக்க மறைப்பாக நின்று - மலச்செறிவு நீங்குமளவும் விரோதித்தவர் போல மறைப்பாக ஒக்கமறைத்துநின்று—மிக்கதுதான்மிகுமாயை விரித்தறிவு பொருந்தி - மேலான அந்தத்திரோதானந்தான் மிகுத்தமாயையைவிரித்து அத னுலுள்ள கலாதி ஞானங்களைக் கொடுப்ப அதனைப் பொருந்தி—வரோதயமாம் வேதங்கள் பலகலைகளாய்ந்து வரினுமறியாதவகைநிரவும் - சிரேட்டமான வேத ங்கள் அறுபத்துநான்குகலைகள் பஞ்சவதிகாரங்களாராய்ந்தாலுங் கன்மவளவிற் சிவனையறியாது மறைத்து நிற்கும்—அதனுலிப்பராவருளை மலமெனவும் பகர் வரதுதானே பரமனையுங் கருணையினுற் றெரிவுறப்பண்ணிடுமே - ஆதலால் இந்த மேலான அருளான திரோதானசத்தியை மலமென்றுஞ் சொல்லுவர்; கன்மபா கத்தில் அந்தச்சத்தி பதிந்த அவதரத்திற் சிவனையுந் தெரியும்படி கருணைசெ ய்யும். எ-று. (௩௭)

திரோதானசத்தியினுருவமாதிகூறுகின்றார்.

ஆதியுருவிருளொளியேசொரூபமாடி
யதுபோலவகம்புறமாஞ்சுபாவமலம்போல்கை
சோதிதொழில்வியாத்திவியாபகந்தன்றன்னிலைமை
தோன்றுதவிரவியூமன்கணிற்போற்றோன்ற
தீதில்குணந்துலையொப்புப்பண்ணல்விசேடந்தாள்
சேர்ந்ததுவேமெய்யாக்கனிறஞானவடிவாம்
பேதமறுஞ்சத்திநிபாதங்காட்சிசுத்தி
பெருகருளேமலமலவென்றறிவதெனப்பேசே.

(இ-ள்.) ஆதியுருவிருளொளியே - ஆதிசத்தியென்னும் பெயரையுடைய திரோதாயிக்கு உருவமாவது இருளுமொளியுமாக இருத்தல்—சொரூபமாடியது போல அகம்புறமாம் - சொரூபமாவது கண்ணுடிபோல வழிபட்டார்க்கு வெளி யாயும் வழிபடாதவர்க்கு இருளாகியுமிருத்தல்—சுபாவம்மலம்போல்கை - சுபாவ மாவது மலத்தின்குணமாயேநிற்றல்—சோதிதொழில்வியாத்தி -வியாத்தியாவது பராசத்தியளவாம்—வியாபகந்தான் தன்னிலைமைதோன்றுத இரவியூமன்கணிற் போற்றோன்றல் - வியாபகமாவது கூகையின்கண்ணில் இரவிபோல இருளா கத் தோன்றுவித்துநிற்றல்—தீதில்குணந் துலையொப்புப்பண்ணல் - குற்றமற்ற குணமாவது துலையொப்புப்பண்ணுகை—விசேடந்தான் சேர்ந்ததுவே மெய்யா க்கல் - விசேடமாவது சேர்ந்த சேர்ந்த கன்மத்தை ருசிப்பித்தல்—நிறம் ஞான வடிவாம் - நிறமாவது ஞானவடிவாயிருத்தல்—பேதமறுஞ்சத்திநிபாதங்காட்சி - பேதமற்ற சத்திநிபாதமே தரிசனமாம்—சுத்தி பெருகருளே மலமலவென்றறிவ

தெனப் பேசே - சத்தியாவது திருவருளல்லது மலமன்றென்று அறிவதெனச் சொல்லுக. எ-று. (௩௮)

புறக்கருவியறுபதுக்குந் தோற்றங்கூறுகின்றார்.

பூதங்கடனிற்றோன்றுங்காரியமையைந்தும்
புகலும்வாக்காதிகளிற்றோன்றுதொழிலைந்தும்
நீதிவாயுவிற்றோன்றும்வாயுப்பத்தும்
நிகழ்பூதந்தனிற்றோன்றும்புகழ்நாடிபத்துங்
கோதில்விந்துவிற்றோன்றும்வாக்குநாலுங்
குலவுமூலந்தோன்றுங்குணங்கள்மூன்றும்
பேதவாகாயத்திலேடணைகண்மூன்றும்
பிறக்குமறுபதுமிவைகள்புறக்கருவியெனுமே.

(இ-ள்.) பூதங்கடனிற்றோன்றுங் காரியமையைந்தும் - புறக்கருவிகள் அறுபதில் பிருதுவியிற் றோன்றுங் காரியமாகிய மயிர் தோல் எலும்பு நரம்பு தசைஐந்தும்; அப்புவிற்றோன்றுங்காரியமாகிய நீர் உதிரம் மூளை மச்சை சுக்கிலமைந்தும்; தேயுவிற்றோன்றுங் காரியமாகிய ஆகாரம் நித்திரை பயம் மைதுனம் சோம்பு ஐந்தும்; வாயுவிற்றோன்றுங் காரியமாகிய ஓடல் இருத்தல் கிடத்தல் நடத்தல் தத்தலெனவைந்தும்; ஆகாயத்திற்றோன்றுங் காரியமாகிய குரோதம் லோபம் மோகம் மதம் மார்ச்சரியமைந்தும் ஆகிய பூதகாரியமிருபத்தைந்தும்—புகலும்வாக்காதிகளிற் றோன்றுதொழிலைந்தும் - சொல்லப்பட்ட வாக்காதி கன்மேந்திரியங்களிற்றோன்றும் வசனம் கமனம் தானம் விசர்க்கம் ஆனந்தமைந்தும்—நீதிவாயுவிற்றோன்றும் வாயுப்பத்தும் - உண்மையாகிய பிராணவாயுவிற் றோன்றும் பிராணன் அபானன் வியானன் உதானன் சமானன் நாகன் கூர்மன் கிருதரன் தேவதத்தன் தனஞ்சயன் ஆகிய வாயுக்கள் பத்தும்—நிகழ்பூதந்தனிற்றோன்றும் புகழ்நாடி பத்தும் - விளங்கப்பட்ட பிருதுவியிற் றோன்றப்பட்ட இடை பிங்கலை சுழுமுனை காந்தாரி அத்தி சிங்குவை அலம்புடை புருடன் சங்கினி குருவாகிய நாடிகள் பத்தும்—கோதில் விந்துவிற்றோன்றும் வாக்கு நாலும் - குற்றமற்ற விந்துவாகிய மூலாதாரத்திலே பிறக்கும் சூக்குமை பைசந்தி மத்திமை வைகரி ஆகிய வாக்குநாலும்—குலவுமூலந்தோன்றுங் குணங்கள்மூன்றும் - விளங்கப்பட்ட மூலப்பிரகிருதியிற்றோன்றும் சாத்துவிக இராசத தாமதமாகிய குணங்கள்மூன்றும்—பேதவாகாயத்தில் ஏடணைகள்மூன்றும் பிறக்கும் - பேதமாகிய தாரஏடணை புத்திரஏடணை அர்த்தஏடணையாகிய மூன்றும் ஆகாயத்திலுமாக இப்படிப் பிறக்கும்—அறுபதும் இவைகள் புறக்கருவியெனுமே - இவை அறுபதும் புறக்கருவியென்று பெயராம். எ-று.

தசவாயுவின்பிறப்பு: பிராணவாயு மூலாதாரத்திலடங்கும்நேரம் அபானனும் கண்டத்திலே வரும்நேரம் வியானனும் உதானனும் புறப்படும்நேரம் சமா

னனும் புருவத்தில்வரும்நேரம் நாகனும் கூர்மனும் கிருதரனும் கண்டத்தின்மேற்செல்லும்நேரம் தேவதத்தனும் உடல்விடும்நேரம் தனஞ்சயனும் உடலோடு கூடும்நேரம் பூதவாயுகாரணமாகப் பிறக்கும்.

தசநாடிகளிடம் : அவை இடை பிங்கலை சுழுமுனை நாடிகளில் நேரே காந்தாரி கண்ணிலே, அத்தி எலும்பிலே, சிங்குவை நாக்கிலே, அலம்புடை செவியிலே, புருடன் கைகளிலே, சங்கினி உபஸ்தத்திலே, குகு குதமார்க்கத்திலேயாகநிற்கும்.

முப்பத்தாறு தத்துவத்தில் அறுபதும், புரியட்டகத்தில் முப்பத்தாறும் அடங்கும். அவைவருமாறு:—பூதமைந்தில் இருபத்தைந்தும், பிருதிவியில் நாடி பத்தும், ஆகாயத்தில் ஏடணைகள் மூன்றும், வாயுவில் வாயுபத்தும், வாக்கில் வாக்குநாலும், பிரகிருதியிற் குணமூன்றும், வாக்காதியில் வசனாதியும் அடங்கும். சத்தாதியைந்திற் பூதங்கள் சுரோத்திராதி வாக்காதியும், கரணங்கள் மூன்றிற் கரணமொன்றும், கலாதிகளும், சுத்ததத்துவமும் அடங்குமென்றறிக. (௩௧)

முன்கூறியவற்றின் தொகைகூறுகின்றார்.

ஆகமலமைந்தவத்தைசாக்கிராதி
யவைபதினெட்டைங்கோசமாதாரமாறு
போகமண்டலமூன்றறத்துவாக்கள்
புகலுமந்திரப்பதினொன்றெண்பத்தோர்பதமும்
பாகவக்கரமைம்பத்தொன்றுடனேபுவனம்
பகருமிருநூற்றினோடிருபத்துநாலு
மோகதத்துவந்தொண்ணூற்றாறுகலையைந்து
முதலானபாசமெனமொழியுநூலே.

(இ-ள்.) ஆகமலம் ஐந்து - மலம் ஆகவைந்தாம்—அவத்தை சாக்கிராதி அவைபதினெட்டு - அம்மலத்தால்வரும் அவத்தை சாக்கிராதி அவை பதினெட்டாம் — ஐங்கோசம் - கோசமைந்தாம் — ஆதாரம்ஆறு - ஆதாரம் ஆறும்— போகமண்டலம் மூன்று - போகத்தைச்செய்யும் மண்டலங்கள் மூன்றும்— ஆறு அத்துவாக்கள் புகலும் மந்திரம் பதினொன்று - அத்துவாக்கள் ஆறு அவற்றைச் சொல்லுமிடத்து மந்திரம் பதினொன்றும்—எண்பத்தோர்பதமும் - பதம் எண்பத்தொன்றும் — பாகஅக்கரம் ஐம்பத்தொன்று - பகுக்கப்பட்ட வக்கரம் ஐம்பத்தொன்றும்—உடனேபுவனம் பகரும் இருநூற்றினோடு இருபத்துநாலு - இவற்றுடனே புவனம் இருநூற் றிருபத்துநாலாம்—மோக தத்துவம் தொண்ணூற்றாறு - அஞ்ஞானத்தைச் செய்யும் தத்துவம் தொண்ணூற்றாறும்—கலை ஐந்து - கலைகள் ஐந்துபேதமாம்—முதலானபாசமெனமொழியும்நூலே - இவை முதலானவும் பிறவும் பாசமென்று ஆகமநூல் சொல்லும் எ-று. இவற்றின்விரிவு மேல்வந்த விடத்திற்காண்க. (௩௦)

பாசவிலக்கணமுற்றிற்று.

---

## பொதுவிதி.

இந்நூலிற் சொல்லுஞ் சரியையிற்சரியையாதி பதினறின்வகை
கூறுகின்ருர்.

தத்துவமாம்பிரகாசந்தான்சரியையாதி
தகைநாலாமவைநாலினென்றினலாய்
வைத்தவகைபதினருய்வருஞ்சரியைபூசை
மதியோகஞானமெனும்வருஞ்சரியைச்சரியை
நித்தசரியைக்கிரியைசரியையோக
நிகழ்சரியைஞானமெனுநேர்கிரியைச்சரியை
வைத்தயோகச்சரியைஞானத்திற்சரியை
வகையாதிநானன்காய்வைக்குநூலே.

(இ-ள்.) தத்துவமாம்பிரகாசந்தான் சரியையாதி தகைநாலாம் - மேலேதத்துவப்பிரகாசமென்று சொல்லப்பட்ட இந்நூலின் கருத்தாவது சரியை கிரியை யோகம் ஞானம் என்னும் நாலுபேதமாம்—அவைநாலின் ஒன்றின் நாலாய்வைத்ததகைபதினருய்வரும் - அந்தநாலுவகையிலும் ஒவ்வொன்று நாலுவகையாகப் பதினறுவகை யுண்டாம்—சரியை பூசை மதி யோகம் ஞானம் என்னும் - சரியை கிரியை யோகம் ஞானமென்னும் நாலினும் —வருஞ் சரியைச்சரியை நித்தசரியைக்கிரியை சரியையோகம் நிகழ்சரியை ஞானமெனும் - அந்தச் சரியையாதியிலே சரியையிற்சரியையென்றும் அழியாத சரியையிற்கிரியையென்றும் சரியையில்யோக மென்றும் விளங்கப்பட்ட சரியையில் ஞானமென்றும் நாலாம்—நேர்கிரியைச்சரியை வைத்தயோகச்சரியை ஞானத்திற்சரியை வகையாதி நானன்காய் வைக்குநூலே - இந்தவகைப்படி நேரே கிரியையிற்சரியை யோகத்திற்சரியை ஞானத்திற்சரியையென அடைடவே கிரியையிற்கிரியை கிரியையில்யோகம் கிரியையில்ஞானம் யோகத்திற்சரியை யோகத்தில்யோகம் யோகத்தில்ஞானம் ஞானத்திற்கிரியை ஞானத்தில்யோகம் ஞானத்தில்ஞானம் எனப்பதினறு வகையாக இந்நூலின்வைத்துச் சொல்லப்படும். எ-று. (சக)

இப்பதினறு வகைக்கும் பொதுவிதியாகிய சௌசமுதல் நான
மீருகவுள்ள சற்கருமங்களை உதயகால மென்னுஞ்
சூத்திரமுதல் முச்சந்தியென்னுஞ் சூத்திரமீ
ருக எட்டுச்சூத்திரத்தாற் சொல்லத்
தொடங்கிச் சவுசவிதி
கூறுகின்ருர்.

உதயகாலத்தெழுந்துசரியைசெய்வோ
னுருத்திரனைக்கிரியையோனெண்சதாசிவனைக்
கரையில்சிவயோகியோநாதவிந்துவதனைக்
கலைஞானிசோகம்பாவத்தினையேகண்டு

விதிதிசையேகோயில்விட்டுநூறுவிற்கிடைபோய்
விளைநிலங்களாதிகுளிர்நிழல்கள்குளத்துள்வாய்
பதிநிலத்திலிராதுநல்லோரைநோக்காது
பரிதிவலங்கொள்ளிரவுதெற்கதனைப்பாரே.

(இ-ள்.) உதயகாலத்தெழுந்து - உதிக்க ஐந்துநாழிகை யுண்டென்னப் பிராமிய மெனப்படுங்காலத்திலே யெழுந்திருந்து—சரியைசெய்வோன் உருத்திரனை - சரியை செய்வோன் உருத்திரமூர்த்தியைத் தியானிக்க — கிரியையோன் ஒண்சதாசிவனை - கிரியைக்குரியார் மிக்கசதாசிவனைத் தியானிக்க—கரையில்சிவயோகியே நாதவிந்துவதனை - எல்லையற்ற சிவயோகிகள் நாதத்தையும் விந்துவையுந்தியானிக்க—கலைஞானி சோகம் பாவத்தினையேகண்டு - அறிவுமிஞ்சிய ஞானிகளாவார் சிவசெயலைப்பாவிக்க—விதிதிசையே கோயில்விட்டு நூறுவிற்கிடைபோய் - வெகிற்பூமிக்குப் போகுமளவில் தண்டு கமண்டல முதலானவையை அகத்திலே அல்லது நீர்க்கரையிலே வைத்துத் திருக்கோயில் எல்லை நூறுவிற்கிடைதூரம் விட்டுப்போய் — விளைநிலங்களாதி - விளைநிலம் கிணற்றங்கரை தோட்டம் திருநீறுவைத்தஇடம் உத்தமதலங்கள்—குளிர்நிழல்கள் - குளிர்ந்தநிழல்கள்— குளத்துள்வாய் - குளத்தினுட்கரை— பதிநிலத்தில் இராது - தேவஸ்தானத்திலிராமல்—நல்லோரைநோக்காது - மகேசுரர் பிராமணர் சந்திராதித்தர் பசுக்களைப்பாராது—பரிதிவலங்கொள்இரவு தெற்கதனைப் பாரே - பகலில் வடக்குநோக்கியும் இரவில் தெற்குநோக்கியும் இருக்குக. எ-று.()

தந்தசுத்தி.

பாரிலொருதிரணத்திலிருந்துமலங்கழித்துப்
பகர்மணலாலஞ்சுகுதம்பத்திருகைநீவி
வார்மணலாலுடற்சுத்திமண்ணிமந்திரங்கள்
வாராமலாசமித்துக்கரையிலேறி
நேரிருந்துகல்வித்திமாமருதசோகு
நிகழ்நாவல்சண்பகநாயுருவிகுருக்கத்தி
சேர்வுசிறுவிரற்பருமைபன்னிரண்டுவிரலே
திகழ்நீளங்கொண்டுசுத்திசெய்சரியைச்செயற்கே.

(இ-ள்.) பாரில் ஒரு திரணத்தில் இருந்து மலங்கழித்து - பூமியிலிருக்கும்போது ஒருதிரணமிட்டு அதன்மேல் நாசாக்கிரத்தைப் பார்த்துச் செவ்வையாயிருந்து மலங்கழித்து ஓமத்துக்கு ஆகாத கோலாதல் ஓடுமுதலானவையாதல்கொண்டு மார்க்கத்தைத் துடைத்து—பகர்மணலால் அஞ்சுகுதம் பத்திருகைநீவி - புற்றின்மண்ணுதல் சுத்தமானநிலத்து மிருதுவான மண்ணுதலள்ளிச் சலக்கரையிலிருந்து மூவிரலால் மண்கொண்டு குறியை ஒருதரமும் குதத்தை ஐந்துதரமும் இடக்கையைப் பத்துத்தரமும் இரண்டுகையையுங் கூட்டி ஏழுதரமும் சுத்

திசெய்து—வார்மணலால் உடற்சுத்தி மண்ணி - நொய்ய மணல்கொண்டு முழங்காற்கீழும் முழங்கைக்கீழுங் கழுவி—மந்திரங்கள் வாராமல் ஆசமித்துக் கரையில் ஏறி - மந்திரங்கள் கூடாமல் ஆசமனஞ்செய்து கரையில் ஏறி—நேர் இருந்து கல்லித்தி மா மருது அசோகு நிகழ்நாவல் சண்பகம் நாயுருவி குருக்கத்தி சேர்வு சிறுவிரற்பருமை பன்னிரண்டுவிரலே திகழ்நீளங்கொடு சுத்திசெய் சரியைச்செயற்கே - வடக்குநோக்கியாவது கிழக்குநோக்கியாவது இருந்து கல்லித்தி மா மருது அசோகு விளங்கும் நாவல் சண்பகம் நாயுருவி குருக்கத்தி இவைகளிற் கொம்பு சிறுவிரற்பருமையும் பன்னிரண்டுவிரல் நீளமுமுளதாகக் கொண்டு தந்தசுத்திசெய்வது சரியை கிரியைக்காரர்க்காம். எ-று. (சரு)

இதுவுமது.

ஆயிலொடுபுன்குபெருவாகைகருங்காலி
யணிமருதாமெட்டுவிரனீளமாகும்
தூயதாய்த்தோலுண்டாச்சுத்தமாய்நேராய்த்
துளையின்றியிடைமுறிதல்கணுவுமறக்கொண்டு
தேயிதுவேயோகிகட்குஞானிகட்குமாகுஞ்
சிறந்தவத்திரஞ்சரியைகிரியைபாசுபதமா
மாயசபையோகிக்குஞானிதியானத்தா
லாக்குசுத்திமூக்குக்கண்வாய்களாறிரண்டே.

(இ-ள்.) ஆயிலொடு புன்கு பெருவாகை கருங்காலி அணிமருதாம் எட்டுவிரல் நீளமாகும் தூயதாய்த் தோலுண்டாய்ச் சுத்தமாய் நேராய்த் துளையின்றி இடைமுறிதல் கணுவும் அறக்கொண்டு தேய் இதுவே யோகிகட்கும் ஞானிகட்கும் ஆகும் - ஆயிலும் புன்கும் மிக்க வாகையும் கருங்காலியும் மருதும் யோகிகட்கும் ஞானிகட்கும் எட்டுவிரல் நீளமாம். (பருமை நால்வகையோருக்கும் முன்சொன்னதொக்கும்) சொன்ன மரங்கள் சுத்தமாய்த் தோலோடுகூடியதாய்ச் செவ்வையாய் நடுத்துளையுங் கணுவுமின்றி இடையின் முறிதலுமின்றிக் கொண்டு தந்ததாவனஞ் செய்க—சிறந்த அத்திரஞ் சரியை - சிறந்த அத்திராயநமவென்று சரியைக்காரரும்—கிரியை பாசுபதமாம் - பாசுபத அச்திராயநமவென்று கிரியைக்காரரும்—ஆய் அசபை யோகிக்கு - அம்சம்என்னும் அசபாமந்திரத்தை யோகிகளும்—ஞானி தியானத்தால் ஆக்கு - ஞானிகள் உள்ளதென்றும் தியானித்துக்கொண்டு தந்தசுத்தி செய்க—சுத்தி மூக்குக் கண் வாய்கள் ஆறிரண்டே - தந்ததாவனத்தின்பின் மூக்குக் கண்கள் கழுவிப் பன்னிரண்டுதரம் வாய்கொப்புளிக்குக. (சச)

நானவிதி.

நானமோரெண்வகையாமலசலமாக்கிநேய
நற்றெய்வம்வாயவியமந்திரயானதநேர்
ஆனதியானந்தானுமவையெட்டுமடைவே
யருஞ்சுத்தநிலத்தின்மண்ணெண்விரற்கீழள்ளி

தானதுசுத்தஞ்செய்தத்திரமிதயகவசத்
தால்மூன்றுகூறுக்கியொன்றரைக்கீழ்த்தடவி
மானவொருகூறுமேலிதயத்தாற்றடவி
வனமூழ்கிமற்றக்கூறிடக்கையின்மூன்றுக்கே.

(இ-ள்.) நானம் ஓர் எண்வகையாம் - நானம் எட்டுப்பேதமாம். அவையாவன:—மலம் சலம் ஆக்கிநேயம் நற்றெய்வம் வாயவியம் மந்திரம் மானதம் நேர் ஆனதியானந்தானும் - மலநானம் சலநானம் ஆக்கிநேயநானம் நல்ல திவ்விய நானம் வாயவியநானம் மந்திரநானம் மானதநானம் நேராக உண்டான தியானநானமென எட்டாம்—அவை எட்டும் அடைவே - அந்தநானம் எட்டும் அடைவே சொல்லுமிடத்து—அருஞ்சுத்தநிலத்தின்மண் எண்விரற்கீழ்அள்ளி - மலநானமாவது சலக்கரையிற் சுத்தமானவிடத்தில் எண்விரலுக்குக் கீழாக மண்ணள்ளி—தான் அதுசுத்தஞ்செய்து அத்திரம் இதயம் கவசத்தால் மூன்று கூறுக்கி - அந்தமண்ணை அத்திரத்தாலே சுத்திசெய்து இதயத்தாலே துராலெடுத்துக் கவசத்தால் மூன்றுகூறுகப் பகுத்து—ஒன்று அரைக்கீழ்த் தடவி - ஒருகூற்றை அரைக்குக்கீழிட்டு—மான ஒருகூறு மேல் இதயத்தாற் தடவி - ஒருகூற்றை அரைக்குமேலே தலையளவாக இருதயமந்திரத்தாலே தடவி—வனமூழ்கி - சலத்திலே நானம்பண்ணி—மற்றக்கூறிடக்கையின் மூன்றுக்கே - மற்றையொருகூற்றை மார்பளவு தண்ணீரிலேநின்று இடக்கையிலிட்டு மூன்றுகூறுக்கிக்கொள்க. எ-று. (சரு)

இதுவுமது.

இதயாதிசெபித்ததனைத்தடவீசானுதி
யிருஞ்சலத்திற்கரைநின்றதெட்டுத்திக்குஞ்
சிதறுகவத்திரத்தினுற்சிவசலமாமூழ்கல்
திகழுமலநானமாமலகாதிசலமா
மிதனுனந்திருநீறுகற்பமாதி
யிடுதல்சங்கிதையாலாக்கிநேயமாகும்
பதையாதுகிழக்குவடக்காகநின்று
பாசுபதத்தாற்செபிக்கைதர்ப்பிக்கைபண்பே.

(இ-ள்.) இதயாதி செபித்து அதனைத் தடவு - அந்த மூன்றுகூற்றிலே ஒருகூற்றை இருதயமந்திரமுதலிய சடங்கமந்திரம் ஆறினுலும் செபிக்குக; ஒருகூற்றை ஈசானுதி பஞ்சப்பிரமமந்திரங்களினுலும் செபிக்குக; ஒருகூற்றை அத்திரமந்திரத்தாலே செபிக்குக; இருதயாதி செபித்தகூற்றை மேலே தடவுக—ஈசானுதி இருஞ்சலத்திற் கரை - ஈசானுதி செபித்தகூற்றைச் சலத்திலேகரை—நின்றது எட்டுத்திக்கும் சிதறுக அத்திரத்தினுற் சிவசலமாமூழ்கு திகழுமல நானம் - நின்றகூற்றை அத்திரத்தினுலே எட்டுத்திக்கிலும்போட்டுச் சிவதீர்த்த

மாகக் கற்பித்து நாசியும் நயனமும் செவியும் வாயும் புதைத்து மூழுகுவது இது விளங்காநின்ற மலநானமாம்—ஆமலகாதி சலமாம் - நெல்லி எண்ணெய் முதலானவை கூட்டி முழுகுவது சலநானமாம்—இதநானம் திருநீறு கற்பமாதியிடுதல் சங்கிதையால் ஆக்கிநேயமாகும் - இதமான நானமாவது சிவலோகத்திலேநின்று அமுதங்கடையுமளவிலே பிறந்த பசுக்கள் ஐந்து; அவற்றின் சாணத்தைச் சத்தியோசாதமந்திரத்தால் ஏற்று வாமத்தாற் கவ்வியம்விட்டு அகோரத்தாற் பிசைந்துருட்டித் தற்புருடத்தாற் றகித்து ஈசானத்தால் எடுப்பது கற்பம்; சித்திரை மாதத்திற் பசுமந்தையில் உலர்ந்தசாணத்தை இடித்து முன்சொன்ன விதிப்படி கவ்வியம்விட்டுப் பிசைந்து தகிப்பது அநுகற்பம்; வனத்திற் ருேகவெந்த சாம்பலை எடுத்து முன்சொன்ன விதிப்படி கவ்வியம்விட்டுப் பிசைந்து தகிப்பது உபகற்பம்; இவ்விதநீறும், ஓமகுண்டத்தினீறுங் கூட்டிச் சங்கிதாமந்திரத்தால் ஆபாதசூடமும் பூசி முழுகுவது ஆக்கிநேயநானமாம்—பதையாது கிழக்கு வடக்காக நின்று பாசுபதத்தாற் செபிக்கை தர்ப்பிக்கை பண்பே - அசையாது கிழக்கு நோக்கியாதல் வடக்குநோக்கியாதல் நின்று பாசுபதாத்திர மந்திரத்தினல் முக்காற் செபித்துத் தர்ப்பித்துவிடுவது அத்திரசந்தியின் முறைமையாம். எ-று.

நாசிநயனம்செவிபுதைத்தல் சண்முகிமுத்திரையென்பர். ஆபாதசூடம் - உச்சிதொடங்கிப் பாதமட்டும். (௬௬)

இதுவுமது.

நிகழ்வெயிலின்மழைபெய்யிற்கிழக்குநோக்கி
நேரேகைகளைநீட்டியத்திரத்தையுரைத்துப்
புகலுகிழக்கேழடிபோயேழுமீள்தல்
புகறெய்வங்கோவினடித்தூளியினிற்போத
றருமிதயத்தாலிதுவேவாயவியமொன்பான்
றக்கதீர்த்தங்கோடலுனேமானதமாம்
அதிகமந்திரம்பதினென்றதுவேமந்திரமா
மமுதசலமாக்கொள்வததுதியானமாமே.

(இ-ள்.) நிகழ்வெயிலின் மழைபெய்யிற் கிழக்குநோக்கி நேரேகைகளை நீட்டி அத்திரத்தை உரைத்துப் புகலுகிழக்கு ஏழடிபோய் ஏழுமீள்தல் புகல் தெய்வம் - விளங்கும்படி வெய்யில் எறிக்க மழைபெய்தால் கிழக்குநோக்கி இரண்டுகையையுங் குவித்து மேலேநீட்டி அத்திரமந்திரத்தாலே கிழக்கே ஏழடி போய் ஏழடிமீளல் தெய்வநானமாம்—கோவினடித் தூளியினிற்போதல் தருமிதயத்தால் இதுவே வாயவியம் - பசுக்கூட்டத்தி னடித்தூளியிலே இதயமந்திரத்தைச் செபித்துக்கொண்டு போதல் இதுவே வாயவியநானமாம்— ஒன்பான் தக்க தீர்த்தங் கோடல் தானே மானதமாம் - நவதீர்த்தங்களையுந் தியானித்து முழுகுவது மானதநானமாம்— அதிகமந்திரம் பதினென் றதுவே மந்திரமாம் -,

மேலான சங்கிதாமந்திரமாகிய பதினொருமந்திரமும் செபித்து முழுகுவது மந்திரநானமாம்—அமுதசலமாக்கொள்வதது தியானமாமே - அமுதசலமாகத் தியானித்து முழுகுவது தியானநானமாம். எ-று. (சஎ)

இவர்க்கிவர்க்கின்னதின்னதாகுமென நானவிதியை
வரையறுத்துக் கூறுகின்றார்.

ஈங்கிதனிலெட்டுமாஞ்சரியைகிரியைக்கிங்
கியலுமாக்கிநேயமுதலாறுமியோகிக்கா
மாங்கதனின்மானதமுந்தியானமுஞானிக்கா
மத்திரசந்தியுமிருவர்க்கிருவர்க்காகா
தாங்குசண்டாளர்நிழல்வியாதியோர்பொல்லாச்
சாதிகளேபுறச்சமயிதக்கசூதகத்தோர்
நீங்குமெலும்பாதியிவைதீண்டினுலு
நிறையுற்காரத்துமுறைபிறழினுநீர்மூழ்கே.

(இ-ள்.) ஈங்கிதனில் எட்டுமாம் சரியை கிரியைக்கு - இவ்விடத்தில் இந்த வெட்டும் சரியைக்கும் கிரியைக்குமாம்—இங்கியலும் ஆக்கிநேயம்முதல் ஆறும் யோகிக்காம் - இங்கே சொல்லப்பட்ட ஆக்கிநேயநானமுதல் ஆறும் யோகிக்காம்—ஆங்கதனில் மானதமுந் தியானமும் ஞானிக்காம் - அவைகளுள் மானதம் தியானமென்னும் இரண்டும் ஞானிக்காம்—அத்திரசந்தியும் இருவர்க்கு இருவர்க்கு ஆகா - அத்திரசந்தியும் சரியை கிரியை இரண்டுக்குமல்லது யோக ஞானமிரண்டுக்கு மாகாது—தாங்கு சண்டாளர்நிழல் வியாதியோர் பொல்லாச் சாதிகளே புறச்சமயி தக்க சூதகத்தோர் நீங்கும் எலும்பாதி இவை தீண்டினுலும் நிறை உற்காரத்தும் முறைபிறழினும் நீர் மூழ்கே - சண்டாளர் நிழற்படினும் வியாதியோரைத் தீண்டினும் சாதியீனர் புத்தர் சமணர் முதலிய புறச்சமயிகள் மரணசூசி சனனசூசிகளைத் தீண்டினுலும் எலும்பு ஓடு சீலை முதலியவற்றை மிதித்தாலும் சத்திவந்தாலும் தன்னெறிக்கு மாறுபாடுவந்தாலும் சலநானம்பண்ணுக. எ-று. (சஅ)

விபூதிதரிக்குங் காலமுமிடமுங் கூறுகின்றார்.

முச்சந்தியுடனுதயமத்தமனகால
முன்னுணவின்முன்பின்னுமுறங்குமுன்னும்பின்னும்
அர்ச்சனையின்முன்பின்னுமலசலங்கள்விட்டா
லாசமித்தபின்னுமதீக்கிதர்தொட்டாலும்
பொச்சவர்கள்மார்ச்சாரங்கொக்கெலிகள்முதலாப்
பொல்லாததீண்டிடினும்புனிதநீறணிக
நிச்சயமேசிவனங்கிகுருவித்தைமுன்னு
நீசர்முன்னும்நடைவயினுமணியற்கநீறே.

(இ-ள்.) முச்சந்தியுடன் உதயம் அத்தமனகாலம் - விபூதிஸ்நானமாவது சிறுகாலம் மத்தியானம் அந்தி அநுட்டானகாலத்தினும் உதயகாலம் அத்தமன காலத்தினும்—முன்னுணவின் முன் பின்னும் - மதிக்கும் போசனத்துக்கு முன்னும் பின்னும்—உறங்கு முன்னும் பின்னும் - நித்திரைக்கு முன்னும் பின்னும் — அர்ச்சனையின் முன் பின்னும் - பூசைக்கு முன்னும் பின்னும்—மலசலங்கள் விட்டால் ஆசமித்த பின்னும் - அவசியகருமங்கட்குப் பின்னாகச் செய்யும் ஆசமனத்துக்குப் பின்னும்—அதீக்ஷிதர் தொட்டாலும் - சிவதீக்கையில்லாதார் தீண்டினாலும்—பொச்சவர்கள் மார்ச்சாரம் கொக்கு எலிகள் முதலாப் பொல்லாத தீண்டிடினும் - தவமழிந்தோரையும் பூனை கொக்கு எலிமுதலான துட்ட மிருகங்களாகிய இவற்றையும் தீண்டினாலும்—புனித நீறு அணிக - சிவனது திருநீறிட்டுக்கொள்வது விபூதிஸ்நானமாம்—நிச்சயமே சிவன் அங்கி குரு வித்தை முன்னும் - விபூதி தரிக்கும்போது சிவன்றிருமுன்னும் அக்கினி குரு வித்தைகள் முன்னும் எதிர்நோக்கியிடாது முகத்தை மாறியிட்டுக்கொள்க— நீசர் முன்னும் நடவையினும் அணியற்க நீறே - சண்டாளர்முன்னும் வழிநடக்கும்போதும் விபூதி தரிக்கலாகாது; (நடக்கும்போது தரிக்கவேண்டின் நின்றுகொண்டு தரிக்குக.) எ-று. (சகூ)

பொதுவிதிமுற்றிற்று.

---

## சிறப்புவிதி.

### சரியையிற்சரியை.

வீசங்கூடாமலாசமித்துப்பின்னர்
மிகுமிதயாதிகளினலங்கநியாசத்தை
நேசங்கொடியற்றிமார்ச்சனமுமருடணமு
நிறுத்திப்பின்னசமித்துநியாசஞ்செய்து
வாசங்கொள்சலமூலமுக்காலம்மை
மதயானையாறுமுகன்குருவிரவிமற்றைப்
பாசங்கொண்முனிமனுக்கள்பூதமேபிதிர்கள்
பகர்முக்காற்செபிசரியைச்சரியையாம்பணிக்கே.

(இ-ள்.) வீசங்கூடாமல் ஆசமித்து - சலசுத்திமுதற் சுத்திசெய்து வீசமந்திரங்கூடாம லாசமனம்பண்ணி—பின்னர் மிகும் இதயாதிகளினல் அங்கநியாசத்தை நேசங்கொடியற்றி - பின்பு நீறணிந்து சடங்கத்தால் நியாசஞ் செய்து—மார்ச்சனமும்மருடணமும் நிறுத்தி - மார்ச்சனமும் அகமருஷணமுஞ்செய்து—பின் ஆசமித்து நியாசஞ்செய்து - பின்பு முன்போலவாசமித்துச் சடங்கநியாசஞ்செய்து— வாசங்கொள் சலம் மூலம் முக்கால் அம்மை மதயானை ஆறுமுகன்

குரு இரவி மற்றைப் பாசங்கொள் முனி மனுக்கள் பூதமே பிதிர்கள் பகர் மூக்காற் செபி சரியைச்சரியையாம் பணிக்கே - சுத்தமானநீரிற் தர்ப்பிக்குமிடத்துச் சிவமூலமந்திரம் பரமேசுபரிமந்திரம் கணபதிமந்திரம் சுப்பிரமணிய மந்திரம் குரு ஆதித்தன் மிகவுஞ் சிநேகத்தாற்கொள்ளப்பட்ட இருடிகள் மனுடர் பூதங்கள் பிதிர்கள் இவர்களுக்குச் சொல்லப்பட்ட தருப்பணம் மூக்கான்மூக்காற்றர்ப்பித்துச் செபித்துவிடுவது. இது சரியையிற்சரியையாம். எ-று.

சடங்கநியாசமாவது:—இருதயஞ் சிறுவிரலிலும், சிரசணிவிரலிலும், சிகை நடுவிரலிலும், கவசம் சுட்டுவிரலிலும், நேத்திரம் பெருவிரலிலும் தொட்டு அத்திரத்தாற் தாளத்திரயமும், கவசத்தால் இரண்டுகையையுஞ் சுற்றி அங்கத்திலும், இதயத்தைச் சிறுவிரலால் இதயத்திலும், சிரசை அணிவிரலாற் சிரசிலும், சிகையை நடுவிரலாற் சிகையிலும், கவசத்தைச் சுட்டுவிரலாற் கவசத்திலும், நேத்திரத்தை நடுவிரல்மூன்றினுல் நேத்திரத்திலும், அத்திரத்தால் திக்குபந்தனமும், கவசத்தால் அவகுண்டனமும், மூலத்தால் மகாமுத்திரையும் கொடுப்பது.

மார்ச்சனமாவது:—சலத்தை இடக்கையில் நிறைத்து அதிலிருந்து ஒழுகும் சலத்தைப் பதினெருமந்திரத்தாலும் சிரசிற் புரோக்கித்தல். அகமருடணமாவது:— புரோக்கித்து எஞ்சியநீரை வலக்கையிற்கொண்டு இடமூக்காலே புகுந்ததாகப்பாவித்துக் கும்பித்துப் பாவத்தைக் கரைத்துக்கொண்டு வலமூக்காலே வந்ததாக ரேசித்து வலக்காற்பெருவிரலினக்கினியிலே கெட்டதாகவிடுவது.

தருப்பணம் சிவன் அம்மை விநாயகர் சுப்பிரமணியர் குரு சூரியன் இருடி இவர்களுக்கு நாமாந்தமாகவும், மனுடருக்கு வஷடாந்தமாகவும், பூதங்கட்கு வௌஷடாந்தமாகவும், பிதிருக்குச் சுதாந்தமாகவும் குருவிதிப்படி செய்க. ருo

## கிரியையிற்சரியை.

அர்ச்சனையிற்சரியைகாயத்திரிபஞ்சப்பிரம
மருண்மூலஞ்சதாசிவமுஞ்சத்திமனேன்மனியுங்
கற்பகநற்சேமுன்போற்றேவர்சுவாகாவாக்
கையிலக்கிரமுனிகணம்விறையினலே
பொற்பின்மனுவஷட்சிறியவிரற்றலையால்வௌஷட்
பூதங்கள்கைமறித்துப்பிதிர்கள்முதற்கெல்லாம்
நிற்பதுசுட்டாவிரலாற்சுதாவென்றுமுக்கா
னிகழுசெபம்வேண்டுவதுபுகழுமுரைப்பதுவே.

(இ-ள்.) அர்ச்சனையிற் சரியை - கிரியையிற்சரியை கூறுமிடத்துத் சலசுத்தி முகசுத்திசெய்து வீசங்கூட்டி ஆசமனமும் அத்திரசந்தியுஞ் செய்து திருநீறுசாத்தி அங்கநியாச கரநியாசங்கள் பதினெருமந்திரத்தாலுஞ் செய்து மார்ச்சனமும் அகமருஷணமும் செய்து, தர்ப்பிக்குமிடத்து—காயத்திரி பஞ்சப்பிரமம்

அருண்மூலம் சதாசிவமும் சத்தி மனோன்மனியும் கற்பகம் நற்சேய் முன்போல் தேவர் சுவாகாவாக்கையில் அக்கிரம் - ஓம்தன்மகேசாய வித்தியும்கேமகாதேவாயதீமகிதன்னோ சிவப்பிரசோதயாற்சுவாகா. ஓம்ஓம் ஈசானாயசுவாகா. ஓம்எம் தற்புருடாய்சுவாகா. ஓம்உம் அகோராயசுவாகா. ஓம்இம் வாமதேவாய சுவாகா ஓம்அம் சத்தியோசாதாயசுவாகா. ஓம்ஆம்ஔம் சிவாயசுவாகா. ஓம் சதாசிவாய சுவாகா. ஓம்சிறீம் மனோன்மனியேசுவாகா. ஓம்கம் கணபதயேசுவாகா. ஓம்சும் சுப்பிரமணியாயசுவாகா. ஓம்ஆம் சிவகுருப்பியோசுவாகா. ஓம்ஆம் தேவேப்பியோ சுவாகா. ஓம்ஆம் மந்திரேப்பியோசுவாகா. என்றிம்மந்திரங்களை விரற்றலையாலே தர்ப்பிக்க—முனிகணம் விறையினாலே - இருடிகட்கெல்லாம் ஓம் இருட்டிப்பியோநம என்று அங்குலிப்பர்வங்களாலே தர்ப்பிக்க—பொற்பின்மனு வுஷட்சிறிய விரற்தலையால் - ஓம் மனுடேப்பியோவஷட் என்று சிறுவிரற்றலையால் மனுடருக்குத் தர்ப்பிக்க—வௌஷட் பூதங்கள் கைமறித்து - ஓம் பூதோப்பியோவௌஷட் என்று பூதங்கட்குக் கைமறித்துத் தர்ப்பிக்க—பிதிர்கள்முதற்கெல்லாம் நிற்பது சுட்டாவிரலால் சுதா என்று - ஓம்பிதிர்ப்பியோசுதா ஓம்மாதுர்ப்பியோசுதா ஓம்ஆம் விசுவேப்பியோசுதா ஓம்ஆம் சாத்தியோப்பியோசுதா ஓம்ஆம் அதிக்பதிப்பியோசுதா என்று சுட்டாவிரற்றலையாலே தர்ப்பிக்க—முக்கால் - எல்லாமந்திரங்களும் முக்கான்முக்காற்றர்ப்பிக்க—திகழுசெபம் வேண்டுவது புகழுமுரைப்பதுவே - செபங்களும் முக்கான்முக்காலாக வேண்டுமுருச்செபித்துத் தோத்திரமுஞ்செய்க. எ-று. (௫௧)

## யோகத்திற்சரியை.

யோகத்தினிற்சரியையுற்கரிக்கைதரிக்கை
யுயர்பிரணவத்தால்ரேசகபூரககும்பகங்கண்
மோகமறவுத்தூளமன்னமுதல்குறைதல்
மூலகன்மந்தூலகன்மமுடற்செயல்கண்முதலா
வாகுமியமங்நியமமெல்லாமுன்செய்தங்
கருஞ்சங்கிதாமூலத்தாலரனைமனத்திற்
பாகமுறவேகண்டுதெண்டன்பண்ணிப்
பரிவுறுவதிதுவென்றுபகருநூலே.

(இ-ள்) யோகத்தினிற்சரியை உற்கரிக்கைதரிக்கை - யோகத்திற்சரியையாவது கண்டமளவும் விரல்செலுத்திப் பித்தம்வாங்கலும் சலத்தைவாங்கி உள்ளே கொள்ளுதலும் செய்து—உயர் பிரணவத்தால் ரேசக பூரக கும்பகங்கள் - உயர்ந்த பிரணவமந்திரத்தாலே பூரித்துக் கும்பித்து ரேசித்து—மோகம் அற உத்தூளம் - அஞ்ஞானம் நீங்கத்தக்கதாக மூன்றுகாலமும் உத்தூளனஞ் செய்து—அன்னம் முதல் குறைதல் - தாழைச்சாற்றால் உப்பும் புளியஞ்சிராய்ச் சாம்பனீராற் புளியும் கடுக்காயாற் கைப்புமறுத்து அன்னங்குறைத்துக் கறிகள் நீக்கி—

மூல்கன்மஞ் தூல்கன்மம் - சத்திரயோகம் தூல்கன்மமாகிய மெய்யிற்றெழில்— உடற்செயல்கள் முதலா ஆகும் இயமம் நியமம் எல்லாம் முன்செய்து - உடற் கன்மமாகிய சங்காரயோகமுதற் செய்துவருவதாகிய இயமநியமங்களை முன் செய்து—அங்கு அரும் சங்கிதாமூலத்தால் அரனை மனத்திற் பாகமுறவே கண்டு தெண்டன்பண்ணிப் பரிவுறுவதிதுவென்று பகரும் நூலே - அவ்விடத்தில் அரிய சங்கிதாமூலமாகிய ஓம் ஓம் எம் உம் இம் அம் ஆம் ஈம் ஊம் ஐம் ஔம் அஃ இருதயாய வௌஷட் என்னும் மந்திரத்தாலே சிவனை மனத்திற் தியானித்துத் தெண்டம்பண்ணிப் பரிவுறுவது. இது யோகத்திற்சரியையின் நிலைமையென்று ஆகமங்கூறுமெனவறிக. எ-று.

இயமமாவது:— "கொல்லாமைவாய்மைமதுறவுகுணங்கருணை, பல்லோர்க் கிரங்கல்பசித்துண்ட-லல்லிற், றுயிலாமையெங்குஞ்சுழலாமையெல்லா, மியம மாமென்றேயிசை."

நியமமாவது:— "கைப்புப்புளிப்புவர்ப்புநீக்கல்கனகாயமோ, டொப்பினீ ராழமுயர்வச்சிரமே-எப்புவியும், நச்சாதிருத்தனடைநித்திரைமறுத்தன், மெச்சு நியமமாம்வேறு." (ருஉ)

## ஞானத்திற்சரியை.

ஞானிகளினயிட்டிகர்க்குச்சரியையாதியிலையா
நற்சாதகிகளுக்குமுற்சொன்னசரியை
மானமுடனிரவுசூக்குமவுடலிற்புசிப்பு
மாட்டியவத்தகைநினைந்துமீட்டுந்தூல
மானதுகண்டிருஞ்சலத்தாற்சுத்திபண்ணி
யஞ்செழுத்தானீறிட்டுத்தத்துவங்கள்சடமாத்
தானவுடனுசமித்தஞ்செழுத்தாலங்க
கரநியாசஞ்செய்தட்டமூர்த்திகடர்ப்பணமே.

(இ-ள்.) ஞானிகளின் நயிட்டிகர்க்குச் சரியையாதி இலையாம் - ஞானத்தி னிற்பார் நயிட்டிகரென்றுஞ் சாதகரென்றுமிருவகையாம் அவரின் நயிட்டிகரா வார் சந்ததநிட்டையாயே யிருப்பர் அவர்க்குச் சரியைமுதலான கிரியை சொல் லாதாம்—நற்சாதகிகளுக்கு முற்சொன்ன சரியை - சாதகியராயுள்ளார்க்கு முன் னே சொல்லப்பட்ட ஞானத்திற் சரியை சொல்லப்படும் (அஃதாவது.)—மானமு டனிரவு சூக்குமவுட லிற்புசிப்பு மாட்டியவத்தகை நினைந்து - யானெனதென் னுந் தன்மையுடனிராக்காலமெல்லாஞ் சூக்குமவுடலிலே புசிப்பித்துக்கொண்டு நின்ற முறைமையுங்கண்டு—மீட்டுந் தூலமானதுகண்டு - மீளவுந் தூலதேகத் திலே கூடினமுறைமையு மறிந்து—இருஞ்சலத்தாற் சுத்திபண்ணி - சுத்தசலத் தான் முகசுத்தி முதலானவை செய்து—அஞ்செழுத்தால் நீறிட்டு - பஞ்சாக்கர ங் கூடின ஈசானுதியாலே திருநீறுசாத்தி—தத்துவங்கள் சடமாத்தானவுடன்

ஆசமித்து - தத்துவங்கள் முப்பத்தாறுஞ் சுத்தமாகிறதாகக்கண்டு ஆசமனம்பண்ணி—அஞ்செழுத்தால் அங்ககரநியாசம் செய்து - யம் ஈசானுயநம, வம் தற்புருடாயநம சிம் அகோராயநம மம் வாமதேவாயநம நம் சத்தியோசாதாயநம சிவாயவித்தியாதேகாயநம யம் நேத்திரோப்பியோநம நம் இருதயாயநம மம்சிரசேநம சிம்சிகாயநம வம்கவசாயநம அம் அத்திராயநமவென்று நியாசஞ் செய்து—அட்டமூர்த்திகள் தர்ப்பணமே - ஓம்பிரமனேநம ஓம் விட்டுணுவேநம ஓம்உருத்திராயநம ஓம்மகேசுராயநம ஓம்சதாசிவாயநம ஓம்பந்திராயநம ஓம் சூரியாயநம ஓம்இயமானுயநமவென்றும், ஓம்நமோபகவதே தெட்சணாமூர்த்தியேநம ஓம் ஸ்ரீயம் மே தாம்பிரேச்சுவாகா ஓம் சந்திராயநம ஓம்நமவென்றும் தர்ப்பித்துவிடுவது. இது ஞானத்திற்சரியையாம். எ-று. (டுங)

## சரியையிற்கிரியை.

சரியையினிற்கிரியைதான்றிருக்கோயிலிடையிற்
சாயைமிதியாதுமியாதரனின்மாலியஞ்சேர்
விரிதுகோமுகைகடவாப்பீடமிடைப்போகா
வெல்லைகளிற்கால்நீட்டாவிரைவொருகாற்சுழலா
நிரைமுறையேபுறமுக்காலகமொருக்கான்மீள
நேரொருக்கால்வலம்வருவோன்பிரமசாரி
யரிதாகவதியிடத்தேயில்லறத்தோன்வலமு
மாங்கிடமுமாச்சுழல்வதம்முறைமையாமே.

(இ-ள்.) சரியையினிற் கிரியைதான் - சரியையிற்கிரியை யாதென்னில்—திருக்கோயிலிடையில் சாயைமிதியாது - திருக்கோயிலின் நியதி செய்யுமளவில் சாயையைமிதியாது—உமியாது - திருக்கோயிலுள்ளே எச்சிலுமிழாது—அரன்நின்மாலியம் சேர் விரிது கோமுகை கடவாது - சிவநின்மாலியஞ் சேரப்பட்ட சண்டேசுரத்தானம் நின்மாலியம் விழுங் கோமுகைத்தானமிவற்றைக் கடவாமலும்—பீடமிடைப் போகாது - பலிபீடத்தை இடபதேவரைக் குறுக்கிடாமலும்—எல்லைகளிற் கால் நீட்டா - தெய்வத்தானங்களிற் கால்நீட்டாமலும்—விரைவு ஒருகாற் சுழலாது - விரையவாராமலும் ஒருபிரதக்ஷணம் பண்ணாமலும்—நிரைமுறையே புறம் முக்கால் அகம் ஒருகால் மீள நேர் ஒருக்கால் வலம் வருவோன் பிரமசாரி - இரண்டாம்பிரகாரத்திலே நிரைமுறையாக முக்காலும் உள்ளே ஒருபிரதக்ஷணமும் உடையவரைத் தெண்டம்பண்ணி மீளவும் ஒரு பிரதக்ஷணமுமாக ஐந்து பிரதக்ஷணஞ் செய்வது பிரமசாரிக்காம்—அரிதாகவதி இடத்தே - அரிதாகிய சந்நியாசிகள் இவ்வைந்து மிடமாகச் செய்வார்—இல்லறத்தோன் வலமும் ஆங்கிடமுமாச் சுழல்வது அம்முறைமையாமே - கிரகத்தனவன் இந்தமுறைப்படி செய்யாது வலமும் இடமுமாகப் பிரதக்ஷணஞ் செய்வது முறைமையாம். எ-று. (டுச)

இதுவுமது.

மெல்லென்றுமார்ச்சனியாற்கிருமிகள்சாகாமல்
மேலலகிட்டடுத்தீன்றநாளினோயாத
லல்லவாமாவின்மயஞ்சுத்தநிலம்விழுந்தா
லதனைநடுப்படவெடுத்தலேற்றல்செய்து
நல்லவாநதியாதிவடித்தெடுத்தநீரா
னாளுமெழுக்கிடனந்தவனமுண்டாக்கல்
சொல்லரியவிண்டைதொடைதொடுத்தமைத்தல்பரமாஞ்
சுத்தவேடத்தடிமைதோன்றநிற்பதாமே.

(இ-ள்.) மெல்லென்று மார்ச்சனியாற் கிருமிகள் சாகாமல் மேலலகிட்டு - மெதுவாகத் திருவலகாற் கிருமிகள் சாகாமல் மேற்பட அலகிட்டு—அடுத்தீன்ற நாளின் நோயாதல் அல்லவாமாவின் மயம் சுத்தநிலம்விழுந்தால் அதனைநடுப்பட வெடுத்தல் ஏற்றல் செய்து - சாணகங் கொள்ளுமிடத்து ஈன்றணியதும் நோயுள்ளதல்லாததுமான பசுக்களிற் சாணகம் பூமியிலே விழுமுன்னே இலையி லேற்றுக்கொள்ளல் அன்றிச் சுத்தநிலத்தில் விழுந்தால் மேல்கீழ்தள்ளி நடுப் படவெடுத்து—நல்லவாம் நதியாதி வடித்தெடுத்த நீரால் - நன்றாகிய நதி ஓடை வாவியாதிகளில் வடித்தெடுத்த திருமஞ்சனத்தால்—நாளும் மெழுக்கிடல் - நாடோறுந் திருமெழுக்கிடல்—நந்தவனம் உண்டாக்கல் - திருநந்தனவன முண் டாக்குதல்—சொல்லரிய இண்டை தொடை தொடுத்தமைத்தல் - சொல்லுதற் கரிய இண்டை தொடை கண்ணி பந்து தண்டிற்கட்டுவதாகிய திருமாலைகளை உண்டாக்கிச் சிவபிரானுக்குச் சாத்தக் கொடுத்தல்—பரமாஞ் சுத்தவேடத் தடி மை தோன்ற நிற்பதாமே - மேலாகிய திருவேடத்தார்க்கு அடிமைத்தொழில் புரிந்து அவரேவலின்வழியே நிற்றலாகிய இவையெல்லாம் சரியையிற்கிரியை யாம். எ-று. (௫௫)

## கிரியையிற்கிரியை.

சூரியபூசைகூறுகின்றார்.

கிரியையினிற்கிரியையர்ச்சனையதுதான்மூழ்கிக்
கிளருமனுட்டானஞ்செய்திறைவர்கோயின்
மருவிவலம்வந்தகத்தின்மஞ்சனநீர்கொண்டு
வளர்கிழக்குநோக்கியம்மிதயமர்க்கஞ்
சிரசுபூர்ப்புவச்சுவரேசுவாலினியேசிகையாந்
திகழ்பூர்ப்புவங்கவசம்பானுநேத்திரமாம்
அரியசபையத்திரமாமர்க்கியமும்பின்னர்
அங்ககரநியாசமுமவ்வங்கத்தாற்சமையே.

(இ-ள்.) கிரியையினிற் கிரியை அர்ச்சனை - கிரியையிற்கிரியை கூறுமிடத்து சவுராதி சண்டாந்தஞ் செய்யப்படும் சிவபூசையாம்—அதுதான்மூழ்கி - அந்தப் பூசைசெய்யுமிடத்து முன்போல நானங்கள் செய்து—ளிரும் அநுட்டானஞ்செய்து - கிரியையிற்சரியைப்படி அநுட்டானஞ் செய்து—இறைவர் கோயில் மருவி வலம் வந்து - சிவனது திருக்கோயிலிற் சென்று நியமப்படி பிரதக்ஷணஞ் செய்து—அகத்தில் மஞ்சனநீர்கொண்டு - பூசாமண்டபத்தில் திருமஞ்சனத்தைக் கொண்டுவந்து வைத்து—வளர்கிழக்குநோக்கி - முன்னே கிழக்குநோக்கியிருந்து—அம் இதயம் அர்க்கம் சிரசு பூர்ப்பு வச்சுவரே சுவாலினியே சிகையாம் திகழ் பூர்ப்புவம் கவசம் பானுநேத்திரமாம் அரிய அசபை அத்திரமாம் - ஓம் அம் இருதயாயநம ஓம் அர்க்காயசிரசேநம ஓம் பூர்ப்புவச்சுவரோஞ்சுவாலினீசிகாயநம ஓம் பூர்ப்புவ கவசாயநம ஓம் பானுநேத்திரேப்பியோநம ஓம் அம்ச அத்திராயநம என்று—அர்க்கியமும் பின்னர் அங்க கர நியாசமும் அவ்வங்கத்தாற் சமையே - அதன்பின்னர் இதனாலே அங்கநியாச கரநியாசமுஞ் செய்து அர்க்கியமும் அவ்வங்கத்தாலே தாபிக்குக. எ-று. (௫௬)

இதுவுமது.

அங்கத்தாலர்க்கியமாக்கித்தெளித்துத்துவார
மருந்தண்டிபிங்கலனுமீசனங்கி
தங்குகணபதிகுருவுநடுவுபிரபூதந்
தான்விமலசாராவாராத்திபரமசுக
சிங்கங்களங்கிமுதற்சாத்திநடுப்பதுமஞ்
சேர்கிழக்குமுதல்ராம்ரீம்ரும்ரூம்ரெம்
அங்குரைம்ரோம்ரௌம்ரம்மென்றிங்கடைவே
யருந்தீத்தைசூக்குமையுஞ்சயாயையும்பத்திரையும்.

(இ-ள்.) அங்கத்தால் அர்க்கியம் ஆக்கித் தெளித்துத் துவாரம் - அங்கத்தால் அர்க்கியங்கற்பித்து இருதயத்திற் சூரியனைத்தியானித்து அந்தரியாகம் பூசித்து மேற்குத்துவாரத்திற் புரோக்கித்து—அருந்தண்டி பிங்கலனும் - வாயிலுக்கு வடக்குந்தெற்கும் ஓம்தண்டியேநம ஓம்பிங்கலாயநமஎன்று பூசித்து—ஈசன் அங்கி கணபதி குருவும் - ஈசானத்திலே ஓம் கம் கணபதியேநம என்றும் அக்கினி மூலையில் ஓம் குருப்பியோநம என்றும் பூசித்து—நடுவு பிரபூதம் - நடுவே ஓம் பிரபூதசானயநமஎன்று பூசித்து—தான்விமலசாரா ஆராத்தி பரமசுகசிங்கங்கள் அங்கிமுதல் சாத்தி - அக்கினி நிருதி வாயு ஈசானங்களில் ஓம் விமலாயநம ஓம் சாராயநம ஓம் ஆராத்தியாயநம ஓம்பரமசுகாயநம என்று சிங்கங்கள் நாலையும் பூசித்து—நடுப்பதுமம் - நடுவே ஓம் பத்மாசனயநம என்று பூசித்து—சேர் கிழக்குமுதல் ராம் ரீம் ரும் ரூம் ரெம் அங்குரைம் ரோம் ரௌம் ரம் என்று இங்கு அடைவே அருந்தீத்தை சூக்குமையும் சயாயையும் பத்திரையும் - அந்தப்பதுமத்திற் கிழக்குமுதலான எட்டிதழினும் ஓம் ராம் தீத்தாயைநம ஓம் ரீம் சூக்குமாயைநம ஓம் ரும் சயாயைநம ஓம் ரூம் பத்திரையாயநம என்றும்; குறை வருஞ்சூத்திரத்திற் காண்க. எ-று. (௫எ)

இதுவுமது.

மேவுவிபூதியைவிமலையமோகைவித்துதையும்
விளங்குசர்வதோமுகியையுமீசனிடையி
னேவிடச்செய்திடையர்க்காசனமதாக்கி
யுயருங்கங்கடோர்க்கசூரியமூர்த்திநடுவே
பாவித்துப்பருதியங்கமங்கியாதி
பகர்மேற்குநேத்திரமத்திரநாலுதிசையா
மேவுகிரகங்களையுமங்கியாதி
விதிரவியாதிகள்வடக்கிந்திராதியாயுதமே.

(இ-ள்.) மேவுவிபூதியை விமலையமோகை வித்துதையும் விளங்கு சர்வதோமுகியையும் ஈசனிடையில் ஏவிடச்செய்து - ஓம் ரெம் விபூத்தியைநம ஓம் ரைம் விமலாயநம ஓம் ரோம் அமோகாயநம ஓம் ரௌம் வித்துதாயைநம என்றும் ஈசானத்திற்கும் கிழக்கிற்கும் நடுவாக ஓம் ரம் சர்வதோமுகியைநம என்றும் நவசத்திகளைப் பூசித்து ஓம் உஷாயைநம ஓம் பிரத்திஉஷாயைநம என்றிரண்டிடத்திலும் சத்திகளையும்பூசித்து—இடை அர்க்காசனமதாக்கி - நடுவே ஓம் அர்க்காசனாயநம என்றுபூசித்து—உயரும் கங்கடோர்க்கசூரியமூர்த்தி நடுவேபாவித்து - ஓம் கம் கடோர்க்கசிவமூர்த்தியேநம என்று சூரியமூர்த்தியைத் தியானித்து, சூரியனை இதயத்தினின்றுங் கொண்டுவந்து அதிலே ஆவாகித்துப் பூசித்து—பருதி அங்கம் அங்கியாதி பகர்மேற்கு நேத்திரம் அத்திரம் நாலுதிசையாம் - சூரியனுடைய அங்கதேவரை அக்கினியில் இதயம் ஈசனிற் சிரசு நிருதியிற் சிகை வாயுவிற் கவசம் மேற்கே நேத்திரம் மேற்கு வடக்குக் கிழக்குத் தெற்கு இவைகளில் அத்திரத்தையும் பூசித்து—மேவுகிரகங்களையும் அங்கியாதி- ஓம் சம் சோமாயநம ஓம் பும் புதாயநம ஓம் பிரும் பிரகற்பதியேநம ஓம் பம் பார்க்கவாயநம ஓம் அம் அங்காரகாயநம ஓம் சம் சனிச்சுராயநம ஓம் ரம் ராகுவேநம ஓம் கம் கேதுவேநம என்று கிரகங்களை அக்கினி ஈசானம் நிருதி வாயு கிழக்கு தெற்கு மேற்கு வடக்கு இவைகளிற் பூசித்து—விதி ரவியாதிகள் வடக்கு இந்திராதி ஆயுதமே - ஓம் துவாதெசாதித்தாயநம ஓம் நட்சத்திராயநம ஓம் அருணாயநம ஓம் குருவேநம என்று வடக்குமுதலாகவும் ஓம் இந்திராயநம ஓம் அக்கினியேநம ஓம் இயமாயநம ஓம் நிருதியேநம ஓம் வருணாயநம ஓம் வாயுவேநம ஓம் சோமாயநம ஓம் ஈசானாயநம ஓம் பிரமனேநம ஓம் விட்டுணுவேநம என்று கிழக்குமுதலாகவும் மேலுங் கீழுமாகப்பூசித்து ஓம் வச்சிராயநம ஓம் சத்தியேநம ஓம் தண்டாயநம ஓம் கட்காயநம ஓம் பாசாயநம ஓம் அங்குசாயநம ஓம் கதாயநம ஓம் திரிசூலாயநம ஓம் பதுமாயநம ஓம் சக்கிராயநம என்று ஆயுதங்களையும் அவரவரிடத்திலே பூசிக்குக. எ-று. (௫௮)

சூரியபூசை சொல்லிமுடித்துச் சிவபூசை கூறுகின்முர்.

அவமகலவுபசாரங்கொடுத்தர்ச்சித்தொடுக்கி
யந்தநின்மாலியத்தைத்தேசச்சண்டர்க்காக்கி
நவமாகவாசமித்துப்பின்வடக்குநோக்கி
நல்லவோங்காரத்தாலர்க்கியங்கற்பித்துத்
திவழுமேற்கிடைவாயிற்படிமேலில்வடக்கிற்
றிகழுகணபதிதெற்குவாணிநடுத்திருவாம்
அவனியிற்கீழ்ப்படிவடக்குநந்திநடுக்கங்கை
யயற்றெற்கின்மாகாளர்நடுயமுனையாக்கே.

(இ-ள்.) அவமகல உபசாரங்கொடுத்தர்ச்சித்து ஒடுக்கி அந்தநின்மாலியத்தைத் தேசச்சண்டர்க்காக்கி நவமாகஆசமித்துப் பின் வடக்குநோக்கி - பின்குற்றமறப் பாத்தியமுதலான சோடசோபசாரமும் அக்கினிகாரியமுமாகத் தொடுத்துப் பூசித்துச் செபித்துச் சாத்திப் பராமுகார்க்கியமுங்கொடுத்து உத்தியாபனம் பண்ணி நிருமாலியத்தை ஓம் தேசச்சண்டாயநம என்று பூசித்துக் கால்கழுவி ஆசமித்துப் பின் வடக்குநோக்கியிருந்து—நல்ல ஓங்காரத்தால் அர்க்கியங் கற்பித்து - சிறந்த பிரணவத்தால் சாமானிய அர்க்கியந் தாபித்து—திவழு மேற்கிடைவாயிற்படிமேலில் வடக்கிற் திகழுகணபதி தெற்கு வாணி நடுத் திருவாம் - விளங்கப்பட்ட மேலைவாசலின் மேற்படியின் வடக்கே ஓம் கம் கணபதியேநம என்றும் தெற்கே ஓம் ஆம் சரசுவதியேநம என்றும் நடுவே ஓம் மகாலட்சுமியேநம என்றும் பூசித்து—அவனியிற் கீழ்ப்படி வடக்கு நந்தி நடுக் கங்கை - பூமியிற் கீழ்ப்படியில் வடக்கே ஓம் ஆம் நந்தியேநம என்றும் நடுவே ஓம் ஆம் கங்கையேநம என்றும் பூசித்து—அயற் தெற்கின் மாகாளர் நடுயமுனையாக்கே - அந்தப்படியிலே தெற்கே ஓம் ஆம் மகாகாளாயநம என்றும் நடுவே ஓம் ஆம் யமுனையநம என்றும் பூசிப்பது. எ-று. (௫௯)

இதுவுமது.

ஆக்கியபின்பூசித்துவிக்கினங்களகற்றி
யணைந்துள்ளிலத்திரத்துவாரன்வாத்துபதிபிரம
னேக்கியேதெற்குவடக்கருச்சித்துவடக்கே
நுவலுசதாசிவனனந்தன்சீகண்டன்றன்னே
டாக்குமம்பிகைகுகனேடரியும்வேதாவு
மாவேழுகுரவரோடங்கியிற்குருவுஞ்சாத்தித்
தாக்கியவாதனங்கற்பித்துக்கரகியாசந்
தான்செய்துபூதசுத்தியுடற்சுத்திசமையே.

(இ-ள்.) ஆக்கியபின் பூசித்து விக்கினங்கள் அகற்றி - மேற்குத் துவாரபாலகரை நிறுத்திப் பூசித்தபின் ஓம் சர்வேப்பியோ துவாரபாலேப்பியோ பாத்தியாசமனர்க்கியஞ்சுவாகா என்று பாத்தியாசமனர்க்கியங் கொடுத்து ஓம் சர்

வேப்பியோ துவாரபாலேப்பியோ கந்தபுட்பஞ் சுவாகாவென்று திருப்பள்ளித் தாமமுதலிய சாத்தி, ஓம் சர்வேப்பியோ துவாரபாலேப்பியோ தூபதீபநைவேத் தியஞ் சுவாகாவென்று தூபதீபங்கொடுத்துப் பூசித்தபின் ஒருபத்திரத்தை நேத் திராயவசவ்ஷ் என்று மத்திமைக்குந் தற்சனிக்குமிடையிலே யிடுக்கி அங்குட்ட த்தாலும் அனுமிகையாலும் இரண்டுகண்ணையுந் தொட்டு இடுக்கினவிரல்கள் நெற்றிக்கண்ணுகப் பாவித்து மேனோக்கிப்பார்த்து மேலுள்ள அசுரரைப்போக் கிறதாக அந்தப்பத்திரத்தை அத்திரத்தால் மேலேதெறித்து வேறுபத்திரமெடு த்து அங்குட்டந் தர்ச்சனிகளாற் கிள்ளிப்பிடித்து நாராசமுத்திரையால் அத்தி ராயபடுவென்று தெறித்து அந்தரத்துள்ள விக்கினங்கள் போனதாகநினைத்து வேறுபத்திரமெடுத்துக் கீழ்நோக்கிப்பார்த்துக் கீழுள்ள அசுரர்களைப் போக்கின தாகப் பாவித்து அத்திரத்தாற் கீழேதெறித்து வலக்காற்குதியால் மூன்றுதரம் பூமியிற்றட்டி—அணைந்துள்ளில் அத்திரத்துவாரன் வாத்துபதி பிரமன்நோக் கியே தெற்கு வடக்குஅருச்சித்து - வலக்கால்முன்னிட்டு உட்புக்கு மேற்குநோ க்கி நின்று ஓம் அத்திரத்துவாரபாலாயநம வென்று தெற்குப் படியுடனே கிட க்கு மத்திரத் துவாரபாலனையும் ஓம் வாத்துபதி பிரமனேநமவென்று வடமே ற்கில் வாத்துபதியையும் பூசித்து—வடக்கே நவவுசதாசிவன் அனந்தன் சீக ண்டன்றன்னேடாக்கும் அம்பிகை குகனேடு அரியும் வேதாவு மாவேழு குரவ ரோடங்கியிற் குருவுஞ் சாத்தி - வடக்குநோக்கிநின்று பீடத்துக்கு வடக்காக ஓம் ஆம் சதாசிவாயநம ஓம் ஆம் அனந்தாய நம ஓம் ஆம் சீகண்டாயநம ஓம் ஆம் அம்பிகாயைநம ஓம் ஆம் குகாயநம ஓம் ஆம் விட்டுணுவேநம ஓம் ஆம் பிரமனேநம வென்று ஏழு குருக்களுடனே அக்கினிமூலையில் ஓம் ஆம் சிவகுருப்பியோநம வென்று பூசித்து வேண்டுதல் செய்துகொண்டு—தாக்கிய வாதனங்கற்பித்துக் கரநியாசந்தான்செய்து - சிவனுக்கும் பரிவார நாயன்மாரு க்கும் ஆசனங் கற்பித்துச் சிவலிங்கத்தைப் பீடத்திலே பரிவட்டத்துடன் எழு ந்தருளப்பண்ணித் தான் கரநியாசஞ்செய்துகொண்டு—பூதசுத்தி உடற்சுத்தி சமையே - பூதசுத்தியையு முடற்சுத்தியையுஞ் செய்வாயாக. எ-று.

பெருவிரல் முதற் சிறுவிரலீறுக முறையே அங்குட்டந் தர்ச்சனி மத்தி மை அனுமிகை கனிட்டையெனப் பெயராம். (சுo)

இதுவுமது.

தியானத்தால்வெந்தவுடலமுதத்தானனைத்துத்
தெய்வவுடலாகுமளவுமுயிர்மேல்வைத்து
வியாபித்தங்கநியாசமக்கரங்கள்கலைகள்
விதித்துப்பின்னந்தரியாகஞ்செய்துவிசேடந்
தயாவொடுசெய்தேதிரவியசுத்தியாக்கித்
தருமான்மசுத்திமந்திரசுத்திசமைத்து
நியாயமுடன்பரிவாரபூசைசெய்து
நிகழீசன்றனக்குச்சங்கிதையதனுற்சாத்தே.

(இ-ள்.) தியானத்தால் வெந்தவுடல் அமுதத்தால்நனைத்துத் தெய்வவுட லாகுமளவும் உயிர்மேல்வைத்து வியாபித்து - பூதசுத்தியாவது தன்னுடலை ஒரு மூங்கிலாய் ஐந்து கணுவானதாகப்பாவித்து மூலாக்கினியை எழுப்பி ஐந்துகணு வும் அத்திரமந்திரத்தாலே வெந்து வெடித்ததாகக்கண்டு ஓம் அத்திராய உம் பட் என்று ஐந்துதரம் மூலாதாரத்திலும் நாபியிலும் இதயத்திலும் முகத்திலும் துவாதசாந்தத்திலும் சோடிகை முத்திரையினாற் சுண்டி அந்தக்கணுக்க டெறி த்ததாகக்காண்பது உடற்சுத்தியாம் பின்பு ஆன்மாவைத் தாரகாகாரமாய்த் தியா னித்து ஓம் ஹம் ஆம் அம் ஆம் ஹம் ஆத்மனேநம வென்று துவாதசாந்தத்திலே கொண்டுபோய் வைத்து பிருதுவிக்குச் சிறப்பு விசேடம் சொரூபங் கடினம் சுபாவங் கிடத்தல் நிறம் பொன்மை பணி பொறுத்தல் குறி வச்சிரம் தெய்வம் பிரமா அக்கரம் (ல) வாகக்கண்டு இது ஆபாதசூடமும் வியாபித்ததாயினும் முழந்தாளளவு முள்ளதென்று கண்டு வாயுவாலே யடியுண்டதாகப் பாவித்து அப்புவுக்கு விசேடம் சொய்மை சொரூபம் பரத்தல் சுபாவம் விழுதல் நிறம் வெண்மை பணி கட்டுண்டல் குறி கோகனகம் தெய்வம் விட்டுணு அக்கரம் (வ) வாகக் கண்டு இது ஆபாதசூடமும் வியாபித்ததாயினும் முழந்தாளுக்குமேல் நாபிக்குக் கீழளவாய் இது வன்னியாலே சுவறினதாகத் தியானித்து அக்கினி க்கு விசேடம் பருமை சொரூபம் எழுதல் சுபாவம் சுடுதல் நிறம் செம்மை பணி ஒன்றுவித்தல் குறி சுவத்திகம் தெய்வம் உருத்திரன் அக்கரம் (ர) ஆகக் கண்டு இது ஆபாதசூடமும் வியாபித்ததாயினும் நாபிக்குமேல் கண்டத்துக் குக் கீழளவாய் இது சலத்தாலே அவிந்ததாகத் தியானித்து வாயுவுக்கு விசே டம் பரத்தல் சொரூபஞ் சலித்தல் சுபாவம் நிறைதல் நிறம் கருமை பணி திர ட்டல் குறி அறுபுள்ளி தெய்வம் மகேசுரன் அக்கரம் (ய) வாகக்கண்டு இது ஆபாதசூடமும் வியாபித்ததாயினும் கண்டத்துக்குமேல் தலையளவாக இது பிருதிவியாலே கெட்டதாகத் தியானித்து ஆகாசத்துக்கு விசேடம் பெருமை சொரூபம் இரந்தரம் சுபாவம் நிற்றல் நிறம் தூமம் பணி இடங்கொடுத்தல் குறி அமுதவிந்து தெய்வம் சதாசிவம் அக்கரம் (ஹ) ஆகக்கண்டு இது சரீரமளவும் வியாபித்ததாயினும் தலைக்குமேற் துவாதசாந்தத் தளவாகக்கண்டு தியானிக்க இப்படிப் பஞ்சபூதத்தாலும் வெந்தவுடல் ஆகாயத்திலே நின்று விழும் அமுத சலத்தாலே நனைந்து பிராணனுண்டானதாகத் தியானித்துத் திவ்வியதேகமாக ப்பாவித்துப் பின் ஆன்மாவைக் கொண்டுவந்து இருதயத்தில் வைத்து வியாபி த்து—அங்கநியாசம்அக்கரங்கள் கலைகள்விதித்து - இந்தவுடலிலே அங்கநியாசம் அக்கரநியாசம் அட்டத்திரிம் சற்கலாநியாசஞ் செய்து—பின் அந்தரியாகஞ்செ ய்து - பின்பு இதயதாமரையிலே சிவனைச் சாங்கோபாங்கமாகப் பூசித்து— விசேடந் தயாவொடுசெய்தே - விசேடார்க்கியத்தைக் கிருபையுடன் சங்கிதா மந்திரத்தாலே தாபித்து —திரவியசுத்தியாக்கி - அந்த அர்க்கியங்கொண்டே சர்வதிரவியமுஞ் சுத்தியாதற்பொருட்டுப் புரோட்சித்து—தரும் ஆன்மசுத்தி மந்திரசுத்தி சமைத்து - ஓம் ஆம் ஆன்ம ஆசனாயநம ஓம்ஆம் ஆன்மமூர்த்தியே நம ஓம் ஆம் அம் ஆம் ஆத்மனேநம என்று ஆன்மாவைப் பூசித்து ஒரு புட்பத்

தைத் தலையிலேவைத்து ஒரு புட்பங் கையிற்பிடித்துப் பிரணவத்தை மனத்தா லுச்சரித்து மந்திரசுத்திசெய்து—நியாசமுடன் பரிவாரபூசை செய்து - முறைப் படியே ஓம் கணபதியேநம ஓம் சுப்பிரமணியாயநம ஓம் றீம் சிறீம் அம் அர அர அர நமசிவாயநாதநம ஓம் றீம் ஆனந்தவயிரவாயநம ஓம் சிறீம் சிவகாமசுந்தரியே நம ஓம் நமோ பகவதே தெட்சணாமூர்த்தியேநம என்று ஆசனம் மூர்த்திமூலமா கப் பூசித்து ஆவாகன தாபன சந்நிதான சந்நிரோதன பாத்தியாசமனார்க்கியங் கொடுத்துப் பரிவாரபூசைசெய்து—நிகழ் ஈசன்றனக்குச் சங்கிதையதனாற் சாத் தே - சிவனை எழுந்தருளப்பண்ணிப் பரிவட்டங்குலைத்துச் சண்டேசுரத்தானத் திலே வைத்துத் திருப்பள்ளித்தாமஞ் சாத்தினதின்மேற் சங்கிதாமந்திரத்தாலே பூசிக்குக. எ-று. மந்திரசுத்தி சங்கிதாமந்திரத்தோடு பிரணவமுங் கூட்டிச் செய்வதுமாம். (சுக)

இதுவுமது.

சாத்திப்பின்சத்தியாதிமுத்திரைகள்கொடுத்துத்
தான்கழித்தமாலியஞ்சண்டேசனிடைக்கொடுத்துச்
சேர்த்தவத்திரத்தினல்மஞ்சனமுஞ்செய்து
திகழுமிதயாதிகளாலிலிங்கசுத்திசெய்து
பார்த்துமிகச்சிவாசனமூமூர்த்திமூலம்
பஞ்சமுகமுடன்சாத்திப்பாத்தியாதிகொடுத்தே
யார்த்துமஞ்சனஞ்செய்தாதாரசத்தியனந்த
னரியசிங்கங்களுநாலுகங்காலாக்கே.

(இ-ள்.) சாத்திப் பின் சத்தியாதி முத்திரைகள் கொடுத்துத் தான் - பூசி த்தபின்னர் சிறுவிரல்முத லங்குட்டமீறாகச் சத்தியோசாத முகமுதல் ஈசான முகமீறாக முத்திரைகொடுத்து—கழித்தமாலியஞ் சண்டேசனிடைக் கொடு த்து - நின்மாலியத்தைக் கழித்துச் சண்டேசுரத் தானமாகிய ஈசானமூலையிலே மெழுகி மழுப்போலாதல் திரிகோணமாதலிட்டு அதிலேவைத்து—சேர்த்தவத் திரத்தினன் மஞ்சனமுஞ் செய்து - பொருந்திய அத்திரமந்திரத்தினாலே அபி டேகமுஞ் செய்து—திகழும் இதயாதிகளால் இலிங்கசுத்திசெய்து - இதயாதிக ளால் இலிங்கம் வருடிக் குச்சிசாத்தித் திருமஞ்சனமுஞ் செய்து—பார்த்துமிகச் சிவாசனமும் மூர்த்திமூலம் பஞ்சமுகமுடன் சாத்தி - தானவேதிகையிலாதல் கையிலேயாதலிருக்கச் செய்து ஓம் ஆம் சிவாசனாயநம ஓம் ஆம் சிவமூர்த்தியே நம ஓம் ஆம் ஔம் சிவாயநமவென்று ஆசன மூர்த்தி மூலத்தினாலும் ஈசானாதி யைந்தினாலுஞ் சாத்தி—பாத்தியாதி கொடுத்து - பாத்தியம் ஆசமனம் அர்க்கி யங் கொடுத்து—ஆர்த்து மஞ்சனஞ் செய்து - நன்றாகத் திருமஞ்சனஞ்செய்து திருவொற்றாடை சாத்திப் பீடத்திலே யெழுந்தருளப்பண்ணி — ஆதாரசத்தி அனந்தன் அரிய சிங்கங்கள் நாலுகம் காலாக்கே - ஓம் ஆம் ஆதாரசத்தியேநம ஓம் ஆம் அனந்தாசனாயநம ஓம் ஆம் அனந்தாயநமவென்று கூர்மச்சிலையின்மே லே அனந்தனைப் பூசித்து மேலே உகரூபமாகிய நாலுசிங்கங்களையும் கால்களை யும் பூசிக்குக. எ-று. (சுஉ)

இதுவுமது.

அரியதன்மஞானவைராக்கியமைசுவரிய
　　மவைகணலங்கிமுதலதன்மமஞ்ஞானந்
தெரிவரியவைராக்கியமனைசுவரியமிவைதம்மைத்
　　திகழ்கிழக்குமுதலதச்சதனமூர்த்துவச்சதனம்
விரிகந்தம்பீசமங்குரநாளந்தளமு
　　மேவுகேசரங்கர்ணிபதுமம்வாமை
யுரியசேட்டைரவுத்திரிகாளியுங்கலவிகரணியு
　　முயர்வுபெறுபெலவிகரணியுமாயுகந்தே.

(இ-ள்) அரிய தன்ம ஞான வைராக்கிய மைசுவரியமவைகள் நால்அங்கிமுதல் - கால்களில் அக்கினிமூலைமுதல் நாலுமூலையினும் ஓம் ஆம் தன்மாயநம ஓம் ஆம் ஞாநாயநம ஓம் ஆம் வைராக்கியாயநம ஓம் ஆம் ஐசுவரியாயநம வென்றும் தெற்கும் வடக்கும் முகங்களாய் முதுகும் முதுகுங் கூடின நான்கு சிங்கங்களையும்—அதன்மம்அஞ்ஞானந் தெரிவரி அவைராக்கியம் அனைசுவரிய மிவைதம்மைத் திகழ்கிழக்கு முதல் - விளங்குகின்ற கிழக்குமுதலாக ஓம் ஆம் அதன்மாயநம ஓம் ஆம் அஞ்ஞாநாயநம ஓம் ஆம் அவைராக்கியாயநம ஓம் ஆம் அனைசுவரியாயநம வென்று சட்டங்கள் நாலையும் பூசித்து—அதச்சதனம்ஊர்த்துவச்சதனம் - சிங்கங்களுக்குக்கீழே ஓம் ஆம் அதச்சதநாயநம வென்றும் மேலே ஓம் ஆம் ஊர்த்துவச்சதநாயநம வென்றும் பூசித்து—விரிகந்தம் பீசம் அங்குரம் நாளம் தளமும் மேவு கேசரம் கர்ணி பதுமம் - மேலே ஓம் ஆம் கந்தாயநம ஓம் ஆம் பீசாயநம ஓம் ஆம் அங்குராயநம ஓம் ஆம் நாளாயநம ஓம் ஆம் தளேப்பியோநம ஓம் ஆம் கேசரேப்பியோநம ஓம் ஆம் கர்ணிகாயநம ஓம் ஆம் பதுமாயநம என்று பூசித்து—வாமை உரியசேட்டை ரவுத்திரி காளியுங் கலவிகரணியு முயர்வு பெறு பெலவிகரணியுமா யுகந்தே - இவ்வுரை வருஞ்சூத்திரவுரையோடு சேர்த்தெழுதப்பட்டது காண்க. எ-று. (சுகூ)

இதுவுமது.

பெலப்பிரமதமனியுஞ்சர்வபூததமன்னியும்
　　பேணியபினீசனிடைமனோன்மனியுமாக்கி
கலத்தகாயடியிற்சூரியனதனிற்பிரம
　　னடுச்சோமனதில்விண்டுமேலங்கியரனுந்
துலக்குறுசத்தியின்மகேசன்சதாசிவன்மேற்
　　சொல்வித்தைசோதிலிங்கமாக்கறெண்டபங்கி
கலத்தவுருவதுகாண்டல்முண்டமுடிமுகங்க
　　ளுடுபவத்திரபங்கிறகலைதானதுவே.

(இ-ள்) பெலப்பிரமதமனியும் சர்வபூததமன்னியும் பேணியபினீசனிடை மனோன்மனியுமாக்கி - பதுமத்தி னட்டதளங்களினும் கிழக்குமுதல் ஓம் ஆம் வாமாயைநம ஓம் ஆம் சேட்டாயநம ஓம் ஆம் ரவுத்திரியேநம ஓம் ஆம் காளியேநம ஓம் ஆம் கலவிகரணியைநம ஓம் ஆம் பெலவிகரணியைநம ஓம் ஆம் பெலப்பிரமதமனியேநம ஓம் ஆம் சர்வபூததமன்னியேநம வென்றும் ஈசான தளத்திடையில் ஓம் ஆம் மனோன்மனியேநம வென்றும் பூசித்து—நலத்தகாயடியிற் சூரியனதனிற் பிரமன் - சிறந்த தளாக்கிரவிருத்தியிலே ஓம் ஆம் சூரியமண்டலாயநம ஓம் ஆம் சூரியமண்டலாதிபதியே பிரமனேநம வென்றும்— நடுச்சோமனதில் விண்டு - கேசரவிருத்தியிலே ஓம் ஆம் சோமமண்டலாயநம ஓம் ஆம் சோமமண்டலாதிபதியே விட்டுணுவேநம வென்றும்—மேலங்கி அரனும் - கர்ணிகவிருத்தியிலே ஓம் ஆம் அக்கினிமண்டலாயநம ஓம் ஆம் அக்கினிமண்டலாய உருத்திராயநம வென்றும்—துலக்குறு சத்தியின் மகேசன் - துலக்கமுறுகின்ற காயிலே ஓம் ஆம் சத்திமண்டலாயநம ஓம் ஆம் சத்திமண்டலாதிபதியே மகேசுராயநமவென்றும்—சதாசிவாசனமேல் - மேலே ஓம் ஆம் சதாசிவாசனாயநமவென்றும்பூசித்து—சொல் வித்தை சோதிலிங்கம் ஆக்கல் தெண்டபங்கி - அதன்மேல் அக்கினித்தம்பமாகத் தியானித்து ஓம் ஆம் வித்தியாதேகாயநம வென்று லிங்கத்திற்சாத்தல் தண்டபங்கியாம்— நலத்தவுருவது காண்டல் முண்டம் - சிவசாதாக்கியமுதற் பஞ்சசாதாக்கியங் கூடினவாய் ஐந்து திருமுகமும் பத்துக் கையும் இரண்டு பாதமும் பதினைந்து கண்ணும் பத்துக்கையிலும் சூலம் மழு வாள் அபயம் வச்சிரம் வலமும், இடம் அக்கினியும் அங்குசமும் மணியும் பாம்பும் பாசமுமான வடிவைத் தியானிப்பது முண்டபங்கியாம்— முடி முகம் கண் நாடுபவத்திரபங்கி - ஓம் ஆம் ஈசானமூர்த்தாயநம ஓம் ஆம் தற்புருடமூர்த்தாயநம ஓம் ஆம் அகோரமூர்த்தாயநம ஓம் ஆம் வாமதேவமூர்த்தாயநம ஓம் ஆம் சத்தியோசாதமூர்த்தாயநம என்று முடிகளிலும், ஓம் ஆம் ஈசானவத்திராயநம ஓம் ஆம் தற்புருடவத்திராயநம ஓம் ஆம் அகோரவத்திராயநம ஓம் ஆம் வாமதேவவத்திராயநம ஓம் ஆம் சத்தியோசாதவத்திராயநம என்று ஐந்து முகங்களிலும், ஓம் ஆம் ஈசானவத்திரநேத்திரேப்பியோநம ஓம் ஆம் தற்புருடவத்திரநேத்திரேப்பியோநம ஓம் ஆம் அகோரவத்திரநேத்திரேப்பியோநம ஓம் ஆம் வாமதேவவத்திர நேத்திரேப்பியோநம ஓம் ஆம் சத்தியோசாதவத்திரநேத்திரேப்பியோநம வென்று ஐந்து முகங்களிலும் நேத்திரங்காட்டுவதுமாகிய இவைகளைத் தியானத்தோடு செய்வது வத்திரபங்கியாம்— நற் கலைதானதுவே - அட்டத்திரியம் சற்கலைநியாசஞ் செய்வது கலாபங்கியாம். எ-று.

அட்டத்திரியம் சற்கலைநியாசமாவது: சசி அங்கதை இட்டாயை மரிச்சி சுவாலினி ஆகிய ஈசான கலையைந்தினும் பெருவிரலால் முறையே ஈசானாதி முடிகளிலும் சாந்தி, வித்தியை, பிரதிட்டை, நிவிர்த்தியாகிய தற்புருடகலை நான்கினுலும் பெருவிரல் தர்ச்சனி விரல்களாலும் தற்புருடாதி முகங்களிலும் அகோரகலை எட்டில் நிசிதமாயையா லுள்ளத்திலும் மோகாயையாற் களுத்தி

ஓம் சாயையால் வலது புயத்திலும் மானிட்டையால் இடது புயத்திலும் மிருத்தியுவால் உந்தியிலும் மாயையால் வயிற்றிலும் பயாயையால் முதுகிலும் சராயையால் மார்பிலும் பெருவிரல் மத்திமைவிரலினாலும் வாமதேவகலை பதின்மூன்றில் ரசாயையாற் குய்யத்திலும் ரட்சாயையால் இலிங்கத்திலும் இரத்தியையால் வலத் தொடையிலும் பாலியா லிடத்துடையிலும் காமாயையால் வலது முழந்தாளிலும் சயமின்னியையால் இடதுமுழந்தாளிலும் கிரியையால் வலது கணைக்காலிலும் புத்தியால் இடது கணைக்காலிலும் காரியால் வலச் சகுனத்திலும் தாத்திரியால் இடச் சகுனத்திலும் பிராமணியாற் கடியிலும் மோகினியால் வலப்பாலிலும் பபாயையால் இடப்பாலிலும் பெருவிர லணிவிரலாலும் சத்தியோசாதகலை எட்டில் சித்தியையால் வலதுகாலிலும் ரித்தியையால் இடது காலிலும் துத்தியையால் வலக்கையிலும் இலக்குமியால் இடக்கையிலும் மேதையால்நாசியிலும் காந்தியையாற் சிரசிலும் சுதாயினால் வலவாகுவிலும் திருத்தியையால் இடவாகுவிலும் பெருவிரல் சிறுவிரல்களாலும் நியாசஞ்செய்வதாம். (சுச)

சிவபூசை கூறுகின்றார்.

ஆவாகனாதிசெய்தேயர்க்கியமுங்கொடுத்தே
யங்கநியாசஞ்செய்துபஞ்சமுத்திரையு
மோவாமலிதயத்தாற்காட்டிப்பாத்தியமு
மோரிருகாலாசமனர்க்கியங்கள்முக்காலொருகா
ணுவாரநமசுதாசுவாகாவென்று
நாடியேகொடுத்ததற்பின்கொள்ளுமஞ்சனங்க
ளோவாதுகவ்வியமுங்குறிபஞ்சாவமுத
முயர்பலோதகமுஞ்சுத்தோதகமுங்கொண்டே.

(இ-ள்) ஆவாகனாதிசெய்தேஅர்க்கியமுங்கொடுத்தே - அதன்பின் பரமானந்தப் பொருளை இந்தவுருவிலே ஆவாகன தாபன சன்னிதான சன்னிரோதமு முரிய முத்திரைகளாற் செய்து அர்க்கியமுங் கொடுத்து—அங்கநியாசஞ்செய்து - திருமேனியிலே அங்கத்தை நியாசித்து—பஞ்சமுத்திரையு மோவாமலிதயத்தாற் காட்டி - தேனு பத்மம் திரிசூலம் மகரம் சிருக்கு என்னும் பஞ்சமுத்திரையையும் இதயத்தாலேகாட்டி—பாத்தியமு மோரிருகால் ஆசமனம் அர்க்கியங்கள் முக்கால் ஒருகால் நாவார நம சுதா சுவாகாவென்று நாடியேகொடுத்ததற்பின் - ஓம் ஆம் சிவாயநமவென்றிரண்டு சீர்பாதத்திலிருதரம் பாத்தியமும் ஓம் ஆம் சிவாய சுதாவென்று ஐந்து திருமுகங்களிலும் முக்கால்முக்கால் ஆசமனமும் ஓம் ஆம் சிவாயசுவாகாவென்று திருமுடி ஐந்திலும் ஒருதரம் அர்க்கியமுங் கொடுத்ததன் பின்—கொள்ளு மஞ்சனங்கள் ஓவாது கவ்வியமும் குறி பஞ்சாவமுதம் உயர் பலோதகமுஞ் சுத்தோதகமுங்கொண்டே - கைக்கொள்ளப்பட்ட திருமஞ்சனம் பஞ்சகவ்வியம் பஞ்சாவமுதம் பஞ்சபலோதகம் கந்தோதகம் சுத்தோதகம் வேண்டுவது அபிடேகஞ் செய்குக. எ-று. (சுடு)

இதுவுமது.

ஓங்குவித்தபின்மூலநூற்றெட்டானறிய
வுதகங்கள்கொண்டாட்டியொற்ருடைசாத்திப்
பூங்கமழுங்களபம்விரையிண்டைதொடைசாத்திப்
புண்ணியனைமந்திரங்கள்பதினென்ருற்போற்றிப்
பாங்கினிலர்க்கியமகாமுத்திரையினளவும்
பண்ணுதலேயிலயாங்கம்போகாங்கம்பகரில்
ஓங்கீசத்தீசானந்திசைநாலிற்பிரம
முயரிதயமீசானமுறமுன்சாத்தே.

(இ-ள்.) ஓங்குவித்தபின் மூலநூற்றெட்டானறிய வுதகங்கள் கொண்டாட்டி ஒற்ருடைசாத்தி - மேற் சொல்லியவை யெல்லாம் அபிடேகஞ் செய்து மூலத்தால் நூற்றெட்டுத்தரந் திருமஞ்சனமாட்டித் திருவொற்ருடை சாத்திப் பாத்தியாதி கொடுத்து—பூங்கமழுங் களபம் விரை இண்டை தொடை சாத்திப் புண்ணியனை மந்திரங்கள் பதினென்ருற் போற்றிப் பாங்கினில் அர்க்கியம் மகாமுத்திரையினளவும் பண்ணுதலே இலயாங்கம் - மணங்கமழுந் திருமேற்பூச்சு மணவியமாலை இண்டை தொடை விடுபூ முதலானவை மூலத்தாற் சாத்தி மந்திரங்கள் பதினென்ருலுஞ் சாத்தி ஆசமனர்க்கியங் கொடுத்து மனோரத முத்திரை மகாமுத்திரையுங் கொடுப்பது இலயாங்கபூசையாம்—போகாங்கம்பகரில் ஓங்கீசம் ஈசானந் திசைநாலிற் பிரம முயர் இதயம் ஈசானமுற முன் சாத்தே - போகாங்கபூசையைச் சொல்லுமிடத்துச் சிவனுடையவீசான முகத்திலேயிருந் தீசானதேவரை வாங்கி ஈசானதிக்கிலும் தற்புருடமுகத்திலிருந்து தற்புருடதேவரைக் கிழக்கிலும் அகோரமுகத்திலிருந்து அகோரதேவரைத் தெற்கிலும் வாமதேவமுகத்திலிருந்து வாமதேவரை வடக்கிலும் சத்தியோசாதமுகத்திலிருந்து சத்தியோசாததேவரை மேற்கிலும் பூசித்து இருதயத்தை ஈசான திக்கிலும் பூசிக்குக. எ-று. (கூகூ)

இதுவுமது.

சிரசங்கிசிகைநிருதிகவசம்வாயுத்
திகழுநேத்திரங்கிழக்கத்திசைகணன்கின்
மருவுமத்திரஞ்சாத்திப்பஞ்சமுத்திரையும்
வன்சுரபிதாமரைசூலம்மகரஞ்சிருக்கு
விரவவத்திராசனியுமங்கதேவருக்கு
மேவுவித்துக்கிழக்காதியனந்தன்வடக்காதி
பரவுமுமைகிழக்கிந்திராதியாயுதங்கள்
பரிந்தவர்க்குத்தேனுமுத்திரையுநீபகரே.

(இ-ள்.) சிரசங்கிசிகைநிருதி கவசம்வாயுத் திகழுநேத்திரம் கிழக்கத்தி சைகள்நான்கின் மருவுமத்திரஞ் சாத்திப் பஞ்சமுத்திரையும் வன்சுரபி தாமரை சூலம் மகரம் சிருக்கு விரவ வத்திராசனியு மங்கதேவருக்கு மேவுவித்து - சிரசு அக்கினி திக்கிலும் சிகை நிருதியிலும் கவசம் வாயுவிலும் நேத்திரம் கிழக்கி லும் அத்திரம் கிழக்குமுதல் நான்குதிசையிலும் பூசித்து முகங்களுக்கு முறை யே தேனு பத்மம் திரிசூலம் மகரம் சிருக்கு என்னும் பஞ்ச முத்திரையும் அங் கங்களுக்குத் திராசனி முத்திரையுங் கொடுத்து—கிழக்காதி அனந்தன் - கிழக் குமுத லெட்டுத் திக்கிலும் ஓம் அனந்தாயநம ஓம் சூக்குமாயநம ஓம் சிவோத் தமாயநம ஓம் ஏகநேத்திராயநம ஓம் திரிமூர்த்தியேநம ஓம் ஏகஉருத்திராயநம ஓம் ஸ்ரீகண்டாயநம ஓம் சிகண்டியேநம வென்று பூசித்து — வடக்காதிபரவு முமை - வடக்குமுத லெட்டுத்திக்கிலும் வலமாக ஓம் உமாயைநம ஓம் சண் டாயநம ஓம் நந்தீசாயநம ஓம் மகாகாளாயநம ஓம் இருஷபாயநம ஓம் கணே சாயநம ஓம் பிருங்கிசாயநம ஓம் உமாசேனுயநம வென்று பூசித்து—கிழக்கிந் திராதியாயுதங்கள் பரிந்தவர்க்குத் தேனு முத்திரையும் நீ பகரே - கிழக்குமுதல் எட்டுத்திக்கிலும் மேல் கீழும் ஓம் ஆம் இந்திராயநம ஓம்ஆம் அக்கினியேநம ஓம் ஆம் இயமாயநம ஓம் ஆம் நிருதியேநம ஓம் ஆம் வருணுயநம ஓம் ஆம் வாயு வேநம ஓம் ஆம் சோமாயநம ஓம் ஆம் ஈசானுயநம ஓம் ஆம் பிரமனேநம ஓம் ஆம் விட்டுணுவேநமவென்று பூசித்து முறையே ஓம் ஆம் வச்சிராயநம ஓம் ஆம் சத்தியேநம ஓம் ஆம் தண்டாயநம ஓம் ஆம் கட்காயநம ஓம் ஆம் பாசா யநம ஓம் ஆம் அங்குசாயநம ஓம் ஆம் கதாயநம ஓம் ஆம் திரிசூலாயநம ஓம் ஆம் பதுமாயநம ஓம் ஆம் சக்கராயநம வென்று ஆயுதங்களையும் பூசித்துத் தேனு முத்திரையுங் கொடுக்குக. எ-று. அங்கங்களுக்கு நமஸ்காரமுத்திரை கொடுப் பதுமாம். அங்குசமகற்றித் துவசங்கொள்ளுதலுமாம். (கூஎ)

இதுவுமது.

பின்னீசர்க்காசமனுர்க்கியங்கொடுத்துநிவேத்தியம்
பேணுவித்துப்பாத்தியாசமனம்பின்கொடுத்து
உன்னுதாம்பூலமுதலீரெட்டாகு
முபசாரங்கொடுத்துடனேசெபித்துச்சாத்திப்
பின்வணங்கியபிடேகமிலாதோனங்கி
பேணுமகோரத்தினுற்செபித்துச்சாத்தல்
தன்மையானேர்க்குமாமங்கிவேண்டிற்
றருபிரணவார்க்கியங்கொண்டங்கிமூலைசாரே.

(இ-ள்.) பின்னீசர்க் காசமனுர்க்கியங்கொடுத்து - இவர்களைப் பூசித்தபின் சிவனுக்கு ஆசமனுர்க்கியங்கொடுத்து—நிவேத்தியம் பேணுவித்து - திருவமுது செய்யப்பண்ணி—பாத்தியாசமனம் பின் கொடுத்து - பானீயம் முகவாசம் பாத் தியாசமனுர்க்கியங் கொடுத்து— உன்னு தாம்பூலமுத லீரெட்டாகும் உபசாரம்

கொடுத்து - மதிக்கப்பட்ட தாம்பூலம் பாத்தியம் ஆசமனம் அர்க்கியம் கந்தம் புட்பம் தூபம் தீபம் ஆராத்திரிகம் தர்ப்பணம் சத்திரம் சாமரம் நிருத்தம் கீதம் வாத்தியம் தோத்திரமுதலான உபசாரங்களைச் செய்து—உடனே செபித்துச் சாத்தி - மூலமந்திர சங்கிதாமந்திரங்களைச் செபித்துச் செபபலம் சிவனது வரத அத்தத்திலே கொடுத்து—பின் வணங்கி அபிடேகமிலாதோன் அங்கி பேணும் அகோரத்தினுற் செபித்துச் சாத்தல் - பின் தண்டம்பண்ணி அபிடேகமில்லாதவன் அக்கினிகாரியத்தினிமித்தம் அகோரமந்திரத்தாலே இருபத்தெட்டுருச் செபித்துச் சாத்துக—தன்மையானோர்க்குமாம் - அபிடேகமுள்ளோனுஞ் செபித்துச் சாத்திவிடலாம்—அங்கிவேண்டில் தரு பிரணவ அர்க்கியங்கொண்டு அங்கி மூலே சாரே - அதுவன்றி அக்கினிகாரியஞ் செய்யவேண்டின் சாமானிய அர்க்கியத்தை எடுத்துக்கொண்டு அக்கினிமூலையிலே சேருக. எ-று. அக்கினி காரியத்திற்காக அட்டபுட்பஞ் சாத்தலும் சங்கிதாமந்திரத்தாற் சாத்தலுமாம்.()

அக்கினிகாரியங் கூறுகின்றார்.

சார்ந்துகிழக்காதல்வடக்காதறன்முகமாய்த்
தானிருந்துகனணுவபூரணசேசனமுங்
கூர்ந்தசம்மார்ச்சனமுங்குட்டனமுமதற்பின்
குலவுசமாலேபனமுமிதயாதிகொண்டே
யாய்ந்துகலாவடிவாக்கிக்குண்டநூல்கவசத்
தாக்கித்தூபங்கொடுத்துமுக்கோடாமதனை
நேர்ந்துவடக்குங்கிழக்குங்கீறியிதயத்தா
னிறைசமிதையிடுதருப்பைகவசத்தானிரையே.

(இ-ள்.) சார்ந்து கிழக்காதல் வடக்காதல் தன்முகமாத் தானிருந்து கணுவ பூரண சேசனமும் கூர்ந்த சம்மார்ச்சனமும் குட்டனமும் அதற்பின் குலவு சமா லேபனமும் இதயாதிகொண்டெ ஆய்ந்து - அக்கினிதிக்கிலே சேர்ந்து கிழக்கல்லது வடக்குமுகமாகக் குண்டத்திற்கு முன்னிருந்துகொண்டு குண்டத்திலே இதயத்தாற் கல்விச் சிரத்தாற் றூர்த்துச் சிகையானனைத்துக் கவசத்தாற் சுவர்வைத்து நேத்திரத்தாற்றுடைத்து அத்திரத்தான் மெழுகிக் குண்டத்தையுந் தண்டிலத்தையும் சங்கிதையாலே சுத்திபண்ணி—கலா வடிவாக்கி - சாந்தியாதீதகலையை நடுவிலும் சாந்தி வித்தை பிரதிட்டை நிவிர்த்திகளைமுறையே கிழக்குத் தெற்கு வடக்கு மேற்குத் திசைகளிலும் பூசித்து—குண்ட நூல் கவசத்தாக்கி - குண்டத்தை முந்நூல்கொண்டு கவசத்தாலே கட்டி—தூபங்கொடுத்து - பின் தூபங்கொடுத்து—முக்கோடாமதனை நேர்ந்து வடக்குங் கிழக்குங் கீறி - மூன்றுகோடு கிழக்குநோக்கியும் ஒருகோடு வடக்குநோக்கியும் கீறி—இதயத்தா னிறைசமிதை யிடுதருப்பை கவசத்தானிரையே - சமித்தை இதயத்தாலே பரப்பி நாலு தருப்பை வடக்குநோக்கியும் கிழக்குநோக்கியும் கவசத்தாலே உள்ளிற் கண்டத்திலேயிடுக. எ-று. தண்டிலம் - திண்ணை. (சுகூ)

இதுவுமது.

நடுவுவிபரீதமாத்தருப்பையிட்டு
நற்பிரமக்கிரந்தியில்வாகீசர்களைநாட்டிக்
கொடுவந்துவலப்புறத்தக்கினிவைத்தோர்தருப்பை
கொளுத்தியசுராங்கமாநிருதிதனிற்போட்டே
யிடையெரிபூரகத்தினுலுடற்குளாக்கி
யிதிலுதரவெரிவிந்துவெரியுங்கூட்டிப்
படிரேசகத்தினுன்மூன்றங்கியாகப்
பாத்திரத்தினிற்சங்கிதாசுத்திபண்ணே.

(இ-ள்.) நடுவு விபரீதமாத்தருப்பையிட்டு - இந்தனத்துக்குமேலே சாண் தருப்பை யிரண்டுதலையும் மாறிப்போட்டு—நற்பிரமக்கிரந்தியில் வாகீசர்களை நாட்டி - முப்பத்திரண்டு அல்லது பதினுறு தருப்பைகொண்டு பிரமக்கிரந்தி யாகமுடிந்து சாணிளத்திலே கிழக்கேதலையாகப்போட்டு அதிலே ஓம் ஆம் வாகீசுவரியேநம ஓம் ஆம் வாகீசுவராயநம வென்று இருவரையும் பூசித்துப் புணர்ச்சியாகப்பாவித்து—கொடுவந்துபுறத்தக்கினிவைத் தோர்தருப்பை கொளுத்தி அசுராங்கமா நிருதிதனிற் போட்டே - அக்கினியைக் கொண்டுவந்து வலப்புறத்தேவைத்து ஒருதருப்பைகொளுத்தி நிருதிமூலையிலே அசுராங்கமாக ஓம் அத்திராயஉம்பட் என்று போட்டு—இடையெரி பூரகத்தினு லுடற்குளாக்கி - இந்த அக்கினியை சங்கார முத்திரையினுலே இடமூக்கினுலே பூரகத்தால் உடற்குள்ளே கொண்டுபோய்—இதில் உதரவெரிவிந்து வெரியுங்கூட்டிப் படிரேசகத்தினுல் மூன்றங்கியாகப் பாத்திரத்தினில் - உள்ளேகொண்டுபோன அக்கினியுடனே உதராக்கினியையும் விந்துவக்கினியையுங் கூட்டி மூன்றக்கினியுமாக வலமூக்காலே ரேசகத்தாலே புறப்பட்டு வந்தக்கினிப் பாத்திரத்திலே இருந்ததாகத் தியானித்து—சங்கிதா சுத்திபண்ணே - சங்கிதாமந்திரத்தினுலும் நிரீக்கணுதியாலுஞ் சுத்திசெய்குக. எ-று. (௪0)

இதுவுமது.

பண்ணியபினீசவிந்துவெரிபெரியவிரலும்
பகர்சுட்டுவிரலுமாமுக்காற்சுற்றிக்
கண்ணியகான்மடித்துப்பின்றன்னைப்பார்த்துக்
கவிழ்த்துக்குண்டத்தில்வாணிகெற்பமாக
நண்ணியபின்குண்டசுத்திசெய்துகங்கணமு
நாடுகவசத்திட்டெள்ளான்முக்கா
லெண்ணுமவர்ச்சனைகள்சத்தியிதயாதி
யிவைகருப்பம்புஞ்சவனஞ்சீமந்தமியற்றே.

(இ-ள்) பண்ணியபினீசவிந்து வெரிபெரியவிரலும் பகர்சுட்டுவிரலுமா முக்காற்சுற்றிக் கண்ணியகால்மடித்துப் பின்தன்னைப்பார்த்துக் கவிழ்த்துக் குண்டலத்தில் வாணிகெற்பமாக - சத்திபண்ணியபின் வாகீசுவரவிந்துவாகப்பாவித்து இரண்டு பெருவிரலு மிரண்டு சுட்டுவிரலுஞ் சேர்த்துப்பிடித்து மேலேயெடுத்து முளங்காற்படி யிட்டிருந்து முக்காற்சுற்றித் தன்னைப்பார்த்துக் கவிழ்த்துக் குண்டலத்திலே யிடும்போது வாகீசுவரனுடையகர்ப்பம் வாகீசுவரியுதரத்திலே சென்றதாகப்பாவித்து—நண்ணியபின் குண்டசுத்திசெய்து கங்கணமும் நாடுகவசத்திட்டு - அக்கினியை யிட்டபின் அத்திரத்தாற் குண்டத்திற் புரோட்சித்து இரண்டு தருப்பையைப் பவித்திரம்போலமுடிந்து கங்கணமாகக் கவசத்தாலே அக்கினியிலேபோட்டு அதனைச் சுவாவிப்பித்து—எள்ளால் முக்கால் எண்ணோமம் அர்ச்சனைகள்சாத்தி இதயாதி இவைகருப்பம் பும்ஸவனம் சீமந்தமியற்றே - எள்ளாலே சத்தியோசாத மந்திரத்தால் மூன்றோமம் பண்ணி இருதய மந்திரத்தாலே முக்காற் பூசிப்பது கருப்பாதானம்; இப்படியேவாமதேவத்தாலும் சிரசாலு மோமஞ்செய்து சாத்துவது டும்ஸவனம்; அகோரத்தாலுஞ் சிகையாலும் மூன்றோமஞ்செய்து சாத்துவது சீமந்தம். இவைகளைச்செய்குக. எ-று. (எக)

இதுவுமது.

சாதகன்மமாறுருக்கள்தந்தநாவழிக்கத்
தருஞ்சமிதைபலாசஞ்சாற்றலேயடிநெய்தோய்த்து
மீதினிலோமஞ்செய்துபருதிவிட்டரங்கண்
மேவியற்றிப்பிரமன்சங்கரன்விண்டுவனந்தன்
போதுவித்துவிட்டாத்திஙிந்திராதிபத்தும்
போற்றியவர்கழல்காப்புப்புகழ்ந்துகூறி
யோதுசுருக்குச்சுருவமெடுத்தங்கிகாட்டி
யுயர்தருப்பைகட்டியடிநடுத்தலேகளுறவே.

(இ-ள்.) சாதகன்மமாறுருக்கள் - பின்பு எள்ளாலே தற்புருடமுங் கவசமுங்கூட்டி ஆறு ஓமஞ்செய்து சாத்துவது சாதகன்மமாம்—தந்த நாவழிக்கத் தருஞ்சமிதை பலாசு அஞ்சாற் றலேயடி நெய் தோய்த்து மீதினில் ஓமஞ் செய்து - அக்கினியினுடைய பல்லும் நாவும் வழிக்கிறதாக ஐந்துசமிதை சாணீளம்போந்த பலாசங்கொம்புகொண்டு அடியும் தலேயும் நெய்தோய்த்து இருதயத்தாலோமம்பண்ணி—பருதிவிட்டரங்கள் மேவியற்றி - குண்டத்திற் கீழ் மேகலேயிலே பெருவிரற்பருமையும் ஒருமுழநீளமுங்கொண்ட பலாசங்கொம்பாலாய பருதியையும் நடுமேகலேயிலே முப்பத்தாறு புல்லாற் கிரந்திபடமுடிந்து கீழ் ஒரு முழநீளமான விட்டரத்தையும்பரப்பி—பிரமன் சங்கரன் விண்டு அனந்தன் போதுவித்து - பருதியிலே கிழக்குத் தெற்கு மேற்கு வடக்கில் முறையே ஓம் ஆம் பிரமனேநம ஓம் ஆம் சங்கராயநம ஓம் ஆம் விட்டுணுவேநம ஓம் ஆம் அனந்தா

யநமவென்று பூசித்து—விட்டரத்தில் இந்திராதி பத்தும் போற்றி அவர்கழல் காப்புப் புகழ்ந்து கூறி - விட்டரத்திலே இந்திராதி பதின்மரையும் பூசித்து இந்தப்பிரமாதிகளு மிந்திராதிகளு மிவ்வக்கினியைக் காக்கும்படி தம்பிரானருளிச் செய்ததாகத் துதித்து—ஓது சருக்குச் சருவமெடுத்து அங்கிகாட்டி - சொல்லப்பட்ட சருக்குச்சருவமெடுத்து முகமொன்றப்பிடித்து அக்கினியிலே மேலுங் கீழும் முக்காற் காட்டி—உயர் தருப்பை கட்டி அடி நடுத்தலைக ளுறவே - உயர்ந்த தருப்பையைவைத்து நூலாற்கட்டி அடியும் நடுவுந் தலையுந் தொட்டுப் பிடித்து. எ-று. (எஉ)

இதுவுமது.

தொட்டான்மதத்துவமும்வித்தைசுத்தஞ்
சொல்லுமுத்தத்துவமுந்தோற்றிவைத்து
மட்டானநெய்யங்கியீசனிடைவைத்து
மலரயன்மாலரனகத்தன்னைப்பாவித்துத்
தட்டாயதருப்பையாற்செய்திரண்டுதருப்பை
தனைநோக்கிமுக்காற்றழல்நோக்கிமுக்கால்
விட்டானெய்யலைப்பதுசம்பிலவனுற்பிலவனம்
வேறொன்றுகொளுத்திநெய்யில்விடற்றகனவிதியே.

(இ-ள்.) தொட்டு ஆன்மதத்துவமும் வித்தை சுத்தஞ் சொல்லு முத்தத்துவமுந் தோற்றி வைத்து - தொட்டபின் ஆன்மதத்துவம் வித்தியாதத்துவம் சிவதத்துவங்களாலே பூசித்து வலப்புறத்தே வைத்து—மட்டான நெய்யங்கி ஈசனிடை வைத்து மலரயன் மால் அரனகத் தன்னைப் பாவித்து - சிறுநெய் யொருபாத்திரத்திலே பெய்து அதனை முக்காற்சுற்றி அக்கினிமூலையிலே வைத்துத் தன்னைப் பிரமாவாகத் தியானித்துக் குறட்டருப்பையாலிம் மந்திரத்தாலே முக்காலோமஞ்செய்து தருப்பையை அக்கினியிலே போட்டுவிட்டுப் பின் ஈசானத்திலே வைத்து விட்டுணுவாகத் தியானித்து முக்காலோமம்பண்ணி அக்கினியிலே போட்டுப் பின் குண்டநாபியிலே வைத்துச் சிவனுகப்பாவித்து முக்காலோமம்பண்ணி—இரண்டு தருப்பை தனைநோக்கி முக்கால் தழல் நோக்கி முக்கால் விட்டானெய்யலைப்பது சம்பிலவனுற்பிலவனம் - இரண்டுதருப்பையைப் பெருவிரலாலுஞ் சிறுவிரலாலும் பிடித்து இருதயத்தாலே தன்னைநோக்கி முக்காலலைப்பது சம்பிலவனம்; அக்கினியை நோக்கி முக்காலலைப்பது உற்பிலவனமாம்—வேறொன்று கொளுத்தி நெய்யில் விடல் தகனவிதியே - பின்னந்தத் தருப்பைகளை நெய்யிலேபோட்டு வேறொரு தருப்பையெடுத்து நெய்யிலே தோய்த்துக் கொளுத்தி நெய்க்குள்ளே அகோரத்தாற் றேய்ப்பது தகனவிதியாம் எ-று. (எரு)

இதுவுமது.

மற்ளுென்றுகொளுத்திநெய்யிற்சுற்றினீராசனமாம்
வருமிரண்டுதருப்பைமுடிந்துள்ளேபோட்டங்
குற்றசுருவத்தான்மேற்குங்கிழக்குநடுவு
முயருமக்கினிசோமனக்கினிசோமன்ளுன்
முற்றிடவோமஞ்செய்தச்சேடங்காவென்று
முன்னெய்யின்விடுவதுவேநயனவீடு
குற்றமறநிரீக்கணுதிசெய்தங்கிதன்னைக்
குலவிதயத்தருச்சித்துப்பேர்கொடுத்துக்குறியே.

(இ-ள்.) மற்ளுென்று கொளுத்தி நெய்யிற் சுற்றில் நீராசனமாம் - வேறு மொரு தருப்பையெடுத்து நெருப்பிலே கொளுத்தி நெய்யை வலமாகச் சுற்றி மீளவும் நெருப்பிலே போடுவது நீராஞ்சனமாம்—வருமிரண்டு தருப்பை முடிந் துள்ளே போட்டு அங்குற்ற சுருவத்தால் மேற்குங் கிழக்கும் நடுவும் உயரும் அக்கினி சோமன் அக்கினி சோமன்ளுன் முற்றிடவோமஞ்செய்து அச்சேடங் காவென்று முன்நெய்யில் விடுவதுவே நயனவீடு - சாணீளத்திரண்டு தருப்பை கிரந்தியாகமுடிந்து நெய்ப்பாத்திரத்துக்குள்ளே போட்டு முன்னே சுத்திசெய்த சுருவத்தையெடுத்துக் கிரந்திக்கு மேற்புறத்திலே நெய்யை முகந்து ஓம் அக்கி னியேசுவாகாவென்று ஓமஞ்செய்து உருக்கின மிஞ்சிய நெய்யைக் காக்குகவெ ன்று மீளமுகந்து மேற்கிலும், ஓம் சோமாயசுவாகாவென்று கிழக்கிலும், அக்கி னிசோமாப்பியாசுவாகாவென்று நடுவிலும் விடுவது இது நயனத்தை விழிப்பித் தலாம்—குற்றமற நிரீக்கணுதி செய்து - கிரந்தியாய் முடிந்து நெய்யிற்கிடந்த தருப்பையையெடுத் தக்கினியிலேபோட்டு நெய்யை நிரீக்கணுதி சுத்திசெய்து இந்தநெய் ஓமத்துக்குவேண்டிய நெய்யுடனே கூடடிக்கொள்வது ஆச்சியசுத் தியாம்— அங்கிதன்னைக் குலவிதயத்தருச்சித்துப் பேர்கொடுத்துக் குறியே - இந்த அக்கினியை இருதயமந்திரத்தாலே முக்காற் பூசித்து ஓம் சிவாக்கினித்து வஉதாசனுயநமவென்று திருநாமஞ்சாத்தி அக்கினிசொரூபத்தியானம்பண்ணுக. எ-று.

நயனம் விழிப்பித்தல் மற்றப்பக்கத்துக்குக் கொள்ளுமிடத்துச் சோமாய சுவாகா அக்கினியேசுவாகா அக்கினிசோமாப்பியாசுவாகா வென்று மாறிக் கொள்க. அக்கினிச்சொரூபமாவது ஐந்துமுகமும் பதினைந்துகண்ணும் மூன் றுகாலும் ஏழுகையும் மூன்றுகொம்பும் ஏழுநாக்கும் சிவந்தநிறமுமாயிருக்கும் கை வலப்புறத்து நாலும் இடப்புறத்து மூன்றுமாயிருக்கும். வலக்கைகளில் வேல் தடி வாள் சூலமும், இடக்கைகளில் சிருக்கு சுருவம் நெய்ப்பாத்திரமு மிருக்கும். நாக்கேழின்பெயர்கள்: இரண்ணியை கனகை இரத்தை கிருட்டினை சுப்பிரவை அதிரத்தை வெகுரூபை யென்பனவாம். ஐந்துமுகமு மிரண்டுமுக முமாய் வலமுகத்து நாக்குநாலு இடமுகத்து நாக்குமூன்ளுகும். நிறம் முறை

யே வெளுப்பு சிவப்பு பொன்மை புகை மிக்கவெளுப்பு மிக்கசிவப்பு பச்சையாம். இவற்றி னுணவு இரண்ணியைக்கு சமிதை கனகைக்கு நெய் இரத்தைக்கு குளநெல்லு முதலியன. கிருட்டினைக்கு பொரியும் பணியாரமும், சுப்பிரபைக்கு எள்ளுமுதலாயின. அதிரத்தைக்குக் கடுகு வெகுரூபைக்கு அன்னமுமாம். எ-று. (எசு)

இதுவுமது.

குறித்துவாகீசர்களையொடுக்கியங்கியினைக்
குலவுபீசமஞ்சாலுமிரண்டொன்றாலு
நிறைத்தசங்கிதையாதியாலுமாக
நிறுத்துவதுவத்திரசந்தானமேகீகரண
மிறைத்தகுதியெரியாக்கியன்னநெய்யெள்
ளியலரிசிகடுகுபயறிடிபொரிகொள்ளனைத்து
முறைத்தமூலநூற்றெட்டாலோமஞ்செய்தே
யுறநின்றுபூரணாகுதிசெய்யாலொழுக்கே.

(இ-ள்.) குறித்துவாகீசர்களையொடுக்கி - இப்படி அக்கினியைத் தியானித்துப் பின்பு வாகீசுவரர்களைத் தன்னிதயத்தொடுக்கி—அங்கியினைக் குலவுபீசம் அஞ்சாலும் இரண்டொன்றாலும் நிறைத்தசங்கிதையாதியாலுமாக நிறுத்துவது வத்திரசந்தானமேகீகரணம் - அக்கினி யைந்து முகத்திலும் ஓம் ஓம் சத்தியோசாதாயசுவாகா ஓம் எம் வாமதேவாயசுவாகா ஓம் உம் அகோராயசுவாகா ஓம் இம் தற்புருடாயசுவாகா ஓம் அம் ஈசானாயசுவாகா வென்று ஓமஞ்செய்து ஓம் சத்தியோசாத வாமதேவாப்பியோசுவாகா ஓம் வாமதேவ அகோரோப்பியோசுவாகா ஓம் அகோர தற்புருடோப்பியோசுவாகா ஓம் தற்புருட வீசானப்பியோசுவாகா வென்று ஐந்துமுகமும் சத்தியோசாதாதி முறையே ஒன்றிலொன்றொடுங்கினதாகத் தியானித்து ஐந்துமுகமும் இரண்டுமுகமாகப் பாவிப்பது வத்திராபிசந்தானம். ஓம் ஓம் எம் உம் இம் அம் சத்தியோசாதவாமதேவ அகோர தற்புருட வீசானேப்பியோசுவாகா வென்று ஓமஞ்செய்வது வத்திரேகீகரணம்—இறைத்தகுதி யெரியாக்கி - அக்கினியிடத்தே சிவனையாவாகித்துப் பூசித்துச் சிவன் அக்கினிவடிவானாகப் பாவித்து—அன்னம் நெய் எள்ளியல் அரிசி கடுகு பயறு இடி பொரி கொள்ளனைத்தும் உறைத்தமூல நூற்றெட்டால் ஓமஞ்செய்தே உறநின்று பூரணாகுதிசெய்யாலொழுக்கே - அமுது நெய் எள்ளு அரிசி கடுகு பயறு மாப்பிடி பொரி கொள்ளு இவைமுதலானவை யொவ்வொன்று நூற்றெட்டுமூலமந்திரத்தாலும் அங்கங்கள் ஒவ்வொன்றுக்கும் பதினொரு உருவாகவும் ஓமஞ்செய்து சங்கிதாமந்திரத்தாலே நெய்விட்டுப் பூரணாகுதியைச்செய்குக. எ-று. (எரு)

இதுவுமது.

திரவியமெல்லா நூற்றெட்டுருவோமஞ்செய்து
திகழ்பருதிவிட்டரதேவர்ப்பலியுமிட்டே
யுரையில்பூற்புவஞ்சுவமும்பூற்புவமுஞ்செய்தே
யுயர்கிழக்குத்தெற்கேசதுரம்வட்டந்
தெரியுமண்டலமெழுகிவட்டத்திற்கிழக்குத்
திசையாதியங்கியாதிதெற்குமேற்குவடகீழ்
மருவுருத்திராதிமாதிருக்கணேசரியக்கர்
வருகிரகஞ்சுராசுரரோடிராசியாவையே.

(இ-ள்.) திரவியமெல்லாம் நூற்றெட்டுரு ஓமஞ்செய்து - முறையே எல்லாத் திரவியங்களும் நூற்றெட்டுரு வோமஞ்செய்து—திகழ்பருதிவிட்டரதேவர்ப்பலியுமிட்டே - முன்பரப்பின பருதியிலே பிரமாமுதலியதேவர்கள் நால்வர்க்கும் விட்டரத்திலே இந்திராதிகளுக்கும் பெலியிட்டு—உரையில் பூர்ப்புவஞ்சுவமும் பூர்ப்புவமுஞ்செய்தே - ஓம் பூசுவாகா ஓம் புவசுவாகா ஓம் சுவச்சுவாகா ஓம் பூர்ப்புவச்சுவாகாவென்று நெய்யாலே யோமஞ்செய்து—உயர் கிழக்குத்தெற்கே சதுரம் வட்டம் தெரியுமண்டலமெழுகி வட்டத்திற் கிழக்குத்திசையாதி அங்கியாதி தெற்கு மேற்கு வடகீழ் மருவுருத்திராதி மாதிருக்கணேசர் இயக்கர் வருகிரகஞ் சுராசுரரோ டிராசியாவையே - உயர்ந்த வக்கினிகுண்டத்திற்குத் தென்கிழக்காக வட்டமாகவும் சதுரமாகவும் இரண்டு மண்டலமெழுகி வட்டத்திலே கிழக்காதி நாலுதிக்கிலும் தென்கிழக்குமுதல் நாலுமூலையினும் உள்ளே வடமேற்கும் தென்கிழக்கும் நடுவும் ஓம் உருத்திரேப்பியோநம ஓம் மாதருப்பியோநம ஓம் கணேப்பியோநம ஓம் இயக்கப்பியோநம ஓம் கிரகேப்பியோநம ஓம் சுரேப்பியோநம வென்று எட்டுத்திக்கினும் பூசித்து. எ-று. குறை வருஞ்சூத்திரவுரையிற் காண்க. (எசு)

இதுவுமது.

வைத்ததற்பின்விச்சுவன்சாத்தியன்கேத்திரபாலன்
மந்திரங்களாற்சாத்தந்தர்ப்பலியாஞ்சதுரத்
தொத்தவிந்திராதிகளாற்பகிற்பலியுமிட்டே
யோமஞ்செய்துடன்றூபதீபங்கள்கொடுத்து
மெத்துவருதருப்பைசுட்டுநீறிட்டுக்கொண்டு
மேவுமங்கியிலரனையொடுக்கியங்கியொடுக்கிச்
சுத்தமாஞ்சிவன்வரதஅத்தத்திற்பலத்தைச்
சுழுக்கோதகங்கொடுத்துத்தோத்திரங்கள்பண்ணே.

(இ-ள்.) வைத்ததற்பின் விச்சுவன் சாத்தியன் கேத்திரபாலன் மந்திரங்களாற்சாத்து அந்தர்ப்பலியாம் - முன்பூசித்த மண்டலத்தின்நடுவே முன்சொன்ன வடமேற்குத் தென்கிழக்கு நடுவென்னுமிடங்களில் முறையே ஓம் விச்சுவேப்பியோநம ஓம் சாத்தியேப்பியோநம ஓம் கேத்திரபாலாயநம வென்று பூசித்துப் பலியிடுவது அந்தர்ப்பலியாம்—சதுரத்தொத்த இந்திராதிகளாற் பலிற்பலியுமிட்டே - முன்செய்த சதுரமான மண்டலத்திலே கிழக்குமுதலாக எட்டுத்திக்கினும் முறையே இந்திராயநம வென்றிப்படி அட்டபாலரையும் உள்ளே தென்மேற்கும் வடகிழக்கும் முறையே விட்டுணுவேநம பிரமனேநமவென்று இவர்களையும் பூசித்துப்பலியுமிட்டு—ஓமஞ்செய்துடன் தூபதீபங்கள்கொடுத்து-மூலத்தால் நூற்றெட்டுரு வோமம்பண்ணித் தூபதீபங்கொடுத்து—மெய்த்துவரு தருப்பைசுட்டு நீறிட்டுக்கொண்டு மேவும் அங்கியி லரனையொடுக்கி அங்கியொடுக்கி-மெய்மையாகவருகின்ற தருப்பைசுட்டுக்கொண்டு அக்கினியின்வடிவாகப் பொருந்திநின்ற சிவனைத் தன்னிதயத்தொடுக்கி அவ்வக்கினியையும் தன்னிதயத்தொடுக்கி—சுத்தமாம் சிவன் வரத அத்தத்திற் பலத்தைச் சுழுகோதகங் கொடுத்துத் தோத்திரங்கள் பண்ணே - இந்த அக்கினிகாரிய பலத்தை வலக்கையிலே புட்பத்தோடு அர்க்கியசலத்தையுங் கொண்டுசிவனது சுத்தமான வரதத்தத்திலே ஓம் அக்கினிகாரியபலஞ்சுவாகாவென்று சுழுகோதகங்கொடுத்துத் தோத்திரஞ்செய்குக. எ-று. (எஎ)

இதுவுமது.

துதித்ததற்பின்வணங்கிச்சோகம்பாவகத்தாற்
சொற்புளகமயிர்முகிட்பக்கண்ணீர்கள்பொழிய
விதிர்த்துவணங்கிப்பாத்தியாசமனார்க்கியமு
மேவுபஞ்சப்பிரமமுஞ்சாத்திமேலாகக்
கதித்தபராமுகவர்க்கியமுங்கொடுத்துமற்றைக்
கருதுதேவர்தமையிலிங்கத்திடையொடுக்கிச்சிவனைப்
பதித்தொகுதியினொடுக்கிச்சண்டபூசை
பயிற்றுவதுபூசையதில்விசேடமதுபகர்வாம்.

(இ-ள்.) துதித்ததற்பின் வணங்கிச் சோகம்பாவத்தாற் சொற்புளக மயிர்முகிழ்ப்பக் கண்ணீர்கள்பொழிய விதிர்த்து வணங்கி - தோத்திரஞ்செய்தபின்பு தெண்டம்பண்ணித் தான்சிவனாகப்பாவித்துச் சொல்லப்பட்ட மயிர்ப்புளகமுண்டாகக் கண்ணீர்பொழியக் கம்பம்வந்து மீளவும் வணங்கியிருந்து—பாத்தியாசமனார்க்கியமும் மேவுபஞ்சப்பிரமமுஞ் சாத்தி - பாத்தியாசமனார்க்கியங் கொடுத்துப் பஞ்சப்பிரமமந்திரங்களாலும் பூசித்து—மேலாகக் கதித்த பராமுகவர்க்கியமுங்கொடுத்து - சத்தியோசாதாதி யீசானமந்தமாகப் பராமுகவர்க்கியமுங்கொடுத்து—மற்றைக்கருதுதேவர்தமை இலிங்கத்திடையொடுக்கிச் சிவனைப்பதித்தொ

குதியினெடுக்கி - இரண்டுகையினு மிரண்டுபூவைப்பிடித்து ஓம் அத்திராயபட் என்று கைமாறித்தெறித்துச் சுற்றிற்பூசைகொண்ட பரிவாரதேவர்க ளெல்லா மெழுந்தருளினதாகப் பாவித்து ஓம் சிவாய இருதயாய வௌஷட் என்று இவர் கள் இலிங்கத்தி லொடுங்கினதாகப் பாவித்து அந்தச்சதாசிவனையும் தற்சொ ரூபத்திலே யொடுங்கினதாகப் பாவித்துப் பின்— சண்டபூசைபயிற்றுவது - ஓம் தொனிச்சண்டேசுர ஆசனாயநம ஓம் தொனிச்சண்டேசுவர மூர்த்தியேநம ஓம் தொனிச்சண்டேசுவராயநம வென்று சண்டேசுவரனைப் பூசித்துவிடுவது இது ஆன்மார்த்தபூசையாம்—விசேடமதுபகர்வாம் - பூசையிலே விசேடமாயுள்ளது மேற்சொல்வாம். எ-று. (எசு)

இதுவுமது.

அண்டர்பிரானருளியவங்கியாசங்தோற்ற
மரியதிதிசங்காரஞ்சடங்கமொடுபிரமங்
கண்டவக்கரநியாசஞ்சீகண்டாதி
கருதுகலாநியாசமதுவேண்டியதுகணிக்கப்
புண்டரிகமலர்த்தாளின்முக்காற்பூசை
பொருந்தலுமாமொருக்காலேயட்டபுட்பஞ்சாத்தி
விண்டுசோடசவுபசாரமுஞ்செய்துவிடலா
மிருகோவைக்குருவைவித்தையைப்பூசைவிரும்பே.

(இ-ள்.) அண்டர்பிரான் அருளிய அங்கியாதங்தோற்றம் அரியதிதிசங்காரம் சடங்கமொடு பிரமம் கண்டஅக்கரநியாதம் சிகண்டாதி கருதுகலாநியாசமது வேண்டியதுகணிக்க - பரமேசுவரன் அருளிச்செய்யப்பட்ட நியாசம் சிருட்டி க்கிரமம் திதிக்கிரமம் சங்காரக்கிரமம் எனமூன்றும் சடங்கநியாசம் பஞ்சப்பிரம நியாசம் காணப்பட்ட அக்கரநியாசம் சீகண்டாதிநியாசம் கருதப்பட்ட கலைநி யாசமென ஐந்துபகுதியிலும் வரும் இவற்றின் வேண்டினோர் வேண்டியது செய்க—புண்டரிகமலர்த்தாளில் முக்காற்பூசை பொருந்தலுமாம் - சிவனைப்பூசி க்குமிடத்துமூன்றுகாலமும் பூசிக்கலுமாகும்—ஒருக்காலே அட்டபுட்பஞ்சாத்தி விண்டு சோடசவுபசாரமுஞ் செய்துவிடலாம்—அம்மூன்றுகாலமும் பூசிக்கக் கூடாதவளவில் சுழுக்கோதகஞ்சாத்தின அவதரத்தில் அட்டபுட்பஞ்சாத்திப் பதினறு உபசாரமுங்கொடுத்துப் பூசித்துவிடலாம் இப்படிப்பூசைமுடித்து— மிருகோவைக் குருவை வித்தையைப் பூசை விரும்பே - பீடத்தில் ஓம் கோமா தராயநம வென்றும் சிவகுருப்பியோநம வென்றும் வித்தியாபீடாயநம வென் றும் பூசிக்குக. எ-று.

சடங்கநியாசம் மூன்றுவகையாவன: இருதயாதி அத்திராந்தஞ் சிருட்டிநியா சம். அத்திராதி இருதயாந்தம் சங்காரநியாசம். சிகை இருதயம் சிரசு கவசம் நேத் திரம் அத்திரமாகச்செய்வது திதிநியாசம். பஞ்சப்பிரம நியாசம் மூவகையா

வன: ஈசானுதி சத்தியோசாதமந்தம் சிருட்டிநியாசம். சத்தியோசாதம்முதல் ஈசானுந்தம் சங்காரநியாசம். அகோரம் ஈசானம் தற்புருடம் வாமம் சத்தியோ சாதமாகச் செய்வது திதிநியாசம். இவை பஞ்சப்பிரமசடங்கமாம்; மாதிருகா நியாசமெனவும்படும். அக்கரநியாசம் மூவகையாவன: அகரமுதல் க்ஷகரமீறு கச் செய்வது. சிருட்டிநியாசம் க்ஷகரமுதல் அகரமீறுகச் செய்வது. சங்கார நியாசம் உயிரீற்றெழுத்து முதல் அகரமீறுகவும் அகரமுதல் க்ஷகரமீறுகவும் செய்வது திதிநியாசம். சீகண்டாதிநியாசமாவது: இவ்வக்கரமுறையே சீகண்டர் முதலான அக்கரதேவதைகளையுஞ் சத்திகளையுங் கூட்டி நியாசஞ்செய்வது. கலாநியாசமாவது: ஈசானகலை ரு, தற்புருடகலை ச, அகோரகலை அ, வாமதேவ கலை கரு, சத்தியோசாதகலை அ, ஆகக்கலை ருஅ; இது அடைவேசெய்வது சிருட் டிகலாநியாசம்; கீழ்மேலாய்ச்செய்வது சங்காரகலாநியாசம். அகோரகலை தற்புரு டகலை ஈசானகலை வாமதேவகலை சத்தியோசாதகலையாகச் செய்வது திதிகலாநி யாசம். இவை நிருவாணதீக்ஷையுடையார் செய்யும் நியாசங்களாம். சிருட்டிநி யாசம் கிரகத்தருக்கும், சங்காரநியாசம் வானப்பிரத்தருக்கும் யோகிக்கும், திதிநி யாசம் பிரமசாரிக்குமாம். சோடச உபசாரமாவன: பாத்தியம் ஆசமனம் அர்க்கி யம் கந்தம் புட்பம் நைவேத்தியம் தூபம் தீபம் ஆராத்திரிகம் கண்ணுடி குடை சாமரம் ஆலவட்டம் நிருத்தம் கீதம் வாத்தியமென்பனவாம். (எகூ)

விரத்தி பிக்ஷையேற்குமுறை கூறுகின்றூர்.

பூசைமுடிந்தாற்பிச்சைபண்ணுமவனேடு
பொன்னுதிசுரையிரும்புபொருந்தியவவ்வோட்டை
நேசமுடன்வாய்கட்டித்தோளின்பாலி
னின்றுகீழாகாமலேந்திக்கொண்டு
கீசகமுமேழொன்பான்பதினொன்றுகணுவாய்க்
கிளருமறையவராதிநாலுபேர்க்கு
நேசமுடன்றலைநெற்றிபுருவந்தோளளவு
நிகழுமாகேசுரர்க்குநெற்றியதுபற்றே.

(இ-ள்.) பூசைமுடிந்தாற் பிச்சைபண்ணுமவன் ஓடு பொன்னுதி சுரை இரும்பு பொருந்தியஅவ்வோட்டை நேசமுடன் வாய்கட்டித் தோளின்பாலினி ன்று கீழாகாமல் ஏந்திக்கொண்டு - இந்தப் பூசைமுடிந்த அளவிலே பிச்சைபண் ணுமவன் திருவோடு பொன் வெள்ளி செம்பு வெண்கலம் இரும்பாதல், மரஞ் சுரையோடு மட்கலமாதல் பொருந்தியதொன்றைச் சுத்திசெய்து வாய்கட்டித் தோளுக்குக்கீழ்ப்படாமல் இடக்கையி லேந்திக்கொண்டு—கீசகமும் ஏழு ஒன் பான் பதினொன்று கணுவாய்க் கிளரும்மறையவராதி நாலுபேர்க்கும் நேசமுடன் தலை நெற்றி புருவம் தோளளவும் நிகழு மாகேசுரர்க்கு நெற்றியது பற்றே - மூங் கிற்றண்டு ஏழு ஒன்பது பதினொன்று கணுவாய் மறையவர்முதல் நான்குவருண த்தார்க்கும் தலை நெற்றி புருவம் தோளளவுயரங் கொள்க. மாகேசுவரர்க்கு நெ ற்றியளவுயரங்கொள்க. எ-று. (அ0)

இதுவுமது.

ஆங்கதுவுஞ்சுத்திசெய்துமுன்வைத்துவணங்கி
யறவுஞ்சுக்கிலமாயகலைகள்புனைந்திடப்பா
லோங்குதோள்வேட்டியுமிட்டுடனேமெல்ல
வோடாமன்மெத்தெனத்தன்னடிபார்த்துநடந்து
பாங்குடனேபிச்சாந்தேகியென்றுகூறிப்
பரிவுடனோர்பசுத்தண்ணீர்பருகளவுநின்று
வாங்கியவன்னந்தன்னைமூன்றுகூறாக்கி
மன்னுகுருவகுதிக்குத்தனக்கொன்றாவையே.

(இ-ள்.) ஆங்கதுவும்-வையே - அவ்வோட்டையுந் தண்டையும் சுத்தஞ் செய்து ஆசாரியன் சன்னிதியிலாதல் பாவனையாயாதல் வைத்துத் தெண்டம் பண்ணி மிகவுஞ் சுத்தமான வேட்டிகளுடுத்து இடத்தோளிலேயுமொருவேட்டி போட்டு ஓடாமல் மெல்லத் தன் பெருவிரலைப் பார்த்து நடந்து முறைமையுடனே பிச்சாந்தேகியென்று கூறி ஒருபசுத் தண்ணீர்குடிக்குமளவும் நின்று இம்முறையில் வாங்கின அன்னத்தை மூன்றுகூறாகப் பகிர்ந்து ஒருகூறு குருவுக்கு மொருகூறு அகுதிகட்கும் வழங்கி மற்றையொருகூறு தான் புசிக்குக. எ-று.()

போசனபாத்திரவிதியும் நிவேதனவிதியுங் கூறுகின்றார்.

போசனஞ்செய்வதுதனக்குமொருகூறுகொண்டு
புகல்கிழக்குத்தெற்குமுகம்பொருந்தநோக்கி
நேசமுடனிடஞ்செய்துபாசனந்தா
னிகழும்பொன்னாதிவெண்கலமீறாக்கொள்க
கோசமுடனிரும்புமண்சுரையதமமாகுங்
குலவுமிலைகதலியாதிகொள்கவாமணக்கு
நீசமுறும்பேயத்தியாகாவன்ன
நிவேதிபிராணாதியஞ்சுபலிநேரே.

(இ-ள்.) போசனம்-நேரே - தனக்குச்சொன்ன கூற்றையும் புசிக்குமிடத்துக் கிழக்குநோக்கியாதல் தெற்குநோக்கியாதலிருந்து சதுரத்தோடுகூட இடஞ்செய்து, போசனபாத்திரந்தான் பொன் வெள்ளி செம்பு வெண்கல மிவையுத்தமம்; இரும்பு மத்திமம்; மண் சுரை இவை அதமம். இலைகளிற் கதலிமுதலானவை உத்தமம். ஆல் அரசுமுதலானவை அதமம். ஆமணக்குப் பேயத்தி முதலானவை குற்றத்தைச்செய்யு மாதலாற் கொள்ளப்படாது. அன்னத்தை நிரீக்கணாதி சுத்திசெய்து சிவரூப்பியோ நைவேத்தியஞ்சுவாகா என்று அமுது செய்யப்பண்ணி அமுதையள்ளிப் பாத்திரத்துக்குக்கீழே சதுரமாக இடஞ்செ

ய்து கிழக்கு தெற்கு மேற்கு வடக்கு நடுவும் பிராணாயசுவாகா அபானாயசுவாகா வியானாயசுவாகா உதானாயசுவாகா சமானாயசுவாகா என்று ஐந்துதரம் பலியிடுக. எ-று. (அஉ)

இதுவுமது.

அமுதுநைவேத்தியமுஞ்சுவாகாவென்றே
யதற்பின்புநைவேத்தியமுஞ்சுவாகாவென்றே
யமுதோபத்திரணமசியெனநீருங்குடித்தே
யரனின்மாலியஞ்சரியைகிரியைக்காகா
தமதிலையையிடக்கைகொடுபிடித்துமவுனத்தாற்
சமாபந்திதனிலுண்கநகமயிரோடெலும்பு
முமியத்தக்கனகிடந்தாலள்ளிப்போட்டே
யுடனேகைகழுவிநீறிட்டுண்கைமுறையே.

(இ-ள்.) அமுது-முறையே - அந்தஅமுது நைவேத்தியஞ்சுவாகா வென்று பலியிட்டபின்பாகச் சிவகுருப்பியோ பானீயஞ்சுவாகா வென்று தண்ணீர் அமுதுசெய்யப்பண்ணிக் கவசத்தாற்சுற்றி அமுதோபத்திரணமசி யென வாசமித்து ஈசுவரனை அமுதுசெய்விக்கப்பட்ட நின்மாலியம் அமுதுசெய்யப்பண்ணலாகாது. அதுவுமன்றிச் சரியை கிரியைக்காரர்க்குப் பத்தியாலன்றி ஆசையால் அமுதுசெய்யப்பண்ணலாகாது. இங்ஙனம் நிவேதிக்கப்பட்ட அன்னத்தைப் புசிக்குமிடத்து இலையை இடக்கையாற் தொட்டு நாகாயசுவாகா கூர்மாயசுவாகா கிருகராயசுவாகா தேவதத்தாயசுவாகா தனஞ்சயாயசுவாகா என்று ஐங்காற் சிறிதன்னமள்ளிப் பலிகொடுத்துத் தனக்கொத்தார் பந்தியிலொக்கவிருந்து உரையாடாமற் புசிக்குக. புசிக்குமிடத்து நகம் மயிர் எலும்பு முதலான புசிக்கப்படாதன அன்னத்திலே கிடந்தாற் சோற்றுடனே யதனையள்ளிப்போட்டுக் கைகழுவி அன்னத்திலே திருநீற்றைத்தெளித்து நெற்றியிலு மிட்டுக்கொண்டு புசிக்குதல் முறைமையாம். எ-று.

நாகாதி பஞ்சவாயுக்களுக்கும் வெளியே பலிபோட்டுப் பிராணாதி பஞ்சவாயுக்களுக்குப் பலிகொடுத்துச் சிவமூலமந்திரத்தால் உதராக்கினியைச் சொலிப்பித்து அதில் ஆகுதிசெய்வதாகப் புசிக்குதலுமாம். (அங)

இதுவுமது.

இப்படியாமுணவுசரியைகிரியைத்தொழிலோர்க்
கியல்பினலாசமித்துநீறிட்டுண்கச்
செப்பியயோகிகட்கிட்டமானபடியுண்க
திகழ்நீறேயாவருக்குஞ்சுத்திசெய்யு

மெய்ப்படவேஞானிதானிவேத்தியமுமெல்லா
மிகுகுருவுக்காக்கலுமாம்பாவகமுமாகு
மெப்படியுஞானிகட்குங்கொன்றுதின்னலாகா
தெவ்வுயிர்க்குமிரங்குவதேகருணைதனினியல்பே.

(இ-ள்.) இப்படி-இயல்பே - இப்படிப் புசிக்குமுறைமை சரியைகிரியைக் காரர் பிச்சையல்லாதவிடத்து ஆசமித்துத் திருநீறிட்டுக்கொண்டு புசிக்குக. சொல்லப்பட்ட யோகிகள் தமக்கு இட்டமானபடி புசிக்குக. யாவர்க்குந் திருநீறே சுத்தியாக்குவது. உண்மையான ஞானதரிசனமுடையார் கிரியைசெய்யுமிடத்துக் குருவுக்கு நிவேத்தியஞ்செய்தலுமாம்; பாவிக்கலுமாம். எவ்வழியாலும் நான்குபாதத்தி னிற்பார்க்குஞ் சுத்தபோசனமே தகுதியாவது. எந்த ஆன்மாவுக்கு மிரங்குவதே கிருபையினியல்பாம். எ-று. (அச)

அவுத்திரிதீட்சைகூறுகின்றார்.

அவுத்திரிதானஞ்ஞானநீக்கிஞானமுணர்த்த
லதிற்சமயவிசேடமுன்னதிற்சமயநெறிதான்
பவத்தகலுநிர்ப்பீசம்பீசமெனவிரண்டாம்
பாலருடன்வாலீசர்விருத்தர்பழிமொழியார்
நவப்பெண்டிர்நோயாளர்தமக்குநிர்ப்பீச
நற்சமயிபுத்திரர்க்குப்பீசமாகு
முவர்ப்பில்வழிபாடுடையோனிழல்போலச்சாரு
முத்தமர்தன்னறநிற்போர்க்குரைப்பதெனத்தகுமே.

(இ-ள்.) அவுத்திரிதான் அஞ்ஞானம் நீக்கி ஞானமுணர்த்தல் - தீக்கையென்ற சொல்லுத்தான் அஞ்ஞானத்தை நீக்கி ஞானத்தை யுணர்த்தலாம்—அதிற் சமயம் விசேடம் முன் - அந்தத் தீக்கையிலும் சமயமும் விசேடமும் முன்னையதாம்—அதிற் சமய நெறிதான் - அந்தச் சமயவிசேடத்திற் சமயதீக்ஷையைச் சொல்லுமிடத்து—பவத்தகலு நிர்ப்பீசம் பீசமென விரண்டாம் - பிறப்பினின் றகலச்செய்யும் தீக்ஷை நிர்ப்பீசதீக்ஷையென்றும், சபீசதீக்ஷையென்றும் இரண்டுவிதமாம்—பாலருடன் வாலீசர் விருத்தர் பழிமொழியார் நவப்பெண்டிர் நோயாளர்தமக்கு நிர்ப்பீசம் - இவ்விரண்டில் எட்டுவயதுக்கு மேற்படாதவருக்கும் இருபதுவயதுக் குட்பட்டாருக்கும் எழுபத்தைந்துவயதுக்கு மேற்பட்டாருக்கும் வேசியர்கள் பொதுமகளிர் வியாதியாளர் முதலாயினோர்க்குஞ் செய்வது நிர்ப்பீசதீக்ஷையாம்—நற்சமயிபுத்திரர்க்குப் பீசமாகும் - நல்ல சமயநெறியினிற் பார்க்கும் தன்மகன் ஆசான்மகன் மன்மகன் முதலாயினோர்க்கும் பாலராயினும் இவர்கட்குச்செய்வது சபீசதீக்ஷையாம்—உவர்ப்பில் வழிபாடுடையோன் நிழல் போலச்சாரு முத்தமர் தன்னறநிற்போர்க்கு உரைப்பதெனத் தகுமே - இந்தச்

சபீசதீக்ஷை முன்சொன்னவர்க்குமன்றி வெறுப்பில்லாத வழிபாடுடையோனுக்கும் நிழல்போலச் சேர்ந்து சேவைசெய்பவனுக்கும் குருவடியே கெதியெனப் பொருந்து முத்தமனானவனுக்குஞ் சொல்லுவது தகும். எ-று. (அரு)

ஆசாரியன் இலக்கணம்.

ஓரிலக்கமாகமத்திற்படித்துப்பல்கலைக
ளுணர்ந்துசரியாதிநான்குணர்வுடையானுகி
யாரியச்சொற்றமிழ்நூல்கண்மிகவுணர்ந்துகலைக
ளடையக்கற்றசலநிலமலர்துலாக்கோலே
சேருகுணனுயுறுப்பிற்குறைபாடின்றித்
திகழுநாற்சாதியுளாய்ச்சீலவானுய்ப்
பாரின்மிகக்கருணையனுயிருப்பான்ருனே
பரமன்றீக்கைக்குரியகுருவாகப்படுமே.

(இ-ள்.) ஓரிலக்கம்-படுமே - சிவதீக்கை செய்தற்குரிய குருவாவான் ஓரிலக்கம் கிரந்தம் ஆகமத்திலே படித்துப் பலகலைக்கியானங்களையறிந்து, சரியை கிரியை யோக ஞானத்தி னுண்மைகளைத் தெளிந்து, வடசொற் றென்சொல் மிக ஆராய்ந்து, திசைச்சொற் போக்கி, மலை நிலம் பூ துலாக்கோலென்னும் உத்தம குணமுடையனுய், அங்கங்களிற் குறைபாடின்றி, நான்கு வருணத்துக்குட்பட்டவனுய், குணவானுய்ப் பூமியிலே மிகுந்த கருணையுடையனு யிருக்கும் ஆசானே உத்தமனென்று சொல்லப்படும். எ-று. (அசு)

சீடனிலக்கணம்.

பேணுபலகலையுணர்ந்துதவமொழுக்கஞ்சீலம்
பெருகுமன்பருளாசாரங்களுபசாரங்
கோணில்குணம்பொறைவாய்மைபுலான்மறுத்தலுறவு
கொண்டகுணம்விடாமைகோடாமைகொதியாமை
பூணுகம்பம்மயிர்ப்புளகங்கண்ணீர்வார்தல்
புண்ணியனையடியவரைக்கண்டாலங்கே
நாணியுடற்கூசியெட்டுவகைப்பத்திசெய்கை
நற்குணங்களுடையவர்க்குநாட்டுகமந்திரமே.

(இ-ள்.) பேணு-மந்திரமே - சீடனிலக்கணஞ் சொல்லுமிடத்து, கலைஞானங்கள் பலவுமுணர்ந்து, தவமும், நெறியுடைமையும், ஒருநெறிப்பட்டுப் பிறரையுபரஞ்சிக்குங்குணமும், மிக்க அன்புடைமையும், கிருபையும், ஆசாரமும், உபசாரமும், சாத்துவிதகுணமும், பொறையும், சத்தியமும், புலான் மறுத்தலும், நல்லோரைக் கண்டாற் கைவிடாமையும், நெறியமைதலும், கோபஞ்செய்யாமையும், பொருந்தப்பட்ட கம்பமும், மயிர்க்கூச்செறிதலும்

கண்ணீர் ததும்பலு முடையனுய்ச் சிவனைத் திருக்கோயிலைச் சிவனடியாரைக் கண்டாற் கூசிப் பயப்பட்டு எட்டுவகைப் பத்தியுஞ் செய்வானுயிருக்குமவன் உத்தமன். இக்குணமுடையார் யாவராயினும் அவர்க்கு மந்திர உபதேசஞ் செய்குக எ-று.

எண்வகைப்பத்தியாவன: "தொண்டரடிதொழல்பூசைத்தொழின்மகிழ்தலழகார்துலங்கியவர்ச்சனைபுரிதருெருகுதிரியமங்கள், கொண்டபணிதிருவடிக்கேகொடுத்த லீசன்குணமருவுமருங்கதையைக்குலவிக்கேட்டு, மண்டிவிழிதழும்பன்மயிர்சிலும்பலுன்னல்மருவுதிருப்பணிகாட்டிவருவவாங்கி, யுண்டிகொளாதொழிதலெனவிவையோரெட்டுமுடையரவர்பத்தரெனவுரைத்துளாரே."—என்னுஞ் செய்யுளானுணர்க. (அஎ)

சமயதீட்சை கூறத்தொடங்கி மண்டபமும்
மண்டலவிலக்கணமுங் கூறுகின்ருர்.

ஆங்கவதுகுண்டவதிதீக்கைமண்டபந்தா
னருமுழமெண்பத்தொன்றுகொண்டகலநீள
மோங்குபதினுறுகானல்வாயிற்ருேரணங்க
ளூறநாட்டியலங்கரித்துவிதானமாக்கித்
தேங்குதருப்பையின்மாலைமலர்கொண்மாலை
திகழ்வித்துநடுநாலுமூன்றிரண்டுமுழங்கள்
பாங்கில்விரல்பன்னிரண்டுபத்தெட்டாமுயரம்
பதினேழிற்பதினேழுகீறிவன்னம்பரப்பே.

(இ-ள்) ஆங்கவது குண்டவதி தீக்கை - இப்படி யுத்தமனை ஆசாரியன் இம்முறைமை நெறியுடைய சீடனைத் தீக்கைவைக்குமிடத்துச் சமய விசேட நிருவாண தீக்கைகளுக்குக் குண்டவதி தீக்கையென்று பெயராம்—மண்டபந்தான் அருமுழ மெண்பத்தொன்றுகொண் டகலநீளம் ஓங்குபதினுறுகால் நால்வாயிற் ருேரணங்கள் உறநாட்டி அலங்கரித்து விதானமாக்கித் தேங்கு தருப்பையின்மாலை மலர்கொள்மாலை திகழ்வித்து - தீக்கைமண்டபமாவது: ஒன்பதுக் கொன்பது முழங்கொள்ள எண்பத்தொருமுழமாம்; இதிற் பதினுறு கால்நாட்டிச் சாலையுயரக் கட்டிக் காவணமிட்டு நாலுவாயிலுமாக்கித் தோரணங்களும் நாட்டி மேற்கட்டி முதலான அலங்காரஞ்செய்து தருப்பைமாலை புட்பமாலை மிகவுங்கட்டி விளக்கமாக்கி—நடு நாலு மூன் றிரண்டு முழங்கள் பாங்கில்விரல் பன்னிரண்டு பத்தெட்டா முயரம் பதினேழிற் பதினேழு கீறி வன்னம் பரப்பே - மண்டபத்துக்கு நடுவே நாலுமுழமாதல் மூன்று முழமாதல் இரண்டுமுழமாதல் அகல நீளங்கொண்டு பகுதிப்பட்ட விரல்கள் அடைவே பன்னிரண்டு பத்து எட்டு விரலுயரமாகக் கொண்ட மண்டலத்திலே, பதினேழுக்குப் பதினே ழிரேகை கீற இருநூற் றைம்பத்தாறு பதமாம்; இதிலே வன்னம் பரப்புக. எ-று. (அஅ)

குண்டவிலக்கணங் கூறுகின்றார்.

பரப்பியதினடுநாலுதாமரையாயிலிங்கம்
பகராறுநாவிரண்டுநாலாறுநாலும்
விரித்துநாற்றிசையிட்டுமுகவன்னம்பரப்பி
மேனாலுதாமரையாமூலைகாகபாதம்
புரிப்பச்சையாவிட்டுப்பாதிலிங்கம்
புகலடைவேதிசைச்செவ்வேதிசைவன்னம்பரப்பி
நிரைத்தகிழக்கேயாழமகலநீள
முழமாதல்பிடியாதல்கொண்டுகுண்டநிறுத்தே.

(இ-ள்.) பரப்பியதின் நடுநாலு தாமரையாய் இலிங்கம் பகராறு நாவிரண்டு நாலாறுநாலும் விரித்து நாற்றிசையிட்டு முகவன்னம்பரப்பி - இவ்விருநூற் றைம்பத்தாறில் நடுவே நாலுபதமமைத்துப் பதுமமாக்கிக் கிழக்கு மேற்கு வடக்குத் தெற்காகிய நாலுதிசையினும் ஒவ்வொருதிசையில் இரண்டு புறத்திலும் அச்சுப்பதம் போட்டு நடுவிலாறுபதமும் அதற்கு மேல் நாலுபதமும் அதன்மே லிரண்டுபதமும் அதற்குமேல் நாலுபதமும் அதன்மே லாறுபதமும் பீடமாகவும் மேலிரண்டுபதமாக நாலுபதம் இலிங்கமாகவும் இப்படி நாலு திசையிலு மிட்டுக் கிழக்கே பொன்மை தெற்கே கறுப்பு வடக்கேசிவப்பு மேற்கேவெள்ளையாக வன்னம் பரப்பி—மேல்நாலு தாமரையாய் - இலிங்கங்கட்கு இரண்டு புறத்திலும் நாலு நாலு பதம் ஒரு பதமாக நாலுமூலையினும் நாலுபத்மமிட்டு—மூலை காகபதம் புரி பச்சையாவிட்டு - மூலைகள் நாலு திசையினும் ஒவ்வொருதிசையி லைந்து பதத்துக்கு ஐந்துபதம் பச்சை வன்னத்தாற் காகபதமாயிட்டு—பாதிலிங்கம் புகலடைவே திசைச்செவ்வே திசைவன்னம் பரப்பி - மூன்றுபதம் பீடமாகவும் ஒருபத மிலிங்கமாகவு மிடுவது பாதிலிங்கமாம். இதற்கு அத்திசையில் வன்னம்பரப்புவது இது சருப்பதோ பத்திரமாம்—நிரைத்த கிழக்கே யாழமகலம் நீள முழமாதல் பிடியாதல் கொண்டு குண்டம் நிறுத்தே - மண்டலமாக நிரைத்ததற்குக் கிழக்கிரண்டுமுழத்திலே ஒருமுழமாதல் பிடிமுழமாதல் நீள மகல மாழங்கொண்டு குண்டமிடுக. எ-று. (அகூ)

துவாரபூசை கூறுகின்றார்.

நிறுத்துமேகலைவிரனீனாலுமூன்றிரண்டா
நிலையகலமுயரமேற்றென்புறத்தினடுவே
குறித்தவரசிலைநாலாமுயரமொன்று
குலவுபாம்புள்வாயினுளங்கீழிழிந்து
நிறுத்துதாமரையட்டவிதழதனிற்பின்னர்
நிகழ்பிரணவர்க்கியத்தாற்கிழக்குநின்று
மறைத்ததோரணங்களிரண்டிரண்டாகவடைவே
மருவுசாந்திதோரணமாத்துவாரபாலர்வையே.

(இ-ள்.) நிறுத்துமேகலை விரல் நீள் நாலு மூன்றிரண்டா நிலையகல முயரம் - இப்படிச் செய்த குண்டத்தின் புறம்பே மேகலைமூன்றாய் மேன் மேகலை நாலங்குலத்துக்கு நாலங்குல முயர மகலமும் நடுமேகலை மூன் றுக்கு மூன்றுயரமும் அகலமும் கீழ்மேகலை இரண்டுக் கிரண்டகலமு முய ரமுங் கொண்டு மூன்று மேகலையிட்டு—மேற் றென்புறத்தி னடுவே குறித்த அரசிலை நாலா முயரமொன்று - மேலின் மேகலையிலே தெற்கே நடுப்பட நாலங்குல மரசிலைபோல வோரங்குல முயரமிட்டு—குலவு பாம்புள் வாயி னுளங் கீழிழிந்து நிறுத்து தாமரை யட்டவிதழதனிற் பின்னர் - அந்நாபியைப்பற்றிப் புறத்துவிழுந்த நாளம் நாகம்போலவும் உள்வாயி விழிந்த நாளங் குண்டத்துக்குள்ளே தாமரையா யெட்டிதழாகவு மிட் டதற்குப் பின்பாக—நிகழ் பிரண வர்க்கியத்தாற் கிழக்கு நின்று மறைத்ததோரண ங்க ளிரண்டிரண்டாக வடைவே மருவுசாந்தி தோரணமாத் துவாரபாலர் வையே - பிரணவவர்க்கியந் தாபித்து அங்கநியாசமுதலானவை செய்து உடை உத்தரீயம் பூணுநூல் முறைமையி விட்டுக் கிழக்கு நின்று நான்கு வாயிலிலும் ஓம் சாந்திதோரணாயநம ஓம் வித்தியாதோரணாயநம ஓம் பிர திட்டாதோரணாயநம ஓம் நிவிர்த்திதோரணாயநம வென்று பூசித்து மேலை வாயில்வந்து துவாரங்களைப் பூசிக்குக. எ-று. (௬0)

பூசைவிதி கூறுகின்றார்.

வைத்துப்பின்மேல்வாயிற்றுவாரம்போல
மருவிப்பூசித்துவிக்கினமகற்றிப்பின்னர்
நித்தன்மண்டபத்தில்வடக்கிருந்துபூத
நிகழ்சுத்தியங்ககரநியாதமெல்லா
முய்த்தசிவன்கரமாக்கிஞானகட்கஞ்சொருகி
யுயர்நிருதிநின்றுபொரியத்திரத்தாலெங்கும்
பத்திபடச்சிதறிப்பின்றருப்பையினூற்றார்த்துப்
பகருவத்தனிக்காக்கிக்கலசங்கள்பரப்பே.

(இ-ள்.) வைத்துப்பின் மேல்வாயிற் றுவாரம்போல மருவிப்பூசித்து - முன்பு சிவபூசையிற் றுவாரம் பூசிக்கு முறைமைபோல மந்திரங்களை நெறிப்படவைத்து மேற்குத்துவாரத்தைப் பூசித்து—விக்கினமகற்றிப்பின்னர்- முன்போல மேலுங் கீழும் இடையிலும் உள்ள விக்கினங்களை யகற்றி யதற்குப்பின்பாக—நித்தன்மண்டபத்தில் வடக்கிருந்து பூதநிகழ்சுத்தி அங்ககர நியாதமெல்லா முய்த்த சிவன் கரமாக்கி ஞானகட்கஞ் சொருகி - உள்ளே சென்று சிவமண்டபத்தில் வடக்குநோக்கி யிருந்து பூசைபோல வடக்குத் துவாரபாலர் சத்தகுருக்களிவர்களைப் பூசித்துக் கரநியாசமும் பூதசுத்தியும் அங்கநியாசமுஞ் செய்து அந்தரியாகம் பூசித்து விசேடார்க்கியங் கற்பித்துத் திரவியசுத்தி மந்திரசுத்தி செய்து தன்னைச் சிவனாகப் பாவித்து

முப்பத்தாறுபுல்லுக் கிரந்திமுடிச்சாய் அக்கிரம் நாலங்குலமும் கிரந்தி இரண்டங்குலமும் கீழ்ப் பன்னிரண் டங்குலமும் கொண்டவது ஞானகட்கம் இதனை நிரீக்கணாதி சுத்திசெய்து வலப்புறத்திலே சொருகிக்கொண்டு வலக்கையிலே சந்தனத்தை யிட்டு இதிலே பதினொரு மந்திரங்களாலும் சாத்தி இரண்டு கையையுங் கூட்டி வலத்துடையிலேவைத்துப் பதினொருமந்திரங்களுஞ் செபித்துத் தன் வலக்கையைச் சிவன் வலக்கையாகத் தியானித்துத் தனது தலையிலே வைத்துக்கொண்டு சிவன் ஸ்ரீயத்தத்தைத் தலையிலேவைத்து அஞ்சாதே தீக்ஷையென் றருளிச்செய்கிறதாகப் பாவிக்கச் சிவகரமாம்—உயர் நிருதி நின்று பொரியத்திரத்தா லெங்கும் பத்திபடச் சிதறிப் பின் தருப்பையினாற் றூர்த்துப் பகரு வத்தனிக்காக்கிக் கலசங்கள் பரப்பே - அவ்வளவிலே யெழுந்திருந்து நிருதி மூலையிலே நின்று பொரியைக் கையிலே கொண்டு அத்திர மந்திரத்தாலே கிழக்குமுத லெட்டுத் திக்கினுஞ் சிதறிச் சிதறின பொரியை இரண்டு தருப்பையைக் கொண்டு தூர்த்து வடகீழ் மூலையிலே முழத்துக்கு முழம் நெற்பரப்பிக் கும்பம் வைத்து இதற்குத் தெற்காகச் சாணுக்குச்சாண் நெற்பரப்பி இதிலே வர்த்தனியாகிய கரகத்தை மேற்கே மூக்காகவைத்து நூல் சுற்றிச் சலம் பூரித்து இரத்தின முள்ளிட்டுப் புடவை சுற்றி இளநீரும் மாந்தளிரும் தருப்பையும் வைத்திருக்கப்பட்ட கும்பவர்த்தனியிலே வர்த்தனிக்கா தனமாக இந்தத் தூர்த்த பொரியையிட்டுக் கலசங்களிருபத்தெட்டையுஞ் சூழ வைத்துப் பூசிக்கத் தொடங்குக. எ-று. (கூக)

இதுவுமது.

கிழக்குநாலங்கியொன்றுதெற்குநாலு
　　கிளர்நிருதிமூன்றுகுடக்கேயுமாறு
முழற்றனிலன்மூன்றுவடக்கதுவுநாலா
　　முயரீசன்றனின்மூன்றுமாகவுயர்கலச
மெழிற்றகைமையிருபத்தெட்டாக்கலுமாமன்றி
　　யியற்பத்துக்குடஞ்சூழவாக்கலுமாமுன்னர்
வழக்கமுறுஞ்சாந்தியொடுநந்திமாகாளன்
　　மருவுமிந்திரனங்கியங்கியாயுதமே.

(இ-ள்.) கிழக்கு நாலங்கி யொன்று தெற்கு நாலு கிளர் நிருதி மூன்று குடக்கேயும் ஆறும் முழற்றனிலன் மூன்று வடக்கதுவு நாலா முய ரீசன்றனின் மூன்றுமாகவுயர்கலச மெழிற்றகைமை இருபத்தெட்டாக்கலுமாம் - கலசங்கள் வைக்குமிடத்துக் கிழக்கே வாயிலுக்கு வலப்புறத்தி லிரண்டு இடதுபுறத்தி லிரண்டாக நாலும் அக்கினி மூலையி லொன்றும் தெற்கு வாயிலுக்கு முன்புபோல நாலுந் தென்மேற்கே மூன்றும் மேற்கே வலப்புறத்து மூன் றிடப்புறத்து மூன்றுமாக ஆறும் வடமேற்கே மூன்றும் வட

க்கேவலத்திலிரண்டும் இடத்திலிரண்டுமோக நாலும் வடகிழக்கே மூன்றுமாக இருபத்தெட்டு வைத்தலுமாம்—அன்றி இயற்பத்துக் குடம் சூழவாக்கலுமாம் - அதுவொழிந்து கும்பவர்த்தனியைச் சூழக் கிழக்கு முதலாக எட்டுத் திசையிலும் எட்டுக்கலசமும் தென்மேற்கும் வடகிழக்கும் இரண்டு கலசமுமாகப் பத்துக் கலசமும் வைத்தலுமாம்—முன்னர் வழக்கமுறு சாந்தியொடு நந்தி மாகாளன் மருவுமிந்திரன் - முன் சொல்லப்பட்ட இருபத்தெட்டுக் கலசங்களினும் பூசிக்குந் தேவதைகளாவன: ஓம் சாந்திகலாய துவாரபாலாயநம ஓம் நந்தியேநம ஓம் மாகாளாயநம ஓம் இந்திராய வச்சிராயுதாயநம என்று கிழக்குமுதல் நாலு கலசமும் வலமாக அடைவே பூசித்து —அங்கி அங்கி ஆயுதமே - அக்கினி மூலையிலே ஓம் அக்கினியே சத்தியாயுதாயநம வென்று பூசிக்குக. (கூஉ)

இதுவுமது.

தென்றிசையில்வித்தையுடன்பிருங்கிவிநாயகனுஞ்
சேர்மறலிவாத்துப்பிரமன்விண்டு
வின்றுவருணன்றிருச்சேயத்திரத்துவாரபால
னென்றுநிவிர்த்தியுமாகுமிவைகளாறுமாகுந்
துன்றனிலன்கேத்திரபாலன்கணேசன்
சோமனுமைசண்டேசன்பிரதிட்டையாகு
மின்றீசன்குருவயனுமீசனிற்பத்தாகி
லிந்திராதியாயுதங்களுடனேயேத்தே.

(இ-ள்) தென்றிசையில் வித்தையுடன் பிருங்கிவிநாயகனும் சேர்மறலி - தெற்கு நாலு கலசத்துக்கும் ஓம் வித்தியாகலாத் துவாரபாலாயநம ஓம் பிருங்கினேநம ஓம் விநாயகாயநம ஓம் யமாயதெண்டாயுதாயநம வென்றுபூசித்து—நிருதி வாத்துப் பிரமன் விண்டு - நிருதி மூலையிலே ஓம் நிருதியே கட்காயுதாயநம ஓம் வாத்துபதியே பிரமனேநம ஓம் விட்டுணுவே சக்கிராயுதாயநம வென்று பூசித்து—இன்று வருணன் திருச்சே யத்திரத்துவாரபாலன் என்று நிவிர்த்தியுமாகு மிவைகளாறு மாகும் - மேற்கே ஓம் வருணயபாசாயுதாயநம ஓம் மகாலெட்சுமியேநம ஓம் சுப்பிரமணியாயநம ஓம் அத்திரத்துவாரபாலாயநம ஓம் இடபாயநம ஓம் நிவிர்த்திகலாத்துவாரபாலாயநம எனவிவர்க ளறுவரையும் பூசித்து — துன்றனிலன் கேத்திரபாலன் கணேசன் - வாயுமூலையிலே செறியப்பட்ட ஓம் வாயுவேயங்குசாயுதாயநம ஓம் கேத்திரபாலாயநம ஓம் கணேசாயநம வென்று பூசித்து—சோமன் உமை சண்டேசன் பிரதிட்டையாகும் - வடக்கே ஓம் சோமாயகதாயநம ஓம் உமாயநம ஓம் சண்டேசாயநம ஓம் பிரதிட்டாகலாத்துவாரபாலாயநம வென்று பூசித்து—இன்றீசன் குரு வயனு மீசனில் - ஈசானதிக்கில் ஓம் ஈசானய திரிசூலாயுதாயநம ஓம் சத்தகுரூப்பியோநம ஓம்

பிரமனே பத்மாயுதாயநம வென்று பூசிக்குக—பத்தாகில் இந்திராதியாயுத ங்களுடனேயேத்தே - கும்பவர்த்தனியைச் சூழ்ந்த கலசம் பத்தாகில் முன் சொன்ன இந்திரன் முதலாக ஆயுதங்களுடனே கூடின பத்து மந்திரங் களாலும் பூசிக்குக. எ-று. (கூரு)

இதுவுமது.

ஆம்படியேகும்பவர்த்தனியைப்பூசித்
தத்திரவத்தினியினீரொழுக்கிக்காவல்பகர்ந்து
நாம்பரவுசிவமண்டலம்பூசித்து
நாமகரணத்தளவுமங்கியினைநடத்தித்
தீம்பகலவிறைதன்னையங்கியுடன்கூட்டித்
திரவியமெல்லாம்வேண்டுமுருவோமஞ்செய்து
தேம்புரையுநிவேத்தியமுமூன்றுகூறாக்கிச்
சிவனுக்கொன்றொன்றங்கிசிடனுக்கொன்றாக்கே.

(இ-ள்.) ஆம்படியே கும்பவர்த்தனியைப் பூசித்து - அப்படிக் கலசங் கள் பூசித்தபின்பாகச் சிவனுக்குச் சிவபூசைப்படியே கும்பத்திலும் மனோ ன்மனி பூசைப்படியே வர்த்தனியிலுமாகப் பூசித்து—அத்திர வத்தினியி னீரொழுக்கிக் காவல் பகர்ந்து - தான் அவ்வர்த்தனியையெடுத்துக் கும்ப த்தைப் பரிசாரகனைக்கொண் டெடுப்பித்து வலமாக முக்கால் அத்திரத் தால் வர்த்தனியின் நீரையொழுக்கிக் கும்பவர்த்தனியைவைத்து ஞான கட்கம் இரண்டினுமாகச் சம்பந்திப்பித்துப் பூசித்து இந்த அக்கினியை இந்திராதிகளுடனே தேவரீர் இரட்சிக்கவேணுமென்று விண்ணப்பஞ்செ ய்து—நாம் பரவு சிவமண்டலம் பூசித்து நாமகரணத்தளவு மங்கியினை நட த்தி - நம்மாற் பணியப்பட்ட சிவமண்டலத்தில் சிவனைச் சாங்கோபாங் கமாகப் பூசித்து அக்கினி குண்டத்திலே சென்று வடக்கு நோக்கி யிரு ந்து நாமகரணமளவாக ஓமஞ்செய்து—தீம்பகல இறைதன்னை யங்கியுடன் கூட்டி - குற்றந்தீர அக்கினியி னிதயத்திலே சிவனை யாவாகித்து நாடிசந் தானஞ்செய்து—திரவிய மெல்லாம் வேண்டுமுரு வோமஞ்செய்து - திர வியங்களெல்லாம் ஆயிரத்தெட்டுருவாதல் நூற்றெட்டுருவாதல் ; இருபத் தைந்துருவாதல் மூலத்தா லோமஞ்செய்து—தேம்புரையும் நிவேதனமும் மூன்று கூறாக்கிச் சிவனுக்கொன் றொன்றங்கி சிடனுக் கொன்றாக்கே - இதயத்தாலே மெழுகித் தன்மஞானுதியா லடுப்புவைத்து அத்திரவிதயத் தால் மூன்றைந் தெழுகாற் சுத்திசெய்த அமுதுபடியை அகோரத்தாற் சமைத்து இதயத்தா லிறக்கிக் கவசத்தால் அக்கினி திக்கிலே பொருந்த வைக்கப்பட் நிவேத்தியத்தை மூன்று கூறாகப் பகுத்து மண்டலத்திற் சிவனுக்கொரு கூறும் அக்கினிக் கொருகூறும் நிவேதித்துச் சிடனுக்கும் ஒருகூறு வைக்குக. எ-று. (கூச)

இதுவுமது.

ஆங்கடைவேரிடனைச்சுத்தனுக்கிநீறிட்
டங்ககரநியாசஞ்செய்தருங்காப்புப்புனைந்து
பாங்குசருவுணவாக்கிக்குண்டத்திற்கிழக்கே
பயிலவுறக்கிக்கண்டசொற்பனத்திற்சுத்தி
யோங்கியோமம்பண்ணிப்பின்சுத்தனுக்கி
யுயருபிலாவனதகனபுரோக்கணங்கள்செய்து
சாங்கநியாதஞ்செய்துமற்றநாளிற்
றருஞ்சுத்தியாக்கிநேத்திரபந்தஞ்சமையே.

(இ-ள்.) ஆங்கடைவே சிடனைச் சுத்தனுக்கி நீறிட்டுஅங்ககரநியாசஞ் செய்தருங்காப்புப் புனைந்து - அப்படியக்கினியைப் பூசித்துப் பூரணாகுதி கொடுத்துச் சிடனைச் சுத்தனுக்கித் திருநீறுசாத்தி நியாசஞ்செய்து மூன்று நூலாற் காப்புச்சமைத்துச் சுத்திசெய்து கவசத்தாற் காப்புக்கட்டி ஓம்சுவப்பினமாணவதாயநமவென் றிந்தமந்திரத்தை யுபதேசஞ் செய்து—பாங்கு சருவுணவாக்கி - அந்தப் பஞ்சகவ்வியம் புரோக்ஷித் துள்ளேகொள்ளுவித்து நிவேத்தியத்திலொருகூற்றைப் புசிப்பித்து—குண்டத்திற்கிழக்கே பயிலவுறக்கிக் கண்ட சொப்பனத்திற் சுத்தியோங்கியோமம்பண்ணி - இவனைக் குண்டத்திற்குக் கிழக்கே தருப்பையின்மேலே நித்திரையாக்கிக் காலையிலெழுந்திருந்து நித்தியபூசையளவாகச் செய்து சிடனைச் சுத்தனாய்வரச்செய்து கண்ட சொப்பனங்கேட்டுப் பாவபுண்ணியங்கணிருமித்து அதற்குத் தக்க பிராயச்சித்த ஓமஞ்செய்து சுத்தனுக்கி நாமகரணத்துக்குமேலுள்ள கன்மம் பூரணாகுதியளவாகச் செய்து—பின் சுத்தனுக்கி யுயருபிலாவனதகன புரோக்கணங்கள் செய்து சாங்கநியாதஞ்செய்து மற்றநாளில் தருஞ்சுத்தியாக்கி நேத்திரபந்தஞ் சமையே - பின் சிடனைச் சுத்தனுக்கிப் புத்திகாமனைக் கிழக்குநோக்கியும் முத்திகாமனை வடக்குநோக்கியும் நிறுத்திப் பதினொரு மந்திரத்தாலும் புரோக்ஷிப்பது பிலாவனமாம், தருப்பையால் மேல்கீழிதயத்தாற்றடவுவது தகனமாம், நியாசஞ்செய்து சங்கிதையாற் செபித்துப் புரோக்ஷிப்பது புரோக்ஷணமாம். இவையுஞ்செய்து சுத்தனுக்கிப் பட்டாலே நேத்திரபந்தங் கவசத்தாலே செய்குதி. எ-று. (கூ௫)

இதுவுமது.

மன்னியங்கிமுன்போலச்சிடன்வலம்வந்தால்
மண்டலத்தின்மலரிடுவித்தத்திசைப்பேராக்கி
யுன்னிக்குண்டத்தருகேவைத்தாயுச்சுத்தி
யோங்குசுத்தியுமாக்கியுபதேசம்பண்ணி
முன்னமரன்சாயையரனடியார்சாயை
மிதியாதுகுருக்களையுமிலிங்கதேவரையுந்
தன்மையிலத்தவர்களையும்வணங்கிநின்மாலியத்தைத்
தானுண்ணாதேகடவாதேயென்றுசாற்றே.

(இ-ள்.) மன்னியங்கி முன்போலச் சீடன் வலம்வந்தால் மண்டலத்தின் மலரிடுவித் தத்திசைப் பேராக்கி - மீளவும் ஓமஞ்செய்து சீடனை உள்ளே கொண்டுபோய் ஓர் மலரைக்கொடுத்து வலமாக வரச்செய்து மண்டலத்திலே கையின்மலரைப் போடுவித்து அந்தமலர் விழுந்த திசைக்குரிய பெயராக நாமம் புனைந்து—உன்னிக் குண்டத்தருகே வைத்தாயுச்சுத்தி யோங்கு சுத்தியு மாக்கி - குண்டத்துக் கருகாகத் தருப்பாசனத்தில் வைத்து ஆன்மசுத்திசெய்து பிராயச்சித்த வோமஞ்செய்து சோத்திரசுத்தியுஞ் செய்து உபதேசம்பண்ணிப் பீசாக்கரங் கூட்டாமல் மந்திர முபதேசித்து—முன்ன மரன்சாயை யரனடியார்சாயை மிதியாது குருக்களையு மிலிங்கதேவரையுந் தன்மையிலத்தவர்களையும் வணங்கி நின்மாலியத்தைத்தா னுண்ணுதே கடவாதே யென்று சாற்றே - முன்னே நிறுத்திச் சிவன் நிழல் சிவனடியார் நிழல் திருக்கோயிலின் நிழல் இவற்றைக் கடவாமலும் குருவையும் சிவலிங்கப்பெருமானையும் மகேசுரரை யுமொப்பக் கண்டு வழிபட்டு நின்மாலியத்தை நிந்தித்தலுங் கடத்தலுஞ் செய்யாதே; ஆசையாற் புசியாதே; அதீட்சையான மகளிரருகணையாதே யென்று சொல்லிச் சரியை வழி நிறுத்துக. எ-று. (௯௧)

விசேடதீக்ஷை கூறுகின்றார்.

கருதுவிசேடந்தானுமிவ்வடைவேசீடன்
கனற்கண்வந்தாலெரியின்வாகீசிவாகீசர்
தெரிவுறவேபூசித்துச்சீடனுயிர்தன்னைச்
சேர்த்தியதிற்சுத்திசெய்துதன்னிதயத்தாக்கி
விரியுநாடிசந்தானஞ்செய்துதன்சேயாய்
மிகநினைந்துசங்கிதையுமிகுகாயத்திரியு
முறைகொண்மந்திரங்கள்பீசங்களோடு
முபதேசித்ததற்பின்சாதகற்குளதேபணியே.

(இ-ள்.) கருது விசேடந்தானு மிவ்வடைவே சீடன் கனற்கண் வந்தால் - விசேட தீக்ஷையாவது: சாதகாசாரியர் புத்திரர் நெறிநின்றோர் இவர்கட்குச் செய்வதாம். செய்யுமிடத்துச் சமயதீக்ஷைக்குப்போல மண்டபம் குண்டம் மண்டலமுதலியவை யெல்லாஞ் செய்து அக்கினி காரியமும் பூரணாகுதியள வாக முடித்துச் சீடனுக்குச் சமயதீக்ஷை யுள்ளவனா யிருந்தாலும் இல்லாதவனா யிருந்தாலும் அங்குரார்ப்பணங் காப்புமுதலானவை செய்து மற்றநாள் சீடனைத் தந்ததாபனஞ்செய்வித்துச் சகளீகரணம்பண்ணி அக்கினிகுண்டத்துக்கருகே வந்தால்—எரியில் வாகீசி வாகீசர் தெரிவுறவே பூசித்துச் சீடனுயிர்தன்னைச் சேர்த்தியதிற் சுத்திசெய்து தன்னிதயத்தாக்கி விதியின் நாடிசந்தானஞ்செய்து தன்சேயாய் மிக நினைந்து—அந்தச் சீடனை இருத்தி அக்கினி குண்டத்திலே வாகீசுவரி வாகீசுவரர்களைப் பூசித்துச் சீடனது ஆன்மாவை அவ்வக்கினியிலே ஆவாகித்து நெய் முதலானவற்றாலே நூற்றெட்டுருவோமஞ் செய்து

அவ்வான்மாவை மீண்டுந் தன்னிதயத்துக்குள்ளேயாக்கி உதரத்திலே சம்பந்தி த்ததாகக் கருதித் தனது புத்திரனாகத் தோன்றுகிறானாகப் பாவித்து மீண்டு சீடனிடத்திலே அந்த ஆன்மாவை விட்டுச் சுத்திசெய்து தன்னுடைய சற்பு த்திரனாகப் பாவித்து—சங்கிதையு மிகு காயத்திரியு முறைகொள் மந்திரங்கள் பீசங்களோடு முபதேசித்ததற்பின் சாதகற்குளதே பணியே - அவன் செவி யிலே சங்கிதாமந்திரமுங் காயத்திரிமந்திரமும் வேண்டிய மந்திரங்களையும் பீச ங்களோடு கூட்டி உபதேசித்து அர்ச்சனை முதலானவை கொடுத்து வேண்டின நெறியிலே நிறுத்துக. எ-று. (கூஎ)

நிருவாணதீக்ஷை கூறுகின்றார்.

மேவுநிருவாணமிரண்டதிலேசத்தியந்தான்
மிகுமங்கியளவாகமுன்போற்செய்து
பாவியசீடனைமுன்வைத்துச்சுத்திசெய்து
பகர்நியாதமனைத்துமாய்முழந்தாணபி
தாவுகளநெற்றிதலைதுவாதசாந்தந்
தானறத்துவாவினையுந்தகையில்வைத்துப்
பூவின்மந்திரம்பதினொன்றெண்பத்தோர்பதமும்
புவனமிருநூற்றிருபதுடனாலாய்ப்புகலே.

(இ-ள்.) மேவு நிருவாண மிரண்டதிலே சத்தியந்தான் - நிருவாணதீ க்ஷையென்று சொல்லப்பட்டதனுள் அசத்தியோநிருவாணம் சத்தியோ நிரு வாணமென விரண்டாம். அதிற் சத்தியோ நிருவாணம் ஞானபாதத்திற்குரி யார்க்குச் செய்யுங் கிரியையாதலான் மேலே ஞானத்திற்கிரியையிற் சொல்லு தும். அசத்தியோநிருவாணமாவது: மண்டபங் குண்டமண்டலங்களெல்லாம் முன்புபோலச் செய்து—மிகுமங்கி யளவாக முன்போற் செய்து - அந்தக் குண் டத்தில் அக்கினிகாரியமும் விசேடதீக்ஷைக்குப்போலச் செய்து — பாவிய சீடனை வைத்துச் சுத்திசெய்து - பொருந்தப்பட்ட சீடனை அதிவாதனம் சகளீ கரணமளவாகச் செய்து (அக்கரநியாசஞ் செய்து) சுத்தனுக்கிப் பின்பு பிராய ச்சித்த ஓமம்பண்ணி—பகர்நியாசமனைத்துமாய் முழந்தாள் நாபி தாவுகள் நெற்றி தலை துவாதசாந்தந்தா னறத்துவாவினையுந் தகையில் வைத்து—எல்லா நியாச முஞ் செய்தபின்பு முந்நூலாதல் ஆறு நூலாதல் ஒன்பது நூலாதல் பன்னிரு நூலாதல் சிகையிலே நின்றும் பெருவிரலளவு கட்டி முழந்தாளளவிலும் நாபி யளவிலும் கண்டத்தளவிலும் நெற்றி தலை துவாதசாந்தத்தளவிலும் நாலுக் கடையாளம்பண்ணி இவற்றிலே ஆறத்துவாக்களையும் முறையே யாக்குவது, அவ்வத்துவா வாவது:—பூவின் மந்திரம் பதினொன் றெண்பத்தோர் பதமும் புவன மிருநூற்றிருபதுடனாலாய்ப் புகலே - பூமிமுதற் சிவதத்துவமளவாகப் பிருதிவி அண்டமளவும் அப்பு மூலமளவும் தேயு மாயையளவும் வாயுச் சதாசிவ மளவும் ஆகாயஞ் சத்தியளவுமாகப் பஞ்சபூதங்களாகவும், பஞ்சபூதங்க ளடை

வே சாந்தியாதீதம் சாந்திவித்தை பிரதிட்டை நிவிர்த்தியாகவும், இந்த ஐந்திற் பிருதிவி முழந்தாளளவா யிதற்குள்ளே வலக்கால் இடக்கால் அடைவே ஈசான முதலத்திரமீருன மந்திரம் பதினொன்றும் நமோநமோவென்னும் பதமுதல் ஓம் என்னும் பதமீருக எண்பத்தொருபதமும் காலாக்கினி புவனமுதற் புவன மிருநூற்றிருபத்துநான்குமாகவுஞ் சொல்லப்படும். எ-று. (கூஅ)

இதுவுமது.

வன்னமைம்பத்தொன்ருருறுதத்துவங்கள்
வருகலைகளஞ்சிவைகள்பூதமைந்தின்
முன்னமாமயனுதியைவர்பதியாக்கி
முந்நூலிலாக்கியுடற்சந்தானஞ்செய்து
பின்னுருக்கள்பதிகடொறும்பெரும்போகந்துய்த்துப்
பிறங்குசதாசிவமளவும்பெரும்போகமாக்கி
மன்னுருவைச்சுத்தவடிவாக்கியுபதேச
மருவுவித்தனிருவாணதீக்கையாவையே.

(இ-ள்.) வன்னம்-வையே - அக்கரங்க ளைம்பத்தொன்றும் தத்துவங்கள் முப்பத்தாறும் கலைகளைந்தும் மந்திரம் பதினொன்றும் பதமெண்பத்தொன்றும் புவனமிருநூற்றிருபத்துநாலும் பூதமைந்திலே யடங்கிநிற்கும் படியாவது பிருதுவி அண்டமளவும் வியாத்தமாகவும் சத்தியோசாதம் இருதயமாகிய மந்திரமிரண்டும் நமோ நமோவென்னும் பதமுத லிருபத்தெட்டுப் பதமும் க்ஷ என்னும் எழுத்தும் கலாக்கினிமுதல் நூற்றெட்டுப் புவனமும் பிருதுவி தத்துவமும் நிவிர்த்திகலையுமாகவும் இதற்குத் தெய்வம் பிரமாவாகவும் இது முழந்தாளளவுமாகவும், அப்பு பிரகிருதியளவு வியாத்தமாகவும் வாமதேவமுஞ் சிரசுமாகிய மந்திரமிரண்டும் மகேசுவரமுதற் பத மிருபத்தொன்றும் ஹ முதல் எழுத் திருபத்துநாலும் அமரேச முதற் புவனம் ஐம்பத்தாறும் பிருதிவி யொழிந்த ஆன்ம தத்துவம் இருபத்து மூன்றும் பிரதிட்டாகலையு மாகவும் இதற்குத் தெய்வம் விட்டுணுவாகவும் இது முழந்தாள் முதல் நாபியளவுமாகவும் தேயு வித்தியா தத்துவமளவும் வியாத்தமாகவும் அகோரம் சிகையாகிய மந்திர மிரண்டும் வியாபின் வியாபின் முதற் பதமிருபதும் ஞ முதல் எழுத்தேழும் வாமமுதற் புவன மிருபத்தேழும் காலமுதல் வித்தியாதத்துவம் ஏழும் வித்தியாகலையுமாகவும் இதற்குத் தெய்வம் உருத்திரனுகவும் இது நாபி முதல் இருதயமளவுமாகவும், வாயு சதாசிவதத்துவமளவும் வியாத்தமாகவும் தற்புருடமும் கவசமுமாகிய மந்திர மிரண்டும் நித்திய யோகினிமுதற் பதம் பதினொன்றும் ஊ முதல் எழுத்து மூன்றும் வாமை முதற் புவனம் பதினெட்டும் சுத்தவித்தை ஈசுரம் சாதாக்கியமாகிய தத்துவம் மூன்றும் சாந்திகலையுமாகவும் இதற்குத் தெய்வம் மகேசுரனுகவும் இது இருதயமுதல் நெற்றியளவாகவும், ஆகாயம் சத்திதத்துவமளவும் வியாத்தமாகவும் ஈசானம் நேத்திரம் அத்திரமாகிய மந்திரம் மூன்

றும் ஓம் ஆகிய பதமொன்றும் ஈமுதலெழுத்துப் பதினறும் புவனம் நிவிர்த்தி முதற் பதினைந்தும் சத்தி சிவமாகிய தத்துவமிரண்டும் சாந்தியாதீத கலையுமாகவும் இதற்குத் தெய்வம் சதாசிவமாகவும் இது நெற்றி தொடங்கித் துவாதசாந்தமளவாகவும் கண்டு இப்படிப் பிரமாதி யைவர் பதியாக்கிச் சிகையின்றி முண்டிதரானுற் றலையிலே யொரு தருப்பையாதல் நூலாதல் சுற்றி அதிலுங் காலளவாகவும் நூலைக்கட்டி முழந்தாள் நாபி இதயம் நெற்றி துவாதசாந்த மளவாக ஐந்தடையாளம்பண்ணி ஆன்மாவை யண்டத்திலே வியாத்தமாக்கி நூலினின்றும் முழந்தா ளளவிலேயாக்கிப் பிரமபோகந் துய்ப்பித்து மீளவும் ஆன்மாவை இரண்டாம் பதத்திலே யாக்கி விட்டுணு போகந் துய்ப்பித்து மற்றுள்ள போகங்களு மிப்படியே துய்ப்பித்து அந்தப் பதங்களிலே யந்தந்த மூர்த்திவடிவாய் ஆன்மாவை அனுபவிப்பித்து இப்படி யொவ்வொரு பதமாகச் சதாசிவபதத்திலே சென்று சுத்தனாய் நின்மலனாக்கி உபதேசஞ்செய்வது; இது நிருவாண தீட்சையாகவைத்துச் சொல்லப்படும். எ-று.

கலாசோதனை செய்யுமிடத்து மூலாதாரமுதல் இருதயமளவும் நிவிர்த்தி கலையும், இருதயமுதற் கண்டமளவும் பிரதிட்டாகலையும், கண்டமுதல் தாலுமூலமளவும் வித்தியாகலையும், தாலுமூலமுதல் புருவமத்தியம்வரையும் சாந்திகலையும், புருவமத்தியமுதல் மேல்மூன்றங்குலவளவும் சாந்தீதகலையுமாகக் கலாசோதனை செய்வதென்பது சிலர்சம்மதம். இதன்விரிவைக் கிரியையில்யோகத்திற் காண்க. (கூகூ)

அபிடேகவிதி கூறுகின்றார்.

மருவுகருத்தாற்செய்தல்சத்தியநிருவாண
மற்றிதுசெய்துடன்கும்பநூற்றெட்டைம்பா
னெருகும்பங்குறைத்தலிருபத்தைந்தொன்பா
னென்றுதல்கொண்டாகமப்படியேயுயர்த்திப்
பரவியோமஞ்செய்தேயபிடேகம்பண்ணல்
பகர்கிரியாவபிடேகம்பாதுகைகண்முதலா
வுரியனவெல்லாங்கொடுத்துத்தன்னைப்போல
வோங்குவிப்பதபிடேகமந்தேட்டியுரைப்பாம்.

(இ-ள்.) மருவு கருத்தாற் செய்தல் சத்திய நிருவாணம் - இந்தமுறைமையெல்லாம் கருத்தாலே செய்வது சத்தியநிருவாணமாம்—மற்றிது செய்துடன் - இந்த முறைமையான தீட்சைசெய்து ஆசாரியாபிடேகத்திற்குரியனானவுடனே —கும்பநூற்றெட்டைம்பானொரு கும்பங்குறைத்தலிருபத்தைந்தொன்பானென்றுதல் கொண்டாகமப்படியே யுயர்த்திப் பரவியோமஞ்செய்தே யபிடேகம் பண்ணல் பகர்கிரியாவபிடேகம் - அபிடேகஞ்செய்யும்படி கும்பம் நூற்றெட்டு நாற்பத்தொன்பது இருபத்தைந்து ஒன்பது ஒன்று ஆதல் கொண்டு ஆகமப்படியே

யோமஞ்செய்து அபிடேகஞ்செய்வது கிரியாவபிடேகம்—பாதுகைகண் முதலா வுரியனவெல்லாங் கொடுத்துத் தன்னைப்போலவோங்குவிப்ப தபிடேகம் - அபிடேகஞ்செய்து ஆதனம் பாதுகை தண்டு குடை முதலான தனக்குரியனவெல்லாங் கொடுத்து அதிகாரியாக்குவது கிரியாவபிடேகமாம்—அந்தேட்டியுரைப்பாம் - மேற் கிரியாவந்தேட்டி சொல்லாநின்றோம். எ-று. (௧௦௦)

அந்தியேட்டி கூறுகின்றார்.

இறைவனருளந்தேட்டிவன்மையான்மரித்தோர்க்
கியலுமோராண்டிற்பின்னிறந்தன்றேபிறர்க்குச்
சிறைசெய்துகைகாலைச்சவத்தினுக்குக்கிழக்கே
திகழ்சுத்திசெய்துநெற்பரப்பியிதழிட்டுக்
கறையதனைக்கீழ்த்தருப்பையிட்டிந்திராதி
கருதிப்பூசித்துப்பின்கலிங்கங்கட்டி
நிறையிதற்குக்கிழக்கேநெற்பரப்பிமுன்போ
னிகழ்பேரிவைத்துப்பூசித்துத்தாடியுமே.

(இ-ள்.) இறைவனருளந்தேட்டி வன்மையான் மரித்தோர்க் கியலுமோராண்டிற் பின்னிறந்தன்றே பிறர்க்கு - அந்தேட்டியாவது முடிந்ததீட்சையென்று ஈசுரனாலே அருளிச்செய்யப்பட்டது; அது செய்யுமிடத்து வன்மரணமுண்டானோர்க் கோராண்டிற்குமேலாகச் செய்வதாம்; அல்லார்க்கிறந்தவன்றே செய்வதாம்—சிறைசெய்து கை காலை - சவத்தின் கையையுங் காலையும் முந்நூற்சரட்டாற் சிக்கெனக்கட்டித் தெற்கே தலையாகத் தருப்பையின்மேற் கிடத்தி—சவத்தினுக்குக் கிழக்கே திகழ்சுத்திசெய்து நெற்பரப்பியிதழிட்டுக் கறையதனைக் கீழ்த்தருப்பையிட்டிந்திராதி கருதிப் பூசித்துப் பின் கலிங்கங்கட்டி - சவத்துக்குக் கிழக்காகச் சுத்தமாக்கி நெற்பரப்பி எட்டிதழாகக் கீறித் தருப்பைபரப்பி உரலுலக்கையை வைத்து இந்திராதிகளைப் பூசித்து உரலுலக்கைக்கு வஸ்திரமுந் தருப்பையுங் கட்டி—நிறையிதற்குக் கிழக்கே நெற்பரப்பி முன்போனிகழ்பேரிவைத்துப் பூசித்துத் தாடியுமே - இதற்குக் கிழக்கே நெற்பரப்பியிதழிட் டிந்திராதியாதல் நிவிர்த்தாதியாதல் பூசித்துப் பேரிகையை இதயத்தாலும் கடிப்பையகோரத்தாலும் பூசித்துத் தாடிப்பாயாக. எ-று. (௧௦௧)

இதுவுமது.

தாடித்துக்கணிகைகளாற்றேத்திரத்தாலிடித்துத்
தானிதயத்தாற்சாத்திச்சவத்துக்குமிட்டுப்
பாடுற்றவகத்தியா தியாசந்திபாக்கிப்
பயிறீக்கையோர்நால்வரிடநூல்பூண்டெடுத்துப்
போடுற்றத்திரத்தினாற்பொரிமண்டபத்துட்
புகாதிடத்துச்சுழற்றிவைத்துநடுவொருமேகலையா
லீடுற்றதற்கங்கிமூலைசிதாத்தான
மென்னுநான்முழப்பாதியகலஞ்சாணிழியே.

(இ-ள்.) தாடித்துக் கணிகைகளாற் ரோத்திரத்தாலிடித்து - இப்படி முக்காற் பேரிகைதாடித் துலக்கையை வந்தெடுத்துப் பத்தர்களையுந் தேவர்களையுங் கூட்டித் தோத்திரங்களாலே சுண்ணமிடித்து—தானிதயத்தாற் சாத்திச் சவத்துக்குமிட்டு - தூபதீபங்கொடுத்து அதையொரு பாத்திரத்திலே வாங்கி யெண்ணெயுங்கூட்டி இதயமந்திரத்தாலே தனக்குமிட்டுக்கொண்டு சவத்துக்குமிட்டு —பாடுற்றவகத்தியாதி ஆசந்தியாக்கி - அகத்தியத்தி முதலான செவ்வையான மரங்களாலே யாசந்திகட்டி அவ்வாசந்தியிலே சவத்தைக் கிடத்தி—பயில் தீக்கையோர் நால்வரிட நூல்பூண்டெடுத்து - சைவதீக்கையுடையோர் நாலுபேர் இடத்திலே பூணுநூலாக்கிச் சவத்தினையெடுக்கும்படி கற்பித்து—போடுற்றத்திரத்தினுற் பொரி - ஓம் சதாசிவேப்பியோ அத்திருயபட் என்று மூன்றிடத்திலே சவத்தைநிறுத்திப் பொரிகொண்டு முக்கால்முக்காற் சிதறி—மண்டபத்துட்புகாதிடத்துச் சுழற்றிவைத்து - பதினாறுகால் பன்னிருகாலாலே சமைக்கப்பட்டு நாலுவாயிலாய் நடுவே முழத்துக்குமுழநீளங் குண்டமொருகலையாய் ஆறங்குல வகலமாறங்குல நீளமாகச் சமைத்து வாயுமூலையிலே கும்பத்துக்கு மண்டலமிட்டுச் சிவகும்பம்வைத்து ஈசானமூலையிலே வர்த்தனிக்கு மண்டலமிட்டு வர்த்தனியைவைத்துத் திக்குகளெட்டினும் பத்துக்கலசமும் வைத்திருக்கப்பட்டமண்டபத்துட்புகா திடமாக முக்காற்சுற்றுவித்துத் தெற்குவாயிலிலே வைத்து—நடுவொரு மேகலையாலீடுற்றதற் கங்கிமூலை சிதாத்தானமென்னும் நான்முழம் பாதியகலஞ் சாணிழியே - நடுவேயொரு மேகலையாயிடப்பட்ட குண்டத்துக்கும் மண்டபத்திற்கு மக்கினிதிசையிலே சிதாத்தானம் நாலுமுழநீளமு மிரண்டுமுழவகலமுஞ் சாணாழமுமாகக் கொள்ளப்படும்; தருப்பையாலே செய்யுமிடத் திரண்டுமுழநீளமும் ஒருமுழவகலமு மெண்விரலாழமுமாகக் கொள்வது. எ-று. ()

இதுவுமது.

இருத்தியாசான்மூழ்கியிடத்தோள்கும்பத்தா
யிதைவாயுதிசைவைத்துச்சங்காரநியாதம்
புரித்துமேன்மறித்துப்பூசித்துட்புக்குப்
புகலுமந்தரியாகஞ்செய்துஞானகட்கந்
தரித்துவிண்டுமுதலுலகபாலர்களைச்சாத்திச்
சாற்றும்வர்த்தனியீசன்றன்னிலத்திரத்தாற்
றெரித்துக்கும்பமுஞ்சாத்தியங்கிமுன்போலியற்றித்
திகழிதயாதியின்மும்மூன்றுகுதியாய்ச்சேரே.

(இ-ள்.) இருத்தியாசான்மூழ்கி இடத்தோள்கும்பத்தாய் - சிதாத்தானத்துக்கு அருகே சவத்தைவைத்து ஆசாரியன் தீர்த்தமாடி ஒருகுடத்திலே தண்ணீர்முகந் திடத்தோளிலே வைத்து—இதை வாயுதிசை வைத்துச் சங்காரநியாதம் புரித்து - இந்தச் சலத்தைக்கொண்டுபோய் வாயுதிசையிலே கும்பத்திலே பூரித்திருந்து சத்தியோசாதம் வாமதேவம் அகோரம் தற்புருடம் ஈசானமாகவும்

அத்திரம் நேத்திரம் கவசம் சிகை சிரசு இருதயமாகவும் சிறுவிரல்முதற் பெருவிரலீறாகவும், பெருவிரல்முதற் சிறுவிரலீறாகவும், முழங்கால்முத லுச்சியீறாகவும், உச்சிமுதலிதயமீறாகவும் கவசமும் அத்திரமும் விபரீதமாகவும் சங்காரநியாசஞ்செய்து—மேன்மறித்துப் பூசித்துட்புக்குப் புகலும் அந்தரியாகஞ் செய்து - மேலைத்துவாரத்திலே வந்து யமுனை மாகாளன் கங்கை நந்தி மகாலக்குமி சரசுவதி கணபதியாக இந்த அடைவிலே துவாரம்பூசித்து விக்கினமகற்றி உள்புக்கோரிடத்திலிருந் தந்தரியாகமுஞ் செய்து—ஞானகட்கந் தரித்து விண்டுமுதலுலகபாலர்களைச் சாத்திச் சாற்றும் வர்த்தனி ஈசன்றன்னி லத்திரத்தாற்றெரித்துக்கும்பமுஞ் சாத்தி - தீட்சைபோல ஞான்கட்கந் தரித்துக்கொண்டு தென்மேல்மூலையிலே விட்டுணுவையும், வடகீழ்மூலையிலே பிரமாவையும், மீள வடகீழ்மூலைதொடங்கிக் கிழக்களவாக இடமாக ஈசானன் சோமன் வாயு வருணன் நிருதி யமன் அக்கினி இந்திரனிவர்களு மிவர்களாயுதங்கள் சக்கரம் பதுமம் இரிசூலம் கதை அங்குசம் பாசம் கட்கம் தண்டம் சத்தி வச்சிரம் இவற்றையுங்கூடக்கலசங்கள் பத்திலும்பூசித் தீசானமூலையிலே வர்த்தினியிலே ஓம் சிலீம் பசும் உம்பட் பாசுபதாத்திராயநமவென்று அத்திரதேவரையும் பூசித்து வாயுமூலையிலே கும்பதேவரையுஞ் சிவபூசையிலக்கினிகாரியமளவும் பூசித்து—அங்கி முன்போலியற்றித் திகழிதையாதிகளின் மும்மூன்றாகுதியாய்ச் சேரே - அக்கினிகுண்டத்திலே வந்திருந்து குண்டசுத்திமுதற் பூரணாகுதியளவாக முன்போற்செய்து அந்தச்சமயம் அத்திரமுதலீசானமீறாக மும்மூன்றாகுதி செய்யாலேயோமஞ் செய்குக. எ-று. (கoரு)

இதுவுமது.

சேரன்னஞ்சவுளமுபநயனங்கல்யாணந்
திகழ்வித்துவிருத்தாங்கியாகச்செய்து
சார்வில்சவஞ்சுத்திசெய்துசாணகந்தன்னாற்
றருநீறுபூசியதுதனையுள்ளாக்கி
யார்வுடலினுன்மாவைத்தியானம்பண்ணி
யரியசவத்தைவிட்டுக்கலாமந்திரத்தாற்
சார்வுறநூற்றெட்டோமம்பண்ணிநூலறுத்துச்
சாணியினிற்சுருட்டிப்பூரணத்தினாற்றள்ளே.

(இ-ள்.) சேரன்னஞ் சவுளமுபநயனங் கல்யாணந் திகழ்வித்து விருத்தாங்கியாகச் செய்து - அவ்வளவிலே அக்கினியை இதயஞ் சிரசு சிகை கவசம் நேத்திரம் அத்திரமிவற்றாலே அன்னப்பிராசனம் சவுளம் உபநயனம் கல்யாணம் இவையெல்லாஞ் செய்து விருத்தாங்கியாக்கி—சார்வில் சவஞ் சுத்தி செய்து சாணகந்தன்னாற் றருநீறுபூசி யதுதனையுள்ளாக்கி - புறம்பிருந்த சவத்தைச் சாணகத்தாலுந் திருநீற்றாலுஞ் சுத்திசெய் ததனையுள்ளாக்கி—ஆர்வுடலி னுன்மாவைத் தியானம்பண்ணி யரியசவத்தைவிட்டுக் கலாமந்திரத்தாற் சார்வுற

நூற்றெட்டோமம்பண்ணி நூலறுத்துச் சாணியினிற் சுருட்டிப் பூரணத்தினுற்றள்ளே - இந்தவுடலிலே யான்மாவை வியாத்தமாக்கி நிருவாணதீட்சைபோல நூல்கட்டிக் கலாமந்திரத்தால் நூற்றெட்டுருவோமம்பண்ணிச் சமயத்தோர்க்கு வித்தையளவு முருத்திரபதமும், விசேடத்தோர்க்குச் சாந்தியளவும் மகேசுரபதமும், நிருவாணதீக்கையோர்க்குச் சாந்தியாதீதமளவுஞ் சதாசிவபதமுமாகச்சோதித்து நூலறுத்துச் சாணியிற்சுருட்டிப் பூரணாகுதியாக அக்கினியிற்றள்ளுக. எ-று. (௧௦௪)

இதுவுமது.

செய்தடைவேதேகமெல்லாம்வெந்ததாக்கிச்
சிற்றறிவன்றன்னைப்பேரறிவிலேசெலுத்தல்
லையமறவுருக்களின்பாலாக்கல்செய்தே
யரியசிதாத்தானத்தின்முனைநால்கீழ்மேலாப்
பெய்துசெந்நூல்சுற்றிப்பதமிருபத்தஞ்சிற்
பெருநடுப்பொன்னென்றங்கிநாலுநால்சிவப்பு
வைவெளுப்புப்பச்சைகறுப்பாகநாற்றிசையில்
வளர்கிழக்குமுதற்பொன்வால்செம்மைபச்சைமரபே.

(இ-ள்.) செய்தடைவே தேகமெல்லாம் வெந்ததாக்கி - இப்படிச் செய்து உடலடைய வெந்தாகக்கண்டு—சிற்றறிவன்றன்னைப்பேரறிவிலே செலுத்தல் - அறிவிக்க அறியுமான்மாவைப் பேரறிவாகிய அருளிலே செலுத்துதல்—ஐயமறவுருக்களின்பா லாக்கல்செய்தே - சந்தேகமறச் சதாசிவன் மகேசன் உருத்திரன் முதலான தேவர்கள் திருமேனியிலே கலப்பித்தல் அவரவர் வடிவாக்குவித்தல் அவரவரருகே யவரவருலகங்களிலே யாக்குதல்செய்து—அரிய சிதாத்தானத்தின் முனை நால் கீழ் மேலாப் பெய்து செந்நூல்சுற்றிப் பதமிருபத்தஞ்சிற் பெருநடுப் பொன்னென்றங்கிநாலு நால் சிவப்பு வை வெளுப்புப் பச்சை கறுப்பாக நாற்றிசையில் வளர் கிழக்குமுதற் பொன் வால் செம்மை பச்சை மரபே - பின்பெழுந்து சிதாத்தானத்தே வந்து அதின் நாலுமூலையினும் நாற்சாணுயரமாதல் இருசாணுயரமாதல் முனை மூவிரற்பருமையாதல் இருவிரற்பருமையாதல் கொண்டு கீழ்மேலாக நாட்டி முந்நூலாரச் செந்நூல்சுற்றி யுள்ளே சுத்தமாக இருபத்தைந்துபதமாகக்கீறி நடுவேயொருபதத்திலே பொன்மையும் அக்கினிமூலையினாலுபதத்திலே சிவப்பும், நிருதிமூலையினாலுபதத்திலே வெளுப்பும், வாயுமூலையினாலுபதத்திலே கறுப்பும், ஈசானமூலையினாலுபதத்திலே பச்சையுமாக இட்டுக் கிழக்கிரண்டுபதத்திலும் பொன்மையும், தெற்கிரண்டுபதத்திலும் கறுப்பும், மேற்கிரண்டுபதத்திலும் வெளுப்பும், வடக்கிரண்டுபதத்திலும் சிவப்புமாக வன்னம் பரப்புக. எ-று. (௧௦௫)

இதுவுமது.

மற்றதனைப்பூசித்துப்பலியிட்டுத்தூர்த்து
வருசமிதைமேற்சவத்தைவளர்த்தியங்கிக்
குற்றதிரவியமாக்கியனலிடையருமு
லுறமார்பிலேயோமஞ்செய்திதயத்தாலே
குற்றரிசியிட்டுப்பின்னத்திரவர்த்தனிநீர்
கொடுமுக்காற்சுழற்றிப்பின்மறித்துடைத்துச்
சொற்றருந்தேவரையொடுக்கியங்கிசங்காரந்
தோற்றுவித்தேயெரிவைத்துப்போந்துசுத்திதுணியே.

(இ-ள்.) மற்றதனைப் பூசித்து - அந்த வன்னம் அடைவே பொன்மை வெளுப்பு சிவப்புக் கறுப்பு பச்சையான பூதநிறம் அடைவிலே கலாமந்திரத்தாற் பூசித்து இந்திராதி நாலுதேவர்களைப் பூசித்து—பலியிட்டுத் தூர்த்து - இந்த மந்திரங்களாலே யன்னத்தாலே பலியிட்டுத் தூர்த்துப்போட்டு—வரு சமிதை மேற் சவத்தை வளர்த்தி - சமிதையிட்டு சமிதையின்மேலே சவத்தை வளர்த்தி—அங்கிக்குற்ற திரவியமாக்கி யனலிடை யருமலுற மார்பிலே யோமஞ் செய்து - இவ்வுடலை அக்கினிக் காகுதியாக நினைத் தக்கினிதொடங்கிச் சவத்தன லிடையருமற் கொளுத்தி இருதயத்திலே சமிதைவைத் திதயத்தாலே யோமஞ்செய்து—இதயத்தாலே குற்றரிசியிட்டு - இருதயமந்திரத்தாலே வாய்க்கரிசியிட்டு— பின்னத்திரவர்த்தனி நீர்கொடு முக்காற் சுழற்றிப் பின் மறித்துடைத்து - பின்பாகப் பாசுபதாத்திரம் பூசித்தவர்த்தனியையெடுத்து அந்தியேட்டிக் குரியான் றலையிலாக்கி முக்காலிடமாகச் சுற்றி மூன்றுதாரையாக்கி மறித்துடைக்கப்பண்ணி—சொற்றருந் தேவரையொடுக்கி அங்கி சங்காரந் தோற்றுவித்தே யெரிவைத்துப் போந்து சுத்தி துணியே - தேவர்களை யெல்லா மொடுக்கி அக்கினியைச் சங்காராக்கினியாக்கித் திரும்பிப்பாராதே போந்து பிராயச்சித்தமாக நூற்றெட்டுருச் செபிக்குக. எ-று. சுத்திதுணியேயென்ற விதப்பாற் பிராயச்சித்தஞ் சிராத்தங்களுஞ் செய்குக. (௧௦௬)

## யோகத்திற்கிரியை.

ஆசனவகைகூறுகின்றார்.

யோகத்திற்கிரியைபிராணாயாமமுன்னே
யுயருமாதனநூற்றெட்டவைபதுமம்பத்திரம்
தேகத்தங்கோமுகையேசுவர்த்திசிங்கந்
தீயம்வீரஞ்சுகமுத்தம்மயிறண்டுருசி
யூகத்தஞ்சக்கரவாகனங்கோழிமற்சு
முயர்சிபாதாங்கங்கேசாங்கமுமத்தாங்கம்
நாகத்தமிடாதனமும்பிங்கலாதனமு
நமற்காரஞ்சானுவானம்பாடிநகழ்வே.

(இ-ள்.) யோகத்திற்கிரியை பிராணயாம முன்னே யுயருமாதன நூற்றெட்டவை - யோகத்திற் கிரியை கூறுமிடத்துப் பிராணயாமத்துக்கு முன்னே ஆதனம் நூற்றெட்டுப் பேதமாம் அவையாவன:—பதுமம் - அவற்றுட் பதுமாதனமாவது இரண்டுகுதியும் பீசத்திற்கீழாய்க் கையிரண்டுங் கூட்டியிருப்பது—பத்திரம் - பத்திராதனமாவது ஒருகுதி கீழு மொருகுதி பீசத்தின்மேலுமாய்க் கை கட்டியிருப்பது—தேகத்தம் - தேகாதனமாவது கைகளிரண்டும் விரித்துக் கையின்மேற் கையாகவைத்து நாசாக்கிரத்தைப்பார்த்துச் செவ்வையேயிருத்தல்—கோமுகையே - கோமுகாதனமாவது ஒருதுடையின்மே லொருதுடையாயிருப்பது—சுவர்த்தி - சுவர்த்திகாதனமாவது கோமுகைபோற் காலேற்றி யிரண்டுள்ளங்காலிலும் கைமாறியூன்றல்—சிங்கம் - சிங்காதனமாவது இரண்டுகையுமூன்றி முழங்கால் மடித்திருத்தல்—தீபம் - தீபாதனமாவது சுகாதனவடிவாகச் செவ்வையே வடிவையிருத்தி முன்னே கும்பிட்டிருத்தல்—வீரம் - வீராதனமாவது ஒருகால் நிலத்தூன்றி யொருகால் மேற்போட்டுச் சிங்காதனத்திருத்தல்—சுகம் - சுகாதனமாவது கால்களிரண்டும் மடித்து அட்டணைக்காலேறிட் டிருத்தல்—முத்தம் - முத்தாதனமாவது காலிரண்டு நீட்டியிருத்தல்—மயில் - மயூராதனமாவது இரண்டுகையும் வயிற்றிலேபடவூன்றிக் காணிமிரவிட்டுக் கையின் மேனிற்றல்—தண்டு - தண்டாதனமாவது இரண்டு புறங்காலும் நிலத்திற்படத் தண்டம்பண்ணல்—உருசி - உருசியாதனமாவது இரண்டு முழந்தாளுள்ளு மிரண்டு பெருவிரலையுஞ் சொருகியிருத்தல்—ஊகத்தம் - ஊகத்தாதனமாவது இரண்டு முழங்காலு மூன்றி யிதிலே இரண்டுகையையு மூன்றியிருப்பது—சக்கரவாகனம் - சக்கரவாகாதனமாவது இரண்டுகாலுங் கழுத்திலேறிட்டு வளைத்துக் கையிரண்டுமூன்றி யெழுந்திருப்பது—கோழி - குக்குடாதனமாவது மயூராதனம்போலிருகான்மடித்திருப்பது—மற்சம் - மற்சாதனமாவது ஒருகால் வயிற்றுக்குள்ளேயாகமடித்து மற்றைக்காலைத் துடையருகே யூன்றிக் கைமாறிப் புறங்காலைக் கட்டியிருப்பது—உயர் சீபாதாங்கம் - மிக்க சீபாதாங்காதனமாவ தூசிபோல விரண்டுகாலையும் நீட்டியிருப்பது—கோசாங்கமும் - கோசாங்காதனமாவது தலைநிலத்திலூன்றிக் கால்மேலாய் நிற்பது—அத்தாங்கம் - அத்தாங்காதனமாவது கையிரண்டுமடித்து நிலத்திலூன்றி யுடல்மேற்பட நிற்பது—நாகத்தம் - நாகத்தாதனமாவ திரண்டுகாலுங் கழுத்திலேறிட்டுத் தலை காலுக்குட்பட வுடலைவளைத்து நிற்பது—இடாதனமும் - இடாதனமாவ திடக்கால் மடித்து வலக்கால் மடித்தூன்றி வலக்கை தரையிலூன்றி யிருப்பது—பிங்கலாதனமும் - பிங்கலாதனமாவ திப்படியே மாறிமடித் திடக்கையூன்றி யிருப்பது—நமற்காரம் - நமற்காராதனமாவது கையிரண்டுமிதயத்திலே வைத்துத்தொழு திரண்டுள்ளங்காலும் பொர முழந்தாள் மடித்திருப்பது—சானு - சானுவாதனமாவ திரண்டு முழந்தாளும் மடித்துக் குதியிலே யிருப்பது—வானம்பாடி - வானம்பாடியாதனமாவது மார்பு நிலத்திற்படக் கையுங் காலும் மடக்கித் தரையிற் படாமற் பறக்க வுன்னுவதுபோல விருப்பது—நகழ்வே - நகழ்வாதனமாவ திரண்டு காலு மூன்றி யிரண்டு கையு மூன்றி மோவாய்க்கொட்டை நிலத்திற்படத் தண்டம் பண்ணுவாரைப்போலப் போதன் மீழ்தல் செய்வது. எ-று. (௧0எ)

இதுவுமது.

அத்தகண்டஞ்சங்காரஞ்சருவசங்கார
மச்சுவமுகங்கோகன்னங்கேசரமேற்பாத
மத்தமேற்காலேகபாதமேக
வத்தமாநிருத்தங்குஞ்சிதம்வராகந்தெய்வ
மெத்துவாத்துவமிடக்கால்வலக்கால்முசலிகையு
மிருசகளங்கைநிமிர்த்தல்காநிமிர்த்தல்கட்டல்
புத்தமலர்தாமரைபொன்முகுளம்ஞாளி
புகல்கரடியிராகுவுடல்சோம்புமுளாதனமே.

(இ-ள்) அத்தகண்டம் - அத்தகண்டாதனமாவ தொருகால் மேனீட்டி யொருகைகொண்டு நீட்டின காலைக்கட்டி மற்றைக்கையை நிலத்திலூன்றி யிருப்பது—சங்காரம் - சங்காராதனமாவ திரண்டுகாலும் மடித் திரண்டு படத்தையுங் கூட்டி நேரே யூன்றித் திருகிக் காலின் மேலேயிருப்பது—சருவசங்காரம் - சருவசங்காராதனமாவது சுகாதனமாகக் காலைப்போட் டுக் கையிரண்டையுங் காலுக்குள்ளே சொருகிக் காலிரண்டையும்பிடித்து முழங்கையிரண்டும் வயிற்றிலேபடக் குனிந்திருப்பது—அச்சுவமுகம்- அச் சுவமுகவாதனமாவது கால்மடித் திரண்டுமுழங்காலிலும் முழங்கைகளை யூன்றி இரண்டுள்ளங்கையும் கன்னத்தில் வைத்திருப்பது—கோகன்னம் - கோகன்னாதனமாவது பசுவின்செவிபோ லிரண்டுகையையும் மடித்துச் சுகாதனமாய்ச் செவி நாசி கண் மூக்கெல்லாம் புதைத்திருப்பது—கேச ரம் - கேசராதனமாவது இரண்டு முழந்தாளும் மாறிமடித்தூன்றி இரண்டு முழங்கையு முழங்காலிற்படக் கையைநீட்டியிருப்பது—மேற்பாதம் - மே ற்பாதாதனமாவது கிடந் திரண்டு காலுஞ் சம்மாணமாக மடித்து மேலாக் கிக் கிடப்பது—அத்தமேற்கால் - அத்தமேற்காலாதனமாவது முன்போற் கிடந்த காலிரண்டுந் தலைக்குமேலாக நீட்டிக் கையாற் பிடித்துக் கிடப் பது—ஏகபாதம் - ஏகபாதாதனமாவது முன்போலேயாகி யொருகால் மே லே நீட்டுவது—ஏகவத்தம் - ஏகவத்தாதனமாவது முன்புபோலாதனத்திற் கையை நீட்டுவது—மாநிருத்தம் - மிக்க நிருத்தாதனமாவது ஒருகால் தூக் கிநிற்பது—குஞ்சிதம் - குஞ்சிதாதனமாவது பெருவிரலூன்றி நிற்பது— வாரகம் - வராகாதனமாவது காலுங் கையுமூன்றிக் கவிழ்ந்திருப்பது — தெய்வம் - தெய்வாதனமாவது ஒருகால்மடித் தொருகாலூன்றியிருப்பது— மெத்துவாத்துவம் - மெத்துவாத்துவாதனமாவது உண்மையாக இரண்டு காலும்நீட்டி யொருமுழங்கையூன்றித் தலையேந்தி யொருகை முசிவற நீட் டிக் கிடப்பது—இடக்கால் வலக்கால் - இடக்கால்வாத்துவாதனம் வலக் கால்வாத்துவாதனமாவ திந்தக்கிடையிலேயிடுமொப்போல மடக்கி மார்பு நிலத்திலேதோயக் கிடப்பது—முசலிகை - முசலிகையாதனமாவது இர

ண்டுகையுமிரண்டுகாலுஞ் சம்மாணங்கொட்டுமோப்போல மடக்கி மார்பு நிலத்திலேதோயக் கிடப்பது—மிகுசகளம் - மிக்க சகளாதனமாவதட்ட ணைக்காலிட்டிருந் திரண்டுகையையு மிரண்டுகாலிலுமூன்றி யாகுஞ்சித்தி ருக்கை—கைநிமிர்த்தல் - கைநிமிர்த்தாதனமாவது இரண்டுகையு மேலே நிமிர்த்துத் தொழுதிருப்பது — காணிமிர்த்தல் - காணிமிர்த்தாதனமாவது காலிரண்டும் மேலேநீட்டிப் படங்குவித்துக் கிடப்பது—கட்டல் - கட்டா தனமாவது இரண்டுகையுமூன்றி அந்தக்கைகளைக் கால்கொண்டுகட்டுவது —புத்தமலர் - புத்தமலராதனமாவது இரண்டுகாலையுந் தரையினீட்டி யிர ண்டுகைகொண்டு காலிற் பெருவிரலைப் பிடித்திருப்பது—தாமரை - பது மாதனமாவது காலிரண்டையு முளங்கால்மடித்துத் தொடையருகே புறவடி யொட்டக் குதிகீழும் படம்மேலுமா யிருத்தல்—பொன் முகுளம் - சிறந்த முகுளாதனமாவது இரண்டுகையும் முதுகிலேகூட்டிக் கும்பிட்டிருப்பது— ஞாளி - ஞாளியாதனமாவது நாய்போலக் கையுங்காலும்மடக்கியுடல்வளை யக் கிடப்பது—புகல் கரடி - சொல்லப்பட்ட கரடியாதனமாவது காலிர ண்டும் பிடரியிலேறிட்டுக் கையிரண்டு முன்னேயூன்றியிருப்பது—இராகு - இராகாதனமாவதிப்படியேறிட்ட கால் முன்னேதூங்கவிருப்பது—உடல் சோம்பு முளாதனமே - உள்ளாதனமாவது இரண்டுமுழங்காலு முடக்கியூ ன்றி யிரண்டுகைகொண்டு வளைத்துக்கட்டி முழங்காலிலே தலையைச் சாய வைத்திருப்பது. எ-று. (கoஅ)

பிராணாயாமவகை கூறுகின்றார்.

தேரைசிம்புள்சிலம்பிசிச்சிலிபூஞைகிருமி
சிலைகோரஞ்செழுகஞ்சகாரதஞ்சயனம்
வீரவாதனமாமைமெய்மேனிற்றல்
விரவுமண்டலங்கள்பதினொன்றுமேலாய்ச்
சேர்விசேடங்கூட்டிநூற்றெட்டாகுந்
திகழ்பிராணாயாமமுயிரிதன்மேற்செலுத்த
லார்வநூற்றெட்டாகுமமுதம்பிலாவகமு
மகமருடமார்ச்சனமுமங்கியெழுப்பாமே.

(இ-ள்.) தேரை - தேரையாதனமாவது கவிழ்ந்துகிடந்து கைகளிர ண்டும் விலாவிலுங் கால்களிரண்டும் பீசத்திலுமுடக்கிக் கிடப்பது—சிம் புள் - சிம்புளாதனமாவது முழங்கையிரண்டாலு முடம்பைநிறுத்திக் கவி ழ்ந்துநிற்பது—சிலம்பி - சிலம்பியாதனமாவது காலையுயர்த்திக் கையாரக் கட்டிக் காலுங்குவித்து முன்னேகட்டியிருப்பது—சிச்சிலி - சிச்சிலியாத னமாவது கையுங்காலுமூன்றி யிரண்டுபுறத்திலுமுடலைச் செலுத்துவது— பூஞை - பூஞையாதனமாவது இரண்டுமுழங்காலையுமூன்றி அதின் முன் னே கையையூன்றி ஆகாயத்தைப்பார்த்திருப்பது—கிருமி - கிருமியாதன

மாவது கையிரண்டும் காலுக்குள்ளே மடுத்து வளைந்துகிடப்பது—சிலை - சிலையாதனமாவது காலிரண்டும் முழங்கையளவிலேமடித் திரண்டு முழங் கைக்குள்ளேயாக விருப்பது — கோரம் - கோராதனமாவது ஒருகால் மடித்தொருகால்மடித்தூன்றி ஒருகை தரையிலேயூன்றியிருப்பது—செழு கம் - செழுகாதனமாவது மேலாதனம்போலாதனங்கட்டி யொருகையூன் றியிருப்பது— சகராதனம் - சகராதனமாவது கையிரண்டுமோறிக் கழுத் தைக்கட்டிக் காலிரண்டுமோறி விலாவில்வைத்திருப்பது—சயனம் - சயனு தனமாவது ஒருகாலேறிட்டொருகை குடங்கைகொடுத்து ஒருக்கழித் திருப்பது — வீரவாதனம் - வீரவாதனமாவது சிங்கம்போல இரண்டு காலுமடக்கி இரண்டுகையுமுள்ளே நீட்டியிருப்பது—ஆமை - கூர்மாதன மாவது இரண்டுகோலு மிரண்டுகையுமுடக்கிக் கவிழ்ந்துகிடப்பது—மெய் மேனிற்றல் - மெய்மேலாதனமாவது இரண்டுகையையுமூன்றி யுடலாகா யத்தே நிற்பது—விரவு மண்டலங்கள் பதினொன்று - பொருந்திய மண்டல பேதம் பதினொன்றும் பதினொராதனமாம்; அவையாவன: ஆலீடம் பிரத் தியாலீடம் குஞ்சிதம் முகுளம் தண்டம் ஏகபாதம் ஆசாலுகம் நிருத்தம் ஊர் த்துவநிருத்தம் குஞ்சிதநிருத்தம் கத்திரிகம் ஆகப் பதினொன்று. இதில் ஆலீடமாவது காலுக்குக்கால் பன்னிரண்டங்குல மிடைவிட்டு மண்டல மாகவிருப்பது. பிரத்தியாலீடமாவது பன்னிரண்டங்குலத்துக்குள்ளே யிர ண்டுகோலுமடங்க நிற்பது. குஞ்சிதமாவது இரண்டு பெருவிரலூமூன்றி மண்டலமிருப்பது. முகுளமாவது இரண்டுகோலு மொக்கவைத்து மண்டல மிருப்பது. தண்டமாவதூசியாகவிருப்பது. ஏகபாதமாவ தொருகாலை மே லே வளைத்துக்கட்டி யொருகாலிலே நிற்பது. ஆசாலுகமாவது காலை மடி த்து முழங்காலினொருகாலினிற்பது. நிருத்தமாவது திருக்கூத்துத் தன் மைபோல நிற்பது. ஊர்த்துவநிருத்தமாவது ஒருகால் மேனோக்கிநிற்க வொருகைகொண்டுகட்டி யொருகாலினிற்பது. குஞ்சிதநிருத்தமாவதானை யுரித்த நிருத்தம்போல நிற்பது. கத்திரிகமாவது கால்மாறிநிற்பதிவை பதி னொராதனமும்—மேலாய்ச் சேர் விசேடங்கூட்டி நூற்றெட்டாகும் - சொ ன்னவற்றிற் பேதங்களாகிய விசேடங்களுடனுங் கூட்டியிருக்க நூற்றெ ட்டாதனமாம்—திகழ் பிராணயாமம் உயிரிதன்மேற்செலுத்தல் - இவ்வாத னமிட்டிருந்து செய்யுங்காரியம் பிராணயாமமாம்; பிராணயாமமாவது: பிராணவாயுவை யுடலிலே தடையறப் போக்குவரவுசெய்விப்பது—ஆர்வ நூற்றெட்டாகும் - அப்படிப் பிராணவாயுவைச் செலுத்தும் வகையும் நூற்றெட்டுப் பேதமாம்—அமுதம் - அந்த நூற்றெட்டின் அமுதப்பிராண யாமமாவது ரேசக பூரக கும்பகந் தனக்கிச்சையானமட்டிலே வாங்கியட க்கிவிடுவதாம்—பிலாவகமும் - பிலாவகப் பிராணயாமமாவதிவை விஞ்சக் கொண்டு உடம்புக்கு வேர்வுவருமளவுஞ் செய்தலாம்—அகமருடம் - இவற் றிற் கும்பகமிகுதியாகக் கொள்வதாம்—மார்ச்சனமும் - ரேசகமிகுதியாகக் கொள்வது—அங்கி யெழுப்பாமே - கும்பகத்திலே மூலாதாரத்தையுன்னி மேனோக்கி வாயுவைத் தள்ளுவதாகும். எ-று, (கoகூ)

இதுவுமது.

ஓங்குவித்தல்பத்துநாடியுமொக்கவாங்க
லுயருமிரேசகபூரககும்பகந்தான்
றாங்குமிவைமூன்றுமேசரியைகிரியை
தகுயோகநிருத்தநாதம்பிரணவந்தான்
பாங்கசபைபூரித்தல்கும்பித்தல்விடுதல்
பணிப்பித்தல்கழிப்பித்தல்பணிவித்தறணித்த
றீங்கறவாங்கலடக்கனடிதொறும்போக்க
றிகழ்புருவத்தேற்றல்பச்சிமத்தேற்றல்செறித்தல்.

(இ-ள்.) ஓங்குவித்தல் - வாயுவை மார்க்கத்தாலேற்றல்—பத்துநாடியு மொக்கவாங்கல் - நாடிகள் பத்திலும் வாயுவை நிறுத்தல்—உயருமிரேசக கும்பகந்தான் - உயர்ச்சியைச் செய்யப்பட்ட தனிரேசகமுந் தனிப்பூரக முந் தனிக் கும்பகமுமாம்—தாங்குமிவை மூன்றுமே சரியை கிரியை தகு யோகம் - இப்படித்தாங்கி இருக்கப்பட்ட பிராணாயாமம் ரேசக கும் பக பூரக கும்பக ரேசக பூரகமாகப் பதினாறு நொடிமாத்திரை பூரித்து முப்பத்திரண்டு கும்பித்து எட்டு விடுவது சரியைப் பிராணாயாமமாம். எட் டுப் பூரித்து முப்பத்திரண்டு கும்பித்துப் பதினாறு விடுவது கிரியைப்பிரா ணாயாமமாம். முப்பத்திரண்டு பூரித் தறுபத்துநாலு கும்பித்துப் பதினாறு விடுவது யோகப் பிராணாயாமமாம்—நிருத்தம் - நிருத்தமாவ தெப்போது முயிருள்ளே நிற்கிறதாகக்கொள்ளுதல்—நாதம் - இசையுடனெழுப்புவது— பிரணவந்தான் - ஓம் என்று வாயுவைவாங்கி ஏற்றுவது— பாங்கசபை - பாங்குபட அசபை உச்சரித்திருத்தல்—பூரித்தல் - எப்போதுமுள்ளே வாங் கியிருப்பது— கும்பித்தல் - எப்போதும் கும்பித்தே யிருப்பது—விடுதல் - எப்போதும் இரேசித்தே யிருப்பது—பணிப்பித்தல் - மீளப் புறப்படாம லடக்கல்—கழிப்பித்தல் - பிராணவாயு அபானவாயுக்களால் வாயுவைக் கழிவித்திருத்தல்—பணிவித்தல் - இருபத்தோராயிரத் தறுநூற்றை நூறு மைம்பதுமாக நாள்வழிக்குறைத்தல்—தணித்தல் - நாலுநாழிகை யடக்கிவி டுதல்—றீங்கற வாங்கல் - இரண்டு நாசியிலும் பலகாலுள்ளே வாங்குவது —அடக்கல் - வாங்கின வாயுவையுள்ளே யடக்கல்—நாடிதொறும் போக் கல் - நாடிகளிலேயோட்டி மீட்கல்—திகழ் புருவத்தேற்றல் - புருவமத்தி யத்திலேயாக்கித் தியானிப்பது—பச்சிமத்தேற்றல் - கபாலத்தினின்றும் பின்னே சென்றொடுங்குகிறதாகத் தியானித்தல்—செறித்தல் - இப்படியே ற்றி வாயுவைக் கபாலத்திலே நிறைப்பதாம். எ-று. (கக0)

இதுவுமது.

மாற்றுதல்கன்னத்தகற்றலுக்கினுலடக்கல்
வாங்குதன்மெத்தல்போக்குவேறுக்கல்வாயு
வூற்றவுயிராக்கன்மண்டலத்தாக்கல்பிறித்த
லுயராதாரத்துய்த்தலதுவாகவுன்னல்

மேற்றுலையிற்சுழுமுனையிற்சித்திரம்வச்சிரத்தில்
விழைவறுத்தலழிவித்தலழியாதுதடுத்த
னாற்றிசையுங்காண்டல்சூனியமாக்கலடைத்த
னாளும்வாங்காவிழுங்கனடுவேநிற்பித்தல்.

(இ-ள்.) மாற்றுதல் - அம்சம்மென்னும் மந்திரத்தை மாறியுச்சரித்தவ் வழிக்கொள்வது—கன்னத்தகற்றல் - வாயுவையடக்கிக் கன்னத்தாலேவிடுவது—நாக்கினாலடக்கல் - நாசியிற்றுளையை நாக்குக்கொண் டடைத்திருத்தல்—வாங்குதல் - நாய் மூச்சுவிடுந்தன்மைபோல வாங்கிவிடுதல்—மெத்தல் - உடம்பைப் பூரித்தல்—போக்குவேறுக்கல் - வாயுமேலே யொடுங்குகிறதாகத் தியானிப்பது—வாயுவூற்ற வுயிராக்கல் - எல்லாவிந்திரியமும் நிலையுயிரறிகிறதாகச் செய்தல்—மண்டலத்தாக்கல் - அக்கினிமண்டலமாதித்தமண்டலம் சந்திரமண்டல மிவற்றிலே வாயுவைச் செலுத்தல்—பிறித்தல் - இடமும்வலமுமோட்டுதல்—உயராதாரத்துய்த்தல் - ஒன்றுக்கொன்றுயரத்தலர்ந்த மூலாதாரம் சுவாதிட்டானம் மணிபூரகம் அனாகதம் விசுத்தி ஆஞ்ஞையென்னும் ஆதாரமாறிலுமாறுபேதமாகச் செலுத்தல்—அதுவாகவுன்னல் - உடலையும் வாயுவின்காரியமாகத் தியானித்தல்—மேற்றுலையில் - எப்போதும் மேலேநோக்கி வாயுவைச்செலுத்தல்—சுழுமுனையில் - சுழுமுனைநாடியிலே வருந்தியேற்றல்—சித்திரம் - சித்திரநாடியிலே செலுத்தல்—வச்சிரத்தில் - வச்சிரநாடியிலே செலுத்தல்—விழைவறுத்தல் - ஆசையறுத்திருத்தல்—அழிவித்தல் - வாயுவுருவாகாமற் சிதறக்கொள்ளுதல்—அழியாது தடுத்தல் - வாயுவொடுங்கச்செய்து சென்று நால்விரல்கழியாமற் சென்றமட்டுள்ளே வாங்கல்—நாற்றிசையுங் காண்டல் - வாயுவைக்கன்னங்களினும் வாயிலும் மூக்கிலுமாகவிடல்—சூனியமாக்கல் - சுத்தசூனியமாய்நிற்றல்—அடைத்தல் - இந்திரியங்களை யடைத்தல்—நாளும் வாங்காவிழுங்கல் - தினமும் வாயுவை வாங்கிவாங்கிவிழுங்குதல்—நடுவேநிற்பித்தல் - நேரே நாசிநுனியிலே புறப்படுகிறதாகக் காண்டல் இவையும் பிராணயாமமாம். எ-று. (௧௧௧)

இதுவுமது.

மார்க்கத்தினின்றேற்றலுபத்தத்திலேற்றல்
வருநாசித்துளை துறத்தல்சுழுனை துறப்பித்தல்
மேற்சித்தம்வேறுதன்மனபவனமொடுக்கல்
விரிந்தவிடத்தேவிரித்தல்கலைவழியினிறுத்த
லேற்றமதுமுடியாதுவிந்துவினைச்சுட்டல்
சுகமைந்துமடைத்தநிருட்டித்தலுற்கரித்த
லாற்றமறவுலர்த்தல்சொடிப்பித்தல்கலத்த
லோட்டலெட்டாதாக்கலொன்றாக்கல்பணியே.

(இ-ள்.) மார்க்கத்தினின்றேற்றல் - மார்க்கத்தாலே வாயுவையேற்றல்--உபத்தத்திலேற்றல் - உபத்தத்தாலே வாயுவையேற்றல்—வருநாசித்துனைதுறுத்தல் - நாசியிரண்டும் செவ்வேயிருக்கச்செய்தே மாறியோட்டல்—சுழுனை துறப்பித்தல் - சுழுமுனைநாடியிலியங்கியெழுப்பிப் பிரமரந்தரத்துத் திருத்தியிட்டுதினுற்போல வாயுபுறப்படப்பண்ணல்—மேற் சித்தம் வேறுதல் - சித்தமும் வாயுவும் வேறுபடாதாக்கல்—மனபவனமொடுக்கல் - மனமிறந்தவிடத்தே வாயுவையுமுயிர்ப்பறுவித்தல்— விரிந்தவிடத்தேவிரிதல் - வாயுபோம்பொழுது மனமும்போகிறதாகவும் வாயுவொடுங்கும்பொழுது மனமுமொடுங்குகிறதாகவுந் தியானித்தல்—கலைவழியி னிறுத்தல் - பிராசாதவழியிலே வாயுவைச் செலுத்தல்—தோற்றமதுமுடியாது விந்துவினைச் சுட்டல் - வாயுவை விந்துநாதத்திலே செலுத்தியதுவெந்ததாகக் காண்டல்—சுகமைந்துமடைத்தல் - நீருதிரமுதலானவைந்து தாதுக்களையும்போகாமற் காத்தல்—திருட்டித்தல் - நாசியாலே பேசிவாங்கல்—உற்கரித்தல் - சத்திவரச்செய்தல்—ஊற்றமறவுலர்த்தல் - பற்றறவுலரும்படி செய்தல்—சொடிப்பித்தல் - புறம்பில் வாயுவுடனிந்தவாயுவொத்ததாகக் கலத்தல்—கலத்தல் - மனமும்வாயுவு நீங்காதாக்கல்—ஓட்டல் - பிரமரந்தரத்தே சேரப் பலகாலோட்டல்—எட்டாதாக்கல் - நாதாந்தமளவாக வாயுவைச் செலுத்தல்—ஒன்றுக்கல் - அறிவுடனே வாயுவுமிலயித்ததாக்கல்—பணியே - இவ்வடைவே பிராணவாயுவின்றெழிலாம். எ-று. (ககஉ)

## ஞானத்திற்கிரியை.

ஞானபூசைகூறுகின்றார்.

ஆங்கவைதான்விசேடத்திற்கூட நூற்றெட்டா
மடைவிவைகள்செய்வதுவேயோகத்திற்கிரியை
நீங்கிஞானந்தன்னிற்கிரியைதானு
நிகழுமானதானநிறுத்திப்போந்து
பாங்குபடத்தத்துவங்கணீங்கல்பூதசுத்தி
பகர்சிவதத்துவமாக்கறலசுத்திபகரிற்
றிங்ககலவிழுந்தபூமஞ்சனநீர்கொண்டு
திகழுமஞ்செழுத்துமாநிகியாதங்கள்செய்யே.

(இ-ள்.) ஆங்கவைதான் விசேடத்திற் கூட நூற்றெட்டாம் - அவை விசேடங்களோடுகூட நூற்றெட்டுப்பேதமாம்—அடைவிவைகள் செய்வதுவே யோகத்திற்கிரியை - இந்தமுறைமையெல்லாஞ் செய்வது யோகத்திற்கிரியையாம்—நீங்கி ஞானந்தன்னிற் கிரியைதானும் - இவற்றை நீங்கி ஞானத்திற்கிரியையைச் சொல்லுமிடத்து—நிகழு மானதான நிறுத்திப் போந்து - எண்வகைதானத்தின் மானதானத்தைச் செய்து அகத்தில்வந்

தி பூதசுத்தி தலசுத்தி திரவியசுத்தி மந்திரசுத்தி இலிங்கசுத்தி செய்குக— பாங்குபடத் தத்துவங்கள் நீங்கல் பூதசுத்தி - தத்துவமுப்பத்தாறும் நீங்குவது பூதசுத்தியாம்—பகர் சிவதத்துவமாக்கல் தலசுத்தி - சொல்லப்பட்ட பராசத்தியாதனமாக்குவது தலசுத்தியாம்—பகரில் நீங்கு அகல விழுந்த பூ மஞ்சன நீர்கொண்டு திகழும் அஞ்செழுத்து மாறி நியாதங்கள் செய்யே - விழுந்த பூவும் வடித்தநீரும் வைத்துக்கொண்டு சன்னிதியிலிருந்து திருவெழுத்தெதிருமடைவுமாக மாறி நியாசஞ்செய்குக. எ-று. (ககங)

இதுவுமது.

செய்ததற்பினஞ்செழுத்தாலர்க்கியங்கற்பித்துத்
திகழ்பீடம்வித்தையாய்த்தியானஞ்செய்து
மெய்யதெற்குத்துவாரந்தென்மேல்சாரிலிருந்து
விதிமுறையேபொறிகரணங்குணமுயிருமிருளு
மையலறச்சடமிவற்றிற்செல்லுமுயிர்தானு
மன்னருளேயெனவுணர்தலான்மசுத்தியாகு
மையமறவானந்தத்தழுந்தத்தூங்க
லந்தரியாகந்தானுயறையுநூலே.

(இ-ள்.) செய்ததற்பின் அஞ்செழுத்தால் அர்க்கியம் கற்பித்து - நியாசஞ்செய்தபின் பஞ்சாக்கரத்தினாலே அர்க்கியங்கற்பித்து—திகழ் பீடம் வித்தையாய்த் தியானஞ்செய்து - திருப்பள்ளிப் பீடத்தை வித்தையாகப்பாவித்து—மெய்ய தெற்குத் துவாரந் தென்மேல் சாரிலிருந்து - தெற்குத்துவாரத்திலே பூசிக்குமிடத்துத் தென்மேல்சார்பாகவிருந்து—விதி முறையே பொறிகரணம் குணமுயிரும் இருளும் மையலறச் சடமிவற்றிற் செல்லும் உயிர்தானும் மன்னருளேயெனவுணர்தல் ஆன்மசுத்தியாகும் - ஆகமப்படியே பஞ்சேந்திரியங்கள் அந்தக்கரணங்கள் குணங்கள் பிராணவாயு ஆணவம் மாயை கன்மமிவை மயக்கத்தைச்செய்யும் சடமாம்; இவையெல்லாஞ் சிவனருளென நினைத்தலான்மசுத்தியாம்—ஐயமற ஆனந்தத்தழுந்தத் தூங்கல் அந்தரியாகந்தானுய் அறையும் நூலே - குற்றமறப் பரமானந்தத்தே தன்வசமற்றழுந்தத் தூங்குவது அந்தரியாகபூசையென்று சிவாகமங்கள் சொல்லும். எ-று. (ககச)

இதுவுமது.

விழித்ததற்பின்சிவன்பார்வையாகக்கொண்டு
வேண்டுதிரவியநோக்கறிரவியசுத்தியாகுங்
கழித்ததற்பின்றென்வாயிற்றுவாரம்பூசித்துக்
கால்வலமாயுள்புகலாய்க்கருதிவடகீழ்பால்

வழுக்கில்கவுணியன்வாக்குகிறைவனூரூரன்
வாதவூரன்சமயசந்தானகுரவர்
இழுக்கினந்தியாதியிவரங்கியந்தமாக
விருத்தியாதனமாக்கியிலிங்கங்கையாக்கே.

(இ-ள்.) விழித்ததற்பின் சிவன் பார்வையாகக்கொண்டு வேண்டு திரவியநோக்கல் திரவியசுத்தியாகும் - அந்தரியாகஞ்செய்து விழித்தபின்பு தான் சிவனுகத் தியானித்துத் தன்பார்வை சிவன்பார்வையாகக்கொண்டு பூசைக்குவேண்டுந் திரவியங்களெல்லாம் பார்ப்பது திரவியசுத்தியாகும்—கழித்ததற்பின் தென்வாயில் துவாரம் பூசித்து - திரவியசுத்தி செய்தபின் தெற்குவாயிலாகக்கொண்டு மேற்படியில் வலப்புறத்திலே கணபதியேசிவாயநமவென்றும், இடப்புறத்திலே சரசுவதியேசிவாயநமவென்றும், நடுவே மகாலெக்குமியே சிவாயநமவென்றும், கீழ்ப்படியில் வலப்புறத்திலே நந்தியேசிவாயநமவென்றும், இவர்க்கிடப்புறத்திலே கங்காயசிவாயநமவென்றும், கீழ்ப்படி இடப்புறத்திலே மாகாளாயசிவாயநமவென்றும், இவர்க்கு வலப்புறத்தே யமுனையசிவாயநமவென்றும் பூசித்து—கால்வலமாய் உள்புகலாய்க் கருதி - வலக்கால் முன்வைத்துள்ளே புகுந்ததாகத் தியானித்து—வடகீழ்பால் வழுக்கில் கவுணியன் வாக்குக்கிறைவன் ஆரூரன் வாதவூரன் சமயசந்தானகுரவர் இழுக்கில் நந்தியாதியிவர்அங்கி யந்தமாக விருத்தி - வடகிழக்குமுத லக்கினிமூலைவரையும் குற்றமற்ற திருஞானசம்பந்த சிவாயநம திருநாவுக்கரச சிவாயநம சுந்தரமூர்த்தியே சிவாயநம மாணிக்கவாசக சிவாயநமவென்று சமயகுரவரையும், நந்தியேசிவாயநம சனற்குமார சிவாயநம சத்தியஞானதரிசனி சிவாயநம பரஞ்சோதிமகாமுனி சிவாயநம மெய்கண்டதேவ சிவாயநம அருணந்திதேவ சிவாயநம மறைஞானசம்பந்த சிவாயநம உமாபதிதேவ சிவாயநமவென்று சந்தானகுரவரையும் மடியிலே வைத்த ஸ்ரீ அத்தங்களையுடையராய் அனுக்கிரகத்தாலே பார்த்துப் பூசைக்கனுமதிசெய்தார்களாகத் தியானித்துப் பூசித்து—ஆதனமாக்கி இலிங்கங்கையாக்கே - சிவனுக்காசனங் கற்பித்துச் சிவலிங்கப்பெருமானைக் கையிலேயாக்கிக்கொள்க. எ-று. (ககரு)

இதுவுமது.

ஆக்கியபினெந்தெழுத்தாற்புராதனத்தைக்கழித்தே
யரியபாவனையாலேயிலிங்கசுத்திசெய்து
நீக்கமிலாப்பஞ்சகவ்வியம்பஞ்சாவமிர்த
நிரம்பியமஞ்சனமுதலாவேண்டுவனநிறுத்திப்
போக்கியபின்பீடத்திலிருத்திக்கண்ட
புகழுமானந்தவுருப்பரையிற்போந்து
தாக்கியஞானத்தழலேவடிவாகியிச்சை
தன்னினனடிப்பதிந்தச்சகளந்தானே.

(இ-ள்.) ஆக்கியபின் ஐந்தெழுத்தாற் புராதனத்தைக்கழித்தே - அதன்பின் சத்தகுருக்களை யருச்சித்துப் பின்பொருபுட்பந் தலையிலேவைத்துத் தியானித்திருந்து விழித்துத் திரவியங்களெல்லாஞ் சிவதிருட்டியாலே சுத்திசெய்து பஞ்சாக்ஷரத்தாலே விசேடார்க்கியங் கற்பித்துப் புரோக்ஷணஞ் செய்து தனக்குச் செயலறுதியறிந்து சிவனேவலிலே செய்கிறதாகத் தியானித்துச் சிவலிங்கத்தைக் கையிலே யெழுந்தருளப்பண்ணிப் பரிவட்டங் கழித்துப் பஞ்சாக்ஷரத்தாலே திருப்பள்ளித்தாமங் கழித்து—அரிய பாவனையாலே இலிங்கசுத்திசெய்து - ஞானத்துக் கஞ்ஞான மில்லையென வறிந்து ஞானமே திருமேனியாகக்கண்டு இலிங்கசுத்திசெய்து—நீக்கமிலாப் பஞ்சகவ்வியம் பஞ்சாவமிர்தம் நிரம்பிய மஞ்சனமுதலா வேண்டுவன நிறுத்தி - பின் சிவபாவனைசெய்து நாழி மூவுளக்கு உரி உழக்கு ஆழாக்கு ஆக அடைவே பால் தயிர் நெய் கோசலம் கோமயமாகிய பஞ்சகவ்வியம் தேன் முப்பழம் சர்க்கரை பால் நெய்கூட்டிப் பஞ்சாவமிர்தமும் திருமஞ்சனமுமாக வேண்டிய அபிடேகஞ்செய்து — போக்கியபின் பீடத்திலிருத்தி - திருவொற்றுடைசாத்தி ஈரமுலர்த்தியபின்பு பீடத்திலே யெழுந்தருளப்பண்ணி—கண்ட புகழும் ஆனந்த உருப்பரையிற் போந்து தாக்கிய ஞானத் தழலே வடிவாகி இச்சைதன்னினுன் நடிப்பதிந்தச்சகளந்தானே - தான் றெரிசிக்கப்பட்ட பரமானந்தம் பராசத்தியை வியாபித் தக்கினித் தம்பமாய் அதனுள்ளே திருக்கூத்தாடும் வடிவமாமிந்தச் சகள விக்கிரகம். எ-று. அரியபாவனை-ஞானபாவனை. நீக்கமிலென்றது-ஒன்றில்வழிப் பஞ்சகவ்விய மாகாதென்பதுபற்றி. தாக்குதல்-தியானித்தல். (கக௯)

இதுவுமது.

தற்பரந்தானெவ்வுயிருநெறியறியாமையினுற்
றுனைந்துமுகமாகச்சகலவாகமமு
முற்பவித்தளித்தருளுங்குருவாகுமென்றங்
கோவாமலெவ்வுருவுமொன்றுகக்கண்டு
கற்பகிலையத்துவாவேபீடமாகிக்
கருதியஞானத்தழலேயிலிங்கமாமதனிற்
சிற்பரநேராக்கண்டுதெளிவிக்குமொளியே
திருமேனியாக்கொண்டுசெய்வதர்ச்சனையே.

(இ-ள்.) தற்பரந்தானெவ்வுயிரும் நெறியறியாமையினுற் றுனைந்து முகமாகச் சகல ஆகமமும் உற்பவித்து அளித்து அருளுங் குருவாகு மென்றங்கோவாமலெவ்வுயிருமொன்றுகக் கண்டு - அப்படி நிருத்தரூபமான பரசிவமே எல்லா வான்மாக்களும் வேதமுறைமையை யறியாமையினுல் மலைவுற அவ்வுண்மை தெளிவுபெற அருளாலே கொண்ட ஐந்துதிருமுகமும் பத்துக்கையுமாகிய சதாசிவவடிவில் இருபத்தெட் டாகமங்களைத் தந்தருளி அவ்வழியொழுகுவார்க்குரிய

பக்குவங்கண்டு தீக்ஷைசெய்தருளுங் குருவடிவாகுமென் றுழிவற நிறைந்த பொருளுருவேற்றக்கண்டு தியானித்து—கற்பநிலையத்துவாவே பீடமாகி - அந்தப் பீடலிங்கமுங் குருவடிவுமெப்படியென்னில் மந்திராதியாறத்துவாவுமே பீடமாகவும்—கருதிய ஞானத்தழலே இலிங்கமாம் - முன் தியானிக்கப்பட்ட ஞானமே இலிங்கரூபமாகவும்—அதனிற் சிற்பரநேராக்கண்டு தெளிவிக்கு மொளியே திருமேனியாக்கொண்டு செய்வதர்ச்சனையே - அந்த இலிங்கத்துக்குள்ளே ஆன்மாக்களுக்கறிவுக்கறிவாய் நிற்கும் ஞானவொளி அந்தப் பரமகுருவின் வடிவானதாகக்கண்டு அர்ச்சனைசெய்குக. எ-று. (ககஎ)

இதுவுமது.

பரையுயிராயானெனவொன்றறநின்றவிடமே
பாதமாம்நிறைந்தபரானந்தமேமுகமா
முரையிலுயிர்க்கானந்தமேவிடுகைமுடியென்
றுன்னியுரைத்தடைவிலேபாத்தியாதிகொடுத்து
நிரையிலேமலர்சாத்திக்களபம்விரையிண்டை
நிறைமாலைகண்ணிதொடைநேர்மலர்கள்சாத்திப்
புரையிலுபசாரங்கள்பதினாறுமெல்லாம்
பொருவிலாப்பத்தியொடும்போதத்தாற்சமையே.

(இ-ள்.) பரையுயிரா யானெனவொன்றற நின்றவிடமே பாதமாம் - அந்தக் குருவின்வடிவு பரையாதீதப்பட்டுத் தன்செயலற்று விழித்தபோது தோன்றுஞ் சிவரூபந் திருவடியாம்—நிறைந்த பரானந்தமே முகமாம் - பூரணமான பரமானந்தமே திருமுகமாம்—உரையிலுயிர்க்கானந்த மேவிடுகைமுடியென்று - சொல்லி லான்மாக்களுக்கு ஆனந்தமேவிடுகை திருமுடியாகுமென்று—உன்னியுரைத் தடைவிலே பாத்தியாதி கொடுத்து - தியானித்தவளவிலே பாத்தியாசமனீர்க்கியங் கொடுத்து—நிரையிலே மலர் சாத்திக் களபம் விரை யிண்டை நிறைமாலை கண்ணி தொடை நேர்மலர்கள் சாத்தி - முறையே ஆசனமூர்த்திமூலமாகச் சாத்திக் குருபூசைத் தானத்திலே திருமேற்பூச்சு நறியபூ இண்டை மாலை தொடை மாலை கண்ணி விடுபூச் சாத்தி—புரையி லுபசாரங்கள் பதினாறுமெல்லாம் பொருவிலாப் பத்தியொடும் போதத்தாற் சமையே - ஒப்பிலுபசாரமாகிய பாத்தியாசமனீர்க்கியங் கந்தம் புட்பம் நைவேத்தியம் பானீயம் முகவாசம் தாம்பூலம் தூபம் தீபம் ஆராத்திரிகம் தருப்பணம் சத்திரம் சாமரம் நிருத்தம் கீதம் வாத்தியம் முதலான சோடசவுபசாரமும் ஒப்பில்லாத பத்தியுடனே சிவனே கொடுப்பானுங் கொள்வானுமென்று ஞானதியானத்தாலே செய்குக. எ-று. ()

இதுவுமது.

கொடுப்பாயுநீகொடுத்தல்கொள்வாயுநீயே
கொண்டுபுசிப்பாயுநீபுசிப்புநீயே
அடுத்துடனேபுசிக்கின்றபதார்த்தநீயே
யாருன்றன்செயலறிவாரளவினிறைவானல்

விடுத்தபணியிதுவல்லாற்கண்டதில்லை
வேறல்லையொன்றல்லைவிளங்காயல்லை
யெடுத்தவைநின்பாரமாமெனக்கோர்செயலின்றென்
றிறைவனருட்பணியாகிநின்றிறைஞ்சிடாயே.

(இ-ள்.) கொடுப்பாயுநீ கொடுத்தல் கொள்வாயுநீயே கொண்டு புசிப்பாயுநீ புசிப்புநீயே அடுத்துடனே புசிக்கின்ற பதார்த்தநீயே யாருன்றன் செயலறிவார் அளவினிறைவாஞல் - இப்படிப் பூசித்துத் தோத்திரஞ் செய்யும்படி சர்வமும் உன் செயலாதலால் யாதொன்றை யாதொருவர்க்குக் கொடுக்கிறவனும்நீ கொடுத்ததனை வாங்கிக்கொள்வானும்நீ யாதொன்றை யாதொருவர் பக்கலிலே வாங்கிக்கொண்டு உண்பானும் நீ அந்த உணவாகியவைதானும் நீயே அவ் வுணவாகக் கூட்டிக் கடித்துப் பருகி நக்கிச் சுவைத்து விழுங்குவதாய அறுவகைச் சுவைப் பண்டமும் நீதானேயாயினுய் இப்படி அளவில்லாத பூரணத்தை யுடையையாகையா லுனது தொழிலை யாவர்தான் அறிவார்—விடுத்தபணி இதுவல்லாற் கண்டதில்லை - என்னை யியற்றுஞ் செயல் நீசெய்ததல்லா தென்செயலாக ஒன்றுங் கண்டதில்லை—வேறல்லை - பசுபாசங்களின் நீவேறுயிருப்பதில்லை—ஒன்றல்லை - அவையோடு தாஞென்ருயிருப்பதுமில்லை—விளங்காயல்லை - உன்னிலைமைபார்த்தா லுன்செயல் விளங்கக்காட்டா திருக்கின்ருயல்லை—எடுத்தவ னின்பாரமா மெனக்கோர் செயலின்றென் றிறைவ னருட்பணியாய் நின் றிறைஞ்சிடாயே - என்பாரமென்றவை யெல்லாம் நின்சுமையேயாக்குவன் எனக்குப் பணியில்லையென்று சிவன்பணியாகச் சிவோகம்பாவகத்தால் வணங்குவாயாக. எ-று. (கககூ)

இதுவுமது.

தாவரங்கள்சங்கமங்கள்பூதமைந்து
தத்துவங்களாதாரங்கலைகளைந்து
கோவிரவுமக்கரங்களியந்திரங்கள்முதலாய்க்
கொடியமந்திரங்கள்குணம்விந்துநாதம்
யாவையினிஞென்றினினியுண்டென்ருலங்கே
யில்லாமைகுறைவுநிறைவுடையையல்லை
தேவனேயெவரெவரெப்படிச்சிந்தித்தார்
சிந்தித்தவிடத்தந்தவடிவாகைதிடமே.

(இ-ள்.) தாவரங்கள் சங்கமங்கள் பூதமைந்து தத்துவங்க ளாதாரங் கலைகளைந்து கோவிரவு மக்கரங்கள் இயந்திரங்கள் முதலாய்க் கொடிய மந்திரங்கள் குணம் விந்து நாதம் யாவையினி ஞென்றினினி யுண்டென்ரு லங்கே யில்லாமை குறைவு நிறைவுடையையல்லை - நிற்பனவும் நடப்பனவுமாகிய தாபர சங்கமங்களும் பூதங்களைந்தும் ஒழிந்த இருபத்தாறு தத்துவங்களும் ஆதாரமா

றும் பஞ்சகலைகளும் அவற்றின் தலைவர்களும் பொருந்து மைம்பத்தோ ரட்சரங்களும் அவ்வட்சரங்கள் சேர்ந்த சக்கரங்களும் சக்கரங்களிற் சேர்ந்த உக்கிர விக்கிரக மந்திரங்களும் முக்குணங்களும் விந்து நாதங்களுமாகிய விவைகளில் யாதொன்றிலே நீயுண்டென்னுங் கருத்துக்கொண்டு வழிபட்டால் அந்த வடிவுகளிலே நீ நில்லாயென்பது சொல்ல உன்னிறைவிற் குறைவில்லையா மாதலால்—தேவனே யெவரெவ ரெப்படிச் சிந்தித்தார் சிந்தித்தவிடத் தந்தவடிவாகைகிடமே - தலைவனே எந்தெந்தச் சமயத்தார் எந்த முறைமையைக்கொண்டு எந்த நினைவாற் றியானித்தார் அந்த நினைவின் வடிவாய்வந் தவரவர் காரியத்தை முற்றுவிப்ப துன்கடனேயென்றுந் துதிப்பாயாக. எ-று.

இருபத்தைந்து கிருத்தியங்களுக்கும் வசியம் ஆகருஷம் மோகனம் உச்சாடனம் தம்பனம் வித்துவேஷணம் பேதனம் மாரணமாகிய அட்டகருமங்களுக்கு மதுவதுவாய் நிற்கு மியல்பினரென்ப திதன்கருத்து. (கஉ0)

ஞானநூலை ஓதல் ஓதுவித்தல் முதலியவையும் ஞான
பூசைக்கொக்குமென்று கூறுகின்றார்.

துதித்திறையையொடுக்கிடுகபுசிக்குங்காலைத்
தூயமருந்துடற்கென்கவதுவுமின்றி
விதித்தவிதியவன்விதியானம்வசமன்றென்று
விருப்பின்றியவன்வசமாய்ப்புசிக்கில்வினையேறா
வதற்பின்புஞானநூலோதலோதுவித்தல்
அப்பொருளைக்கேட்பித்தறான்கேட்டல்பலகாற்
றிதப்படவேசிந்தித்தலைந்துமுன்னைத்
திகழ்பூசைக்கொக்குமெனச்செப்புநூலே.

(இ-ள்.) துதித்திறையை ஒடுக்கிடுக - இப்படியே தோத்திரஞ்செய்து சிவனை யெழுந்தருளப்பண்ணிவிடுக. இது ஞானபூசையாம் — புசிக்குங்காலைத் தூயமருந் துடற்கென்க - ஞானிகள் புசிக்குமிடத்து இது அறுசுவையோடு கூடிய உடற்குரிய மருந்தென்று கருதிப் புசிக்குக—அதுவு மின்றி விதித்தவிதி அவன் விதியால் நம்வசமன்றென்று விருப்பின்றி அவன்வசவாய்ப் புசிக்கில் வினையேறா - அந்தக்கருத்து மொழிய அவ்வாகாரமானவை முன்னையூழ்வலூழுஞ் சிவனாலே நியமிக்கப்பட்ட தாதலால் நாம் அவன் கற்பித்தவழி செய்கின்றோமென் றவ்வுணவிலே விருப்பமற் றூட்டி யுறக்குகின்றா னவனேயென்று புசிக்கில் ஒருக்காலும் வினையேறாதாம்—அதன் பின்பு ஞானநூலோதல் ஓதுவித்தல் அப்பொருளைக் கேட்பித்தல் தான்கேட்டல் பலகால் திதப்படவே சிந்தித்தலைந்து முன்னைத் திகழ் பூசைக் கொக்குமெனச் செப்பு நூலே - அந்தப் பூசை யொழிந்தநேரம் ஞான நூல்களைத் தானோதல், தான் பிறரையோதுவித்தல், அந்நூற் பொருளைப் பிறர் கேட்கச் சொல்லுதல், அதனை யோதுவோ ரவையிற்

சென்று தான் கேட்டிருத்தல், அந்நூல் நிச்சயம் வரத்தக்கதாகப் பல்காலும் நினைத்தல் ஆகிய இவை யைந்துதொழிலும் முன்னை ஞானபூசைக் கொக்குமெ ன்று ஆகமஞ் சொல்லும்; ஆதலால் அதனைச் செய்குக. எ-று. (கஉக)

ஞானி பிட்சையேற்குமுறை கூறுகின்றார்.

அவைசலிக்கின்மெய்ஞ்ஞானநெறியுடையோரவையி
னணைந்தவர்தம்மேவல்வழியதினிற்கவடைவின்
இவைஞானநெறியாகும்பிச்சைக்கேகி
லிறையேவற்படிசெய்கவந்ததிடக்காண்க
நவமானதொருவன்பாவிரத்தலாசை
நசைவாஞ்சைகாமம்வினைநகைகோபமிடும்பை
பவலோபமதமோடுமார்ச்சரியந்தீமை
பாவிகணட்புப்பிறனில்பரிவகலப்பாரே.

(இ-ள்.) அவைசலிக்கின் மெய்ஞ்ஞான நெறியுடையோர் அவையி னணைந் தவர்த மேவல்வழி யதினிற்க - அந்தப் பூசையமைதி வாராதாயின் சிவஞானிக ளது கூட்டத்தையணைந்து அவரது ஏவல்வழியி னிற்க—அடைவின் இவை ஞான நெறியாகும் - அடைவிலே இவை செய்வது அது ஞானவழி நிற்பார் க்குள்ள செயலாம்—பிச்சைக்கேகில் இறையேவற்படி செய்க - மேற் பிச்சை க்குப் போகுமிடத்து நம்மை உணவிற் செலுத்துகின்றா ரென்று கண்டு சிவ னேவலாகப் பிச்சைபண்ணுக—வந்த திடக்காண்க - அப்பிச்சை யொருவராற் கொண்டுவந் திடப்பட்டது சிவன் செயலென்று கொள்ளுக—நவமான தொரு வன்பா விரத்த லாசை நசை வாஞ்சை காமம் வினை நகை கோபம் இடும்பை பவலோபம் மதமோடு மார்ச்சரியந் தீமை பாவிகள்நட்புப் பிறனில்பரி வகலப் பாரே - இந்த ஞானநெறியுடையோர் கடியுஞ்செயல்கள் புதிதாக வொருபொ ருள் கண்டால் அதனைத் தனக்கென் றிரப்பதுவும், அவற்றைவிரும்பிய விருப்பங் கிடப்பதுவும், போகத்தில் விருப்பமுறுவதுவும், மிக்க நகைசெய்வதுவும், கோபி ப்பதும், வேதனையுறுவதும், ஒருவர்க்கீயாததும், கெடுப்பதும், கொலையில் விரு ம்புவதும், ஒருவர்க்கும் பொருந்தாத குணத்தவனுவதும், அதீட்சிதர் முதலான பாவிகளோடு கூடுவதும், பிறரில்லாளை விரும்புவதுமாகிய இவை யனைத்தும் நீங் குதல் முறையாகும். எ-று. பவலோபம் - பிறப்புக்கேதுவான லோபம். (கஉஉ)

சத்தியநிருவாண தீட்சை கூறுகின்றார்.

ஞானமாமவுத்திரியுஞ்சத்தியநிருவாண
நன்கமைந்தமாணுக்கன் றன்னைச்சோதித்
தூனமிலாநெறிகண்டாற்றான்சிவனுய்ச்சமைந்தங்
குயருமிருளத்தசாமத்தினெல்லை

மோனமுடன்சீடனுற்றனைப்பூசிப்பித்து
முழுத்தழலினடனாகத்தன்னைப்பாவித்
தீனமிலாமலர்கரங்கொண்டெதிர்பார்க்கநிறுத்தி
யிவனையறுவகையினீங்கிடுமாறுபாரே.

(இ-ள்.) ஞானமா மவுத்திரியுஞ் சத்தியநிருவாணம் - ஞானதீட்சை சத்தியநிருவாண தீட்சையாகும்—நன்கமைந்த மாணக்கன் றன்னைச் சோதித்து - நிருவாணதீட்சை பண்ணுமிடத்து சீடலக்கணம் பேணுகலை யுணர்ந்தென்னுஞ் செய்யுட்படி நன்மைபொருந்திய மாணக்கனைப் பன்னிரண்டு வருஷம் மூன்று வருஷ மொரு வருஷஞ் சோதித்துக் கண்டு—ஊனமிலா நெறிகண்டால் - குற்றமற்ற வழிபாடு கண்டவளவிலே எந்தமாதமாகிலும் எந்தநாளாகிலும் அவன் பக்குவமே யெல்லையாகக் கண்டு—தான் சிவனாய்ச் சமைந்து அங்குயரு மிருள் அத்தயாமத்தி னெல்லை மோனமுடன் சீடனுல் தனைப் பூசிப்பித்து முழுத்தழலினடனாகத் தன்னைப்பாவித் தீனமிலா மலர் கரங்கொண் டெதிர்பார்க்க நிறுத்தி இவனையறுவகையின் நீங்கிடுமாறுபாரே - தான் சிவனனமுறைமையிலே சமைந்தவ்விடத்து மிக்கவிருள்செறிந்த இரவு பதினைந்துநாழிகையிலே பூங்கோயில் சமைப்பித்து அலங்காரம் வேண்டுவன செய்து சிங்காசனத்திலே தானிருந்து மாணக்கனாலே தன்னடி யிரண்டிணையுஞ் சந்திர சூரியாரகத் தியானிப்பித்து மாணக்கன் றலையினும் வலக்கண் இடக்கண்களினும் இதயத்துஞ் சேர்த்தி அந்த அடிகளிலே பஞ்சா வமுதங்களாலும் சந்தனங் குங்குமங்களாலும் பனிநீராலும் ஆட்டியருளுவித்துக் களபஞ் சாத்திப் பட்டாடை சாத்திச் செங்களுநீர்மாலை சாத்தித் தரளவடஞ்சாத்தி, பாயசம்: நாழியரிசிக்கு நானாழிபால் நாற்பலஞ் சர்க்கரை ஒருதேங்காய் கலந்து சமைப்பது. இருநாழிபால் உழக்கு நெய் இருபலஞ்சர்க்கரை கறியமுது கூட்டிச்செய்த நைவேத்தியம் நிவேதித்து தாம்பூலாதி சோடச வுபசாரமுங் கொடுத்துப் பூசிக்கும்படி செய்வித்துத் தன்னை மாணக்கன் வித்தியாதேகமாகிய தழல்வடிவா யதற்குள்ளே யாடியருளுகிறவராகத் தியானிக்கும்படி பாவனைகற்பித்துக் குற்றமில்லாத மலர்களைக் கையிலேகொடுத்துத் தன்னைப்பார்த்துப் பாவித்துத் தானும் அம்மாணக்கன் சஞ்சிதவினையினின்று நீங்கினனாகப் பாவித்துச் சடத்துவாக்களினும் பொருந்திய வனுபவம் நீங்கினதாகப் பார்க்குக. எ-று. (கஉஙு)

இதுவுமது.

பார்த்துப்பின்மலரிட்டுவணங்கப்பண்ணிப்
பாதத்தைத்தலைகண்ணுநெஞ்சினுமேபதித்துச்
சேர்த்தசிவவத்தமவன்றலையிலேவைத்துத்
திருவெழுத்தைமாறியவன்செவியிலுரைத்திட்டே
ஏர்த்தசாத்திரமெல்லாமெடுத்துக்காட்டி
யீசனுயிர்பாசமிவையெனுமாறுமுரைத்துக்
கூர்த்தவறிவுக்கறிவுகூடுமாறு
கூட்டிவழிபடுமுறைமைகொள்ளவேபணியே.

(இ-ள்) பார்த்துப் பின் மலரிட்டு வணங்கப்பண்ணி - அப்படி யறுகாற் பார்த்துப் பின்மலரைப் பாதத்திலே போட்டு வணங்கி இருக்கும்படிபண்ணி—பாதத்தைத் தலை கண்ணு நெஞ்சினுமே பதித்து - திருவடிகளைத் தலையிலும் கண்களிலு மிதயத்திலும் வைத்து—சீர்த்த சிவவத்த மவன்றலையிலே வைத்து - சீர்மையையுடைய வலக்கரத்தைச் சிவகரமாக்கி மலரொடு மாணுக்கன் தலையிலேயபையத்தமாக்கி வைத்து—திருவெழுத்தைமாறி அவன் செவியிலுரைத்திட்டு - திருவெழுத் தைந்தையும் வந்த வழியிலே மாறி உச்சரித்து—ஏர்த்த சாத்திரங்களெல்லா மெடுத்துக்காட்டி - அழகிய ஞானசாத்திரங் கட்டளை தோற்றம் ஒடுக்க முதலானவை கொண்டு பிரமாண மெடுத்தறிவித்து—ஈசன் உயிர் பாச மிவை யெனுமாறு முரைத்து - பதி பசு பாசங்கள் என்னும் முறைமையு மறிவித்து—கூர்த்த அறிவுக் கறிவு கூடுமாறுகூட்டி வழிபடு முறைமை கொள்ளவே பணியே - கூரிதான ஆன்மாவுக்கு ஞானத்தைக்கொண்டறியு முறைமையு மறிவித்து அதுவே கோட்பாடாகக் கொள்ளப்பண்ணி, எ-று. (௧௨௪)

ஞானவபிடேகம் கூறுகின்றார்.

உரைத்தவழிமிகத்தெரிந்துசரிதையாதி
உண்மைகளினுள்ளசாத்திரங்களையுணர்ந்து
புரிப்பறுநிட்டையனுகித்தன்போலானற்
புத்திரனுதிக்குக்கும்பந்தனைத்தாபித்து
விரித்தவதிற்றெக்கணமூர்த்திதன்னை
மேவுவித்துத்தன்னைப்பூசிப்பித்துமுன்போற்
றரித்துணர்ந்துசீடனைத்தற்சொரூபமாக்கித்
தானகத்தியானத்தைச்சமைப்பிப்பானன்றே.

(இ-ள்.) உரைத்தவழி மிகத்தெரிந்து சரியையாதி உண்மைகளினுள்ள சாத்திரங்களை யுணர்ந்து புரிப்பறு நிட்டையனுகித் தன்போலானல் - சாத்திரங்கள் சொன்ன நெறியை மிகவுங்கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து முன்னே சரியை கிரியை யோகங்களு மோதியுணர்ந்து நீக்கமற்ற நிட்டையுடையனாய்த் தானவனென வவதரத்தனாய்ச் சீவன்முத்த னானல்—புத்திரனுதிக்குக் கும்பந்தனைத் தாபித்து - புத்திரன் முதலாயினோர்க்குச் சிவகும்பந்தாபித்து—விரித்தவதிற் றெக்கணமூர்த்தி தன்னை மேவுவித்து - அதைச் சிவகும்பமாக்கி யதிலே தெட்சணமூர்த்தியை ஆவாகித்து—தன்னைப் பூசித்து - ஞான தீட்சைபோற் றன்னைப் பூசிக்கும்படியாக்கி—முன்போல் தரித்துணர்ந்து - முன்புபோல ஆன்மாச் சிவனென பாவனையைக் கொண்டு—சீடனைத் தற்சொரூபமாக்கித் தானகத் தியானத்தைச் சமைப்பிப்பானன்றே - சீடனைத் தன்சொரூபமாக்கி மீளத் தானகத் தியானத்தைச் சமைப்பிப்பான். எ-று. (௧௨௫)

இதுவுமது.

இருத்துகும்பத்துநீரபிடேகஞ்செய்தங்
கியைந்துதான்சாத்தியவெல்லாமிவர்க்கேயாக்கி
நிரைத்தவதிகாரமுறையாதனம்பாதுகைக
ணிகழும்வாகனமாதிகொடுத்தருளினிறுத்தித்
தெரித்தவாகமநிகழ்த்துமாசானுக்கித்
திருமேனியானுனத்தியானம்பண்ணிப்
புரித்தவக்கரநியாதங்கலாநியாதமெல்லாம்
புகலுமஞ்செழுத்தாலேபுரிக்கும்வழியாக்கே.

(இ-ள்.) இருத்து கும்பத்து நீரபிடேகஞ் செய்தங்கு - அதன்பின்பாக இருந்த கும்பத்தின் மூர்த்தி யிவனுகப்பாவித்தபிடேகத்தைச் செய்து—இசைந்து தான் சாத்தியவெல்லாம் இவர்க்கேயாக்கி - தனதாதனத்திலே வைத்துக் களபஞ்சாத்தி ஆடையாபரணம் மாலை முடியெல்லாமணிந்து சோடசவுபசாரமுஞ்செய்து அதன்பின்பு—நிரைத்தவதிகாரமுறை யாதனம் பாதுகைகள் நிகழும் வாகனமாதி கொடுத்தருளினிறுத்தி - சந்தானவொழுங்காகிய வதிகாரமும் புலித்தோல்முதலியவாசனமும் மிதியடி திருமுறை நரவாகனம் பஞ்சாங்கபூஷணமிரட்டையாயெல்லாங் கொடுத்து ஞானவழியிலே நிற்கும்படி கற்பித்து—தெரித்த ஆகமம் நிகழ்த்துமாசானுக்கி - ஞானபாதத்தைக் கற்பிக்கும் ஆகமத்தைப் போதிக்குமாசாரியனுக்கி—திருமேனியானுனத் தியானம்பண்ணி - தெக்ஷணமூர்த்தி வடிவமானுனகப் பாவித்து—புரித்த அக்கரநியாதம் கலாநியாதமெல்லாம் புகழும் அஞ்செழுத்தாலே புரிக்கும் வழியாக்கே - சரியை கிரியையிலாசாரித்தன்மையின்றி ஞானத்தன்மையிலாக்கி வேறுபடுத்திச் சொல்லப்பட்ட அக்கரநியாசம் கலாநியாசம் பஞ்சாக்கரநியாசம் முன்னஞ்செய்யும் அங்கநியாசம் கரநியாசம் முதலிய நியாசமெல்லாம் யாவருந்தோத்திரஞ் செய்யப்பட்ட பஞ்சாட்சரத்தாலே வேறுபடுத்திச்செய்து செபிக்கும்படி கற்பிக்குக. எ-று.

அக்கரநியாசம் அம் சிவாயநமவென அகரமுதலிய ஐம்பத்தோரக்கரங்களுக்கும் பஞ்சாட்சரத்தைச்சேர்த்து நியசித்தல். கலைநியாசம் ஓம் சிவாய ஈசானுய சறுவவித்தியாய நமோசசிநியை நமவெனக் கலைகள் முப்பத்தெட்டுக்கும் பஞ்சாட்சரஞ் சேர்த்து நியசித்தல். அங்ககரநியாசம் ஓம் சிவாய ஈசானுய நமவெனப் பதினொருமந்திரத்துக்கும் பஞ்சாட்சரஞ்சேர்த்து நியசித்தல். யம் ஈசானுய நமவென ஓரெழுத்து வீசாக்கரமாகச் செபிக்குதல் செய்க. (கஉ௬)

ஞானவர்தியேட்டி கூறுகின்றார்.

நிறுத்திப்பின்நீயேநாம்நமதுசெயலாலே
நீசெய்யுங்கருமமெல்லாம்நாம்செய்ததாமா
லுறைக்கும்வினையிலையெம்மப்போலுபதேசிஞான
வுண்மையைமெய்ப்பத்தருக்கென்றுரைக்கையபிடேகம்

குறித்தசிராத்தங்குருவைச்சேட்டரைமெய்த்தவரைக்
குலவுசிவஞனகுருமரபோராக்கண்டு
மறித்தமுதுசெய்வித்துவிடலாகுமன்றி
மருவியவந்தேட்டியுமாம்வருமுறைமைகேளே.

(இ-ள்.) நிறுத்திப் பின் நீயே நாம் நமது செயலாலே நீசெய்யுங் கருமம் எல்லாம் நாம் செய்ததாமால் உறைக்கும் வினையிலை யெமைப்போல் உபதேசி ஞானவுண்மையை மெய்ப்பத்தர்க்கென் றுரைக்கையபிடேகம் - இப்படி ஞான க்கிரியையிலே நிறுத்திப் பின்பு எல்லாம் நமதுசெயலாய் நிற்றலால் உன்ன றிவு நம்மறிவு உன்னுடல் நம்முடல் உன் தொழில் நம் தொழிலாய்விடு மாத லால் உனக்கு வினைத்துயரும் பற்றுவதில்லை நாமிருந் தேடுங் கையுமாக வியா க்கியானஞ் செய்வதுபோல நின்னை வழிபட்டார்க்கு நீயும் ஞானவுபதேசஞ் செய்வாயாகவென்று கற்பித்துவிடுவது அபிடேகமாம்—குறித்த சிராத்தம் குரு வைச் சேட்டரை மெய்த்தவரைக் குலவு சிவஞன மரபோராக் கண்டு மறித் தமுது செய்வித்து விடலாகுமன்றி மருவிய அந்தியேட்டியுமாம் வருமுறைமை கேளே - ஞானிகள் தேகம் விடுத்ததாகக் கண்டால் அதற்குஞ் சிராத்தஞ் செய்யவேண்டும். அது தன்சீடற் காசாரியன் செய்வதும் ஆசாரியர்க்குச் சீடன் செய்வதுமென விரண்டுபேதமாம். அவ்விரண்டிற் சீடற் காசாரியன் செய்வது தன்னுடைய மேனியில் அவன்மேனி கரந்ததாகக் கண்டு தன்னடியை விள க்கி அந்நீராற் சவத்தை நானஞ்செய்வித் திந்தவுடல் கரும்பின் கோதுபோலக் கண்டு சுட்டும்புதைத்தும்போக்கி அமுதுசெய்யப்பண்ணி வருடமொருக்கால்அடி யார்க் கமுதுசெய்யப்பண்ணி விடுவது. ஆசாரியர்க்குச் சீடன் செய்வது மகே சுரரிலே குருவைச் சாதகரைத் தவத்தின்மிக்கோரான புத்திரர் சமயி முதலா னோரைத் தன் குருவாகவும் சந்தான சமயகுரவர்களாகவும் தியானித்துப் பூசி த்து வருடமொருதரம் அமுதுபண்ணுதலாகிய குருபூசை செய்வது சிரார்த்த மாம்; இதுவே அந்தியேட்டியுமாம். இதுவன்றிச் சாதகராகி மரித்தார்க்குப் பொ ருந்திய அந்தேட்டியுஞ் செய்யலாம். அந்த ஞான அந்தியேட்டியை முறையே கேட்குதி. எ-று. (கஉஎ)

இதுவுமது.

ஈசஞெடொன்ருயவர்க்குமுன்னந்தேட்டி
யில்லையாயினுங்குறைகளுடையாருண்டாஞல்
நேசமுடன்நிருவாணதீக்கைமுறைபோல
நினைந்தந்தவுயிர்நிறைவிற்கலந்ததாய்நினைந்து
தேசமருஞ்சிவாக்கினியிலுடலேயாகுதியாய்த்
தெகிப்பதிதுஞானவந்தியேட்டியாகும்
பாசமறவிந்தநெறியெல்லாஞ்செய்தல்
பயிலுஞானக்கிரியையெனப்பகருநூலே.

(இ-ள்.) ஈசனே டொன்றுயவர்க்கு முன் அந்தேட்டி இல்லை - சிவனே டொன்றுபட்ட சிவஞானிகளுக்கு முந்நூலில் அந்தியேட்டி யுண்டென்று நீக்கமாகச் சொன்னதில்லை—ஆயினுங் குறைகளுடையார் உண்டானல் - அப்படியாகிலும் ஆசையுடையா ருண்டாகையால் அந்தியேட்டி செய்யப்படும் அது ஞான அந்தியேட்டியாம். அதுவருமாறு—நேசமுடன் நிருவாணதீக்கை முறைபோல நினைந்தந்த உயிர் நிறைவிற் கலந்ததாய் நினைந்து தேசமருஞ் சிவாக்கினியி லுடலேயாகுதியாய்த் தெகிப்பது இது ஞானவந்தியேட்டியாகும் - நிருவாணதீக்கை புறத்துச்செய்யு முறைபோல வகத்தேநினைக் தந்த வான்மதத்துவங்க ணீங்கி மலமும் நீங்கி யருளுடன் கலந்து தன்போதமற்ற பரமானந்த நிறைவிலே யமிழ்ந்தியதாகப் பாவித்துக் கீழே சிவாக்கினியைக் கற்பித்துப் பூரணகுதி யளவாக வோமஞ்செய்து அந்த வக்கினிக் கிந்தவுடல் ஓமத்திரவியமாக எள்ளும் அட்சதையுங் கொண் டர்ச்சிப்பித்துச் சிவாக்கினியைக் கொளுத்தி அதிலே நெய்யை ஒமஞ் செய்து போந்து மகேசுரரை நமஸ்கரித்து மகேசுரபூசைசெய்துவிடுவ திது ஞான அந்தியேட்டியாம்—பாசமற விந்தநெறி யெல்லாஞ் செய்தல் பயிலு ஞானக் கிரியையெனப் பகரும்நூலே - சிறிது பற்றிநின்ற ஆசாபாசங்களற இந்தவழியிலே பூசைமுதலியவியற்றுவது பயிலப்பட்ட ஞானத்திற்கிரியையென்று சிவாகமங்கள் கூறும். எ-று. பஞ்சாட்சரமே மந்திரமென்றறிக. (கஉஅ)

## சரியையில் யோகம்.

சரியையினில்யோகந்தான்மந்திரமூர்த்திகளைத்
தனதுளத்திற்கண்டிடுதல்சதாசிவன்றன்மேனி
யெரியுமனல்பதுமராகத்தினெளிபோல
விடைவிடாமேகண்டுவலம்வருகைநோக்கில்
ஒருகாற்பாதலமுமாமொருகாற்பூமி
யொருகாலந்தரமென்றேயுன்னிக்கொண்டு
தெரிவரியவொளியுடனேசித்தங்கூட்டிச்
செய்வதெனவாகமநூறெரிக்குந்தானே.

(இ-ள்.) சரியையினில் யோகந்தான் மந்திரமூர்த்திகளைத் தனதுளத்திற் கண்டிடுதல் - சரியையில்யோகமாவது கூறுமிடத்து இரண்டுவகையாம்; அதிலொன்று ஏழுகோடி மந்திரவடிவுகளைத் தன்னிதயத்திலே தியானிப்பதாம். அதுவுமன்றி—சதாசிவன்றன் திருமேனி எரியும் அனல் பதுமராகத்தினெளிபோல இடைவிடாமேகண்டு வலம்வருகை நோக்கில் ஒருகால் பாதலமுமாம் ஒருகால் பூமி ஒருகால் அந்தரமென்றே உன்னிக்கொண்டு தெரிவரிய ஒளியுடனே சித்தங்கூட்டிச் செய்வதென ஆகமநூல் தெரிக்குந்தானே - நாடோறுந் திருக்கோயினியதி செய்யுமிடத்துச் சதாசிவநாயனர் திருமேனியைக் கீழாதாரசத்தி

முதல் மேற் சுத்தமாயையளவாக அக்கினிச் சொரூபமான வித்தியா தேகமாகத் தியானித்து இந்தவளவிலே பதுமராக ஒளிபோலத் திருமேனியைத் தியானித்து பிரதக்ஷணஞ் செய்யுமளவில் ஒருகாற் பாதாளத்திலே வலம்வருகிறதாயும் ஒருகாற் பூமியிலே வலம்வருகிறதாயும் ஒருகாலாகாயத்திலே வலம் வருகிறதாயுந் திருக்கோயினியதி நினைத்துச் செய்துவருநேரமெல்லாம் அந்தத் தழற்பிழம்பான ஒளியுடனே மனப்பற்றுகிச் செய்வது சரியையில் யோகமென ஆகமஞ் சொல்லும். எ-று. (கஉக)

## கிரியையில் யோகம்.

பிராசாதவகை கூறுகின்றார்.

ஓங்குகிரியையில்யோகந்தத்துவங்களெல்லா
முற்பவித்தவடைவிலேயொடுங்குவதாக்கண்டு
தாங்கரியவுயிர்சிவன்றனருகிற்சென்று
சார்வதெனத்தியானித்தலதுவுமன்றி
நீங்கரியபிராசாதம்பதினாறு
நிகழ்மூலாதாரமிலிங்கங்குதத்தினடுவாம்
பாங்குசதுரத்தெழுத்துவாசாந்தமிதழ்நால்
பகர்ந்ததனுட்டிரிகோணமங்கிதனிலெழுத்தே.

(இ-ள்.) ஓங்குகிரியையில் யோகம் தத்துவங்களெல்லா முற்பவித்த அடைவிலே ஒடுங்குவதாக் கண்டு தாங்கரிய உயிர் சிவன்றனருகிற் சென்று சார்வதெனத் தியானித்தல் - விளங்கப்பட்ட கிரியையில் யோகமாவ திரண்டுபேதமாம் அவற்றிலொன்று ஆன்மதத்துவம் பிரகிருதியினும் வித்தியாதத்துவம் மாயையினும் சிவதத்துவஞ் சுத்தமாயையினு மொடுங்குமளவிற் றோன்றின வடைவேயொடுங்குவதாகக்கண்டு தரித்தற்கரிய உயிர் ஞானத்தாலே சிவன் றிருவடியிலே கூடினதாகத் தியானிப்பதாம்—அதுவுமன்றி நீங்கரிய பிராசாதம் பதினாறும் நிகழ்மூலாதாரம் இலிங்கங் குதத்தினடுவாம் பாங்கு சதுரத்தெழுத்து வாசாந்தம் இதழ்நால் பகர்ந்ததனுட் டிரிகோண மங்கிதனிலெழுத்தே - அதுவுமன்றி இன்னுமொரு பிரகாரமாவது பிரிதற்கரிதாகிய பிராசாதம் பதினாறுபேதமாம். அவற்றில் பிருதுவி அப்புத் தேயு வாயு ஆகாச மைந்துக்கும் நிவிர்த்தியாதி பஞ்சகலைக்கும் மேதைகலை, அர்க்கிசகலை, விஷகலை, விந்துகலை, அர்த்தசந்திரகலை நிரோதிநிகலை, நாதகலை, நாதாந்தகலை, சத்திகலை, வியாபிநிகலை, வியோமரூபைகலை, அநந்தைகலை, அநாதைகலை, அநாசிருதைகலை, சமனைகலை, உன்மனகலையெனவும் பதினாறும். அதின் நிவிர்த்திகலையைத் தியானிக்குமளவில் ஆதாரமாறும் மண்டலமூன்றுந் தேகத்துளதாம். அவ்வாதாரமாறின் மூலாதாரமாவது இலிங்கத்துக்கும் குதத்துக்கும் நடுவாம். அதன் வடிவு சதுரம். அதற்குள்ளே வலமாக நாலெழுத்து வ. ஶ. ஷ. ஸ. என நாலிதழில் நிற்கும். சொன்ன அதற்குள்ளே மேனோக்கித் திரிகோண மதற்குள்ளே மூன்றிடத்திலே ரம். என்னுமெழுத்து நிற்கும். எ-று. (கஙo)

நாடிகளும் வாயுக்களும் நிற்குநிலை கூறுகின்றார்.

கோணத்துளசபையாமோங்காரஞ்சுழல்தல்
குலவிடையும்பிங்கலையுமதனிரண்டுபோலு
நீணுற்றதலையதனுட்சுழுனையுட்சித்திரமும்
நேரதனுள்வச்சிரமுமெழுபத்திராயிரமா
நாணுற்றநடுவுந்திதொடங்கிமேனோக்கி
நண்ணுகீழ்நோக்கியுமோடுமிவைதன்னிற்
சேணுற்றவாயுவெழுபத்திராயிரமாஞ்
சேர்ந்ததினடிகள்வாயுப்பஃபத்தாய்ச்செப்பே.

(இ-ள்.) கோணத்துள்அசபையாம் ஓங்காரஞ்சுழல்தல் குலவிடையும் பிங்கலையும் அதனிரண்டுபோலும் நீணுற்ற தலையதனுள் சுழுனை யுட்சித்திரமும் நேரதனுள் வச்சிரமும் - அந்தத் திரிகோணத்திற்குக் கீழின் மூலைக ளிரண்டினும் இடக்கோணத்திலே இடையென்னும் நாடியும் வலக்கோணத்திலே பிங்கலையென்னும் நாடியும் எழுந்திருக்கும். அக்கோணத்துள்ளுக்குக் கீழே இருகோணத்துக்குள்ளே வலப்புறத்தே ஹம் என்றும், இடப்புறத்தே ஸம என்று மசபாமந்திரம் நிற்கும். அதற்குள்ளாகச் சுழுமுனை நாடி திரிகோணத்துக் கீழ்க்கொடியைப்பற்றி ஓங்காரம்போல வலமேவ ஊர்ந்து கீழேசென்று மடித் தோங்காரத்தின் நடுவே பிளந்து புறப்பட்டுத் திரிகோணத்திற்றலையாலே நேரேயோட அந்தச் சுழுமுனையை இச்சித்து இடைகலை பிங்கலை யிரண்டும் மாறிமாறிச் சுற்றிக் கோணத் தலையளவிலே யொருவளைவும் நாபியளவிலே யொருவளைவும் இதயத்தளவிலே யொருவளைவும் பிடரியளவிலே யொருவளைவும் நெற்றியளவிலே யொருவளைவு மாக வளைந்து மேற் சுழுமுனையைவிட்டு விழுந்து நாசிநுனியிலே தங்கும். அந்த வளைவுகளுக்குப் பஞ்சக்கிரந்தியென்று பெயராம். நடுவே நேர்போன சுழுமுனை வீணதண்டு தொடங்கி யெலும்பூடே போய்க் கபாலத்தைமுட்டி நிற்கும். அதற்குள்ளே குழலுக்குள்ளே குழல் சொருகினாற்போலச் சித்திர நாடியும் அதனுள் வச்சிரநாடியும் நிற்கும்—எழுபத்திராயிரமாம் நாணுற்ற நடுவுந்தி தொடங்கி மேனோக்கி நண்ணு கீழ்நோக்கியு மோடும் - இந்தச் சுழுமுனை நடுவிற் கிரந்தியிலே மேனோக்கியுங் கீழ்நோக்கியும் முடிந்தவுறி போல எழுபத்திராயிரநரம்பு பேதித்தோடும்—இவைதன்னிற் சேணுற்ற வாயு எழுபத்திராயிரமாம் சேர்ந்ததின் நாடிகள் வாயுப் பஃபத்தாய்ச் செப்பே - ஆகாயத்தை உள்ளேயுடைத்தாய்க் குழல்போன்ற பெரிய நாடிகளிடத்திலோடும் வாயுவும் எழுபத்திராயிரமாகப் பேதிக்கும். அவற்றுட் சிறந்த நாடிகள் பத்தாம். அவற்றில் வாயுக்களும் பத்தாக நூல்கள் சொல்லுமென்க. எ-று. (கஙக)

இதுவுமது.

செப்புமிடைபிங்கலைநற்சுழுமுனைகாந்தாரி
திகழத்திசிங்நுவையுமலம்புடைபூடாவு
மொப்பரியசங்கினியுங்குகுதமுமேயாகு
மொருபத்திற்பிராணனபானன்வியானன்
தப்பிலுதானன்சமானனுகன்கூர்மன்
றகுகிருதன்றேவதத்தன்றனஞ்செயனும்பத்தில்
ஒப்பினுசிகுதங்கலத்தல்விக்கல்சமந்தும்ம
லுயர்சோம்புகண்ணேற்றல்நகைமலர்ச்சிவீக்கே.

(இ-ள்.) செப்புமிடை பிங்கலை நற்சுழுமுனை காந்தாரி திகழத்தி சிங்நுவையும் அலம்புடை பூடாவு மொப்பரிய சங்கினியுங் குகுதமுமேயாகும் - அந்தப்பத்துநாடிகளாவன முன்னேசொல்லு மிடையும் பிங்கலையும் நல்ல சுழுமுனையும் காந்தாரியும் விளங்கும் அத்தியும் சிங்நுவையும் அலம்புடையும் பூடாவும் ஒப்பற்றசங்கினியும் குகுதமுமாகப்பத்தாம்—ஒருபத்திற்பிராணன் அபானனும் வியானன் தப்பிலுதானன் சமானன் நாகன் கூர்மன் தகுகிருதன் தேவதத்தன் தனஞ்செயனும் - இந்தப் பத்துநாடியிலே பத்து வாயுவோடும் அவற்றின் பெயராவது பிராணன் அபானன் மிக்க வியானன் தவறில்லாத உதானன் சமானன் நாகன் தகுதியையுடைய கிருதரன் தேவதத்தன் தனஞ்செயனென்றும்—பத்தி லொப்பில் நாசி குதங் கலத்தல் விக்கல் சமந்தும்மல் உயர்சோம்பு கண்ணேற்றல் நகை மலர்ச்சி வீக்கே - அந்தப்பத்து நாடியிற் பிராணவாயு ஓங்காரத்தினடியாய்க் கோணக்கீழ் விளிம்பிலே தோன்றி நேரே சுழுமுனையி லோடுமளவிற் சுழுமுனைத் துளையுள்ளே வச்சிரநாடி செறிந் ததனுட்டுளை யொரு மயிர்த் துளையளவு போகும். அதனை நினைந்துன்னி அந்தத் துவாரத்தையடைத்தபடியாலே சுழுமுனையிலோடா தொருகா லிடையாலும் ஒருகாற் பிங்கலையாலும் ஓடிக் கணுக்களிலே யிடறி வாயுச்சிதறி மேலேபோய்க் கபாலத்தைச்சுற்றி நாசியாலே புறப்படும். இந்தப் பிராணவாயுவுக்கு நாடிகள் இடையும் பிங்கலையும் சுழுமுனையுமாம். அதிற் சுழுமுனை வழங்காது இரண்டாவதான அபானவாயு பிராணவாயுவிற் றோன்றி இடை பிங்கலையிலே பாயுமளவிலே எண்ணுயிர நாடியாய்க கீழ்நோக்கிப்போ மதுவேறு யிழிந் திரண்டாயிரநாடி வீணுதண்டைப்பற்றும். ஆயிரநாடி மார்க்கத்தை வளைந்துகிடக்கும். அதிற்றலையாய குகுதமென்னும் நாடியைப்பற்றிக் கீழேபோய் மலசலங்களைக் கழிவித்துநிற்கும். வியானவாயு காந்தாரியோடுகூடி வாக்கை யசைவித்து அயின்றவுணவைத் தென்னிலைப் பிரிவுபோல மேல் அறுபத்தொராயிரத்தினுங் கீழ்ப் பதினொராயிரத்தினும் பிரிந்தோடிச் சரீரமெங்கும் அன்னசாரத்தைக் கலப்பிக்கும். உதானவாயு கண்டத்திற் கிர

ந்தியில் அத்தி நாடியளவிலே பேதித்துப் பதினுயிரம் நரம்பாய்க் கழுத்தைப் பீர்க்கங்கூடுபோலப் பின்னிப் பிராணவாயுவைத் தகைந்து விக்கல் மிடறுவிம்மல் செய்வித்து நிற்கும். சமானனென்னும் வாயுச் சங்கினிநாடியோடே பதினாலாயிரநாடிவலுவாய் இதயந்தொடங்கிக் கலந்துநிற்பனவற்றிலே கலந்து தராசினுருவம்போல உடலை யொப்புப்பண்ணி நிற்பதாம். நாகனென்னும் வாயு கழுத்தளவிலே பேதித்து அலம்புடையோடே முப்பதினுயிர நாடியாய் மேனோக்கி நெற்றி கபாலம் நாசிகளைப் பற்றிக் கிடப்பனவற்றிலே பேதித்துக் கண்ணுக்கும் நாசிக்கும் நடுவே பிராணவாயுவைக்குறுக்கிட்டுத் தும்மலை யுண்டாக்கும். கூர்மனென்னும் வாயு பூடாவென்னும் நாடியுடனே பதினையாயிர நாடியா யிரண்டு கையையும் அண்ணமணறையும் பற்றிச் சோம்பு கொட்டாவி உண்டாக்கும். கிருகரனென்னும் வாயு சிங்குவை யென்னும் நாடியுடனே ஆயிரத் தைஞ்ஞூறு நாடியாய்க் கண்ணிமையைப்பற்றி நிற்பதா யிதிலே பேதித்துக் கண்ணை விழிப்பித்து மிமைப்பித்தும் நிற்கும். தேவதத்தனென்னும் வாயு சங்கினியுடனேகூடி நூறுநாடியாய் முக்த்தை மலர்வித்து நகைப்பிக்கும். தனஞ்செயனென்னும் வாயு இவ்வாயுக்க ளியக்கமறுத விடறுதல் செய்தபோது துவக்கைப்பற்றிக் கிரந்திமுதலியனவாகவும் வீக்கமுமாய் உடல் சவமானாற் சேரத் துவக்கை வீங்கவும் விரியவுஞ் செய்யும். எ-று. வீக்கம் - வீக்கெனநின்றது. (கஙௌ)

தூலவுடம்பின் பகுப்புக் கூறுகின்றார்.

ஆகத்துக்கங்குலங்கடொண்ணூற்ருறு
மருநாடிவாயுக்களெழுபத்திராயிரமாம்
போகலற்றவுயிர்பதினன்காயிரநானூறும்
போவதுவுமோரேழாயிரத்திருநூருகும்
ஏகத்தோடெண்பதுசந்துதிரநானுழி
யீரலெண்பலம்பித்துமிருகளஞ்சேயாகுஞ்
சேருற்றபிசிதமுன்னூற்றிருபத்தேழு
திகழ்முச்சாணென்புமுளியறத்தசையுஞ்சேர்வே.

(இ-ள்.) ஆகத்துக் கங்குலங்கள் தொண்ணூற்ருறும் - மனித யாக்கை தன் கைவிரலாற் றொண்ணூற்றறங்குல நீளமாம்—அருநாடி வாயுக்கள் எழுபத்திராயிரமாம் - அவ்வுடம்பிற்கு முன்சொன்னபடி நாடிகளும் வாயுக்களும் எழுபத்திராயிரமாம்—போகலற்றவுயிர் பதினன்காயிர நானூறும் போவதுமோரேழாயிரத்திருநூருகும் - இதிற் பிராணவாயு ஒருநாளைக்கு இரவுபகலுக்குள்ளே இருபத்தோராயிரத்தறுநூறு சுவாசம் நடக்கும். அது நாசியாலே பன்னிரண்டுவிரனீளம் புறப்படும். அதிலே எண்விரலொழிய நால்விரல் கெடும். ஆதலாலுட்புகுதல் பதினாலாயிரத்து நானூறும். வெளி

யேபோவது ஏழாயிரத்திருநூறும்—ஏகத்தோடெண்பது சந்து - எண்பத்தொரு சந்துமாம்—உதிரம் நாழி - இரத்தமும் நாழியாம்—ஈரலெண்பலம் - ஈரல் எட்டுப்பலமாம்—பித்தும் இருகளஞ்சேயாகும் - பித்துமிரண்டுகளஞ்சாம்—சேகுற்ற பிசிதம் முந்நூற்றிருபத்தேழு - உறைத்த தசைக்கற்றை முந்நூற்றிருபத்தேழு பலமாம்—திகழ் முச்சாண் என்பு மூளியறத் தசையுஞ் சேர்வே - மூளியின்றி முச்சாணெலும்பும் எலும்பின்றி முச்சாண் தசையுமாயிருக்கும். எ-று. (கஙங)

இதுவுமது.

இவ்வகையுமண்விகற்பமெட்டேமேவி
லெழிலகாரமுஞ்சொரிதழன்மாத்திரையுங்
குவ்வுபதினாறுநிவிர்த்திகலையாகுமதனிற்
குலவுமந்திரமிரண்டுபதமிருபத்தெட்டுச்
செவ்வையெழுத்தொன்றுபுவனநூற்றெட்டுத்
திகழ்மாயைசுவாதிட்டானம்மணிபூரகமா
மவ்விதழாறுடுபத்தாமெழுத்துப்பெம்முதலு
மரியடம்முதலுமாமெரியுமதனுள்ளே.

(இ-ள்.) இவ்வகையு மண்விகற்ப மெட்டே - இவைகளுடன் மயிர் எலும்பு தோல் நரம்பு தசை இவையன்றி நொய்மைமுதற் பிருதிவியின் குணம் எட்டுப் பேதமாம்—மேவிலெழிலகாரமும் - இதற் கதிதெய்வம் பிரமாவும் அ, ல என்னும் அக்கரங்களும்—சொரிதழன் மாத்திரையும் குவ்வு பதினாறும் நிவிர்த்திகலையாகும் - சொரிதழற் கொழுந்துபோலப் பதினாறு மாத்திரை நேரம் நிறுத்தித் தியானிப்பது நிவிர்த்திகலைக்காம்— அதனிற் குலவும் மந்திரம் இரண்டு பதம் இருபத்தெட்டு செவ்வை எழுத் தொன்று புவனம் நூற்றெட்டு திகழ்மாயை சுவாதிட்டானம் மணிபூரகமாம் அவ்விதழாறுடு பத்தாம் எழுத்துப் பெம் முதலும் அரிய டம் முதலுமாம் எரியு மதனுள்ளே - அந்த நிவிர்த்திகலையின் பதினொரு மந்திரத்திற் சத்தியோசாதமு மிருதயமுமாக இரண்டு மந்திரமும், மகாதேவ, சர்ப்பாவேசுவர; மாதேச, யோகாதிபதே, முஞ்சமுஞ்ச, பிரதமபிரதம, சர்வசர்வ பவபவ, பவோர்ப்பவ, சர்வபூத சுகப்பிரத, சர்வசாநித்தியகர, பிரமவிட்டுணுருத்திரபர, அநர்ச்சிதா அநர்ச்சித, அசம்துதா அசம்துதா, பூர்வத்தித பூர்வத்தித, சாக்ஷின்சாக்ஷின், துருதுரு, பதங்கபதங்க, பிங்கபிங்க, ஞான ஞான, சப்தசப்த, சூக்குமசூக்கும, சிவ, சர்வ, சர்வதா, சிவாயநம, சிவாயநமோ நம, நமோநம என்னும் இருபத்தெட்டும்; க்ஷ என்னும் அக்கரமொன்றும், பத்திரகாளி வீரபத்திர திரிலோசன விபச நப விவாஹ சம்வாக திரிசேச திரியக்ஷ கணத்தியக்ஷ விபு சம்பு தமஷ்டரீ வச்சிர பணீந்திர உதும்பிரேச கிரசன மாருதாசன குரோதன அநந்த விருஷதர விருஷ பலிப்பிரிய பூத

பால சியேஷ்ட் சர்வ சுரேச வேதபாரக ஞானபுக்கு சர்வஞ்ஞ ஈச வித்தியாதிப பிரகாமத பிரசாதக சிரீத்ருக்கு ரத்தினத்ருக்கு லக்குமீதிருக்கு சடாதர சௌமியதேக தந்நிய ரூபவான் நிதீச மேகவாகன கபர்த்தி பஞ்சசிக பஞ்சாந்தக க்ஷபாந்தக திக்ஷண சூக்கும வாயுவேக லகு சீக்கிர சுநாத மேகநாத சலாந்தக திர்க்கவாகு சயபத்திர சுவேத மகாபல் பாசஹஸ்த அதிபல பல தமஷ்ட்ரீ லோகித தாமிரக விருபாக்ஷ ஊர்த்துவசேப பயாநகாய குரூரதிருட்டி அந்திரு மாரண நிருதி தர்மபதி தர்ம வியோக்த்ரு சம்யோக்த்ரு கர்திரு விதாதிரு தாதிரு அராய மிருத்தியு யாமிய க்ஷயாந்தக பஸ்மாந்தக பபிரு தகன சிவலன ஆராய காதகாய பிங்கள உதாசன அக்கினி ருத்திர திரிதசாதிப பிநாகி சாஸ்திரு அவ்யய விபூதி பிரமர்த்தன வச்சிர தேக புத்த அச கபாலீச ரௌத்திர வைணவ பிராம்ம ஆடக கூஷ்மாண்ட காலாக்கினி ஆகிய புவனம் நூற்றெட்டும், மாயாமலமும், ஆதாரமாறிற் சுவாதிட்டானமும் மணிபூரகமுமாம். இலிங்கத்தடியிலே சுவாதிட்டான மாறிதழாகவும் அதற்கெழுத்து: ப ம ய ர ல வுமாக வரும். நாபிக்குமேலே மணிபூரகமாகவும், அதற்கெழுத்துப் பத்து. அவை: ட. ட. ண. த. த. த. த. ந. ப. ப. வும் அக்கினிமண்டலமுமாகக் கொள்ளுக. எ-று.

பிருதிவியின்குண மெட்டாவன:- "நொய்மைகனமிளமைமூப்புநோக்கும்பொன்மை, அம்மைசுகந்தந்துற்கந்தங்களென—விம்மையே, எண்ணியவையெல்லாமியம்பிலிசைவுடனே, மண்ணினிலெண்குணமாவை." என்பதனாலறிக. (௪௩௪)

இதுவுமது.

ஆக்கவத்தைசாக்கிரமாநவ்வுமாகும்
அண்டமெல்லாம்பிண்டத்திலாகக்கண்டு
நோக்குதியானமுமந்தமாத்திரையினேரே
நுணுகவிருந்திவையகற்றிமேலேபோனாற்
போக்குவதுமேதகலையற்கீசகலையாம்
புகழ்பிரதிட்டாகலைசீர்புகழ்குணங்களைந்துந்
தாக்குபெருங்குணமெட்டுப்பின்னுமோரெட்டுத்
தான்கொண்டததுதன்னைத்தாபித்துக்கொள்ளே.

(இ-ள்.) ஆக்கவத்தைசாக்கிரமாம் - இந்த மேதகலைக்கு அவத்தை சாக்கிரவத்தையாம்—நவ்வுமாகும் - பஞ்சாக்கரத்தில் நகரமுமாம்—அண்டம் எல்லாம் பிண்டத்திலாகக்கண்டு நோக்கு தியானமும் அந்த மாத்திரையின் நேரே நுணுகவிருந் திவையகற்றி மேலேபோனால் போக்குவது மேதகலை- இப்படி வகுக்கப்பட்ட அந்த அண்டத்திலுள்ளது சரீரத்திலு முள்ளதாகக்

கண்டு தியானத்தோடு பதினறுமாத்திரை நேரம் இந்த முக்கோணத் தழ லுருவைத் தியானித்து அதைநீங்கி மேலேபோமளவில் மேதகலை அழிந்த தாகத் தியானித்து—அர்ச்சகலையாம் புகழ் பிரதிட்டாகலை நீர்புகழ் குண ங்களைந்து - பிருதிவியின் குணம் நீங்கவே அர்ச்சகலையாம். அதற்குப் புகழப்பட்ட பிரதிட்டாகலையென்று பெயராம். அது அப்புவாம். அதற்கு நீர் உதிரம் சுக்கிலம் மூளை மச்சை யென்னுமிவையுடன்——தாக்குபெருங் குணமெட்டுப் பின்னுமோரெட்டுத்தான் கொண்டது அதுதன்னைத் தாபி த்துக் கொள்ளே - நெகிழ்தன் முதலிய தன் குணமெட்டும் இவையுடன் பிருதிவியின் குணமெட்டுங் கூடத் தியானித்துக்கொள்ளுக. எ-று.

அப்புவின்குணம் எட்டாவன:- நெகிழ்தறிரள்தனிறைதல்சுமத்த றரு நிறமைந்தாதறண்ணென்ற—லகவெருக்கு, மாருதல்கட்டுண்டல்வன்பிறை வன்னத்தாதல், கூறினெரெட்டுக்குணம். என்பதனலறிக. (கநடு)

இதுவுமது.

அதற்குமந்திரமிரண்டுபதநாலேந்தொன்று
மரும்புரங்களைம்பத்தாறிருபத்துமூன்று
முதற்கருவியிரவிமண்டலமுமதற்குள்ளின்
மொழியுமனுகதமீராறிதழிற்கவ்வாதி
இதற்குமலங்கருமமாமிரண்டுவிந்துவடிவா
மிருநான்குமாத்திரையாமெழுத்திருபான்நாலா
முதற்றனிவவ்வெழுத்தாகுமின்வடிவமாக
முன்னினைந்துமூலமேமொழிந்துன்னிப்போக்கே.

(இ-ள்) அதற்கு மந்திரம் இரண்டு - அந்தப் பிரதிட்டாகலைக்கு மந்தி ரம் வாமதேவமுஞ் சிரசுமாக இரண்டும்—பதம் நாலேந்தொன்றும் - பதம் அருபின்அருபின், பிரதமபிரதம, தேசதேச, சோதிசோதி, அருபா, அந க்கிந, அதூம, அப்த்ம, அநாதே, நாநாநாநா, தூதூதூதூ, பூபூ, புவ, சுவ, அநிதந, நிதந, நிதநோத்பவ, சிவ, சர்வ, பரமாத்மந, மகேசுவர, என இருபத்தொன்றும்—அரும் புரங்கள் ஐம்பத்தாறு - அரிதாகிய புவனங்கள் அமரேச,பிரபாச, நைமிச, புஷ்கர,ஆஷாட,தெண்டிமுண்ட,பாரபூதி,லகு ளீச,அரிச்சந்திர, சிறீசைல, செல்ப்பேசு, ஆம்ராதக,மத்தியமேச,மகாகாள கேதார, பைரவ, கயா, குருக்கேத்திர, நகல, நாகல, விமலேச,அட்டகாச மகேந்திர, பீமேஸ்வர, வஸ்திராபத, உருத்திரகோடி, அவிமுக்த, மகாலய, கோகர்ண, பத்திரகர்ண, சுவர்ணுக்ஷ, தாணு, சகலண்ட, துவிரண்ட, மகா கோட், மண்டலேஸ்வர, காலாஞ்சர,சங்குகர்ண, தூலேஸ்வர, தலேஸ்வர, பைசாச, ராக்ஷச, யாக்ஷ, காந்தர்வ, ஐந்திர, சௌமிய, பிராசேச,பிராமாய அகிருத, கிருத, பைரவ, பிரம்ம,வைஷ்ணவ,கௌமார,பௌம, சிறீகண்ட என ஐம்பத்தாறும்—இருபத்துமூன்றும் முதற் கருவி - அப்புத் தேயு வாயு

ஆகாயம். சுரோத்திரம் திவக்கு சட்சு சிங்குவை ஆக்கிராணம். சத்த பரிச ரூப ரச கந்தம். வாக்கு பாதம் பாணி பாயுரு உபஸ்தம். மனம் புத்தி ஆங்காரம் சித்தமுமாகக் கருவி இருபத்துமூன்றும்—இரவிமண்டலமுமத ற்குள்ளின் மொழியும் அனுகத மீராறிதழிற் கவ்வாதி - முன்னே சொன் ன அக்கினிமண்டலத்தின்மேலே ஆதித்தமண்டலம், அதனடுவே அனுக தம் இதற்குப் பன்னிரண்டிதழாம். அதில் க. வ. ம. வ. ஈ. வ. ஊ. ஜ. ஸ. ஞ. ட. ೦. எனப் பன்னிரண்டெழுத்தாம்—இதற்கு மலங் கரும மாம் இரண்டு விந்துவடிவாம் இருநான்கு மாத்திரையாம் எழுத்திருபான் நாலாம் - இந்தப் பிரதிட்டாகலைக்கு மலம் கன்மமலமாம். இதன் வடிவு கோணத்தலையிரண்டு விந்துவடிவும் மாத்திரையெட்டும் ஊ. ஹ. ஸ ஷ. ஶ. வ. ல. ர. ய. ம. ஹ. ப. ஹ. வ. த. ம. உ. ய. த. ண. ம. ம. ೦. ட. என இருபத்துநான்கெழுத்துமாம்—முதற்றனி வவ் வெழுத்தாகு மின்வடிவமாக முன்னினைந்து மூலமே மொழிந்துன்னிப் போக்கே - முதலான அப்புவுக்குத் தனி வ-எழுத்தாம். மின்கொடிபோலத் தியானித்து ஓம் ஹௌ என்றுச்சரித்து இதனைநீக்கி மேலே போகுக. எ-று. (கஙௌ)

இதுவுமது.

நிகழ்வித்தியாகலைநாமம்விடகலைதீயாகும்
நேர்குணங்கள்பதினாறின்மேலெட்டுமாகும்
புகலிரண்டுமந்திரநாலைந்துபதம்புவனம்
பொருந்துமூவொன்பதெழுத்தேழ்கருவியேழாந்
தகுவிந்துமலஞ்சுழுத்தியவத்தைவிசுத்தியதிற்
றுன்பதினாறிதழிலக்கரம்பதினாறவ்வா
நிகர்வடிவுமின்னொளியாநாலுமாத்திரையாம்
நேரமதுதியானமாய்நின்றுமேற்செல்லே.

(இ-ள்.) நிகழ் வித்தியாகலை நாமம் விடகலை தீயாகும் - விளங்கப்பட்ட வித்தியா கலைக்கு விடகலையென்றும், அக்கினியென்றும் பெயராம்—நேர்குணங்கள் பதினாறின் மேலெட்டுமாகும் - அதற்கு நேராக ஆகாரம் நித் திரை பயம் மைதுனம் சோம்பு இவையன்றிப் பிருதிவிக்கு மப்புவுக்குமு ள்ளகுணம் பதினாறும் சுட்டொன்றுவித்தல் முதற் றன்குணமெட்டுமாக இருபத்துநாலாம்—புகலிரண்டு மந்திரம் நாலைந்து பதம் புவனம் பொரு ந்து மூவொன்பதெழுத் தேழ் கருவியேழாம் - சொல்லப்பட்ட மந்திரம் அகோரமுஞ்சிகையுமாம். பதம்: தியாக ஆராய நமச்சிவாய சர்வப்பிரபவே சிவாய ஈசானமூர்த்தாய தற்புருடவத்திராய அகோர இருதயாய வாம தேவகுய்யாய சத்தியோசாத மூர்த்தியே நமோநம குய்யாதி குய்யாய கோப்

திரே அசிதனுய சர்வயோகாதி கிருதாய சர்வவித்தியாதியாய சோதிரூபாய பரமேசுபராய அசேதநஅசேதந வியோமின்வியோமின் வியாபின்வியாபின் என இருபதாம். புவனம் வாம பீம உக்கிர பவாய ஈசான ஏகவீர பிரசண்ட உமாபதி அஜ அனந்த ஏகசிவகுரோத சண்ட் துயுத சம்வர்த்த சூர பஞ்சாந்தக ஏகவீர சிகேத மகாத்துயுத வாமதேவ பவ உத்பவ ஏகபிங்கள ஏகேக்ஷண ஈசான அங்குட்டமாத்திர என இருபத்தேழாம். எழுத்து ஞ. ஙு. ஜ. ஊ. வ. ஊ. வ என ஏழாம். கருவி: காலம் நியதி கலை வித்தை இராகம் புருடன் மாயை என ஏழாம்—தருவிந்து மலஞ்சுழுத்தியவத்தை - இதற்கு விந்து மலமாம். அவத்தை சுழுத்தியாம்—விசுத்தியதிற்முன் பதினுறிதழிலக்கரம் பதினுறவ்வா நிகர் வடிவு மின்னெளியாம் - விசுத்தியென்னுமாதாரம் தாலுமூலமாம் அதிலே பதினுறிதழாம். அவ்விதழிலே நிற்கும் எழுத்தும் சு சூ ஊ ஈ உ ஊ ஐ ஐ ஸ ஸ ஷ ஷ ஒ ஔ ஸ ஸ: எனப்பதினுறும். இருவிந்துவுக்குமேல் அகரமாம். வடிவு: நிலைபெற்ற மின்னெளி போலவாம்—நாலுமாத்திரையாம் நேரமது தியானமாய் நின்று மேற்செல்லே - இந்தத் தியானத்திலே நாலுமாத்திரைநேரமிருந்து அதனை நீக்கி மேலே செல்லுக. எ-று.

தேயுவின் குணம் எட்டாவன:- "சுட்டொன்றுவித்தருன்றெட்டதனைத்தொட்டெழுதல், ... ... ... ...சுத்தசுத்த—மட்டறுத்த, வீதல்சோம்பாக்கலெழிற்சுக்கிலம்வீழ்த்த, தீயதனினெண்குணமாச்செப்பு." என்பதனுல் அறிக. இவ்வெண்பா பிரதிகளிற் பூரணமாகக் காணப்படவில்லை. ( )

இதுவுமது.

தானதனைச்சிந்தித்துமேலேபோனுற்
சாந்திவிந்துகலைவாயுத்தன்பேராகு
மானகுணமூவெட்டின்மேலெட்டோகும்
மந்திரங்களிரண்டுபதினென்றுபுவன
மீனமிலீரொன்பதெழுத்துக்கருவிமும்மூன்
றெழிலாஞ்ஞைக்கிரண்டிளவ்வுக்ஷவ்வுமாகு
மூனமிலாவிளக்கொளியாம்வவ்வாமீச
னுயருமிருமாத்திரையாமுகரம்யவ்வதுவே.

(இ-ள்.) தான் அதனைச் சிந்தித்து மேலேபோனுல் சாந்தி விந்து கலை வாயுத் தன்பேராகும் - இப்படித் தான் தியானித்துச் சென்முற் சாந்திகலையாம்; அதற்கு விந்துகலையென்றும் வாயுவென்றும் பெயராம்—மானகுணம் மூவெட்டின்மேல் எட்டுமாகும் - அதற்கு ஓடல் இருத்தல் கிடத்தல் நடத்தல் தத்தல் இவையன்றி முன்னையவற்றின் குணமிருபத்துநாலும் ஓடல்முதல் தன்குணமெட்டுமாக முப்பத்திரண்டாம்— மந்திரங்க ளிரண்டு

பதம் பதினொன்று புவனம் ஈனமிலீரொன்பதெழுத்துக் கருவி மும்மூன்று எழிலாஞ்ஞைக்கிரண்டு ஏவ்வு கூஃவ்வுமாகும் - இதற்கு மந்திரம் தற்புருடமும் கவசமுமாம். பதம்: வியோமவியாபினே, வியோமரூபாய, சர்வவியாபினே, சிவாய, அநந்தாய, அநாதாய, அநாசிருதாய, ஸ்திருவாய, சாசுவதாய, யோகபீட சமத்திதாய, நித்தியம்யோகிநே எனப் பதினொன்றும். புவனம்: வாமை, சேஷ்டை, ரௌத்திரி, காளி, கலவிகரணி, பலவிகரணி பலப்பிரமதமனீ, சர்வபூததமனீ, மனோன்மனீ, அநந்தன், சூக்குமன், சிவோத்தமன், ஏகநேத்திரன், ஏகருத்திரன், திரிமூர்த்தி, சிறீகண்டன், சிகண்டி, சதாசிவன் எனப் பதினெட்டாம். எழுத்து ம. வ. கூ. என மூன்றும். கருவி: சுத்தவித்தை, ஈசுவரம், சாதாக்கியம் என மூன்றும். சிறந்த ஆஞ்ஞையாகிய ஆதாரத்துக்கு எழுத்து கூஃ ஃஉ என இரண்டாம்—ஊனமிலா விளக்கொளியாம் வவ்வாம் ஈச னுயருமிரு மாத்திரையாம் உகரம் யவ்வதுவே - குற்றமில்லாத விளக்கொளிபோலவாம். அக்கரம் வகரமாம். தெய்வம் ஈசுரன். உகார யகாரவடிவுமாம். இதனை யிரண்டுமாத்திரைநேரந் தியானிக்குக. எ-று.

வாயுவின்குண மெட்டாவன: ஓடல்பரத்தலொடித்திருத்தறூளியாய்ச் சாடன்மணங்காட்டறண்ணென்ற—னேடித் திரட்டலுடல்வீக்கல்சேர்காந்தபோதி விரட்டியெண்ணுன்குகாற்கென். (கரு அ)

இதுவுமது.

நிறுத்துமலமாயேயமொளிதானுமிரவி
நேராகக்குறித்துன்னிமேலேபோனாற்
குறிப்பதுபின்சாந்தியாதீதமற்கெந்தி
குலவுமாகாயமந்திரம்மூன்றுபதமொன்
றுறைத்தவக்கரம்பதினாறும்புரமூவைந்து
முயர்கருவியிரண்டுகுணமொருநாற்பதாகு
மறைத்தவத்தசந்திரனுமதுபவ்வாளொளியா
மதற்கொருமாத்திரையவ்வாமதீதவத்தையாக்கே.

(இ-ள்.) நிறுத்துமல மாயேய மொளிதானுமிரவி நேராகக்குறித்துன்னி மேலேபோனால் - இந்தச் சாந்திகலைக்கு மாயேயமலமும் சூரியப்பிரகாசமுமாக முன்சொன்ன இரண்டு மாத்திரைநேரந் தியானித்துவிட்டு மேலேபோனால்—குறிப்பதுபின் சாந்தியாதீத மற்கெந்தி குலவுமாகாய மந்திர மூன்று பதமொன் றுறைத்த வக்கரம் பதினாறும் புரமூவைந்து முயர் கருவி யிரண்டு குண மொருநாற்பதாகும் - பின் தியானிப்பது சாந்தியாதீதம். அதற்குப் பெயர் அற்கெந்திகலையும் கொண்டாடப்பட்ட வாகாயமுமாம். மந்திரம் ஈசானம் நேத்திரம் அத்திரம் என மூன்றும். பதம்: ஓம் எனவொன்றும். பற்றிச் சொல்லப்பட்ட எழுத்து சு சூ ஐ. ஏ உ. ஊ ஐ ஓ

ஊ. ஊ. எ. ஐ. ஒ. ஔ ஊ் அ: எனப்பதினாறும். புவனம்: நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியாதீதை, இந்திகை, தீபிகை, ரோசிகை, மோசிகை, ஊர்த்துவகை, வியாபிநீ, வியோமரூபிநீ, அநந்தை, அநாதை, அநாசிருதை, எனப் பதினைந்தாம். கருவி: சத்தி, சிவமென இரண்டாம். குணம் முன்னைய முப்பத்திரண்டுடன் குரோதமுதற்றன்குணமெட்டுமாக நாற்பதாம்—அறைத்தவத்தசந்திரனுமது பவ்வாளொளியாம் அதற் கொரு மாத்திரை யவ்வாமதீதவத்தையாக்கே - அதற்கு வடிவு அர்த்தசந்திரனைப் போலும் பவ்வைப்போலுமாம். ஒளி: வாளொளியாம். ஹ என்னுமக்கரமும் அதீதவத்தையுமாக ஒருமாத்திரை நேரந் தியானிப்பாயாக. எ-று.

ஆகாசத்தின் குணமெட்டாவன: "குரோதம்வெளியாகைகொள்கை நாற்பூதம், விரோதஞ்செயலோசைமேவ—லராகங்கால், பாட்டிலவாமன் னல்பரத்தல்சத்திதன்னளவு, மீட்டியதினாற்பான்வெளிக்கு" என்பதனால் அறிக.

(கருகூ)

இதுவுமது.

ஆக்குமவ்வொளியதுவேநெற்றியாகு
மதற்குமேன்மூன்றுவிரற்புகைநிரோசாதந்
தாக்குமாணவமலமாமாத்திரையுமரையாந்
தகுமதன்மேன்மூன்றுவிரற்றானுதமாகும்
வீக்குமாணிக்கவொளிமாத்திரைகாலாகு
மிகுமுச்சிநாதாந்தமின்கொடியேயாகுந்
தாக்கரைக்கான்மாத்திரையாமேனாலங்குலத்திற்
றருசத்திமாகாணிமாத்திரைதானதற்கே.

(இ-ள்.) ஆக்குமவ்வொளியதுவே நெற்றியாகும் - இப்படி யுண்டாக்கப்பட்ட பஞ்சகலைகளி னொளிகள் நெற்றியளவாம்—அதற்குமேல் மூன்றுவிரற்புகை நிரோசாதந் தாக்குமாணவமலமாம் மாத்திரையு மரையாம் - நெற்றிக்குமேல் மூன்றங்குலத்திலே நிரோசாதகலை. அதன்வடிவு புகைநிறமாம். மலமாணவமாம். இதனை அரைமாத்திரை நேரந் தியானிக்க—தகுமதன்மேல் மூன்றுவிரற்றான் நாதமாகும் வீக்கு மாணிக்கவொளி மாத்திரை காலாகும் - அதற்குமேலாக மூன்றங்குலம் நாதமாம். அதனொளி மாணிக்கவொளியாம். தியானம் கால்மாத்திரையாம்—மிகுமுச்சி நாதாந்தம் மின்கொடியேயாகுந் தாக்கரைக்கான் மாத்திரையாம் - இதற்குமேல் நாதாந்தமுச்சியிலாம். ஒளி மின்னற்கொடிபோலவாம். இதனை அரைக்கால் மாத்திரைநேரந் தியானிக்குக—மேனாலங்குலத்திற் றருசத்தி மாகாணி மாத்திரை தானதற்கே - இதற்குமேல் நாலங்குலஞ் சென்றாற் சத்திகலையாம். மாகாணிமாத்திரை நேரமாம். எ-று.

(கசo)

இதுவுமது.

ஒளியதுதானுதயரவிநூறுகோடி
யோங்குமிதன்மேனுலின்வியாபினிதன்னொளியு
மளியருக்கன்வட்டநூறுயிரமாமதனுக்
கரைமாவேயரைக்காணிமாத்திரையேயாகும்
வெளிசமனையொளிநூறுயிரமிரவிவெயிலாம்
மிகுகாணிமுந்திரிகைமாத்திரையுன்மனைக்குத்
தெளியுமிருளரைக்காணிக்கீழரைமாத்திரையாந்
திகழுமங்குலமொன்றென்றாகச்சிந்தியுமே.

(இ-ள்) ஒளியதுதான் உதயரவி நூறுகோடி யோங்கும் - அந்தச் சத்தி கலைக்கு உதிக்கின்ற நூறுகோடி சூரியப்பிரகாசமாய்த் தியானிக்குக—இதன்மேல் நாவின் வியாபினிதன்னொளியு மளியருக்கன் வட்டநூறுயிரமாம் அதனுக்கரைமாவேஅரைக்காணி மாத்திரையேயாகும் - இதற்குமேனுலங்குலத்திலே வியாபினிகலை. அதன் பிரகாசம் நூறுயிரம் வாலசூரியரைப் போல அரைமா அரைக்காணி நேரந் தியானிக்குக—வெளி சமனை ஒளி நூறுயிர மிரவிவெயிலாம் மிகுகாணி முந்திரிகை மாத்திரை - மேல் வெளியிலே சமனைகலை. அதன் பிரகாசம் நூறுயிரம் உச்சிக்காலச் சூரியரொளியாம். மிகுந்த காணிமுந்திரிகை மாத்திரைநேரந் தியானிக்குக—உன்மனைக்குத் தெரியுமிரு ளரைக்காணிக்கீழரை மாத்திரையாம் திகழு மங்குலமொன் றென்றாகச் சிந்தியுமே - இதற்குமேலுன்மனைகலை. தெளிவுபெற்ற இருள்வடிவு போலாம். இதற்கு மாத்திரை அரைக்காணிக்கீழ் அரைமாத்திரைநேரந் தியானிக்குக. இந்தச் சமனை உன்மனையிரண்டும் ஒவ்வோரங்குலவெல்லையுடையதாகத் தியானிக்குக. எ-று. (கசக)

இதுவுமது.

நிற்கின்றவியோமரூபினிநீலாகாய
நிகழனந்தைகண்ணுடியனுதையலைகடனேர்
விற்கொண்டஅநாசிருதைநூறுயிரகோடி
விளங்குமதியிவைவிட்டாற்சாக்கிராதி
யற்புடனங்கவைகடந்தாற்பரமன்கூத்தா
மதிலழுந்தியந்நடத்திலொன்றுபட்டுப்
பொற்புடனிப்பொருளைநீங்காதிருப்பார்தமக்குப்
பூதநாயகன்றன்னருகிருக்கைபுகழன்றே.

(இ-ள்.) நிற்கின்ற வியோமரூபினி நீலாகாயம் - மேலே மாத்திரையின்றி மனமிறந்துதியானிப்பது வியோமரூபினிகலை. அது நீலநிறமான ஆகா

யம் போலவாம்—நிகழனந்தை கண்ணாடி - அனந்தை கண்ணாடியொளி போலாம்—அநாதை அலைகடல்நேர் - அநாதை அலைகின்ற நீலக்கடல்போலாம்—விற்கொண்ட அநாசிருதை நூறாயிரகோடி விளங்குமதி - ஒளியையுடைய அநாசிருதை நூறாயிரகோடி சந்திரப்பிரகாசமாம்—இவை விட்டாற் சாக்கிராதி - இவைவிட்டால் மனநினைவும் அதன் பிரிவு மதிலுறுதலுமுயிர்ப்பறுதலு மறத்தலுமாகிய சாக்கிரஞ் சொப்பனஞ் சுழுத்தி துரியம் துரியாதீதமாம்—அற்புட னங்கவை கடந்தாற் பரமன் கூத்தாம் அதிலழுந்தி யங்கட்டத்தி லொன்றுபட்டுப் பொற்புடனிப் பொருளை நீங்காதிருப்பார் தமக்குப் பூதநாயகன்ற னருகிருக்கை புகழன்றே - அன்புடன் தியானித்தவை நீங்கினாற் சிவனுடைய நடனச் சிலம்போசை தோன்றும்; அதிலே யழுத்தமாக அந்தக் கூத்தோடு மனமொன்றுபட்டு அழகுற அந்நிலையில் நீங்காமலிருப்பார்க்குப் பேறு பஞ்சபூதநாயகராகிய சிவனது வடிவுபோலாகி அவர் சமீபத்திலிருக்கையொரு பெரிதல்ல. எ-று. (கசஉ)

இதுவுமது.

வடிவிருகோணத்தடைவேமுக்கோணத்தலையில்
வருமிருவிந்தவ்வுமுவ்வுமவ்வுபிறைவடிவு
மிடையுமுக்கோணமிருவிந்துமேலலமு
மிதனினல்விந்துமேற்சூலமிதனடுவி
னடையுமிருபுள்ளிமேலிருபுள்ளிவட்ட
மாகுமிதிலந்தமாத்திரையினேரமின்
றுடையைந்தெட்டுப்பத்துப்பன்னிரண்டீரெட்டு
மோங்குநடங்கிரியைதனின்யோகமாநெறியே.

(இ-ள்.) வடிவு-நெறியே - இந்தப் பிராசாதத்திற்கியந்திரவடிவு கூறுங்காற் கீழ் நாற்கோணமாம்; இதற்குமேல் முக்கோணம்; இதன்றலையிலே இரண்டு வட்டம்; அதன்மேலே அகாரம்; அதன்மேலே உகாரம்; அதன் மேலே மகாரம்; அதற்குமேற் பிறைவடிவு; அதற்குமேற் செறிந்த முக்கோணம்; அதற்குமேற் கீழாக மேலிரண்டு வட்டம்; இதன்மேற் கலப்பை வடிவாம்; அதிலே விந்துவாம்; அதின்மேலே சூலவடிவாம்; அதற்குள்ளே இரண்டு வட்டம்; அதிற்றலையிலே இரண்டு வட்டம்; அதற்குமேல் ஒரு பெரிய வட்டம்; கீழேதொடங்கி மேல்வட்டமளவும் நடுவே ரேகையாம். இப்படித் தியானித்து முன்சொன்ன மாத்திரைநேரம் பாவித்து, பஞ்சகலைப் பிராசாதம், அட்டகலைப் பிராசாதம், தெசகலைப்பிராசாதம், துவாதச கலைப்பிராசாதம், சோடசகலைப்பிராசாதம் என்றிவற்றை விளங்கப்பட்டநடமாகக் காண்பது கிரியையில் யோகமாம். எ-று. (கசரு)

## யோகத்தில்யோகம்.

யோகத்தில்யோகநிராதாரமேயதுதா
னுயர்புலனுங்கருமவிந்திரியமுமுள்ளடக்கி
மோகத்தில்வளிகட்டுற்றொருவிகற்பமற்று
முச்சதுரமாதாரமடைவேநீங்கி
மாகத்தின்மதிக்கலையினமுதந்தேக்கி
வளருமகாரத்தொனியினடத்தைமன்னி
யேகத்தனுயதனின்செயருனுகி
யிரண்டற்றுத்தூங்குவதென்றிசைக்குநூலே.

(இ-ள்.) யோகத்தில்யோகம் நிராதாரமேயதுதா னுயர்புலனுங் கரும விந்திரியமும் உள்ளடக்கி - யோகத்தில்யோகமாவது நிராதாரயோகமாம். அந்த நிராதாரயோகந்தான் மிகுந்த ஞானேந்திரியங்களையும் கன்மேந்தி ரியங்களையும் உள்ளேயடங்க வொடுங்கியிருந்து—மோகத்தில் வளிகட்டுற் றொருவிகற்பமற்று - மூர்ச்சிக்கும் பிராணவாயுமுதற் பத்துவாயுவு மியங் காமற் பிராணவாயுவையுங் கபாலத்திலேயடக்கிச் சற்றுநேரம் மனத்தை விகற்பியாது—முச்சதுரமாதார மடைவே நீங்கி - மூலாதாரம் நாற்சதுர மும் சுவாதிட்டானம் முச்சதுரமுமாக இப்படி ஆருதாரத்தையும் மூன்று மண்டலத்தையும், அசபாமந்திரத்தைக் கீழ்மேலாகவுச்சரித்து வாயுவை யேற்றி மேலேசென்று—மாகத்தின் மதிக்கலையி னமுதந்தேக்கி - ஆகாயத் தின் சந்திரகலையிலே அக்கினியோடே யுறைத் ததனுலே யுருகி விழுமமு தைக்கொண்டுடலமெங்கும் நிறைத்து—வளரு மகாரத்தொனியினடத்தை மன்னி - மிக்குவரும் அகாராக்கரத்தினுலே திருக்கூத்தைத் தியானித்து— ஏகத்தனு யதனின் செயருனுகி யிரண்டற்றுத் தூங்குவதென் றிசைக்கும் நூலே - அந்தத் திருக்கூத்தோ டொன்றப்பட்டவனுகி அந்த நடனத்தின் வழியிலே தியானமென்றுந் தானமென்றுமிரண்டுபெடாமலிருந்து தூங்கு வது யோகத்தில் யோகமாம். எ-று. (கசச)

## ஞானத்தில்யோகம்.

மெய்ஞ்ஞானயோகமதுதெளியக்கேணீ
விதியாலுமடைவாலும்வடிவுகளினுலு
மெஞ்ஞான்றுஞ்சத்திகளுக்கிடமாகையாலு
மிறையுண்டன்றேயிதுவுமுண்டாகையாலும்
விஞ்ஞானநிலையிதுவேயாகையானும்
வேறைம்பத்தொன்றினிவைமேவாதானு
மைஞ்ஞான்றகண்டனெழுத்தைந்தும்வந்த
வழியறிந்துமொழிபவர்க்கேயழிவில்பொருள்வருமே.

(இ-ள்.) மெய்ஞ்ஞான யோகமது தெளியக் கேள் நீ - உண்மையான ஞானத்தில்யோகம் தெளியக்கேட்பாயாக—விதியாலுமடைவாலும் வடிவுகளினுலுமெஞ்ஞான்றுஞ் சத்திகளுக் கிடமாகையாலு மிறையுண்டன்றே யிதுவு முண்டாகையாலும் - அநாதியே பஞ்சாக்கரம் இரண்டு பிரகாரமாம்; ஒருவகை நமசிவாய வென்பதாம்; ஒருவகை சிவாயநமவென்பதாம். இதன்பொருள்: நமஸ்காரம் சிவனுக்கென்றும், சிவனுக்குநமஸ்காரமென்றுமாம். மந்திரங்களுக்கு மூலமாய் முந்தியவகையாலும், இவ்வெழுத்தைந்தின் மவ்வின் றேற்றத்தானும் பஞ்சசத்திகளுக்கு மிடமாதலாலும், பஞ்சவடிவுகளினுலுஞ் சிவனுள்ளவன்றே யுண்டாகையானும்—விஞ்ஞான நிலையிதுவேயாகையானும் வேறைம்பத்தொன்றினிவை மேவாதானும் - ஞானவொழுங்குக்கு மிவை யடைவாமாதலானும் வேறுபட்டுத் தோன்றும் ஐம்பத்தோரெழுத்துக்குள்ளும் இவையைந்தும் பொருந்தாமையானும்—மைஞ்ஞான்ற கண்டனெழுத்தைந்தும் வந்தவழியறிந்து மொழிபவர்க்கே அழிவில்பொருள் வருமே - மையொழுங்கு காணப்பட்ட கண்டத்தையுடையானது ஐந்தெழுத்துண்மையையறிந்து செபிப்பவர்க்கு அழிவற்ற பொருளாகிய சிவஞானங் கைகூடும். எ-று.

மெய்ஞ்ஞானம்- சிவஞானம். விதியாவது பஞ்சபூதம், பஞ்சகலை, பஞ்சேந்திரியம், பஞ்சாவத்தை, பஞ்சகிருத்தியம், பஞ்சபாணம், பஞ்சமூர்த்தி, பஞ்சமுகமுதலைந்தாகச் சொல்லப்பட்டவையெல்லாம்வருமாதலால் விதியென்ருர். அடைவாவது: சிவனுஞ் சத்தியு மான்மாவுந் திரோதமு மலமுமாதல். வடிவாவது: அசுத்தமாயையை வளையாமற் சுத்தமாயையை வளைத்தல். திரோதவடிவு இரண்டுமாயையினும் வளைதல். மலவடிவு இரண்டினுஞ்சென்று நடுப்பட்டுநிற்றல். ஆன்மவடிவு: இரண்டையும் விட்டுவளைதல். சத்திவடிவு: இரண்டையும் வளைந்து மேற்பட்டுநிற்றல். சிவவடிவு: சத்திகளுக்கிடமாதல்; பஞ்சசத்திகளுக்கிருப்பிடமாகுகை. அநாதியென்றது அரனுமான்மாவு முளவன்றே யுளதாதலால். ஞானநிலையென்றது: ஆணவத்தைநீங்கித் திரோதங்கடந்து ஆன்மாவைக்கண்டு ஞானத்தைத் தெரிசித்துச் சிவத்திற் கலத்தலாம். எழுத் தைம்பத்தொன்றின் மேவாதென்றது மனிதர்வடிவுபோலச் சிவன்வடிவானுலு மல்லவானுற்போல எழுத்துக்களின் வடிவு காட்டப்பட்டதல்லது அவையாகாதென்பதாம். வந்தவழி என்பது சிவஞ் சத்தி ஆன்மா திரோதானம் மலமென வந்தவகை காண்க. (கசரு)

இதுவுமது.

எழுத்துச்சத்தியுமிதனுட்பொருள்சிவமுமாகு
மிதுவன்றிச்சிவனெழுத்துஞ்சத்தியுயிரெழுத்துங்
கழிப்பிதிரோதானமலவெழுத்துமாமாற்
கடைதலையாக்கொள்ளுமதுகதிவழியன்ருரும்.

விழித்தடைவேவைத்திதனையிதற்பொருளுமுணர்ந்து
வேறின்றியொவ்வொன்ருயிரண்டுவிட்டுச்சரித்தாற்
பழிப்பிலுயிர்நடுவாகும்படியறிந்துபார்க்கை
பரமானசிவஞானயோகமெனப்பகரே.

(இ-ள்.) எழுத்துச் சத்தியும் இதனுட்பொருள் சிவமுமாகும் - எழுத்துக்களைந்தும் சத்தியும் அவற்றின் பொருள் சிவமுமாம்—இதுவன்றிச் சிவனெழுத்துஞ் சத்தி உயிரெழுத்தும் கழிப்பி திரோதான மலவெழுத்து மாமால் - இவ்வகையன்றிச் சிவனெழுத்து முதலுஞ் சத்தியெழுத் திரண்டாவதும் உயிரெழுத்து மூன்ருவதும் நீக்கமற்ற திரோதான வெழுத்து நாலாவதும் மலவெழுத்து ஐந்தாவதுமா யடைவுபெற்று நிற்குமாகையால்—கடைதலையாக் கொள்ளுமது கதிவழியன்ருகும் - இவ்வெழுத்தைச் சொன்னவடைவி லுச்சரியாது திரோதமலங்கள் கடையாயிருப்பதைத் தலையிலேயாகக் கொள்ளுமது தியானிக்குங்காலத்திற் போகவழியாய்விடுமெல்லது முத்திவழியாகாதாம்—விழித்தடைவே வைத்திதனை யிதற்பொருளு முணர்ந்து - இவ்வெழுத்தை ஞானவழியாகப் பார்த்துச் சிவனாலே சத்தியுஞ் சத்தியாலே ஆன்மாவும் ஆன்மாவைப்பற்றிப் போகத்தைக் காட்டுந் திரோதமுமத்திரோதத்தானடக்கும் மலமுமென்று தெரிசித் துச்சரிக்குநேரத்தில் ஆன்மாத் திரோதமுதலான வுச்சாரணையி லான்மாப் பின்னின்று முன்னுய்த் திரோதத்தைப் பற்றுவதுபோல வான்மா வடைவி லுச்சாரணத்திலுந் திரோதமே பற்றும்பொருளை யுணர்ந்து—வேறின்றி ஒவ்வொன்ரு யிரண்டுவிட் டுச்சரித்தாற் பழிப்பிலுயிர் நடுவாகும் படியறிந்துபார்க்கை பரமான சிவஞான யோகமெனப் பகரே - வேறுபாடின்றி யொன்ருென்ருகிய திரோதங்கூடாமற் திரோதமலநிலைகளை ஆன்மாவிட்டருளிலேயுற்று நிற்கு நிலையாகவுச்சரித்தால் அவ்வுச்சாரணங் குற்றமற் ருன்மா நடுவேயாய்ப் பற்றுஞ் சிவத்திலே ஆன்மாக் கருத்தேகொண்டுநாட வெப்போது முச்சரிப்பது ஞானயோகமென்னு முறைமையாமென்று சொல்லுவாயாக. எ-று.

கடைதலையுச்சாரணம் முத்திகூடுதலில்வழிப் போகந் துய்ப்பிக்கும் அபரயோகமாம். அடைவிலேந்துமுச்சரிப்பது அத்துவிதப் பேரும். ''ஓதுவார்தமை நன்னெறிக்குய்ப்பது'' என்றும்; ''வானவராய்க் குவிப்பது'' என்றும்; ''எல்லாத்தீங்கையுநீங்குவர்'' என்றும்; ''இயமன்றூதுவரஞ்சுவர்'' என்றும்; ''செல்வமுமல்கும்'' என்றும் திருஞானசம்பந்தசுவாமிகள் அருளியதும் போகவேதுவாமென்றறிக. (கச௬)

## சரியையில் ஞானம்.

நற்சரியைதனின்ஞானமிறைக்கெட்டுமலரா
நாடிலொன்றுங்கொல்லாமைபுலனடக்கல்சாந்தி
முற்படுமெய்யன்புதியானந்தவமேயுண்மை
முழுத்தறிவுமிதுபூசையிதுவுமன்றி

யற்புதமாம்பொருடன்னையவனடியார்தம்மை
யாலயத்தையவனெனவேயறுதியிட்டுக்கொண்டு
தற்பணியாய்த்தியானஞ்செய்திடுவதிதுதானே
தலையானபொருடன்னினிலையாமன்றே.

(இ-ள்.) நற்சரியைதனின் ஞான மிறைக்கெட்டு மலராம் - ஞானவகை கூறுமிடத்து நல்ல சரியையின் ஞானமாவது சிவனுக்கு ஞானபுட்பமெட்டு வகையாம்—நாடி லொன்றுங் கொல்லாமை - ஆராயுமிடத்து ஒருயிரையுங் கொலைசெய்யாமை—புலனடக்கல் - இந்திரியங்களை யடக்குதல்—சாந்தி - பொறையுடைமை—முற்படு மெய்யன்பு - முன்னென்று சொல்லப்பட்ட உண்மையன்பு—தியானந்தவமேயுண்மை - உள்ளேகாண்கையாகிய தியானம் நல்லதவஞ் செய்தல் சத்தியஞ்சொல்லுதல்—முழுத்தறிவுமிது பூசை - சிவனேவலாக வறிவுகோடல் இவையெட்டுப்பேதமு முடைமையாகச் செய்யச் சிவனுக்கு மலர் சாத்தியபிரியமுண்டாம்—இதுவுமன்றி அற்புதமாம் பொருடன்னை அவனடியார் தம்மை ஆலயத்தை அரனெனவே யறுதியிட்டுக்கொண்டு தற்பணியாத் தியானஞ்செய்திவெ திதுதானே தலையான பொருடன்னி னிலையாமன்றே - இந்த முறைமையுமன்றி ஆச்சரியமான சதாசிவமூர்த்தியையும் அவன் வேடம்பூண்ட அவனடியாரையும் அந்தமூர்த்தி மன்னுங் கோயிலையும் அந்தப் பரம்பொருளாகவே நிச்சயித்துக் கைக்கொண்டு அதுவே தனது பணியாகத் தியானஞ்செய்திருப்பதுதானே மேலான பொருளின் நிலைமையாம். எ-று.

கொல்லாமை: "உடன்படல்கோறலுயிரிரக்கமற்றல்-கொடர்ந்தடைத்தலெல்லாங்கொலை. அடக்கம்: கலவியுங்காமாதியாசைவழியைந்து-மலைபுலன்சேருதலடக்கம். பொறுமை: செத்தினும்போழினும்தீயுறுத்தினும்பொறுத்தல்- சத்தி மாற்றுதலேயன்பு. தியானம்: உருவுமருவுமுருவருவுமெல்லாந்-திருமேனியுறக்காண்டறியானம். தவம்: அர்ச்சனையீசற்கடைவினிற்செய்வதுவே-மெச்சியாற்றவமாமேல். சத்தியம்: சத்தியங்கூடிற்றருமுயிர்க்குக்கேடுவரிற்-பொய்த்ததுஞ் சத்தியமாய்ப்போம். அறிவு: கல்வியாற்போதத்தாற்காலத்தாற்சீலத்தா - லின்றியறிவதறிவு." என்னுமிவைகாண்க.

(கசஎ)

## கிரியையில்ஞானம்.

எவ்வுயிர்க்குமாதாரமெழுத்தென்றுகண்டே
யிசைந்துசூக்குமவெழுத்தாலிறையிதயத்தாக்கிச்
செவ்வையுடன்பூசித்தோங்காரத்திலோமஞ்
திகழ்வித்துவிந்துக்கோதண்டத்திற்றியானம்
வவ்வுதலாம்நாபியடிப்பன்னிரண்டங்குலமா
நாளமாயுபாதானஞ்சிவாதிமலர்மூர்த்தி
யவ்வித்தைமூர்த்திமானிறையென்றுகண்டே
யருச்சிப்பதுங்கிரியைஞானமெனவறையே.

(இ-ள்.) எவ்வுயிர்க்கு மாதாரமெழுத்தென்றுகண்டே யிசைந்து சூக்கும வெழுத்தா லிறை யிதயத்தாக்கிச் செவ்வையுடன் பூசித் தோங்காரத்தி லோமங் திகழ்வித்து விந்துக்கோதண்டத்திற்றியானம் வவ்வுதலாம் - கிரியையில்ஞானம் மூன்றுபேதமாம். ஒன்று: எல்லாவுயிர்க்கும் அந்தக்கரணங்களுக்கும் ஆதாரமாவது சூக்கும வெழுத்தெனக் கண்டு பொருந்திய சூக்குமத்தாலே இதயத்திலே பூசித்து மூலாதாரத்திற் பிரணவத்திலே அக்கினியை யெழுப்பிச் செவ்விதாக ஓமஞ்செய்து விளங்கியபின் புருவமத்தியிலே விந்துத்தானமாகிய கோதண்டத்தே தியானமுற்றுப் பொருந்துதலாம்—நாபியடிப் பன்னிரண்டங்குலமா நாளமாயுபதானஞ் சிவாதிமலர்மூர்த்தி அவ்வித்தைமூர்த்தி மானிறையென்று கண்டே யருச்சிப்பதுங் கிரியைஞானமென வறையே - முன்சொன்ன நெறியன்றி மூலாதாரந்தொடங்கிப் பன்னிரண் டங்குலத்திலே நாளமாய் அது முப்பத்தொரு தத்துவமான மாயையளவாய் மலமுபாதானம் மூன்றும் சுத்ததத்துவம் ஐந்துமாக எட்டும் மலராக்கி அதற்குட் சிவன்வடிவு வித்தியாதேகமாக்கி இந்த வடிவையுடையவன் சிவனெனக்கண்டு ஓம் ஆம் ஔம் சிவாயநமவென்னும் அட்டாட்சர மந்திரத்தால் அருச்சிப்பதும் கிரியையில் ஞானமென்றுகூறுக. எ-று.

இதுவுமது.

சிந்தனையான்மஞ்சனமுமலருமற்றுந்
தேடுவனவுடற்கோயிற்குள்ளுளவையாக்கி
அந்தமிலான்றன்பூசைதியானத்தாக்க
லாதித்தன்மதியரவுகோட்பட்டல்போலு
முந்தியவாடியைவிளக்குமுறையேபோலும்
முழுப்பாசிகல்லெறிந்தானீங்குமுறைபோலும்
இந்தவகைசிவன்நினையநினையவந்தங்
கெதிர்ப்பட்டுத்தானுக்கியின்பமருளிடுமே.

(இ-ள்.) சிந்தனையால் மஞ்சனமும் மலருமற்றுந் தேடுவன உடற்கோயிற் குள்ளுளவையாக்கி அந்தமிலான்றன் பூசை தியானத்தாக்க - தியானத்தினலே காயமாகிய கோயிலுள் மனமாகிய அடியானுற் சத்தியமென்பதனுலே திருவலகு திருமெழுக்கிட்டு ஆன்மாவை லிங்கமாக்கி அன்பினுலே திருமஞ்சனந் திருப்பள்ளித்தாமமுதலான முன்சொன்ன அட்டபுட்பங்களுமாக்கிப் பத்தியாலே நிறைய செய்யும் பாலுங்கூடிய சமாதியே பூசையாகப் பூசித்தால்—ஆதித்தன் மதியரவு கோட்பட்டல் போலும் முந்திய வாடியை விளக்குமுறையே போலும் முழுப் பாசி கல்லெறிந்தால் நீங்குமுறைபோலும் - சிவம்வெளிப்படும். அதுவெளிப்படுமாறு: சந்திராதித்தர்களைப் பாம்புமறைக்க உள்ளேவிளங்குவதுபோலவும், கண்ணாடியைவிளக்கப் பிரகாசிக்குமதுபோலவும், பாசியிற் கல்லெறிந்தால் நீங்குவது போலவும் அஞ்ஞானம் நீங்கிச் சிவம் வெளிப்படும்—இந்தவகை சிவன் நினைய நினைய வந்திங்கெதிர்ப்பட்டுத் தானுக்கி யின்பமருளிடுமே - இந்தப்பிரகாரமாகத்

தியானிக்கத் தியானிக்கச் சிவம் அங்கே வந்தெதிர்ப்பட்டு அஞ்ஞானத்தை நீக்கித் தானாகச்செய்து பேரின்பத்தையும் பின்னுண்டாக்கிவிடும். எ-று. காயமே கோயிலாகவென்னுந் தேவாரத்தாலுணர்க. (கசசு)

இதுவுமது.

கண்டவுருவனைத்தினையுஞ்சத்தியாக்கிக்
கருதுமதற்குள்ளுயிரேசிவமென்றுகண்டு
கொண்டெங்குமானவறிவெப்போதும்விடாமற்
கொள்வதுதானம்மிடத்திலெப்போதுங்குறிக்க
அண்டர்நாதன்மறைகட்காதிநாத
னனந்தநாதனரியயற்குநாதன்
புண்டரிகப்பதகோவவாடுநாதன்
புகழ்கிரியைஞானமெனப்புகலுமாறே.

(இ-ள்.) கண்டவுருவனைத்தினையுஞ் சத்தியாக்கிக் கருதுமதற் குள்ளுயிரே சிவமென்றுகண்டு கொண்டெங்குமானவறி வெப்போதும் விடாமற் கொள்வது தான் நம்மிடத்தி லெப்போதுங் குறிக்க - பிரபஞ்சமாகக் காணப்பட்ட வடிவுகளுங் காணப்படாத நிட்கள வடிவுகளுமாகிய எல்லாவற்றையுஞ் சத்திவடிவாகக் கண்டு இதற்குப் பிராணனாகச் சிவனைத் தியானித்துத் தரிசித்துக் கைக்கொண்டு எவ்விடத்தினுமான அறிவு இரவும் பகலும் விடாமற் கொள்வதுதான் இதனைக்குறித்து அறிகுக—அண்டர்நாதன் மறைகட் காதிநாதன் ஆனந்தநாதன் அரியயற்குநாதன் புண்டரிகப் பதகோவ வாடுநாதன் புகழ்கிரியை ஞானமெனப் புகலுமாறே - இதுவே தேவர்களுக்குத் தலைவரும் வேதங்களுக்காதியாகிய சுவாமியும் ஆனந்தமே வடிவான முதல்வரும் அரிபிரமாக்களுக்குத் தலைவரும் செந்தாமரைத்தாளேவத் தூக்கியாடுகின்றவருமாகிய சிவபெருமானைப் புகழ்ந்துரைக்குங் கிரியையில்ஞானமென ஆகமங்கள் கூறும். எ-று.

"அண்டமுதலாயவனிபரியந்தங் - கண்டதொன்றில்லைக்கனங்குழையல்லது கண்டனுங் கண்டியுமாகின்றகாரணங் - குண்டகைகோளகை கண்டதனாலே." என்னுந் திருமந்திரத்தாலுணர்க. (கருo)

## யோகத்தில்ஞானம்.

மண்ணினையப்புனறன்னையெரியைக்காற்றை
வடிவிலாகாயத்தையொளிகடன்னை
யெண்ணியவச்சூனியத்தையக்கரங்கடன்னை
யெழில்விந்துநாதத்தையாதிவற்றினொன்றின்
வண்ணமதாய்மன்பவனமிரண்டுங்கெட்டு
வைத்தவதிற்சித்தமாய்மற்றொன்றிற்சலியா
துண்மையினிலொன்றுபடக்கண்டுகொள்வததுவே
யுயருசிவயோகத்தின்ஞானமெனவுணரே.

(இ-ள்.) மண்ணினை அப்புனறன்னை எரியைக் காற்றை வடிவிலாகாசத்தை ஒளிகடன்னை எண்ணியவச் சூனியத்தை அக்கரங்கடன்னை யெழில் விந்து நாதத்தை யாதிவற்றினென்றின் வண்ணமதாய் - மண்முதலாகச் சொன்ன யாவற்றையும் கருதிக் குறிக்கும் வடிவாதல் அது மண்ணைக்குறித்ததியானம் வச்சிரகாயஞ்சாதித்தல்; நீரைக்குறித்த தியானம் வாயுவுள்ளடக்கிப் பவனமொடுக்கி ஒன்பதுவாயிலினும் நீர்செல்லாது அடக்கி நீரில்நடத்தல் கிடத்தல் அகமருஷணஞ்செய்தல் ஆயிரமுகமிருத்தல் முதலிய இயற்றுவதுமாம்; தீயாவது: மூலாக்கினியையெழுப்பிக் கபாலத்தைவெடிப்பித் துடலை வெந்த புரிபோலாக்கி நெருப்புள் நிற்க விருக்கக்கிடக்கச்செய்வது; காற்றுவது: வாயுவை யுடலெங்குமோட்டிக் காயத்தோடாகாயத்திற்செல்லப் பரகாயப்பிரவேசஞ்செய்யவருதல் வடிவில்லாத வாகாயம் உடலைச் சூனியமாக்கல் உயிரைச் சூனியமாக்கல் அறிவைச் சூனியமாக்க விவையாம் இதனுல் அணுமா மகிமாவுமாம்; ஒளிகளாவது: நாசிநுனி புருவமத்தியம் விளக்குள்ளொளி மின்னொளி விந்துவொளி உள்ளொளி முதலான வொளிகளைத் தியானிக்கை; சொல்லப்பட்ட சூனியமாவது எல்லாந் தன்னிடமாகத் தானெங்குஞ்செல்ல வியற்றுகை, வாயுவை நிறைவாகக் கண்டந்நிறைவோடறிவுநிறைதலாம்படி நிற்றல்; அக்கரங்களாவது: ஓளகாராதி அக்கரங்களைத் தனித்தனியே தியானித்தல்; அழகிய விந்துநாதமாவன: குறித்த பொருளிலே யுரைப்பதும் அதிலேயடங்கச் சங்கு கடல் மணிபோலவோசையெழுவதுமாம். இவையாதிவற்றின் கூறிய நிலையே நிலையாக இவற்றென்றின் வடிவாய்—மனபவன மிரண்டுங்கெட்டு வைத்தவதிற் சித்தமாய் மற்றொன்றிற் சலியா துண்மையினி லொன்றுபடக் கண்டுகொள்வததுவே யுயருசிவயோகத்தின் ஞானமெனவுணரே - அந்த நிலையிலே மனமும் வாயுவு மடங்க வவைதானே அறிவுமாய் வேறு சற்றும் ஊண் உறக்கங்களினும் பேதியாமல் அவ்வுண்மையின் மனக்கவலையற் றொன்றுபட்டதாகக் கண்டுகொண்டு நின்ற வத்தன்மைகள் பெறுவதுவே யோகத்தின் ஞானமாம். எ-று. (கருக)

## ஞானத்தில்ஞானம்.

சரியையிற்சரியைமுதல் யோகத்தில்ஞானமீருகிய பதினைந்து
பாதமுங் கூறி ஞானத்தின்ஞானத்திலே பரமத
கண்டனஞ் சுவமததாபனஞ் செய்யத்
தொடங்கி முதற் புறச்சமய உட்சமயமிவையென்று
தொகுத்துக் கூறுகின்றார்.

ஞானத்தின்ஞானமதுதெளியக்கேணீ
நற்சமயம்புறச்சமயமாகநாற்பத்தெட்
டீனத்தவகைஉலோகாயதன்சார்வாக
னியல்கொள்சவுத்திரியோகன்மாத்துமிவைபாடி.

தானுற்றநிகண்டனுசீவகனும்வேதந்
தரும்பாட்டம்பிரபாகர்நையாயிசத்தப்பிரமன்
தேனுற்றவைசேடனிரீச்சுரவானீதி
திகழும்பாற்கரியனுமீமாங்கிசனுந்தெரியே.

(இ-ள்) ஞானத்தின்ஞானமது தெளியக்கேள் நீ நற்சமயம் புறச்சமய மாக நாற்பத்தெட்டு - ஞானத்தின்ஞான முறைமையைத் தெளியச் சொல்வோம் கேள் அகச்சமயபுறச்சமய பேதங்கள் நாற்பத்தெட்டாம்—ஈனத்தவகை உலோகாயதன் சார்வாக னியல்கொள் சவுத்திரி யோகன் மாத்துமி வைபாடி தானுற்ற நிகண்டன்ஆசீவகனும் - வேதநிந்தகராகிய உலோகாயதன், சாருவாகன், சவுத்திராந்திகன், யோகசாரன், மாத்துமிகன், வைபாடிகன், நிகண்டவாதி, ஆசீவகன் ஆகிய எண்மரும் — வேதந்தரும் பாட்டம் பிரபாகர் நையாயி சத்தப்பிரமன் தேனுற்ற வைசேடனிரீச்சுரவா னீதிதிகழும் பாற்கரியனு மீமாங்கிசனுந் தெரியே - வேதத்திற்கு உடன்பாடுடைய பாட்டாசாரியன், பிரபாகரன், நையாயிகன், சத்தப்பிரமவாதி, மீமாஞ்சகன், பாற்கரியன், நிரீச்சுரசாங்கியன், வைசேடிகன் என்னு மெட்டுமோக அறிகுதி. எ-று. (கருஉ)

இதுவுமது.

தெரிபாஞ்சராத்திரமாயாவாதம்வேதாந்தந்
திகழ்வைணவம்வைகானதமுந்துவிதமுமாம்
வருதிறல்சேர்சோதிடம்பின்னத்துவிதமாக
மருவுபுறச்சமயமிருபத்துநால்வகையாம்
அரியவுட்சமயத்துச்சுத்தசைவம்
அசுத்தசைவம்கலப்புச்சித்தாந்தசைவம்
விரிகொளநாதியுமவாந்தரமுடனேபேதம்
விளங்குமனுசைவமாதிசைவமெனும்விதியே.

(இ-ள்.) தெரிபாஞ்சராத்திரம் மாயாவாதம் வேதாந்தம் திகழ் வைணவம் வைகானதமும் துவிதமுமாம் வருதிறல்சேர் சோதிடம் பின் அத்துவிதமாக மருவு புறச்சமய மிருபத்துநால்வகையாம் - பின்னுந் தெரிந்து சொல்லப்பட்ட பாஞ்சராத்திரம், மாயாவாதம், வேதாந்தம், விளங்குகின்ற வைணவம், வைகானதம், துவிதம், வலிய சோதிடம், அத்துவிதமாக எட்டும் வேதாந்தமாகிய வாக்கியபேதங்களாக விரிந்த சமயங்களாம். (உலோகாயதம், பௌத்தம், ஆருகதம், பாட்டம், மீமாஞ்சகம், பாஞ்சராத்திரம் என்னும் புறச்சமயமாறில், உலோகாயதம்: உலோகாயதன், சாருவாகன் என இரண்டுபேதமும்; பௌத்தம்: சவுத்திராந்திகன், யோகசாரன், மாத்துமிகன், வைபாடிகன் என நாலுபேதமும்; ஆருகதம்: நிகண்டவாதி, ஆசீவகன் என இரண்டுபேதமும்; பாட்டம்: பாட்டாசாரி

யன், பிரபாகரன், நையாயிகன், சத்தப்பிரமவாதி என நாலுபேதமும்; மீமாஞ்சகம்: மீமாஞ்சகன், பாற்கரியன், நிரீச்சுரசாங்கியன், வைசேடிகன் என நாலுபேதமும்; பாஞ்சராத்திரம்: பாஞ்சராத்திரம், வைணவம், வைகானதம், சோதிடம், மாயாவாதம், வேதாந்தம், துவிதவாதம், அத்துவிதவாதம் என எட்டுப்பேதமுமாக இருபத்துநாலும் புறச்சமய வகையாம்.)—அரிய உட்சமயத்துச் சுத்தசைவம் அசுத்தசைவம் கலப்புச் சித்தாந்த சைவம் விரிகொளநாதியும் அவாந்தரமுடனே பேதம் விளங்கும் அனுசைவம் ஆதிசைவமெனும் விதியே - அரிதாகிய உட்சமயமாகிய சைவம், பாசுபதம், வாமம், பைரவம், காளாமுகம், மாவிரதமென்னும் ஆறு சமயங்களுள், சைவம்: சுத்தசைவம், அசுத்தசைவம், மிச்சிரசைவம், சித்தாந்தசைவம், அநாதிசைவம், அவாந்தரசைவம், பேதசைவம், அனுசைவம், ஆதிசைவம் என்னும் ஒன்பதுவகையாம். இவை ஆகமஞானத்தால் விளங்குவனவாம். எ-று. (கடுரு)

இதுவுமது.

பாசுபதம்பரிதியொடுமதிவழிமூன்ருகும்
பகர்வாமமொன்பதுநான்மந்திரமேமருந்து
மேசிலியந்திரங்கன்மமத்துவிதவாத
மிசைதுவிதவாதமிச்சிரமுஞ்சித்தாந்த
மாசில்பைரவங்காளாமுகமேமாவிரத
மருட்சைவசித்தாந்தமொன்பதுமேயாகும்
நேசமுறுசமயங்களிருபத்துநாலும்
நிலையானசமயங்களென்னுநூனெறியே.

(இ-ள்.) பாசுபதம் பரிதியொடு மதிவழி மூன்ருகும் - பாசுபதமும்: பாசுபதம், சூரியவாதம், சந்திரவாதமென மூன்றுவகையாம்—பகர்வாம மொன்பது நூன்மந்திரமே மருந்து மேசிலியந்திரங் கன்மம் அத்துவிதவாதம் இசைதுவிதவாதம் மிச்சிரமும் சித்தாந்தம் - சொல்லப்பட்ட வாமமும் வாமதந்திரம், மந்திரவாதம், இயந்திரவாதம், அவுடவாதம், கருமவாதம், அத்துவிதவாதம், துவிதவாதம், மிச்சிரவாதம் வாமசித்தாந்தமென ஒன்பதுவகையாம்—ஆசில் பைரவம் காளாமுகமே மாவிரதம் - குற்றமில்லாத ஒரொன்ருன பைரவம் காளாமுகம் மாவிரதமென்னும் சமயம் மூன்றுமாக—நேசமுறு சமயங்கள் இருபத்துநாலும் அருட்சைவசித்தாந்த மொன்பதுமேயாகு நிலையான சமயங்களென்னும்நூலே - அன்புறுஞ் சமயங்களாகிய உட்சமயபேதமும் இருபத்துநாலாம். இவைகளுக்கப்பாற்பட்ட ஈசுரவைக்கியவாதம், பாடாணவாதம், பேதவாதம், சிவசமவாதம், சங்கிராந்தவாதம், ஈசுரவவிகாரவாதம், நிமித்தகாரண பரிணாமவாதம், சைவவாதம் எனவெட்டும், அருள்நிறைந்த சைவசித்தாந்தமொன்றும் ஆகிய ஒன்பதும் நிலையான சமயங்களென்று முறையே நூல்கள் சொல்லும். எ-று. (கடுச)

மேலே சொல்லிய சமயிகள் மதங்கூறி மறுப்பானெடுத்த ஆசிரியர்
அவற்றுள் வேதாகம நிந்தகராகிய எண்மரில்
உலோகாயதமதங் கூறுகின்றார்.

அறமென்றுசொல்லுவதுபிறிதொன்றில்லை
அரிவையர்க்காம்பணிசெய்தலதுதானேயறமாம்
புறநின்றுதடுமாறிற்பெறலாமென்கை
போய்க்கண்டாரிலையாமாற்பொய்மைநிலையாகும்
நெறியாவதரிவையர்க்காம்பணிசெய்துவழுத்தி
நேரின்பமனுபவித்தல்முத்திதனினெறியா
முறுதியெனக்கண்டுலகந்தழீஇயவொட்ப
முடையவரேயவருலகாயதமென்னுமுலகே.

(இ-ள்.) அறமென்றுசொல்லுவது பிறிதொன்றில்லைஅரிவையர்க்காம்பணி செய்த லதுதானே அறமாம் - சில தவத்தோர் சொல்லுந் தருமநெறி செய்தவர்கள் செய்துமாய்வதல்லது அவர்கள்நேர்ந்த திரவியமும் வரக்கண்டதில்லை வருந்திய சரீரத்துக்கு மின்பங் கண்டதில்லை வீணிலே யுளைத்துத் திரிந்து செத்துப் போவதே கண்டதாதலான் மகளிர்களுக்கான தொழில் அருச்சனை தானம் முதலியசெய்தால் ஆற்றருநன்மையும் உடற்கு முயிர்க்குங் காணப்பட்ட சுகமாகிய வின்பத்தையுந் தருமாதலால் இல்லறமே நல்லறமாம் — புறநின்று தடுமாறிப் பெறலாமென்கை போய்க்கண்டா ரிலையாமாற் பொய்மைநிலையாகும் - இவ்வில்லறமொழியப் புறமாகிய துறவறநெறி யொன்று கோடியாகப் புசிப்பிக்குமென்றும் அதிலேயுற்றிராப்பகல் ஊணுறக்கமற்று உடலைவருத்த உடல்மாயிற் பின்பு பேறுமென்றும் சொல்லுகை இந்தவுலகத்துக் கண்டுவந்தேனென் றொருவருஞ் சொல்லக் கண்டதில்லை ஆதலால் எந்தச்சமயமும் பொய்ச்சமயமாம்—நெறியாவதரிவையர்க்காம்பணி செய்து வழுத்தி நேரின்பமனுபவித்தல் முத்திதனி னெறியாம் உறுதியெனக் கண்டு உலகந்தழீஇய வொட்ப முடையவரே யவருலகாயதமென்னுமுலகே - உண்மைவழியாவது மகளிர்கட்குச் செம்பஞ்சிட்டுத் தொய்யி லெழுதிக் கலைபுனைந்து அணியலங்கரித்து அவரேவல்வழிநின்றவரைத்துதித் தவரோடுங்கூடி யனுபவிப்பது உடலுக்கு முயிர்க்குஞ் சுகமேயாவ தாதலால் இந்த முத்திவழியே உறுதியெனக்கண்டு நிற்பார் யார் அவரேயுயர்ந்தோர்க்குப் பொருந்திய பேரறிவை யுடையவரென்று உலோகாயதன் சொல்வானென் றறிவோர் சொல்வார். எ-று. இவனுக்குத்தெய்வம் காமன். நூல் இன்பசாகரமடல் முதலியன. இவன் கொள்கையின் விரிவு காமநூலிற் காண்க. (கடுரு)

மறுப்புக் கூறுகின்றார்.

ஊத்தைவாய்ச்சீயொழுகுங்கோழைப்பண்ட
மொருநாணீர்சுகந்தங்களொழிந்திருந்தா
னீத்துமியத்தக்கதாங்கலைகணிகுலைந்தால்
நிந்தித்துக்கிட்டியிடநினையாதாகுஞ்

சாய்த்துமுலையுடதிரங்கிநரைகொண்டுகூனித்
தளர்ந்திருமிவருநேரந்தனிற்கண்டதிலையோ
பேர்த்துமகளிர்களுடலைத்தெய்வமென்று
பேணுதல்விட்டிறையருளேபேணிடாயே.

(இ-ள்.) ஊத்தைவாய்ச் சீயொழுகுங் கோழைப்பண்டமொருநாள் நீர் சுகந்தங்களொழிந்திருந்தால் நீத்துமியத்தக்கதாங் கலைகள் நனிகுலைந்தால் நிந்தித்துக் கிட்டியிட நினையாதாகும் - உலோகாயதா நீ துர்க்கந்தம் நாறும் ஊத்தையையுடைய வாய்முதலியனவுடையவாய்ச் சீய்ப்பாயுங்கோழையான பதார்த்தம் நாடோறுங் கழுவிப் புகைத்துச் சுகந்தம்பூசாம லொருநாட் டவறினு மருகுவாராமற் றள்ளி யுமியத்தக்கதாய்க் கழுவியவர்டையும் விழுமிய பணியுமற்றிருப்பின் மனத்தின் அருவருத்துச் சென்றணைதற்கு வேண்டாதாயிருக்கும் பண்டமாகிய உடல் நல்லபருவத்து மிவ்வாறும் அதுவுமன்றி—சாய்த்துமுலை யுடதிரங்கி நரைகொண்டு கூனித் தளர்ந்திருமி வருநேரந்தனிற் கண்டதிலையோ பேர்த்து மகளிர்களுடலைத் தெய்வமென்று பேணுதல்விட் டிறையருளே பேணிடாயே - முலைவிழுந் துடதிரங்கிச் சணகம்போ னரைத்துக்கொண் டுடல்கூனி நடைதளர்ந்து விடாவிருமல்பற்றி வருங்காலத்து நீ விரும்பு மவர் தன்மை கண்டாயிலையோ. அது கண்டிருந்தும் அதனைமறந்து மகளிரைத் தெய்வமென்று பேணுவதென்னையோ. இகழ்ந்துவிடும்பருவமின்றெய்துமென்று கண்டு விட்டுத் தம்பிரானுடைய திருவருளைப் பேணிற் பேரின்பமுண்டாம். இதனை யுணருக. எ-று. (கடுசு)

உலோகாயதபேதமாகிய சாருவாகன்மதங் கூறுகின்றார்.

அளவைதான்காட்சியதிற்கொள்ளும்பூத
மவைநாலாங்காரியத்தான்மட்கலங்களவைபோ
லுளவுடலவ்வுடலினீர்க்குமிளிபோன்மனதி
யோங்குநீறடையிலையிற்சிவப்புப்போலறிவு
கொளுமறிவுமுடலோடேகூடமாயுங்
கொள்வதுபூதங்களுமம்மன்னனுமேகோவாம்
வளமையுடனுண்டுடுத்துமகளிரின்பம்
வாழ்ந்திடுதல்முத்தியெனுஞ்சார்வாகன்வழியே.

(இ-ள்.) அளவைதான் காட்சி-அளவைகளில் சுரர்குருவாகிய மந்திரியுரைத்த நூலில் நிருவிகற்பவுணர்வைத் தனக்கு முன்னாகக் கொண்டு ஐயவிபரீதவுணர்வின்றிச் சவிகற்பமாகக் காண்கின்ற காட்சியளவையொன்றே கொள்ளப்பட்டது—அதிற்கொள்ளும் பூதமவை நாலாம் - அந்தக் காட்சியளவையாற் கொள்ளுந் தெய்வமாவன நாற்பூதமாம். பஞ்சபூதத்தில் நாற்பூதங்கொண்டது காட்சியளவைக்குக்காணப்படுமெனவை. அவை மண்ணும் நீரும் தீயுங் காற்றும் காற்றுப்

பரிசத்தால் அறிதலாற் கொண்டு ஆகாயம் காணவும் பரிசிக்கவும் இல்லாதபடியி ஞலே நீக்கி நாற்பூதமே கொள்வதாம்— காரியத்தால் மட்கலங்களவைபோலு ளவுடல் - இந்தப் பூதங்கள் நாலின்ருெழில்களாகிய உரத்துத்தரித்தல் குளிர்ந்து பதஞ்செய்தல் சுட்டொன்றுவித்தல் சலித்துத்திரட்டல் ஆகிய காரியங்கள் ஒத் துக்கூட்டுவனவு மேறிக்குறைந்து கூட்டுவனவுமான போதக்கூட்டங்கட்கேடா ன வுருக்கள் நானுவிதமாகவு முண்டானதன்றிக் கன்மமென்பது காணப்படாத தனுற் கன்மத்தாலுண்டாமென்பது பொய்யாம்—அவ்வுடல் நீர்க்குமிளிபோல் மனுதி - அந்தவுடலைப்பற்றிப் பொறிகள் மனுதிகளாகிய கருவிகள் நீரிலே நீரின் காரியமான குமிளிபோல வுண்டாம்—ஒக்கு நீறடை யிலையிற் சிவப்புப் போ லறிவு - அம்மனுதிக டோன்றி யவ்வுடலைவிட்டு நீங்காமற் பாக்கு வெற்றிலை சுண்ணும்பு கூடியவிடத்தே சிவப்பென்பதுண்டாஞற்போலஅவ்வுடலிலேயோ ரறிவுண்டாம். இதுவன்றி வேறேயொரு ஆன்மா உடலெடுத்துப் பிறந்திறக்கு மென்பதறிந்தவரைக் கண்டதில்லைஆதலால் ஆன்மா உண்டென்றல் மலடிமகன் போலும்—கொளுமறிவு உடலோடே கூட மாயும் - உடற்சேர்வை உடலோ டேகூடி மனுதிகளைப் பற்றிநின் றுடலோடே கூட மாயும்—கொள்வது பூத ங்களு மம்மன்னனுமே கோவாம் - சிவனென்று சொல்லுவது ஆகாயப்பூவைப் பறித்தற்கொக்கும். ஆதலாற் காணப்பட்ட பூதங்களே தெய்வமும், பூதங்கட்கு நாயகனுகிய இந்திரனுமே தலைவனுமாம்—வளமையுடன் உண்டுடுத்து மகளிரின் பம் வாழ்ந்திடுதல் முத்தியெனும் சார்வாகன் வழியே - இவ்வழிநின்று முயற்சி செய்து பொருள்தேடிப் பூசிமுடித் துண்டுடுத்து மகளிரின்பமேயிவ்வுடலுக்கும் உடற்சேர்வைக்கு மிருக்கு மின்பமாதலால் இவ்வின்பத்தேவாழுமது முத்திநிலை வேறு மேலான முத்தியென்ப தில்லையென்பது சாருவாகன் நூன்முறைமை யாம். எ-று. சுரர்குருத் தன்மகனை மணுளனீத்ததுகாரணமா யவனுலுண்டாக் கிய நூல் சார்வாகம். அவன்பெயர் சாருவாகன். (கடுஎ)

மறுப்புக் கூறுகின்ருர்.

அறிவுண்டென்றதுகாட்சியன்றனுமானத்தா
மரியமட்கலங்குயவனப்புவுக்குக்கால்போற்
குறிசிவப்புமொருவனுலுண்டாகுமாமாற்
குலவுமிறைவேணுமெனிற்கொள்பூதந்தனக்கும்
பொறிபுலன்களான்மகளிர்கூட்டவாழ்வு
புசிப்பென்றுசிற்றின்பப்பொருளையேகொண்டு
நெறியதனைக்கைவிடுமோமலத்தைவவ்வு
நீள்பன்றிபோலுண்மைநிலையறியாய்நீயே.

(இ-ள்.) அறிவுண்டென்றது காட்சியன்று அனுமானத்தாம் - சாருவா கனே நீ காட்சியளவையொழிய அனுமானமுமாகமமுமாகிய விரண்டளவையுங் கொள்ளப்படாதென்றுகூறினுய். நீ கூறியவருக்கம் நின்வாக்காலே தேற்ருய். நீ

சொன்ன வறிவுண்டென்றது கண்டதில்லைக் கண்டுவேந்தொருவர் சொன்னதும ல்ல மனத்தாற்கருதவேண்டுதலாற் கருதலளவையுளவாம். அப்படிஅறிவுண்டா மென்றது நூல்சொல்லு மென்கையாற்காணவும்நினைக்கவு மொண்ணுதாதலால் ஆகமமுங் கொள்ளவேண்டும். அளவை மூன்றுமுளதென்றுகொண்டே நினைக் கவேண்டுதலால் வேறு யோருயிர் உடலோடுகூடி மனுதிகளை நடத்திநின் றறி ந்துவருவ தொன்றுண்டென்று நூல்சொல்லுதலைக் கைக்கொண்டு குறிக்கவே ண்டும்—அரியமட்கலங் குயவன் அப்புவுக்குக் கால்போற்குறி - அரிதாகிய பூத ங்களுண்டாவது வாயுவினால் அக்கினி, அக்கினியால் அப்பு, அப்புவினுற் பிரு துவி தோன்றி அப்பிருதுவியிலே எல்லாங்கூடினவளவிலே மண்ணிலே சட்டி பானை குடமுண்டானுற்போல எண்பத்துநான்குநூறுயிரம் உடற்பேதம் ஒத் துக்கூடியு மொவ்வாமற்கூடியும் நிற்குமென்றாய். இப்பூதங்களைக் கூட்டியுண்டா க்குவானொரு கர்த்தாவுண்டாகவேண்டும். மண்ணிற் குயக்கலமானது தானே யுண்டாகாது ஒரு குயவனுண்டாக்கவேண்டும். நீர்க்குமிளிபோலென்றாய்; அது காற்றாலுண்டானதுபோல மனுதிகளையு மொருவ னெழுப்பவேண்டுமோதலானுங் கர்த்தாவுண்டென்று சிந்திப்பாயாக—சிவப்பு மொருவனாலுண்டாகுமாமாற் குல வுமிறை வேணுமெனிற் கொள்பூதந் தனக்கும் - நீறுங் காயு மடையுங் கூடச் சிவப்புண்டாமாபோல ஆன்மாவாமென்றாய். அவைதானே சிவப்பாகாது ஒருவ னுண்டாக்குமதுபோலக் கொண்டாடப்பட்ட உனது பூதங்கட்கும் கூட்டப் பிரிக்கவொருவன் வேண்டும்; அவை தானேகெட்டாற் றானேயுண்டாகமாட் டாதாதலால்—பொறி புலன்களால் மகளிர் கூட்ட வாழ்வு புசிப்பென்று சிற்றி ன்பப் பொருளையே கொண்டு நெறியதனைக் கைவிடுமோ - இந்திரியங்களின் கூட்டரவு புலன்க ளவற்றுக்குப் பற்றுக்கோடு பூதங்களாதலாற் பூதச்சேர்வை யான்மாவென்று கொண்டு மாதர்கூட்டவின்பமாகிய சிற்றின்பத்தையே முத்தி யின்பமென்று கொண்டு பேரின்பநெறியைக் கண்டோமில்லையென்று கைவிட க்கடவதோ—மலத்தை வவ்வு நீள் பன்றிபோ லுண்மைநிலையறியாய் நீயே - மலத்தை இச்சித்துத் திரியும் பன்றிக்கு அம்மலவிச்சையால் துர்க்கந்தந் தோன் றுதிருக்குந்தன்மைபோலத் துர்க்கந்தமளாவிக் கோழைபொருந்தியிருக்கும்மூத் திரப் பாத்திரத்தைக் கருதி யுண்மையையறியாதவனே இதைக்கைவிடுவாயாக.

புத்தபேதநாலிற் சவுத்திராந்திகன்மதங் கூறுகின்றார்.

புத்தனுஞ்சவுத்திரியுமுருவருவிடதனுட்
புகல்வழக்குக்கந்தமைந்தாம்பொருளிவையேயன்றி
வித்தகவானுயிர்காலந்திக்குமேலே
மிக்கதொருபொருளென்றறகாதெனவேவிதித்துச்
செத்ததெல்லாம்மண்ணுடொக்குமெனவூன்றின்றுஞ்
செகப்பொருள்கள்கணப்பொழுதிற்றோன்றிமாயு
முத்தமமாமிவையனைத்தும்பொன்றக்கெட்டங்
குறுவதேமுத்திநெறியென்னவுரைத்தனனே.

(இ-ள்.) புத்தனும் சவுத்திரியும் உரு அரு வீடுஅதனுட் புகல் வழக்குக் கந்தமைந்தாம் பொருளிவையே -. புத்தசமயம் சவுத்திராந்திகன், யோகசாரன், மாத்துமிகன், வைபாடியென நாலிற் சவுத்திராந்திகன் மதமாவது: ஆதிபுத்தன்முதலாகஇருபத்தொருவகைப் புத்தருளர்; அவரில் ஆதிபுத்தன் எல்லா யோனியும் புக்கு நரக சுவர்க்கங்களுங் கண்டுவெந் துலும்பலி வனத்துள்ளே பத்தாவைத் துறந்து தவம்பண்ணுங் கவந்தி யுதரத்துள்ளே புக்கவளுடைய விலாவாலே புறப்பட் டேழுநாள் அவள் மரியாமற் பாதுகாத்து வந்துதோன்றி முழுதுமுணர்ந்து, கொலைமுதலிய துறந்து, பரதுக்கதுக்கனாய், நற்காட்சி, நல்வாய்மை, நன்முயற்சி, நல்லூற்றம், நற்கடைப்பிடி, நன்னெறி, நற்செய்கை, நல்லுளத்தோர் தலைப்பாடுடைமை யாகிய எண் குணமும் பொருந்தி தீக்காட்சி, தீவாய்மை, தீமுயற்சி, தீயூற்றம், தீக்கடைப்பிடி, தீநெறி, தீச்செய்கை, தீயுளத்தோர் தலைப்பாடுடைமை என்னும் எண்குணமும் விட்டிருப்பானு யிருப்பானொருவன். அவனாற்சொல்லப்பட்ட நூல் பிடகாகமம் என்றுபெயர். அது வினைப்பிடகம் சிக்ஷாபிடகம் கந்திரபிடகம் ஆதிபிடகமென நாலாம். இவற்றிற் காட்சியளவையுங் கருத்தளவையு மன்றி யுரையளவை கொள்ளப்படானாய், யமலோகத்துக்கு மேலான தன்மராச புரத்திலே யிருப்பானாகிய மாயாபுத்திரனும். அவன் நூற்கருத்து உரு, அரு, வீடு, வழக்கென நாலாம். உருவாவது பூதவுரு உபாதாயவுருவெனவிரண்டாம். பூதவுரு பிருதுவி அப்பு தேயு வாயுவெனநாலாம். உபாதாயவுரு வலி கந்தம் இரதம் வன்னமென நாலாம். இவ்விருவகையும் எட்டாம். அருவிரண்டு. அவை சித்தவரு கன்மவருவென்பனவாம். வீடும் இரண்டாம்; அவை குற்றவீடு கந்தவீடு என்பனவாம். வழக்கிரண்டு; அதிற் பேதம் நாலா யாறும்; அவை உள்வழக்கு இல்வழக்கென விரண்டாய்ப் பின் உள்ளதுசார்ந்த வில்வழக்கு, இல்லதுசார்ந்த வுள்வழக்கு, இல்லதுசார்ந்த வில்வழக்கு, உள்ளதுசார்ந்த வுள்வழக்கு என ஆறும். கந்தம்: உருவம் வேதனை குறிப்பு பாவனை விஞ்ஞானமென வைந்தாம். உருவகந்தமாவது முன்சொன்ன பூதவுரு உபாதாயவுரு வென்னு மெட்டுமாம். வேதனாகந்தம் குசலாவேதனை அகுசலாவேதனை குசலாகுசலவேதனையெனமூன்றும். குறிப்புக்கந்தமாவது சோத்திராதி யைந்துஞ் சித்தமொன்றுமாகிய ஆறு கருவிகளுமாம். விஞ்ஞானகந்தமாவது அந்தக் கருவிகளாலறியு மாறறிவாம். பாவனாகந்தமாவது மன வாக்குக் காயங்களாலே வரும் நல்வினை பத்துத் தீவினைபத்தாக இருபதென்பர். (அவை மந்திரஞ்சொல்லல், துதித்தல், வாழ்த்தல், பாசமுந்திய வாய்மை, மனத்திற் சந்தத்திருப்பணியே வணங்கல், சீர்கொளல், தொழல், சூழ்தல், பரச்சேவை, பூவைத்தல் இவை நல்வினைபத்து. வைதல், வெகுசெற்றம், வாக்கால்நிந்தித்தல்,பொய்சொல்லல், கோட்சொல்லல், புந்திவழியேகல், கொலைசெய்தல், களவுக்கேகல், வீண்செய்தல், உள்சபித்தல் இவைபத்துமாகவிருபதாம்.) ஆக உருவம் வேதனை குறிப்பு பாவனை விஞ்ஞானமாகிய இவ்வைந்தில் நாற்பத்துமூன்று பேதமு

மே கருவியு மான்மாவுமாக வுள்ளது—அன்றி - இதுவன்றி—வித்தகவானு யிர் காலந் திக்கு மேலே மிக்கதொரு பொருளென்றல் தகாதெனவே விதித்து - இந்தப் பொருளல்ல தாகாயமென்ருெரு பூதமுண்டென்றும், பொறிகளின் றிரிபல்லது காலமுண்டென்றும், கற்பனையல்லது திக்குண்டென்றும், இந்தக் கந்தங்கள் கூடாமனிற்பதொரு பதியுண்டென்றுஞ் சொல்லல் அது வழக்குக்குப் பொருந்தி வாராதென நீக்கி—செத்ததெல்லாம் மண்ணொடொக்கும் என வூன்தின்றும் - இந்திரியவறி வில்லாதவற்றைக் கொல்வானுக்கன்றித் தின்பானுக்கும் மண்ணொடு பேதமில்லையென வூன் றின்றும்—செகப்பொருள்கள் கணப்பொழுதிற்ருென்றி மாயும் - பிரபஞ்சவறிவெல்லாங் கணத்திற் றாராசந்தானம் வியிலிகாசந்தானம் நீதிசந்தானம் தீபிகாசந்தானம் என வொழுங்கிலே கெடுமென்று கூறி—உத்தமமாமிவையனைத்தும் பொன்றக் கெட்டங் குறுவதுவே முத்திநெறி யென்னவுரைத்தனனே - உத்தமமாகச் சொல்லப்பட்ட கந்தங்களைந்தும் பொன்றக் கெட்டுவிடுவதுவே முத்திநெறியென் றுரைத்தான். எ-று.

பாவனுகந்தமிருப்பதில் புண்ணியம், அருள், அவாவின்மை, தவவிருப்பமிவை மனத்தாலும்; இனியவைகூறல், மெய்ம்மைகூறல், பயனுளகூறல், அறமுரைத்த லிவை வாக்காலும்; வணக்கம், ஈகை, தவஞ்செய்தல் இவை காயத்தாலும்; பாவம், தீயனசிந்தித்தல், ஆசை, கோபம் இவை மனத்தாலும்; கடுஞ்சொல், பொய், பயனில்சொல், கோட்சொல்லல் இவை வாக்காலும்; களவு, கொலை, வீண்செய்கை இவை காய்த்தாலுஞ் செய்யப் படுவனவென்பதுமாம். (கடுஅ)

மறுப்புக் கூறுகின்ருர்.

இடங்கொடுத்தலால்வான்ருனிருவினையுமருந்தி
யெழின்முத்தியடையுமெனலா லுயிர்தான்காலந்
தொடர்ந்துமூவினைவகையான்நன்மைதீமை
தோற்றிவரலாற்றிக்குச்சுடர்ப்பொருடானுதி
முடிந்தந்தமில்லாததா லுளவென்றறிக
முத்தியிங்கேகெட்டிறந்தான்முழுமுதலுமுயிரு
மடைந்தறிவதிலைக்கொலையூன்றின்னலாகா
வந்நெறிவிட்டரனெறியையடைந்திடாயே.

(இ-ள்.) இடங்கொடுத்தலால் வான்தான் இருவினையும் அருந்தி எழின் முத்தி யடையுமெனலால் உயிர்தான் காலந்தொடர்ந்து மூவினைவகையான் நன்மை தீமை தோற்றிவரலால் திக்குச் சுடர்ப்பொருடானுதி முடிந் தந்தமில்லாததா லுளவென்றறிக - சவுத்திராந்திகனே நீ உலகிற் சிலவற்றை யுண்டென்றுகூறி ஆகாயமுதலிய பொருள்களை யில்லையென்று நாட்டினுய்.

நீ போக்கு வரவு செய்தற்கும் நீ கூறிய நாற்பூதம் நிற்கவும் வழங்கவும் நிரந்தரமா விடங்கொடுத்தலால் வான் பூதமுளவென்றறிக. கணபங்க அறிவுகளையும்பற்றி நல்வினை தீவினையையையுமருந்திப் போக்கு வரவு செய்தலாலும் முத்தியடையு மெனலானும் ஆன்மா வுளவென்றறிக. செல்காலம் நிகழ்காலம் வருங்காலமென வினை திரிந்துவருதலாற் காலமுண்டென்றறிக. கற்பனையல்லது திக்கில்லையென்னிற் றீமை நன்மைச் செய்கையாலே திக்குண்டெனவறிக. ஓங்கொளியாகி சிவம் ஆதியந்தமும் குணங்களுகூடி நீங்குதலும் இலவா மிதனுல் வேறுண்டென்றறிக—முத்தியிங்கே கெட்டிறந்தால் முழுமுதலும் உயிரும் அடைந்தறிவதில்லை - கந்தமைந்துமறக் கெட்டுப்போதல் முத்தியெனக்கூறினுய். அங்ஙனமாகி லுன்கர்த்தாவுங் கெடும்; அவர்க்கொரு பூசைசெய்யவேண்டியதில்லை. அந்தமுதலுக்குப் பூசைசெய்தாற் செய்தவனுக்குப் புண்ணியமென்னில், அவனுங் கெட்டிறந்துபோனுற் பெறுமாறெப்படி. ஆதலால் இரண்டறிவு மில்லையாம்—கொலை ஊன்றின்னலாகா - இதுவொழிந்து செத்தது மண்ணேடொக்குந் தின்னலாமென்ருய் தின்காரணமாய்க் கொலைசெய்துவரலாற்றின்பவர்க்கே பாவமாம்—அந்நெறிவிட்டு அரனெறியை யடைந்திடாயே - அந்தப் பாழிலே விழுநெறியை விட்டுச் சிவநெறியைப் பொருந்துக. எ-று. (கசுo)

புத்தரில் யோகசாரன் மதமும் மறுப்பும்.

திருந்தியபோதந்தானேயுடலுமாமுடலிற்
   றிகழ்போதம்வாதனையாலெனச்செப்புமியோகா
இருந்தவறிவேகணத்திற்கெட்டதுவாதனையி
   லெப்படியேநிற்பதுநின்ருலுமருப்பேதித்
துரந்தருநீர்மண்முதலாமுருவமோவன்றி
   யுட்போதம்புறவுருவாயொழியுமோவொழியா
வருந்துபோதத்திற்கும்வாதனையுமுளவோ
   மயக்கத்தைவிட்டருளின்மன்னிடாயே.

(இ-ள்) திருந்தியபோதந்தானே உடலுமாம் உடலிற்றிகழ்போதம் வாதனையா லெனச்செப்பு மியோகா - எல்லாம் முன்போலாமாயினும் கணபங்கமானவறிவுதானே உடன்முதலியவாக வாதனையாலே அருவ முருவமாதலாலே உலகம் அறிவு பரிணமித்த படியாலே பிரபஞ்சங் கனவிற்ருேன்றவன விழித்தாற் பொய்யாம்போலவா மெங்குமறிவே யுள்ளதென்று கூறும் யோகசாரனே—இருந்தவறிவே கணத்திற்கெட்டது வாதனையி லெப்படியேநிற்பது நின்ருலும் அருப்பேதித் துரந்தரு நீர் மண்முதலா முருவாமோ அன்றி உட்போதம் புறவுருவாய் ஒளியுமோவொளியா வருந்து போதத்திற்கும் வாதனையு முளவோ மயக்கத்தைவிட்டு அருளின் மன்னிடாயே - உள்ளிருக்குமறிவு கணத்திற் கெட்டழிய வாதனையி லெப்படி நின்றது?

அதுதா னின்றதாயினும் அறிவு அருவம்; அது உரம்பொருந்திய வுலகமாவ தெப்படி? அதுவொழிந் தறிவுள்ளேயாம் உலகது புறம்பேயாம் ஆகையால் அருபமானது ரூபமா யொழிந்துபோமோ அங்ஙனம் வருத்தமுடைய அறிவுக்கு வாதனையென்ப தொன்று காரணமாமோ வாகா தாதலால் இந்தமருட்சிநிலையை நீங்கித் திருவருணிலையிலே நிற்குதி. எ-று. (கசுக)

புத்தரில் மாத்துமிகன் மதமும் மறுப்பும்.

அவயவங்கடானேமுன்பொருளுமாகு
மவையின்றேற்பொருளின்றாமப்பொருடானின்றே
னவ்வறிவுமிலையாகுமென்னுமாத்துமிகா
நற்பொருளையவயவங்கள்கண்டுணரமாட்டா
விவைதன்னைக்கடம்படத்திற்பார்த்தால்வெவ்வே
றெய்துமவயவம்பொருள்களென்னுமோதான்
கவையில்பொருட்கவயவங்கடானமன்றிக்
கண்டபொறியாகாதாற்கருதிறையைவணங்கே.

(இ-ள்.) அவயவங்கடானே முன்பொருளுமாகும் அவையின்றேற் பொருளின்றாம் அப்பொருடா னின்றேல் நவ்வறிவு மிலையாகும் என்னும் மாத்துமிகா - மெய் வாய் கண் மூக்குச் செவியாகிய அவயவங்களிலே போதமெழக் கண்டால் அவயவந்தானே போதமாவதும் அவ்வவயவ மில்லாத கல்லு மரமுதலியவற்றுக் கறிவில்லையாகவே யவையெல்லாங் கெடுமென்றும் இதுவே நிலையென்றுங் கூறும் மாத்துமிகனே—நற்பொருளை அவயவங்கள் கண்டுணரமாட்டா இவைதன்னைக் கடம் படத்திற் பார்த்தால் வெவ்வேறெய்தும் அவயவம் பொருள்களென்னுமோதான் கவையில்பொருட்கு அவயவங்க டானமன்றிக் கண்டபொறி யாகாதாற் கருதிறையைவணங்கே - இந்த அவயவம் போதமென்றாய் அவயவங்கள் அறிவுக்குத்தானமாய் நிற்றலன்றி அவயவ மறிவைக் கண்டறியமாட்டாது. அது என்போலவென்னில் கடத்தையும் படத்தையும் முன்னே அவயவங்கள் கண்டால் அவைகளை வனைந்த குயவனையும் நெய்ததந்துவாயனையும் விசாரித்துணரமாட்டாவாம். ஆதலால் அவயவமிடமாகக் காணுமறிவு வேறுபட்டேயிருப்பதினால் அவ்வவயவ மறிவுக்குத் தானங்களல்ல தறிவாகாது. ஆதலால் இது பொருளன்றென்று விட்டுத் தியானிக்கப்படும் இறைவனை வணங்குதி. எ-று. (கசுஉ)

புத்தரின் வைபாடிகன் மதமும் மறுப்பும்.

அரிசனமுநீறுமுடன்கூடவங்கே
யருணம்வந்தெழுவதுபோலலகில்மாய
விரிசகமும்பொருளுமுடன்கூடஞான
மேவிடுமென்றேயுரைக்கும்வைபாடிநேரே

தெரிபொருளுஞ்சகமுமேபுறமுள்ளாகுந்
திகழருவுமுருவுமாஞ்சேரக்கூடி
வருவதிதுதானெங்கேயிப்பொய்யைவிட்டு
மன்றுறைவான்மலரடியைவணங்கிடாயே.

(இ-ள்.) அரிசனமும் நீறுமுடன்கூட அங்கே அருணம் வந்தெழுவது போல் அகிலமாய விரிசகமும் பொருளுமுடன்கூட ஞானம் மேவிடுமென் றேயுரைக்கும் வைபாடி - மஞ்சளுஞ் சுண்ணும்புங் கூடிச் சிவப்பென்ப தொன்று பேதித்தாற்போலப் பிரபஞ்சமாகிய உருக்களி னவயவமு முட் போதமாகிய ஞானமுங் கூடினபோதறிவுபொருந்தித் தோன்றும். இப்படி க்காண்பதே பொருளென்றுரைக்கும் வைபாடிகனே—நேரே தெரிபொரு ளுஞ் சகமுமே புறமுள்ளாகுந் திகழருவு முருவுமாஞ் சேரக்கூடி வருவதிது தானெங்கே இப்பொய்யைவிட்டு மன்றுறைவான்மலரடியை வணங்கிடா யே - வைபாடிகனே நீ கூறிய பொருளுக்குச் செவ்வையே தெரியத்தக்க பிரபஞ்சமும் தெரியாதாகிய போதமும் உள்ளும் புறம்புமாகும். அஃதன் றிப் போதம் அருவம் உலக முருபமாம் இரண்டு மெப்படிக் கலந்துநிற்பது இந்த வசத்தியத்தை விட்டுத் தலைவனுகிய சிவன் திருவடிமலரை வணங்கு வாயாக. எ-று.

முன்கூறிய சவுத்திராந்திகன் மதத்தி லெல்லா மொக்கக் கொள்வா ராய் இந்திரிய அறிவாகிய ஆன்மபோதஞ் சிறிது வேறுபாடானவை சொல் லுவதேனைமூன்று சமயத்தார்க்கு மொக்குமாதலால் அவற்றை மறுத்தார். முன்னுள்ளவையு மிவர்கள் மூவர்க்கு மொத்த மறுப்பென்றறிக. (கககூ)

அருகனில் நிகண்டவாதி மதங் கூறுகின்றார்.

பொன்னெயில்வட்டந்தன்னிலனந்தஞானமாதி
பொருந்துமருகபரமேட்டிதன்பொற்பாற்
சொன்னவெழுத்தஞ்சினுற்பத்தாமத்தின்
றொகைகாலமுயிர்தன்மாதன்மிநன்மைதீமை
நன்மைவெளிபுற்கலமேபற்றுவீடா
நாட்டியபத்தினிற்கன்மநாசமாயின்
மன்னுமதிற்புண்ணியம்மேலேகொண்டுய்க்கு
மாற்றியறுதொழில்வினைபோய்மாய்தன்முத்தியாமே.

(இ-ள்.) பொன்னெயில் வட்டந்தன்னில் அனந்த ஞானமாதி பொரு ந்தும் அருகபரமேட்டி தன்பொற்பால் - சமணன் தெய்வமாய தருகபரமே ட்டி. அவனிருக்குமிடம் பொன்னெயில்வட்டமென்று பெயர். அவன்வடிவு பொன்மலையிலே பொன்னுலே யெழுதினாற்போல ஆயிரத்தெட்டு மறுவு

டையனாய் அனந்தஞானம் அனந்ததெரிசனம் அனந்தானந்தம் அனந்தவீரியம் நாமமின்மை கோத்திரமின்மை ஆயுவின்மை அழியாவியல்பென எட்டுக்குணமே மதிக்கலைச் சீதம்போல வுடையனாய் மதிஞானாவர்ணீயம் சுருதிஞானாவர்ணீயம் அவதிஞானாவர்ணீயம் கேவலஞானாவர்ணீயம் கட்டரிசனாவர்ணீயம் சொற்றெரிசனாவர்ணீயம் அவதிதெரிசனாவர்ணீயம் கேவலதரிசனாவர்ணீயம் எனத் தீக்குணமெட்டும் விட்டிருப்பானாய் பசி, தாகம், பயம், செற்றம் மோகம், சிந்தனை, பழித்தல், நோய், சாதல், வேர்வு, கேதம் மதம் அதிசயித்தல், புசிப்பு, நித்திரை, சனித்தல், உவகை; சோம்பு, என்று சொல்லப்பட்ட மாயயாக்கைப் பதினெண்குற்றமும், விட்டிருப்பானா யிருக்கு மவன்கடவுள் அருகிருப்பார் சித்தபரமேட்டி தன்மபரமேட்டி முதலானோர். இவர்களிற் சித்தபரமேட்டி தேவனைப்பார்த்து தன்மம் பகவவென்று வினவ அவன் வினாவினுக் குத்தரஞ் சொன்னான்போலவும் காற்றடிக்க முரசு முழங்கினாற்போலவும் விகற்பமின்றியே பஞ்சாஸ்தமயம் என்றுத்தரஞ் சொன்னான். இதனைக்கேட்டானாகிய சித்தபரமேட்டி—

சொன்னவெழுத் தைந்தினாற் பத்தா மத்தின் றொகை கால முயிர் தன்மா தன்மி நன்மை தீமை நன்மைவெளி புற்கலமே பற்றுவீடா நாட்டிய பத்தினிற் கன்ம நாசமாயின் மன்னுமதிற் புண்ணியமே மேல்கொண்டுய்க்கும் மாற்றி யறுதொழில் வினைபோய் மாய்தன் முத்தியாமே - அவன்சொன்ன வெழுத்தைந்தையும்பத்தாக்கினா னவற்றின் றொகையாவது காலம், ஆன்மா, தன்மாத்தியகாயம், அதன்மாத்தியகாயம், புண்ணியம், பாவம், நிலைபெற்றவெளி, புற்கலம், பற்று, வீடு எனப் பத்தாம். அவற்றுட் காலமாவது மூவினையாம். ஆன்மாவாவது உடலிலே நிறைந்துநிற்கும். தன்மாத்தியகாயமாவது புண்ணியஞ் செய்தால் யாதனுசரீரம் மாயாகாரியத்தி னின்றுந் தோன்றி யிவ்வான்மாவைத் தன்னிடத்தேயாக்கித் திவ்வியதேகமாய் மேலேகொண்டுபோய்ப் புண்ணியங்களைப் புசிப்பிக்கும். அதன்மாத்தியகாயமாவது பாவவுடலாகிய யாதனுசரீரமாய்த் தோன்றி ஆன்மாவைக் கொண்டுபோய்க் கீழே நரகங்களிலேயழுத்தும். புண்ணியமாவது தானஞ் சீலந் தவமருகபூசை யென்னும் நாவினாலுமுண்டாம். தானம் அருகனுக்கும் ஆருகதருக்குங் கொடுப்பது. சீலம் ஒருவரை யொன்றை இச்சியாததும் கொலை களவு கள்ளுக் காமங் குரோதம் லோபம் மதம் மாச்சரிய மிவை நீக்கியிருப்பதும். தவம் உடைதுறந்து பாயுடுத்துத் தலைபறித்துநின்று தந்ததுவாங்கியுண்டு மெய்கழுவாது விளக்கிடாது உறங்காதிருப்பது. அருகபூசை அருகனைப்பூசித்தல். இவற்றைச் செய்வது புண்ணியம். இவற்றை விடுவது பாவம். வெளி யாகாயமுண்டென்பது. புற்கலமாவது கடினமா யிருக்கத்தக்க இரும்பு கல் மரமுதலியனவும் உயிர்நிலைபெற்ற பொருள்களும். பற்றாவது இல்வாழ்க்கைத் தொழில்விடாதுழவுதொழில் வரைபு வாணிபம் வித்தை சிற்பமாகிய வறுவகைத் தொழிலும். வீடு இவைகளை விட்டுப் பாவம் புசித்துத் தொலைந்தாற் புண்ணியங் கதிகொடுக்குமென்பதாம். எ-று. (கசூ௩)

மறுப்புக்கூறுகின்றார்.

குணம்விட்டுக்குணங்கொளலாலருகனிறையன்றுங்
கோதில்நிகழ்கன்மத்தாற்றன்மாத்திகாயம்
அணுகுமதுபாவநிலைதொலைந்தாலென்றிங்
கவ்விடயேபார்த்திருக்குமறிவின்மூடா
துணிவுகடனீர்வற்றிக்கற்றலைமீன்றின்னத்
தூங்கியிடும்பூளைநெறிசொல்லுமாகும்
நணுகும்வினைசடமாமாற்றானேகொண்டு
நண்ணுதுசிவன்றன்னைநாளும்வழிபடாயே.

(இ-ள்.) குணம்விட்டுக்குணங்கொளலால்அருகனிறையன்றும் - அருகசமயத்தின் நிகண்டவாதியே நீயுன் கர்த்தாவுக்குச் சில குணம் விட்டுச் சிலகுணங் கொள்ளுதலால் அவனும் மனுஷனன்றிக் கர்த்தாவல்லவாம்— கோதில்நிகழ் கன்மத்தால் தன்மாத்திகாயம் அணுகுமது பாவநிலைதொலைந் தாலென்றிங் கவ்விடமேபார்த்திருக்கு மறிவின்மூடா துணிவு கடனீர்வற் றிக்கற்றலைமீன்றின்னத் தூங்கியிடும் பூளைநெறி சொல்லுமாகும் நணுகும் வினை சடமாமாற்றானேகொண்டு நண்ணுது சிவன்றன்னை நாளும் வழிபடாயே - குற்றமில்லாமல் விளங்கிய நால்வகைத் தவத்தினாலே தன்மாத்தியகாயமுண்டாம்; அது பாவமறப்புசித்தாலென் றந்தத்தொலைவு பார்த்திருக்கும் அறிவில்லாத மூடனே இந்தத்துணிவு கடல்வற்றிக் கற்றலைமீன் தின்னப் பார்த்திருக்கும் பூளையி னெறிபோலவாம். அதுவன்றிக் கன்மந் தானே சுவர்க்கத்தே கொண்டுபோக வழியாதலால் இந்தநெறியை விட்டுச் சிவனையெப்போதும் வழிபடுவாயாக. எ-று. (கசூ௩)

அருகனில் ஆசீவகன் மதம்.

அணுவைந்திற்பூதம்நாலுயிரொன்றாகு
மொன்றறியுநாள்கறியாவந்தவாயு
நுணுகுநாற்பூதத்தைக்கூடிநின்று
நுண்மையதாயெடுத்திட்டுக்கலப்பின்றியணுவுக்
கணியதாம்புண்ணியபாவங்கள்கூடி
யறிந்தடைவின்முத்தியும்போயடையுமென்று
மிணையுமெமைப்போலொருவன்கூறுமுத்தி
யிதுஞானமெனவாசீவகனியம்புமாறே.

(இ-ள்.) அணுவைந்திற்பூதநாலுயிரொன்றாகும் - ஆசீவகன் அதனைக் கேட்டு அவன் ஐந்து பொருளென்ற அணுவை யைந்தான்மாவாக்கினான். அதிற் பிருதுவி அப்பு தேயு வாயுவென்னும் இவைநாலும் பூதவணுக்கள்.

உயிராவது அருவா யிவற்றினேடு கூடி நிற்பதொன்ருக வைந்தணுவாம்— ஒன்றறியு நான்சறியா வந்தவாயு வணுகு நாற்பூதத்தைக் கூடிநின்று நுண் மையதா யெடுத்திட்டுக் கலப்பின்றி - அவ்வணுக்களைந்திற் பிருதுவி அப் புத் தேயு வாயுவாகிய நாலணுவுமறிவற்றிருக்கும். உயிராகியவணு அறிவுள்ள தாய் நாற்பூதத்தோடுங்கூடி நுண்ணியதாய்த் தொட்டுந் தீண்டியுங் கலந்து மறிந்துஞ் செல்லாநிற்கும்—அணுவுக்கணியதாம் புண்ணிய பாவங்கள்கூடி அறிந்தடைவின் முத்தியும்போ யடையுமென்று மிணையுமெமைப்போலொ ருவன் கூறுமுத்தி இது ஞானமென வாசிவகனியம்புமாறே - அணுவுக்க ண்ணியமாகிய புண்ணிய பாவங்கள்கூட அதனுக்குத் தக்கதான அறிவு உடற்கூட்டத்தா லுண்டாம் அம்முறைமையிலே புண்ணியத்தாலே முத் திநெறியறிந்து அதன்வழியிலே கூடுமென்றந்தத் தன்மபரமேட்டி யறிந்து மண்ணிடைவந்து கூறிய நெறியே முத்திநெறியென் ருசிவகன் சொல்வ தாம். எ-று. (கசுசு)

மறுப்புக்கூறுகின்ருர்.

இருவகையாயெமைப்போலவரினிறைவனன்ரு
மிலங்குமுயிரறிவாகியொட்டித்தீண்டி
யருவுகலப்பினிலறியிற்றுயில்காலந்த
மருவறிவுகரணமின்ருன்மருவியவக்கரணம்
பிரியவுயிர்தலைமைகேடுண்டாமோபூதம்
பிரிந்தனவோபிரியிலுயிர்தொட்டுத்தீண்டிலையாம்
மருவும்வளிகூட்டும்வகையறியாய்கன்மம்
மலமாதலாலறியாமன்னிறையையுன்னே.

(இ-ள்.) இருவகையா யெமைப்போல வரினிறைவனன்ரும் - ஆசீவ கனே உன்னுடைய கர்த்தா இரண்டுதெகுதியாய்ப் பூமியிலே வந்தவனுகில் அவன் கத்தாவல்லவாம்—இலங்குமுயிரணுவாகி ஒட்டித்தீண்டி மருவுகல ப்பினிலறியில் - விளங்கப்பட்ட உயிர்தானும் கதிரெழுதுகளினும் நுண் ணிதா யொட்டியுந் தீண்டியும் பொருந்திக்கலந்து மறியுமாகில்—துயில்கால் அந்த மருவறிவு கரணமின்ருல் - துயிலுமிடத் தறியாமலிருப்பானேனென் னக் கரணங்கள் நீங்குகையாலென்ருய் அப்படியாமாயில்—மருவிய அக் கரணம் பிரியவுயிர் தலைமை கேடுண்டாமோ பூதம் பிரிந்தனவோ பிரியிலு யிர்தொட்டுத் தீண்டிலையாம் - அந்தக்கரணம் நீங்க உயிரின்றலைமை கெடு மோ பூதங்கள் பிரிந்தனவோ பிரியில் உயிர் தொட்டுத் தீண்டிய உடல்நிற் கப் பிரிவானேன் ஆதலால்—மருவும் வளி கூட்டும் வகையறியாய் - நிலை பெற்ற வாயுக் கூட்டுமென்ருய் அதுவுமுடலையல்லதுயிரைக் கூட்டாது அல்லதும் வாயுவுக்கறிவில்லையாம்—கன்மமலமாதலாலறியா மன்னிறையை

யுன்னே - கன்மங் கூட்டுமென்றாய்; கன்மம் மலமாதலால் அறியமாட்டாது ஆதலாலிதற்கறிவிக்குந் தலைவனுண்டென்று நினைப்பாயாக. எ-று.

உலோகாயதன்முதல் ஆசீவகனீறாகிய இவ்வெட்டுவகையாரும் வேத நிந்தகர். இவர்க்குத் தன்மமும் அறமும் முத்தியுமு மில்லையெனவறிக.

வேதவுடன்பாடுடைய சமயமெட்டில் பாட்டாசாரியன்
மதங் கூறுகின்றார்.

அனாதியாயருவமாய்வருதலால்வேத
  மதுதெய்வமறிவாகிநிறையுமெங்குமுயிர்தா
னினாதுவினைகெட்டருவாமுடலைப்பற்று
  மெய்துமச்சோமயாகமாதியாவினையு
மனாதிஞானமுங்கால்களாகிமுத்தி
  வருவிக்குமுலகமதுவளர்நித்தமாகு
முனாதுவினைகெட்டுயிரிற்கூடுமென்று
  மொழியும்பட்டாசாரியன்முறைமைநூலே.

(இ-ள்.) அனாதியாயருவமாய் வருதலால் வேதமது தெய்வம் - மேல் வேதமே பொருளாகக் கொள்ளுஞ் சமயமெட்டு; அவற்றுட் பாட்டாசாரியன் மதமாவது வேதமென்பதநாதியாய்த் தானே கத்தாவுமாய் அருபமுமாய் நிற்றலால் அந்த வேதமே முதலாகவுள்ளதாம்— அறிவாகி நிறையுமெங்குமுயிர்தான் - பிரபஞ்சத்தி லெல்லாவுடற்கு மான்மா வொன்றாய் எங்குநிறைந்து நிற்கும்—இனாதுவினை கெட்டருவாமுடலைப் பற்றும் - பொல்லாததொழில் கெட்டு அருபமாகி உடலையும்பற்றி நிற்கும்—எய்துமச்சோமயாகமாதியா வினையும் மனாதிஞானமுங் கால்களாகி முத்திவருவிக்கும் - பொருந்தப்பட்ட சோமயாகமுத லசுவமேதமீறாக யாகங்கள் செய்தலால் அந்த யாககன்மங்களும் மனாதிகரண ஞானங்களுமாகிய ஞானமும் இரண்டுகாலாக முத்தியையுண்டாக்கும்—உலகமது வளர் நித்தமாகும் -சொல்லப்பட்ட பிரபஞ்சம் நித்தியமாகும்—முனாது வினை கெட்டுயிரிற்கூடுமென்று மொழியும் பாட்டாசாரியன் முறைமை நூலே - நினையாதுவினைகெட்டுயிரிற் கூடுமென்று பட்டாசாரியன் நூல் சொல்லும் முறைமையாம். எ-று. (கசுஅ)

மறுப்புக் கூறுகின்றார்.

தந்தந்தாலுக்கூடாதேவருதலின்றாற்
  றான்வேதமாதியாந்தருமுடல்கடோறு
முந்துநிலைதான்வேறாயறியாமற்குணமான்
  முதிரறிவாயுயிரெங்குநிற்றலின்றாம்

அந்தவினைகெட்டாலிங்காவதின்று
மருஞ்சோமயாகமுதற்றொழிலுமேலா
வந்தஞானமுங்கூடிமுத்தியாகா
மதியறியாதுன்னறிவுவைத்தவனைநினையே.

(இ-ள்.) தந்தந்தாலுக்கூடாதே வருதலின்றால்தான் வேதம்ஆதியாம் - வேதமே அநாதியென்று பாட்டாசாரியனே நீ கூறினாய். அவ்வேதம் அட்சரமும் பதமும் பாளியும் கிரமமுஞ் சேட்டையுமென்று பேதித்தின்ன படியே ஆன்மா பாவமிப்படியென்று சொல்லாய் வருதலால் அச்சொல்லு ஆகாயத்திலே கிளம்பாது தந்தந்தாலுவோட்ட மண்ண மணர்நாசி மிடறு களங் கூடாமல் வாராது சிவன் பிரபஞ்சத்தார் செய்யுங் காரியந் தவிருங் காரியம் நியமித்த திருமுகமாதலால் அவ்வேதமுங் கத்தாவைப்போல அங்கீகரிக்கவேணுமென்னுந் தொழிலாய் ஆதியாய்க் காரியசுகமாயிருப்பதொன்றை அநாதியாகக் காரணமாக்கப்படாது—தருமுடல்கடோறு முந்நிலைதான் வேறாயறியாமற் குணமான் முதிரறிவாயுயிரெங்கு நிற்றலின்றாம் - உடலாகச் சொல்லப்பட்ட எண்பத்துநான்கு நூறாயிரம் யோனிதோறுமோரறிவு நிற்குமென்னில் ஊனுறக்கமுதலானவையெல்லாம் ஒன்றாயிருக்கவேண்டும்; அது கண்டதில்லை. உடல்தோறும் வினைக்கீடாகவே வேறுபட்டு நிற்கும். அதுவுமன்றி அறியாமை குணமேயாய் நிற்குமான்மாவைச் சிவகோடிகளென்று வேதம் பலவாகச் சொல்லும். அதுவுமல்லவாய் முத்தியொருவரடைய எல்லாருமடைய வேண்டுமாதலால் ஆன்மாவெங்குமோரறிவாய் நில்லாதாம்—அந்தவினைகெட்டால் இங்காவதின்றாம் - வினையென்பதொன்று வயலிடுமவைதான் கெட்டுப் பலிக்குமாபோலக் கன்மமுங் கெட்டுப் பலிக்குமென்னில் கெட்டவிடத்தே பலிப்பதல்லது வேறிடத்திற் பலிப்பதில்லை; ஆதலால் சுவர்க்கத்திலேறுவதில்லையாம்—அருஞ் சோமயாகமுதற்றொழிலும் மேலாவந்த ஞானமுங் கூடி முத்தியாகா - முத்திநெறி சோமயாகமுதலான யாகத்தொழிலும் ஆன்மாவின் ஞானமுமிரண்டுகோலாகச் சுவர்க்கத்துக்கேறுமென்றது தொழிலுக்கறிவின்மையானும் ஞானத்துக்கு முழுவறிவில்லாமையானும் இரண்டுங் கூடி இரண்டுகோலாகாது. அப்படிப் போக்குவரவுமுதலியது உடறோறுந் தனித்தனியான்மாவாம்—மதியறியாதுன்னறிவு வைத்தவனை நினையே - இப்படிப்பட்டதுன்னறிவாதலால் இவ்வறிவைவிட்டிவ்வேதத்தை யுண்டாக்கியவனையறிந்து சிந்திப்பாயாக. எ-று. சிவவாக்கெனப் பத்திவேண்டில் வேதத்தை வணங்கலல்லதவ்வேதந் தலைவனன்றென்றதாம். (கசுசு)

பிரபாகரன் மதமுமறுப்பும்.

செயலின்பாவந்தன்னிற்பூருவமாந்தொழிலின்
சேர்ந்தததிற்றானபலமிரண்டுஞ்சேர
வியல்கெடவேமண்சிலைபோலாகுமுத்தி
யெனும்பிரபாகரனேயிவ்விதியெங்கேதான்

அயலிலொருபூருவமுந்தேடினுயா
லானந்தமுத்தியைவிட்டறிவழிந்து
துயருறவேமண்சிலைபோன்முத்தியென்று
சொல்லுவாருனையன்றிச்சொல்லார்வேறே.

(இ-ள்.) செயலின்பாவந்தன்னிற் பூருவமாந்தொழிலின் சேர்ந்ததிற் ருன பலமிரண்டுஞ் சேர இயல்கெடவே மண்சிலைபோலாகும் முத்தியெனும் பிரபாகரனே இவ்விதியெங்கேதான் - பிரபாகரனே நீ கூறுவது சோமயாகமுதலான தொழிலின் முடிவிலே பூருவமாகிய அதன்பயன் வந்துதோன்றும். அப்பூருவம் முன்சேர்ந்த தொழிலிற் பலத்தைக்கொடுக்குமாதலால் இவையொருகாலுமாருது பூட்டையும் நீரும்போலச் செனன மரணங்களைச் செய்விக்கும் ஆதலால் இவ்வியாகத்தொழிலினையும் பூருவவினைப்பையும் விட்டு அந்தக்கரணங்கள் கூட்டமுமறிவசைதலாம் ஆதலால் அதுவுந் தொழிலாமாகையாற் சர்வவினைவுமற்றுக் கல்லுப்போலவும் மண்போலவுமிருப்பதுவே முத்தியாமென்று கூறும் பிரபாகரனே இந்தவிதி வேதத்திலில்லை. இப்படி நல்ல நித்திரையாய்க் கிடக்குமுறைமை எங்கே பெற்ருய்தான். இதனைவிட்டு—அயலிலொரு பூருவமுந் தேடினுயால் ஆனந்த முத்தியைவிட் டறிவழிந்து துயருறவே மண்சிலைபோன் முத்தியென்று சொல்லுவாருனையன்றிச் சொல்லார் வேறே - யாகத்தொழில் கெட்டவிடத்தே அயலாகவொரு பூருவவிதி யுண்டாக்கினுய்; அதுவுண்டாயு மிரண்டு பயனையும்விட்டு முத்திச்சுக மென்பதனையும்விட்டுத் தூக்கநித்திரையி லறிவழிந்து கல்லுப்போலவும் மண்போலவுங் கிடக்கிறதே முத்தியென உன்னையொழிய வேறுசொல்லுவாரில்லை நீயேசொன்னுய் இதனைக் கைவிட்டு நன்னெறியையடைகுதி. எ-று. (கஎ0)

நையாயிகன் மதமுமறுப்பும்.

தெரிந்துவருநையாயிவேதந்தெய்வ
மெனத்தெரித்துத்தோல்வித்தானங்கள்பதினென்ருய்ப்
புரிந்துவருதர்க்கமேயறிவின்செய்கை
பொருளோமஞானமிவைபொருந்தக்காண்டல்
இருந்தவமென்றுரைப்பதனுக்கறுதிகேணீ
யிலங்குநூலாற்பொருளர்லிசைவுகூறுங்
கரைந்திடுமோதவஞானமித்தர்க்கம்விட்டுக்
கருதுநூற்காரணிதன்றனைக்கருதாய்நீயே.

(இ-ள்.) தெரிந்துவரு நையாயி வேதந் தெய்வமெனத் தெரித்துத் தோல்வித்தானங்கள் பதினென்ருய்ப் புரிந்துவரு தர்க்கமே அறிவின்செய்கை பொருளோமம் ஞானமிவை பொருந்தக் காண்டல் இருந்தவம் என்றுரைப்பத

னுக்கறுதிகேள் நீ - தெரிந்து சொல்லப்பட்ட நையாயிகனே நீ வேதந் தெய்வ மென்றும் வேறுபட்டுப் பிறர் சொல்லுகின்றபடி பிரத்தியக்ஷ மனுமானுதியே உலகத்தறிவாவதுமறிவதாம். விகாரமவ்வாராச்சி நிற்கிரகத்தான மென்னும் அன்னியக்கிரகம் பதினெருபேதமாய் அதிற்பிரிவிருபத்திரண்டாம். அவ்விகற் பம் முன்னே கூறப்பட்டது. இத்தர்க்கவிகாரமல்லது வேறறியுமறிவில்லை. கிரி யாஞானச் சமவாயம் முத்திநிலையென்றுகண் டறுதியிட்டுவிடுவது பெரிய தவ மென்று சொல்வதற்கறுதியானது கேட்பாயாக—இலங்கு நூலாற் பொருளா லிசைவுகூறுங்கரைந்திடுமோ தவஞானம் இத்தர்க்கம்விட்டுக் கருது நூற்காரணி தன்றனைக் கருதாய் நீயே - விளங்கப்பட்ட நூலினுலும் பொருளினுலும் இசை தல் கூடுமிடத்துரைக்குநூலுங் கருதுவானும் நூற்பொருளும் அவ்வழிநின்முற் கூடி யொன்முய்க்கரைந்துவிடுமோ அதுவல்லது தவமு ஞானமுங் கூடுமோ வறியாய் இத்தர்க்கத்தைவிட்டு இந்நூற்குக் காரணனைக் கருதிக்கொள்ளுதி. (களக)

எ-று.

சத்தப்பிரமவாதி மதங் கூறுகின்முர்.

மையலினுலுரையுலகுபொருள்பொய்யாகு
மதியுணருமதுவிடுவரும்பூமாவெனவே
செய்யுரையும்பொருணெல்லிற்பொரியேபோலத்
திகழ்சத்தமுருவாகித்திகழ்பரிணுமத்தா
மையமாமுலகமருஞ்சொல்லினலம்பொருளு
மானதன்மையதென்னிலதனுலேபொருளு
மெய்யசெல்லிற்பொருளுமுடனின்றதென்னில்
வேறுபொருட்காணுசொல்விடாதுநிற்பததுவே

(இ-ள்.) மையலினு லுரையுலகு பொருள்பொய்யாகும் - சத்தப்பிரமவாதி பிரபஞ்சமாகச் சொல்லப்பட்ட பொருள் சத்தத்தாலொழிய வேறில்லை. அச்ச த்தமில்லா வளவிலே இதின்மயக்கமும் வருமாதலாற் சத்தமே உலகும் வேறி ல்லை. சத்தப்பொருள் வேறுண்டென்னில் அப்பொருளுஞ் சத்தமாகச் சொல்ல வேண்டுதலாற் பொருளென்பது பொய்யாம்—மதியுணரு மதுவீடு வரும்பூமாவெ னவே செய்யுரையும் - இந்தச் சத்தம்வரும்படி பூ, மாவெனவிரண்டுசொன்னி ன்றனேகபொருட்பெறும் பூவென்றது பூமிக்கும் மலருக்கும் பொலிவுக்கு மிவை போன்ற பிறவுக்குமாம். மாவென்ற சொற் கறுப்பு பெருமை நிறம் விலங்கு வண்டு மாமரம் கிருமிமுதலியவைக்காம். அங்ஙனம் பேதித்த பொருட்பேரெ ல்லாம் சத்தமே—பொருள் நெல்லிற் பொரியேபோலத் திகழ் சத்த முருவாகித் திகழ்பரிணுமத்தாம் - அதுவன்றி வேறுபட்ட பொருளுளவெனில் வேறுபட்ட பொருளும் நெல்லின்வேறுபட்ட பொருள் பொரியென்னுஞ் சொற்பெற்முற் போலச் சத்தந்தானே பொருளுமிப்படிவளர்ந்து சொல்லும்—ஐயமாயுலகமருஞ்

சொல்வினலும் பொருளுமான தன்மையதென்னில்— சந்தேகமாக மாயையெ ன்றதொன்று உலகமென்றதொன்று மாயை காணப்படாது உலகு காணப்பட்ட தாயினும் அக்காணப்படாத மாயைதானே காணப்பட்ட உருவமான தன்மை யதென்னில்—அதனாலே பொருளுமெய்யசொல்லிற் பொருளு முடனின்ற தென்னில் - அந்த முறைமையினாலே பொருளுஞ் சொல்லிற்பொருளு முடனே நிற்கப் பொருணிலை யுடைத்தென்னில்— வேறுபொருட்காணு சொல்விடாது நிற்பததுவே - அப்படிக் கூறிநிற்குமென்ற பொருளழிந்தகாலத்துச் சொல்லல் லது பொருளழிந்துபோமாதலாற் சொல்லே யழியாப்பொருளென்றறிவாயாக. என்றான் எ-று. (கஎ௨)

மறுப்புக் கூறுகின்றார்.

உரையுலகேன்மையலுமொன்றுண்டாமந்த
வுரைமுத்தியெனமறையுமொழித்ததாகும்
வரைபொருளுஞ்சொல்லாக்கிற்றயிர்தான்பின்பு
வந்துபாலாகுமோபொரியுமன்னேர்
விரைவிலரியென்னுஞ்சொற்குரங்கின்பேரான்
மிகுகுரங்கையரியாகவிதிக்கலாமோ
பொருளளவிலேசொல்லுங்கொள்ளவேண்டும்
புத்திபில்லாய்சத்தமேபொருளல்லக்காணே.

(இ-ள்.) உரையுலகேன் மையலும் ஒன்றுண்டாம் - சத்தப்பிரமவாதியே சத்தமே உலகமென்றாய் அப்படியாமாயின் மயக்கமுமென்ப தொன்றுண்டாக வேண்டும்—அந்தவுரை முத்தியென மறையுமொழித்ததாகும் - அந்தச்சத்தமே முத்தியாகில் வேதநூற்பொருளு மில்லையானதாம்—வரைபொருளுஞ் சொல்லா க்கில் - இதுவென வரைந்த பொருளுஞ் சொல்லுத்தானே யென்னில்—தயிர் தான் பின்புவந்து பாலாகுமோ - சொல்லழிந்து பொருளாய்ப் பொருளழிந்து சொல்லாமாகிற் பாலழிந்து தயிர் மோரானல் அவையழிந்தால் மீளப் பாலுமா மோ—நெற்பொரியு மன்னேர் - நெல்லுப் பொரியானல் பொரியென்னுஞ் சொல் நெல்லென்னுஞ் சொல்லாமோ நெல்லாகப் பாவிக்கலாமோ—விரைவின் அரியெ ன்னுஞ்சொல் குரங்கின்பேரால் மிகுகுரங்கை அரியாக விதிக்கலாமோ - விரை விலே அரியென்றொருசொல் குரங்கிற்கும் திருமாலுக்கும் பெயரானாற் குரங்கை த்திருமாலாகப் பாவிக்கலாமோ—பொருளளவிலே சொல்லுங் கொள்ளவேண் டும் - சொல்லைப் பொருளாகக் கொள்ளவொண்ணது பொருளைக்கண்டு சொல்லை மதிக்கவேண்டுமாதலால்—புத்தியில்லாய் சத்தமே பொருளல்லக் காணே - புத் தியில்லாதவனே சத்தமே பொருளாய்விடாது ஆதலாற் சத்தமே பிரமமென்ப துணைவிட்டுப் பொருளுக்கமைத்தபேர் சத்தமென்றுகொள்ளுதி. எ-று. (கஎ௩)

மீமாங்கிசன் மதமும் மறுப்பும்.

நேடுபொருளனந்தமுளவப்பொருள்கள்காணி
னிகரொன்றுக்கொன்றெவ்வாவெனமதித்துஞானந்
தேடுவதிவ்வாராச்சிதானென்றுகொண்டு
திகழுமீமாங்கிசநீதெரிக்குமாறு
வீடுநெறியிப்படிக்குமாறுபாடு
விளையுமிதுமுத்தியெனவிதிக்குஞானங்
கூடுவதொன்றிலைப்பொல்லாநெறியைவிட்டுக்
கோதிலாவரனெறியைக்கூடுநீயே.

(இ-ள்.) நேடுபொருள் அனந்தமுள அப்பொருள்கள்காணில் நிகரொன்றுக்கொன்றெவ்வா வெனமதித்து ஞானந் தேடுவ திவ்வராச்சி தானென்று கொண்டு திகழு மீமாங்கிச நீ தெரிக்குமாறு - வேதமுபவேத மார்க்கங்களினும் ஆராயும்பொருள் விசாரிக்கின் அநேகபேதமாகத் தோன்றும் அப்பொருள்களைப் பார்த்தால் ஒன்றுக்கொன்றொப்புமில்லாது நானாவிதமாமென்று விசாரித்து ஞானமாகின்ற திவ்வாராச்சி விடாதிருக்கவே இவனும் பிரம விட்டுணு உருத்திரரிலொருவனுவன் இதுதானே முத்தியென்று மீமாங்கிசனே நீ தெளியச்சொல்லும்வழி—வீடு நெறி யிப்படிக்கு மாறுபாடு விளையுமிது முத்தியென விதிக்கும் ஞானம் கூடுவதொன்றிலைப் பொல்லா நெறியைவிட்டுக் கோதிலா அரனெறியைக் கூடுநீயே - வீடுநெறியாவ தந்தப்பொருளோ வல்லதிந்தப் பொருளோவென் றாராயுஞ் சந்தேகமும் முத்தியினுஞ் சந்தேகமேயாகு மிதனால் முத்தி கூடுவதில்லையாம் ஆதலால் இச்சந்தேகவழியைவிட் டென்றுங் குற்றமற்றவன் சிவனென்றறிந்து அவன்வழியிலே கூடுக. எ-று. (களச)

பாற்கரியன் மதமும் மறுப்பும்.

உலகமுயிரனைத்துஞ்சித்தாகித்தோன்று
மாதலாற்சித்தல்லாதொன்றுமில்லை
நிலையிதனினுடன்கெட்டால்எல்லாங்கெட்டு
நிகழ்ச்சியதாய்விடுமென்னும்பாற்கரியனேநீ
யிலகுவதுபிரமத்திற்சேருமாபோ
லிகலறியப்படுபொருளுமறிவுமொன்றேமோதான்
கலகனேசத்தையசத்தோடுங்கூட்டிக்
கதறுதேயாதிகாரணனைக்காணே.

(இ-ள்.) உலகம் உயிரனைத்துஞ் சித்தாகித்தோன்றும் ஆதலாற் சித்தல்லா தொன்றுமில்லை நிலையிதனினுடன் கெட்டால் எல்லாங்கெட்டு நிகழ்சித்தாய் விடுமென்னும் பாற்கரியனேநீ - பிரபஞ்சமும் ஆன்மாக்களும் வேதமும் வேத

ப்பொருளும் அறுதி விசாரித்துப் பார்த்தால் சர்வமுஞ் சித்தல்ல தஞ்ஞானமாக வொன்றுங் காணப்படா தானபடியாலே ஞானமல்ல தஞ்ஞானமான வஸ்து ஒன்றுங் காணப்பட்டதில்லை எல்லாஞ் சித்தாயே விடுமென்று கூறும் பாற்கரியனே நீயிது—இலகுவது பிரமத்திற் சேருமாபோ லிகலறியப்படுபொருளு மறிவுமொன்றுமோதான் கலகனே சத்தையசத்தோடுங்கூட்டிக் கதறுதே ஆதிகாரணனைக்காணே - இப்படியேசொல்வது விளக்கமும் விளக்கு மொன்றுமாறு போல மாறுபட்டவறிவானு மறியப்படும்பொருளும் ஒன்றாகுமோ தர்க்கஞ் சொல்லுபவனே ஞானத்துடனே அஞ்ஞானத்தைக்கூட்டி யொருபொருளாகக் கூப்பிடாதே நிமித்தகாரண மாதிகாரணமாகிய சிவனையறிகுதி. எ-று. (களடு)

நிரீச்சுரசாங்கியன் மதமும் மறுப்பும்.

திகழ்மூலம்விகிர்திபுரியட்டகந்தான்
  றிகழ்மூன்றுஞ்செய்கையினிற்சிறந்தபிரகிருதி
தகுதூலசூக்குமபரமாம்புருடன்முன்னர்ச்
  சகமெலாமெழச்செயலாநிரீச்சுரவரசாங்கி
புகல்வதுதானறியாதபிரகிருதியாவும்
  புருடனிவைகூடியறிகுவதும்பார்த்தால்
மிகுகுருடன்முதுகின்முடவன்றானெறி
  வேண்டுநெறிசெலல்போலும்விதியையறிந்திலையே.

(இ-ள்.) திகழ் மூலம் விகிர்தி புரியட்டகந்தான் திகழ் மூன்றுஞ் செய்கையினிற் சிறந்தபிரகிருதி தகுதூலம் சூக்குமம் பரமாம் புருடன்முன்னர்ச் சகமெலாம் எழச் செயலாம் நிரீச்சுரவரசாங்கி புகல்வதுதான் - விளங்கப்பட்ட மூலமென்றும் விகிர்தியென்றும் புரியட்டகமென்றும் மூன்றுபேதமாஞ் செய்கையினிற் சிறந்த பிரகிருதியானது தூலமென்றுஞ் சூக்குமமென்றும் பரமென்றும் மூன்றுபேதமா மிவையெல்லாஞ் சுத்தனுய புருடன் சந்நிதியிலே சேட்டைப்படும். அது என்போல வென்னிற் பாலனுனவனை மாதாவறிவிக்குந் தன்மைபோல வறிவித்து நிற்குமென்று கண்டு புருடன்வசமாவது முத்திநெறியென்றுகூறும் நிரீச்சுரசாங்கியனே நீ அப்படிச் சொல்லுவதுதான்—அறியாத பிரகிருதி யாவும் புருடனிவை கூடி யறிகுவதும் பார்த்தால் மிகுகுருடன் முதுகின் முடவன்றானெறி வேண்டு நெறி செலல்போலும் விதியை யறிந்திலையே - உன் பிரகிருதி பேதத்தறிவில்லையாம் அதனைப் புருடன்கூடியறிவிக்குமென்னுமதனைநோக்கின் குருடன்முதுகிலே முடவனிருந் தவன்காலுந் தன்கண்ணுமாக நடக்கும் முறைமையொக்கும் இப்படிக்கூடியறியும் புருடனும் அவனறிவிக்க அறியாமையிலே சொல்லும் பிரகிருதியுங்கூடி யறிவனென்பதாதலா லிந்தநெறியை விட்டு வேத நெறியை யறிவாயாக. எ-று. (களசு)

வைசேடிகன் மதமும் மறுப்பும்.

புருடனையும்பிரகிருதிதனையுங்கூட்டும்
புகழ்நியதியன்னியதிப்புரிவாய்வைய
முருடருமின்னியதிபிரமத்தியல்பாமென்றே
யுற்றறிவதிதுதான்வைசேடியியல்பாகுங்
கருடருமப்புருடனுமப்புருடன்பின்னே
கருதவரும்பிரகிருதியையுஞ்செலுத்துமாமாற்
றெருடருமன்னியதியாற்பிரமந்தன்னைத்
திகழ்நியதிதனையொன்றைச்சேராய்நீயே.

(இ-ள்) புருடனையும் பிரகிருதிதனையும் கூட்டும் புகழ்நியதி அந்நியதிப் புரிவாய்வைய முருடரும் அந்நியதி பிரமத்தியல்பாமென்றே யுற்றறிவ திதுதான் வைசேடி யியல்பாகும் - புருடனையும் பிரகிருதியையுங் கூட்டும் புகழ்ச்சியையுடைய நியதியென்ப தொன்று நடுவேநின்று நடத்தும் அந்நியமப் பிரிவுதானே உலகமுமுயிருமாம் இப்படிப் புரட்சியைச் செய்யும் நியதி பிரமத்தியல்பாமென்று உற்றறிவ திதுதான் வைசேடிகமதமாம் இதுவே முத்தியென்றாய். கருடருமப்புருடனும் அப்புருடன்பின்னே கருதவரும் பிரகிருதியையுஞ் செலுத்துமாமால் தெருடரு மன்னியதியாற் பிரமந்தன்னைத் திகழ்நியதி தனையொன்றைச் சேராய் நீயே - விளக்கந்தரு புருடனையும் புருடன்பின்னே கருதும் பிரகிருதியையுஞ் செலுத்தும் நியதியோ பிரமமென்றுசொல்லும் மாயையோ வெதுபொருளா மெதுபொருளல்லவாம் இவ்விசேடத்தைவிட் டிறைநெறியிலே நில்லு. எ-று. பாட்டன் முதல் எட்டும் வேதமே பொருளென்று கொள்ளுஞ் சமயங்களாம். (௱௭௭)

வேதாந்தமாகிய வாக்கியபேதமான சமயமெட்டில்
விட்டுணுவே தெய்வமென்று கொள்ளப்படும்
பாஞ்சராத்திரமதங் கூறுகின்றார்.

அருவமதாயாதியாயகண்டபூரணமா
யஞ்ஞானமகல்சோதிசுவேச்சையாலுருவாய்த்
திரைநீருட்டுயின்றுமறைதெரிந்துமாயாவடிவாய்த்
திகழ்மாயாகாரியமாய்த்தெசவுருவாய்த்தோன்றி
யொருவனுயுலகளந்துமுலகமுண்டு
மோரிபந்தான்மூலமெனவுதவியும்பார்காத்தும்
அருமாயையாலுயிர்க்குப்பந்தஞ்செய்து
மளிக்குமவன்றனைநினையவைகுண்டமாமே.

(இ-ள்.) அருவமதாய் ஆதியாய் அகண்டபூரணமாய் அஞ்ஞானமகல்சோதி சுவேச்சையா லுருவாய்த் திரைநீருட் டுயின்று மறைதெரிந்து மாயாவடிவாய்த் திகழ்மாயாகாரியமாய் - தலைவனென்று சொல்லப்படுவது வேதமன்று விட்டுணுவை ஆதியே விண்டுவென்று பேரான தரூபமான வியர்த்தமாகையால் ஆதியிலேயுள்ளவனுப் மாயாசத்தி வடிவாய் அஞ்ஞானமில்லாத ஞானப்பிரகாசத்தையுடையனுயிருப்பான் தனதிச்சையாலே, பிரபஞ்ச மிரட்சிப்பது காரணமாகத் திருமேனியெடுத்துக்கொண்டு பிரபஞ்ச மாதாரங்குலைந்து அனந்தனுக்கு மாதாரமற்ற ஞான்று அவ்வனந்தனை நீர்மேலே யாசனமாக்கி அன்னீருக்குள்ளே யான்மாக்களுக் குறக்கம்வேண்டித் தான் விழித் துறங்கிக்கிடக்கும் நாளணுவாய்க் காற்றிலேபறந்ததுள் திருவுந்திச் சுழியை யாதாரமாகவந்துபதிய அப்படிப்பதிந்த பங்கத்திலே கௌசிகெர்ப்பமாக ஆகாசாத் வாயு: வாயோராக்நி: அக்நேராப: ஆப: பிருத்வி பிருத்வி நாம் ஔஷதயாகா: என்னும் வேதப் பிரமாணத்திலே தாமரைதோன்றி நீருள்ளமட்டும் வளர்ந்து மேலேமலர அதிலே பிரமாத்தோன்ற அவனுக்கு வேதத்தைப் படத்தெரித்ததிகரிப்பித் தவ்வேதநெறியிலே யவனுருத்திரனைத் தோற்றுவிக்க மாயையாலே யெல்லாவடிவுந் தானுப் அம்மாயாகாரியமான தனு வதற்குறுப்பான விந்திரியாதி தானுய்—தெசவுருவாய்த் தோன்றி ஒருவனுப் உலகளந்தும் உலகமுண்டும் ஓரிபந்தான் மூலமென உதவியும் பார்காத்தும் அருமாயையால் உயிர்க்குப் பந்தஞ்செய்தும் அழிக்குமவன்றனைநினைய வைகுண்டமாமே - இப்படிநின்றவனே நிறுதிகாலத்திலே அண்டப் பொற்சுவர் கால்சாய்ந்து மேருத்தரிப்பற வலைந்ததுகண்டு மானவெள்ளத்தோர் மீனதுவாகி மேலாம்வெள்ளமோர் செலுவினுளடக்கி எண்ணுருவணுவை மண்ணுகப் பதித் தலையுமேருவை நிலைபெறுவித்துக் கூர்மமாகி மேருவைத்தாங்கியும் இருட்டியாய் மேருவுக் கருட்டி மண்டலள்ளியும் மாணுறு சியமாய்த் தூணிற்றேன்றியும் வாமனமாகி மாவலியடர்த்தும் இராமர்மூவரா யிருநிலந்தாங்கியும் இடையனுகிக் கஞ்சனையடர்த்தும் இன்னுங் கற்கியாய் மன்னுவனென்று மசலத் தரங்கத்தே வடிவாயினனே. அதுவுமன்றி அரக்கர் முரணழித்துக் காத்தும் அடியொன்றால் நூறுகோடி யோசனை அகலமான பூமியையளந்தும் எத்தேவரு மெவ்வுயிரு முட்பட வித்தாரணியை யெடுத்து விழுங்கியும் ஓரிபம் ஆதிமூலமே யென்று நாரமுன் முதலைவாய் நடுங்குங்காலை அஞ்ச லஞ்சலென்று அக்கராத்தடிந்தும் ஆருயிர் அனைத்தும் அனுக்கிரகத்தான் மாயையாலே கட்டியவிழ்த்துக் கருணைசெய் தளிக்கும் விட்டுணுவல்லது மேற்றெய்வ மில்லையென்று பத்திபட வொழுகில் முத்திவைகுண்டஞ் சேரும். இதுவே பாஞ்சராத்திரமதமாம். எ-று. (களஅ)

மறுப்புக் கூறுகின்றார்.

அருவமெனி லுருவிலையா மாதியெனிலந்தமச
மறிவுநிறைவெனின் மாயைக்ககப்படானும்
உருவிச்சையேற்பாசமுறங்குமவன்விழியா
ஞேதியவேதந்தெரிந்தா னுறுதோற்றம்பத்தும்

பரிபவப்பட்டதுசற்றோமண்ணினையுண்டுமிழ்ந்தான்
படியிலெழுஞ்சோதிதனதடிபார்க்கவறியான்
பெருவிடத்தாள்மெய்கருகிமாயையுளாவானைப்
பெரியவனுய்க்கருதுவதுபிறர்க்குமோவ்வாநெறியே.

(இ-ள்.) அருவமெனிலுருவிலையாம் - பாஞ்சராத்திரியே நீ புருடோத்தமனை
அரூபமென்றாய். அவன் அரூபியாமாகில் வடிவுகொண்டு வைகுண்டத் திருத்த
லும் பாற்கடலிற் றுயிலுதலு மில்லையாம்—ஆதியெனிலந்தமாம் - ஆதியாய்வந்
தானென்னில் ஆதியானபோதே முடிவு முண்டாகவேணும்— அறிவு நிறை
வெனில் மாயைக்ககப்படானும் - நிறைந்த ஞானமுடையானென்று கூறிற்
கொண்டவடிவு மாயாவடிவாகையால் அறிவுக்கு மறைவுண்டாதல் காணப்பட்
டபடியாலே நிறையறிவின்றாம்—உருவிச்சையேற் பாசம் - அப்படி நிறையறி
வுருவெடுத்தபடியாலே யென்னில் அவ்வுருவம் மாயாவுருவாகாதோ வென்ன
இச்சையாலெடுத்த வடிவேயென்னில் இச்சையானாலும் வடிவுக் குபாதானம்
மாயையாம்; மாயையல்லவெனிற் சாபந்தொடப்படுகையும் தலையறுப்புண்கை
யுமாகாதாகையா லிச்சைவடிவல்லவாம்—உறங்குமவன் விழியான் - நித்திரை
யே குணமாயிற் செய்யுந் தொழிலெல்லாம் மயக்கமாய் விடும்—ஓதிய வேதந்
தெரிந்தான் - வேதந் தெரிந்தானென்பது வேதம் முன்னேயுண்டாய் அவ்வேத
த்தை அன்னமாய்க் கோத்தானெனப்படும்—உறுதோற்றம் பத்தும் பரிபவப்ப
ட்டது சற்றோ - தசவவதாரமாய் வையங்காத்தானென்றாய். மீனானபோது
சிவன் நானென்றான். அவ்வுடலைச் சிவனொழித்து மீன்கண்ணையும் செலுவை
யுஞ் சூலத்திலணிந்து சூலியானான். ஆமையானபோது நானேகடவுளென அவ்
வடிவையுடைத் தோட்டை அடையாளத்துக் கொடுங்கிய பிரமன்றலைமாலையு
டனே சேர்த்துக்கொண்டான். பன்றியானபோது அவ்வுடலைக்கெடுத்துக் கொம்
பை அம்மாலையோடு முடிந்து கோத்தான். நரசிங்கமானபோது அவ்வுடலை நீக்கி
யதன்றோலை ஆதனமாக்கிக்கொண்டான். வாமனனானபோது தானத்துக்குப்போ
ய்ப் பொய்வடிவுகொண்டு தானமேற்று மெய்மையாக அவன்செய்ததானத்துக்குப்
பலன் சிறையிட்டான். இராமனானபோது பொய்மானால் மயக்குண்டு களத்தி
ரம் பிடிகொடுத்தான். பலபத்திரராமனும் பரசிராமனுமானபோது சிவனை வழிப
ட்டான். கிருட்டிணனானபோது சக்கரத்துக்குத் தவஞ்செய்தான். இடையிலிவ்
வவதாரங்களிலே பிருகுவாலும் ததீசியாலும் சாபமனுபவித்தான். இன்னும் அவ
ன் பரிபவப்பட்டவையெண்ணிற்றொலையாது. தக்ஷப்பிரசாபதி யாகத்திலும் திரு
வாரூரிலுங் காசியிலுமாக முக்காற் சிரச்சேதப்பட்டான். அப்படிப் பார்க்கில்
யோனிப்பிறப்பும் வினையா லுழப்புஞ் சற்றல்லவே—மண்ணினை யுண் டுமிழ்ந்
தான் படியிலெழுஞ் சோதிதனதடிபார்க்க வறியான் - எல்லாத் தேவரும் எச்சி
ற்றேவராக மண்ணைவிழுங்கிக் கான்றானென்றாய். அப்படிவிழுங்கிய மண்ணுக்
குள்ளே யகப்பட்ட சிவன் தழற்பிளம்பாய் நின்றபோது பன்றியாயிடந்தும் அடி
தெரியாமற் றோத்திரஞ்செய்து தோன்றக் கண்டான்—பெருவிடத்தால் மெய்

கருதி மாயையுளானவனைப் பெரியவனுக் கருதுவது பிறர்க்குமொவ்வாநெறியே - முன்னே ஆகாயகங்கையைச் சிவன்முங்கியதனைச் சென்னுமுனியாலே யுண்டாய்ப் பூமியிலே விழுந்தோடுங் கங்கையென்றும், அது திருமால் கால்கழுவிய தென்றுஞ் சொன்னுய். அந்தச்சிவன் கடல்கடைந்தஞான்று கடலில்விடம்மேற்படவே உடல்முழுதுங் கருகிக் காப்பின்றித் தேவரோடுங் கைலாசத்தோடித் தடைகடந்துள்புகுந்து நந்தியே எங்களுயிர்காத்துத் தேவர்க்கு விண்ணப்பஞ் செய்யென அந்நந்தி விடத்தை மேலிடாது நிறுத்திச் சென்று விடையவர்க்கு விண்ணப்பஞ்செய்தபோது கடுவைதனைக் கரத்திலேற் றுள்ளேவிழுங்கிக் கண்டத்திற் சுவறவிட்டகருத்தையறியாய் நீயேயிப்படி மலத்தோடுகூடியிருப்பானைப் பெரியவனுக விசாரித்துக் கடவுளாகக்கருதிற் பிருதுவியொன்றின் மகாமேருவிற்றலையில் வைகுண்டத்தே நிலையாக்கியது முப்பத்தாறு தத்துவமும் நீங்கிய விடத்தி லிருக்குஞ் சிவனை விசாரித்துக் கடவுளாகக் கருதி நான் கொள்ளேன் என்பது உன்னையொழிய மற்றிவ்வுலகத்துள்ளார்க்குப் பொருந்தாது. இன்னெறியைவிடுவாயாக. எ-று.

பன்றியின்கொம்பொன்று பூண்டென்றும், ஏழ்தலமிடந்துங்காணுனென்றும், அரியயன்றலைவெட்டி வாட்டினுனென்றும் புராணுதிகளிற் கூறுவதைக் காண்க. விட்டுணுவாக்கியம் "சர்வலோகம் அகங்கர்த்தா மமகர்த்தா மகேசுரா:" எல்லாவுலகத்துக்கும் நான் கத்தா; என் கத்தா சிவன் என்பதனுலும், "விட்டுணுபக்தே சகஸ்ரேஷு சிவபக்தேகவிசேஷதா" இதன்பொருள் ஆயிரந்தாதற்கொருசிவனடியார் சமமென்பதனுலுமுணர்க. (கஎகூ)

வைணவமதமும் மறுப்பும்.

புருடனுமான்மாவும்பரபுருடன்றன்மை
போற்றுறுமத்தாதனைப்பொருந்துமனுதியினி
லருடெரிந்துசேர்வையேபொருளாகக்கொண்டா
லதுமுத்திகாயமெனும்வைணவனேயுனக்குக்
கருடவாகனன்புருடன்செய்தபத்தி
காணுமதங்கேகாயம்விட்டாற்காய
மருடரப்பெறுமென்ருய்வைகுண்டத்தே
வளர்ந்திருக்குமோமயக்கவழியைவிடாய்நீயே.

(இ-ள்.) புருடனு மான்மாவும் பரபுருடன் தன்மைபோற்றுறுமத் தாதனைப் பொருந்துமனுதியினில் அருடெரிந்து சேர்வையேபொருளாகக் கொண்டால் அது முத்திகாயமெனும் வைணவனே - வைணவனே ஆன்மாவைப் புருடன் என்றும் விட்டுணுவைப் பரமபுருடனென்றும் இப்பரமபுருடனுக்குப் புருடனடிமையாமாதலால் அவனைக் கத்தாவென்றுகொண்டு தாதமார்க்கமான விசேடணவிசேடபாவத்தாலே வழிபட்டுநின்ருல் வைகுண்டத்திலுமன்னெறியிலே நிற்ப

ஞதலால் அந்தக்காயம் அழியாதகாயமா மதுவே முத்தியின்பமென்று கூறினுய் ஆனுல்—உனக்குக் கருடவாகனன் புருடன்செய்தபத்திகாணும் அதங்கே காயம் விட்டாற் காயம் மருவூரப் பெறுமென்ருய் வைகுண்டத்தே வளர்ந்திருக்குமோ மயக்கவழியை விடாய் நீயே - உனக்கு நீசெய்த நன்மைதீமை இம்மண்ணினு ளது. அதனை வைகுண்டத்தே யுருக்கொண்டிருக்குங் கருடவாகனனுகிய பரம புருடன் கண்டறிவதெப்படி? இந்தக் காயம்விட்டால் அழியாத காயமுண்டெ ன்ருய். அந்தக்காய மங்கேவருவார்க்கு வளர்த்துவைத்தார்உளரோ அப்போதா கப்படைத்துக் கொடுத்தாரோ கன்மமும் மாயையும் உபாதானமாயின் மீளவும் அறியவேண்டும். வைகுண்டமாவது மேருவிற்றலையாயடைத் துட்பட்டதாம். இம்மயக்கவழியைவிட்டு நன்னெறியை நினைவாயாக. (கஅ0)

வைகானதன்மதமும் மறுப்பும்.

உட்டெரியுந்தாரகைபோ லுயிர்களங்கமுற்றங்
கோநமோநாராயணாயவெனுமுண்மை
யட்டவக்கரமீராருய நாமமவைசெபிக்க
வருச்சிக்கவதுசெய்தான்முத்தி
கிட்டுமெனமொழியும்வைகானதனேயுனக்குக்
கேளாமற்கூடுமலமீளவுங்கூடாதோ
தொட்டசெபமும்பூசைதோன்றலுங்கண்டுணரத்
தொல்லுருவேல்நிறையறிவுசூழாதுகாணே.

(இ-ள்.) உட்டெரியுந் தாரகைபோல் உயிர்களங்கமுற்றங்கோநமோநாராய ணாயவெனுமுண்மை அட்ட அக்கரமீராருய நாமம் அவை செபிக்க வருச்சிக்க வது செய்தால் முத்தி கிட்டுமென மொழியும் வைகானதனே - உள்ளேதோற்று முயிர் நட்சத்திரம்போலவாம். அதனைக் களங்கம் மறைக்கும். அக்களங்கந் தீர வேண்டில் ஓம் நமோநாராயணாய நமவென்றும் கேசவாயநம, தாமோதராயநம, பத்மநாபாயநம, அரியேநம, விட்டுணுவேநம, கிருட்டிணாயநம, மாதவாயநம, கோவிந்தாயநம, அச்சுதாயநம, பரமபுருஷாயநம, இலக்குமிகாந்தாயநம, இரா மசந்திராயநமவென்று மிந்த நாமங்களும் பிறவுஞ் செபித்து நாராயணனையே முக்காலமாத லொருகாலமாதல் பூசித்தால் மாயாதேகத்தை மாற்றித் திவ்விய தேகமாக்கி இரட்சிப்பானென்று கூறும் வைகானதனே—உனக்குக்கேளாமற் கூடுமல மீளவுங் கூடாதோ தொட்டசெபமும் பூசைதோன்றலுங் கண்டுணரத் தொல்லுருவேல் நிறையறிவு சூழாதுகாணே - உன்னைக் கேளாது முன் வந்து கூடியமலம் வைகுண்டத்திலே கூடாதோ பொருந்திய செபமும் பூசையுஞ்செ ய்து கண்டுணர உருவேண்டுமெனில் மாயையுங் கன்மமும் உபாதானமாக வுட லுண்டானுலன்றி இவை நீங்கி உடலுண்டாகாது. ஆதலால் இந்த நெறியை விட்டு மேற்பொருளைத் தெரிசிப்பாயாக. எ-று. (கஅக)

சோதிடிமதங் கூறுகின்றார்.

வேதாங்கச்சோதிடமேபொருண்மற்றில்லை
விளையுடலில்வருவதுவும்போவதுவும்விதியு
மீதாமென்றறிவதீங்கதனாலல்லா
லெவர்கண்டாரெவர்கேட்டாரிதுவுமன்றி
மூதாதைவைத்தபொருடனையுங்காட்டும்
முன்வருவதறிவிக்குமிதன்முறைமையொழுகத்
தீதாகாநன்றிபயனருங்கோள்களனைத்துஞ்
சித்தியெனச்சோதிடநூறெரிக்குமாறே.

(இ-ள்.) வேதாங்கச் சோதிடமே பொருண் மற்றில்லை விளையுடலில் வருவதும் போவதுவும் விதியும் ஈதானமென்றறிவ இங்கதனா லல்லால் எவர் கண்டார் எவர்கேட்டார் இதுவுமன்றி - வேதாங்கமாகிய சோதிடசாத்திரமே சர்வத்தையும் அறிவிப்பது வேறொன்றிப்படிக் கூறாது. அந்நூல் கூறும் முகூர்த்தத்திலே கர்ப்பதானமுதலாக வுடலுண்டாவதும் நீங்குவதுங் கன்மவிதியும் ஈதாமென்றறிவதும் ஈதாகாதென் றறிவதும் ஆகிய வெல்லாவறிவும் இவ்விதியாலல்லால் எவர் வேறொன்றாற் காணப்பட்டவர் எவர் வேறொன்றாற் கேட்கப்பட்டவர் இஃதொழிந்து—மூதாதை வைத்தபொருடனையுங் காட்டும் முன்வருவதறிவிக்கு மிதன்முறைமை ஒழுகத் தீதாகா நன்றிபயன் அருங்கோள்களனைத்துஞ் சித்தியெனச் சோதிடநூ றெரிக்குமாறே - முற் பாட்டன் நிலத்திற் புதைத்து வைத்தவையையும் ஒருவரை யொருவர் அறியாமல் எடுத்து வைத்த பொருளையும் பூத பௌத்தமானங்க ளெல்லாவற்றையும் அறிவிக்கு மாதலால் இதன்வழிவரிற் குற்றமான வினை கூடாது நல்வினையேகூடும். நவக்கிரக பூசைசெய்ய முத்தியுஞ் சித்திப்பிக்கு மிதுவே முறைமையென்று சோதிடம் பகருமாதலால் அதன்வழியே ஒழுகுகவென்று சோதிடி சொன்னான். எ-று. (கசுஉ)

மறுப்புக்கூறுகின்றார்.

நூலாலேவருமுத்தியென்றுரைத்தாய்நூறான்
நுவன்றவராரெனினதுவுமனாதியென்றுரைக்கின்
மேலாயவுலகுதோற்றுமளவிலுண்டான
விதிகூட்டுமென்னின்விதிகூட்டியவராரோ
நூலாயபடங்குளிர்க்குமருந்தேயென்றால்
நுண்படமோகாரணமுந்தந்துபாயனிலையோ
சாலாதிவ்வறநெறியைக்கைவிட்டுண்மைச்
சைவநெறிக்கேசென்றுசாராய்நீயே.

(இ-ள்.) நூலாலேவரு முத்தியென் றுரைத்தாய் நூல்தான் நுவன்றவர் ஆரெனின் அதுவும் அநாதியென் றுரைக்கின் - சோதிடநூலே முத்திக்குவழி யென்றுசொன்னாய். அப்படியாமாயின் இந்நூல் சொன்னவனை யறியவேண்டா வோவென்ன அதனை எவர் சொல்வார் அச்சொல்வாருந் தோன்றிய முகுர்த்த விசேட மனுதியானதொன்றென்றாய்—மேலாயவுலகு தோற்றுமளவி லுண்டா னவிதி கூட்டுமென்னில் விதிகூட்டியவர் ஆரோ - மேலாகிய பிரபஞ்சந் தோன்றினவன்றே யுண்டாயதென்னில் அத்தோற்றஞ் செய்வித்தவரார் முகுர்த்தம் ஆர் விதித்த விதியாமென் றறிந்திலையோ—நூலாய படங்குளிர்க்கு மருந்தேயென்றால் நுண்படமோ காரணமுந் தந்துபாயனிலையோ - நூலாற் செய்த புடவை குளிருக்கு மருந்தேயென்றாற் புடவைதானோ காரணம் புடவையுண்டாக்கினோ னொருவனைக் காட்டாதோ—சாலாதிவ்வற நெறியைக் கைவிட் டுண்மைச் சைவநெறிக்கே சென்று சாராய் நீயே - இது பொருந்தாது குற்றவழியாமிக்குற்றவழியைக் கைவிட்டு உண்மையான சைவநெறியைச் சென்று கூடுவாயாக. எ-று. (௧௮௫)

மாயாவாதிமதங் கூறுகின்றார்.

அகிலகாரணமாகியறிவாகிநித்தமா
யருவாயனந்தவானந்தமாம்பொருடான்
மிகுகன்னற்சுவைபோல்முத்தியாகி
வேறுபொற்பணிபோலச்சீவனுலகாகித்
தகுசிலம்பிநூலும்வேற்றுமைதருவிற்போலுந்
தகுபேதமதிற்பிரமஞ்சகலமணிச்சரடாய்ப்
புகலுமதிற்றோயாதுசிவான்மாவைப்,
பொருந்துகருவிகள்பதினால்மூன்றவத்தைபுகலே.

(இ-ள்.) அகிலகாரணமாகி அறிவாகி நித்தமாய் அருவாய் ஆனந்தவானந்தமாம் பொருடான் - பிரமமாவது சர்வதத்துவத்துக்குங் காரணமாகி அறிவேவடிவாய் அழியாததாய் அரூபமேயாய் எல்லைபிறந்தவானந்தமாய் நிற்கும் வஸ்துவானது—மிகுகன்னற் சுவைபோல முத்தியாகி - கரும்பும் அதன் சுவையும்போல முத்தியிலிருப்பதாகி—வேறு பொற் பணிபோலச் சீவனுலகாகி - பொன்னிலே பணி வேற்றுமையாமாறுபோலச் சித்தசித்துச் சுபாபமானாய்—தகு சிலம்பி நூலும் வேற்றுமை தருவிற் போலும் தகுபேதமதிற் பிரமம் சகல மணிச்சரடாய் - பிரபஞ்சம் பிரமத்திலேயுண்டாம்படி சிலம்பிவாயில் நூல்விரிவுபோலவும் வேற்றுமை முறைமை மரத்திலே தோல் இலை பூ காய் பழம்போலவுண்டாம். பிரபஞ்சத்திலே பிரமம் பேதித்து நிற்கும்படி அநேகமணிகள் கோப்புண்ட வொருசரடு அம்மணிவண்ணந்தானாய்த் தோன்று முறைமைபோல் நின்று—புகலுமதிற்றோயாது - அப்படிப்பிரமம் நின்றாலும் அதிற்றோயாது நிற்கும்—சிவான்

மாவைப் பொருந்துகருவிகள் பதினொன்மூன்றவத்தை புகலே - இந்தச் சீவான்மாவைக் கூடுங்கருவிகள் பிருதுவியாதி பஞ்சபூதங்களும், சுரோத்திராதியிந்திரியங்களும், மனம் புத்தி ஆங்காரம் தற்சங்காதமுமாம். அதற்கவத்தை மூன்றுள. அவை: சாக்கிரம் சொப்பனம் சுழுத்தியாம். இதிற் சாக்கிரம் பதினொரு கருவியுடனும் நிற்பது. சொப்பனம் புரியட்டகத்தோடு நிற்பது. சுழுத்தி மனோபுத்தி யாங்காரதற்சங்காதத்தோடுநிற்பது. எ-று. தற்சங்காதம் - சித்தம். (கஅச)

இதுவுமது.

சாராதுவினையதனிற்சலத்திற்சந்திரன்போற்
சதமிப்பியிருளரவுதனையுணரிற்பொய்யாம்
வேராயவிவேகஞானமுகிலைக்கானீக்க
வெளியாகவீடதனைப்பிரிக்கவரும்விதியாம்
மாராதனுதிமுதலெல்லாஞ்சேரவனலிலிட்ட
காட்டம்போலப்பிரமத்தழியும்
நீராலென்றியாலென்மகாவாக்கியநியம
நேரேநானதுவெனுமாயாவாதிநிலையே.

(இ-ள்.) சாராதுவினையதனில் சலத்திற் சந்திரன்போல் சதம் இப்பி இருளரவுதனையுணரிற் பொய்யாம் வேராய விவேகஞானம் முகிலைக் கானீக்க வெளியாகை வீடதனைப் பிரிக்கவரும் விதியாம் - அந்தப்பிரமந் தேகங்களிலே தோன்றினாலுஞ் சுகதுக்கங்களைத் தேகமுறுவதல்லது தானுறுது தான்படுவதுபோல்கை வான்மதிக்கலை நீரிலலைதல் போலவும் பிரபஞ்சப் பொய் மெய்யாகத் தோன்றுவ திப்பி வெள்ளியாகத் தோன்றுவதுபோலவும் இருளிலே ஒருபழுதை கிடந்தால் அது அரவமாய்த்தோன்றுதல் போலவும் தோற்றும் அதனைபுணர மித்தையாம்; ஆகவே விவேகஞான முண்டாம். விவேகஞானமுண்டாகவே மித்தை ஆகாசத்தை மறைத்த முகிலைக் காற்று நீக்கவே வெளியாமாறு போலவும் பிரகாசமாய் அகம்பிரமமாம் அவேஹும்தானே நானும்—ஆராதனுதிமுதலெல்லாஞ்சேர அனலிலிட்ட காட்டம்போலப் பிரமத்தழியும் நீராலென் றியாலென் மகாவாக்கிய நியமம் நேரே நானதுவெனும் மாயாவாதி நிலையே - இந்தப் பிரமவுபதேசப்பட்டவனுக்கு அர்ச்சனை தர்ப்பணம் அக்கினிகாரிய முதலான கிரியையெல்லாம் அக்கினியிலிட்ட விறகு அக்கினியாய்விடுமொறுபோலப் பிரமத்தில் ஏய்ந்துபோமாதலான் மகாவாக்கியந் தத்துவமசியென்று சொல்லும் அது நீயானுயென்னுந் தன்மையைச் சொல்லுமாதலால் இந்தநிலையே நில்லென்று மாயாவாதி கூறினன் எ-று. (கஅரு)

மறுப்புக் கூறுகின்றார்.

ஞானஞாதுருஞேயமுண்டாய்நிற்க
நாடுதலொன்றென்பதுதான்கூடிடாதா
மானதுதானனுபவிப்பானனுபோகமன்று
மதுவன்றியொன்றானதென்னுஞ்சொல்லுத்
தானிரண்டுமுடன்கலந்ததன்மைதான்காட்டுந்
தப்பாதுவரும்பரம்போய்ச்சடமாகிவருமேன்
மானமறியாதவனேபாற்றிரள்போய்மலமாய்
மாறியதுவிட்டுப்பாற்றிரளாகும்வகையே.

(இ-ள்.) ஞானம் ஞாதுருஞேயமுண்டாய்நிற்கநாடுதலொன்றென்பது தான் கூடிடாதாம் - ஞானமாகிய அறிவும் ஞாதுருவாகிய அறிவானும் ஞேயமாகிய அறியப்படும் பிரபஞ்சமுமாகிய மூன்றும் உலகிலே காணப்பட்டிருப்ப அறிவான பொருடானே அறிவிக்கும் அறிவதுமாய் அசித்துமாய் விடுமென்பது கூறில் அங்ஙனமாமென் றறியும் அறிவு வேற்றுமைப்பட்டதாகக் காண்டலா லொன்றல்லவாம் — ஆனதுதா னனுபவிப்பான் அனுபோகமன்றாம் - அப்படி யென்றாலுஞ் சுகமுந் துக்கமுமாகிய வினையுமொன்றல்லவாம்— அதுவன்றி ஒன்றானதென்னுஞ் சொல்லுத்தான் இரண்டுமுடன் கலந்த தன்மைதான் காட்டும் - இதுவொழிந்து தத்துவமசியென்கிற வாக்கியம் அதுவென்றொரு சுட்டுப்பொருள் நீயென்றொரு காணும்பொருள் ஆனாய் என்றொரு உவமைப்பொருளாக மூன்று பேதப்பட்டது கூடினமுறைமையைக் காட்டும்—தப்பாதுவரும் பரம்போய்ச் சடமாகிவருமேல் - தவறில்லாதவொருபொருள் சடமாய்ச் சடத்தோடே சீவான்மாவாகக் கூடிச் சடத்திலே யகப்பட்டு நின்றும் இரண்டுமறிவிக்க வறிந்து நீங்கி மீளவும் பிரமமா மென்பாயாகில் — மானமறியாதவனே பாற்றிரள் போய் மலமாய் மாறியதுவிட்டுப் பாற்றிரளாகும் வகையே - இலச்சையில்லாதவனே பாற்றிரள் மலமாய் வேறுபட்டது மீளவும் பாற்றிரளாமென்பதுக்கொக்கும். ஆதலால் இதனையுணர்ந்து உண்மையைத் தேடுதி. எ-று. ()

வேதாந்திமதம் கூறுகின்றார்.

சொரூபமுமச்சொரூபத்தையறியுமுயிர்தானுஞ்
சொல்லுமிருபத்துநாற்கருவியுமாகிறையு
மருவமுமூன்றாந்துரியமதுவுமூன்றாகு
மான்மாவும்பரமனுமச்சொரூபமுமூன்னிறைவாம்
நிருபணமுப்பாழ்கழிந்தாற்பிரணவமாமதன்மே
னிகழுஞ்சத்தியஞானமனந்தானந்தம்
விரவுகுருமுத்திரையேசுகாதீதம்வித்தை
மேலேகிலேயென்னும்வேதாந்தவிதியிதுவே.

(இ-ள்.) சொருபமும் அச்சொருபத்தை அறியுமுயிர்தானுஞ்சொல்லும் இருபத்துநாற் கருவியுமாம் - சொருபானந்தமும் அதனையறியுஞ் சிவனும் சிவன் கூடியறியுங் கருவிகள் இருபத்துநாலுமாகும். அவைவரும்படி பராபரமாகிய பரமேசுபரன் தராதலம் படைக்கத் தானுகந்தருளிப் பராபரத்திற் பரந்தோன்றிப் பரத்திற் சத்திதோன்றிச் சத்தியில் ஆகாசந்தோன்றி ஆகாசத்தில் வாயுதோன்றி வாயுவில் அக்கினிதோன்றி அக்கினியில் அப்புத்தோன்றி அப்புவிற் பிருதுவி தோன்றிப் பிருதுவியில் ஓஷதிதோன்றி யோஷதியில் அன்னந்தோன்றி அன்னத்திற் பிராணன்றோன்றிப் பிராணனிற் சத்ததாதுக்களுந் தோன்றிச் சத்ததாதுக்களிலும் அன்னமரகோசம் பிராணமயகோசம் மனோமயகோசம் விஞ்ஞானமயகோசம் ஆனந்தமயகோசமெனப் பஞ்சகோசத்தாலும் உடம்பாய் அப்பஞ்சபூதம் இந்திரியம் புலன் கன்மேந்திரியங் கரணங்களென விருபத்துநாற் கருவியாய் சாக்கிரஞ் சொப்பனஞ் சுழுத்தியுமாம்—நிறையும் அருவம்மூன்றும் துரியமதுவும்மூன்றுகும் ஆன்மாவும் பரமனும்அச்சொருபமும் முன்னிறைவாம் - அத்தச்சுழுத்திமேற் துரியமொன்றும் அதிற் துரியவிலாசமொன்றுங் காலபரதுரியமொன்றும் அதற்குமேற் பரவிலாசமொன்றும் அதற்குமேற் பரதுரியமும் அதன்மேற் சுகவிலாசமுமாக மூன்று துரியமும் மூன்றுவிலாசமும் துரியாதீதம் புலனற்றபாழும் போதமற்றபாழும் சொல்லற்றபாழும் என மூன்றுபாழும் இந்த மூன்றுவிலாசமு மாகிய மூன்று நிலைறவாவது ஆன்மதரிசனம் பரதரிசனம் சொருபதரிசனம் என மூன்றும்—நிருபணமுப்பாழ்கழிந்தாற் பிரணவமாம் அதன்மேல்நிகழுஞ் சத்தியஞானம் அனந்தானந்தம் - இங்ஙனம் நிருபிக்கப்பட்ட மூன்று சூனியமுங் கடந்தவிடத்தே அகார உகார மகாரமாம். அதற்குமேலாக விளங்கப்பட்ட சத்தியஞானம் அனந்தானந்தமான தரிசனங்களுமாம்—விரவு குரு முத்திரையே சுகாதீதம் வித்தை மேலைநிலையென்னும் வேதாந்தவிதி இதுவே - இவையெல்லாமாய்நின்ற பொருள் குரு ஞானமுத்திரைகாட்டிய மும்முத்திரையோ சுகாதீதமாகிய அறிவினது நிலைமையாகக் கொள்ளப்படும். இதுவே மேலான நிலையென்று வேதாந்தி கூறும் விதியாகும். எ-று.

பிரமாணம்: சதுர்ப்புவஅகாரே என்னும் உபநிட்தத்தாலும், துரியத் தகாரந்துரியத்துகாரந், துரியத்திலேமகாரமாகுர்—துரியத், திருதுரியஞ் சத்தியங்களாதிமேலாகு, மொருதுரியமுத்திரையாவுன். என்பதனுலும் அறிக. (கஅஎ)

மறுப்புக் கூறுகின்றுர்.

உயிர்பரமாய்ப்பரமபரமானந்தமாகி
லுயிர்தானேபொருளுமாமொத்தமுப்பாழதனின்
வியனுளபாழேதுமூன்றில்விலக்கும்பாழேது
வியன்றுரியமூன்றிலெத்துரியமேலாஞ்

செயலடங்குசுகத்தப்பால்வித்தையாகிற்
சேர்வதேதார்பெறுவாரதிற்கேடுபேறேல்
முயலுஞாதுருஞேயமிலையாய்முத்தி
முழுப்பாழாய்ப்போமிந்தமுறையைவிடாய்நீயே.

(இ-ள்.) உயிர்பரமாய்ப் பரம பரமானந்தமாகில் உயிர்தானே பொருளு மாம் - ஆன்மாத்தானே முன் ஆன்மாவாய்ப் பின் பரமாய்ப் பின்பரமானந் தமாகிற் பரமானந்தமு மான்மாத்தானேயாம் வேறுபொருளில்லையாம்— ஒத்த முப்பாழதனில் வியனுளபாழெது மூன்றில் விலக்கும்பாழேது - முப் பாழ்கூறினுய் அந்தப்பாழ்களிற் புலனறுபாழோ போதங்கெட்ட பாழோ சொல்லறுபாழோ தலைமையானது. இந்தப் பாழாயிருந்தாரார் இப்பாழை நீக்கினாரார். ஆராயும்பொருளுக்கு நல்லபோயொன்றுமோ—வியன்றுரிய மூன்றில் எத்துரியம் மேலாம் - மூன்று துரியத்திற் பரம்நானென்ற துரியம் யாது? ஆன்மா நின்றதோ சிவன் அப்படி நின்றுனோ—செயலடங்கு சுகத் தப்பால் வித்தையாகில் - மூன்றும் பாழிற் கருத்துக்கெட்ட முத்தி அதற் குமேலறிவில்லையாகில் —சேர்வதே தார்பெறுவார் அதிற் கேடுபேறேல் - முத்தியனுபவித்ததெதுவாம் பெறும்பயனெதுவாம் அறிவு கெடுவதுதானே பேறுமாகில்—முயலு ஞாதுருஞேயமிலையாய் முத்திமுழுப் பாழாய்ப்போ மிந்த முறையை விடாய் நீயே - முயற்சியாலறிவானும் அறிவிக்குமறிவும் ஒன்றும். அதுவுமன்றி மிகக்கெட்ட நித்திரையாம். இது முத்திப்பயனாகாது இம்முறைமையை நீங்குவாயாக. எ-று. (௧அ௪)

துவிதவாதி மதமும் மறுப்பும்.

ஆன்மாவுமுடலகத்திலணுவாய்நிற்கு
மறங்கூடவதிற்பாவமகலுநேரந்
தான்மாயவுடலுயிர்போய்விரைசையாற்றிற்
றவிடுபோமரிசிபோற்சுத்தனாகி
மேன்மானும்பொருளினையொத்திருக்குமெனுந்துவிதா
மெய்யிலணுநிற்குமோவிரைசைபவமறுத்து
வான்ஞானமுந்தருமோவேறுனதொன்றி
மன்னுமோயோகநெறிவகைபிதனைமறவே.

(இ-ள்.) ஆன்மாவும் உடலகத்தில் அணுவாய் நிற்கும் அறங்கூட அதி ற்பாவம் அகலுநேரந்தான் மாயவுட லுயிர்போய் விரைசையாற்றில் தவிடு போம் அரிசிபோற் சுத்தனாகி மேன்மானும் பொருளினை ஒத்திருக்குமெ னுந் துவிதா - ஆன்மாவாவ துடலகத்தி லணுவாய் நிற்கும். அது சமராத னைவழிபாடான புண்ணியங்களாலே பாவந்தொலைவுவந் திவ்வுடல் விட்ட நேரம் விட்டுணுகணங்களாற் கொண்டுபோகப்பட்டு வைகுண்டத்தயலில்

விரைசையென்னும் ஆற்றிலே முழுகுவித்து மலநீக்கிச் சுத்தராய் வைகுண்டத்தே சென்றுற் சங்கு சக்கரமேந்தி யிவனு மெதிரேயிருப்பன் சாயுச்சியமாவ திவனினைத்தநனை யொக்க நினைத்தலாமென்று கூறுந் துவிதவாதியே—மெய்யில் அணு நிற்குமோ விரைசை பவமறுத்து வான் ஞானமுந் தருமோ வேறுனதொன்றி மன்னுமோ யோகநெறி வகையிதனை மறவே - ஆன்மா அணுவென்றாய். அவ்வணுவொன்பது வாயிலுடைய வுடம்பிலே எப்படிநின்றது. இதுவன்றி ஓர் ஆறு அஞ்ஞானத்தைநீக்கி விஞ்ஞானமுந் தருமோ இந்த முத்திதான் வேறாயிருப்ப திரண்டுருவானுல் அது சாயுச்சிய மென்னுஞ் சொல்லுக்கு வருமோ இம்முத்தி யோகச்சரியை முத்தியாம். இது சாயுச்சியமல்ல. இதனை மறந்துவிடுவாயாக. எ-று. (கஅகூ)

அத்துவிதவாதி மதமும் மறுப்பும்.

ஒருபொருளேயுயிர்களாயணுதியுடல்பற்றி
யுட்பொருடானகம்பிரமமானபோதங்
கரிகேசவனென்னுமுரையேபோல
வவன்பாதம்பணியமுத்தியாமெனுமத்துவிதா
திருமாலுநீயுமொருகுலமேயாகிற்
செய்வினையுஞ்செனனமரணமுமுண்டாவானே
னிருபொருளையொருபொருளாவிசைத்தன்மட்கடமு
மிதுவனைந்தகுயவனுமென்றெணுமியல்பன்றிதுவே.

(இ-ள்.) ஒருபொருளே உயிர்களாய் அணுதியுடல்பற்றி உட்பொருள் தான் அகம்பிரமமானபோதங் கரிகேசவனென்னுமுரையேபோல அவன் பாதம்பணிய முத்தியாமெனும் அத்துவிதா - பிரமமென்பதொருபொருளே ஆன்மாக்களா யணுதியான வுடலைப்பற்றி நிற்குங்கால் அதுதான் பிரமமானமுறைமை கண்டபோது அவ்விடத்துத் திருமாலுக்கு அரிகேசவன் என்னும் நாம முதலுமொன்றாய் ஒருநாமமாய் நின்றாற்போலக் கேசவாய கேசவாயவென்றுவணங்க அகம்பிரமமாமென்று கூறுமத்துவிதனே—திருமாலும் நீயும் ஒருகுலமேயாகிற் செய்வினையுஞ் செனன மரணமு முண்டாவானேன் இருபொருளா விசைத்தன் மட்கடமு மிதுவனைந்த குயவனு மென்றெணு மியல் பன்றிதுவே - உனக்கு நாயகமாகிய கடவுளும் அவன் வழியிலே தோன்றிய நீயும் ஓரம்சமாகிற் புண்ணியபாவமும் பிறப்பிறப்புமுண்டாவானேன். இரண்டுபொருளு மொன்றானதென்று கூட்டுவது மண்ணாற் சமைக்கப்பட்ட குடத்தையும் அதனைச் சமைத்த குயவனையும் ஒன்றென் றெண்ணுவதற்கு ஒக்கும். இந்தவழியை விட்டுவிடுக. எ-று.

கேசவன் என்பதிற் கே - என்பது பிரமா; ச வென்பது சிவன்; வ என்பது விட்டுணு. இவ்விரண் டான்மாவும் விட்டுணுவுடனே யொன்றானதுகொண்டு கேசவனென்னும் நாமமுண்டானதென்று பாஞ்சராத்திரி கூறுவன். ஆகப் புறச்சமயமிருபத்துநாலும் முடிந்தது. (ககூo)

# சித்தாந்தம்.

## முதற்சூத்திரம்.

உட்சமயமிருபத்துநாலிற் சைவபேதமொன்பதில்
சுத்தசைவநெறி கூறுகின்றார்.

சைவமொன்பானதிற்சுத்தசைவந்தானிரண்டாந்
தகுதியாமாகமமுமறிவுமென்றேஞானம்
மெய்கொள்பதிபசுபாசமெனச்சொல்லுமவற்றுண்
மிக்கபதிதத்துவமாஞ்சாதாக்கியமஞ்சி
லவ்வுருவுமருவுமருவுருவேயான
வைமுகனேதாணுவெனுமவனுயிராக்கொண்டு
னையுமருச்சனைபுறம்புமுள்ளுமாக்கி
னணுகமுத்தியெனுமுரையைநாட்டுங்காணே.

(இ-ள்.) சைவம்-காணே - சைவமொன்பதிற் சுத்தசைவமாவது ஞான
மிரண்டுபேதமாம். ஒன்று உண்மைஞானம். ஒன்று அதனையறிவிக்குந் தந்
திரபேதமாம். அத்தந்திரமு மிருபத்தெட்டுப் பேதமும் இருநூற்றெட்டுப்
பேதமுமாம். அதனின் கருத்தாவது சத்தியமாகக்கொள்ளப்படும் பதி பசு
பாசமென மூன்றும். அவற்றுட் பசுவாவது ஆன்மவர்க்கம் எண்ணில்லா
தது, பாவத்தனவாம். பதியென்பது இலயம் போகம் அதிகாரமென உரு
த்திரன் மகேசுரன் சதாசிவனென்றும்; சதாசிவனேபதியாம். பாசம் முப்
பத்தாறு தத்துவமாம். அதிற் பதியென்றது தத்துவபேதமாம். அதற்குப்
பஞ்சசாதாக்கியமென்று பெயராம். அவை: சிவம் அமூர்த்தி மூர்த்தி கர்
த்திரு கன்மமெனவைந்தாம். அதிற் சிவசாதாக்கியமாவது பரமான பொ
ருள். அமூர்த்திசாதாக்கியமாவது தழற்பிளம்பான வடிவம். மூர்த்திசாதா
க்கியமாவது ஒரு முகமும் மூன்றுகண்ணும் இரண்டுகையும் இரண்டு கா
லும் படிகநிறமுமாம். கர்த்திருசாதாக்கியமாவது நாலுமுகமும் எட்டுக்
கையுமுள்ள விக்கிரகமான மகேசுரரூபம். கன்மசாதாக்கியமாவது இலி
ங்கமும் பீடமுமாகப் பிரபஞ்சமெல்லாமாகப் பிண்டீகரிப்பது. சிவசாதா
க்கியம் அமூர்த்திசாதாக்கியத்திலே கூடும்; அமூர்த்திசாதாக்கியம் மூர்த்தி
சாதாக்கியத்திலே கூடும்; மூர்த்திசாதாக்கியம் கர்த்திருசாதாக்கியத்திலே
கூட ஐந்துமுகமும் பத்துக்கையுமாம். இது கன்மத்திலேயிருக்கும் பரமா
கிய சடத்துவாவே அவ்வடிவாகக் கொண்டிருக்குஞ் சதாசிவமே கீழ் உரு
வமும் மேல் அருவமுங் கலந்த ரூபாரூபமாவது. ஆதலால் அப்பொருளைத்
தெய்வமென்று நினைந் துள்ளும் புறம்பும் பூசை செய்யில் அதுவே முத்தி
யாம். எ-று. (௧௬௧)

இது ஆக்மநெறியாயினும் சாயுச்சியநிலையாகாதென்று கூறுகின்றார்.

எப்படியுஞ்சதாசிவமேபொருளென்றாலு
மிலங்கியசாயுச்சியத்துக்கேதுவன்றி
யப்படிமைபயன்றியர்ச்சனைபுறத்திலானு
லணுகாதுசாயுச்சியமனைத்தினையுங்கடந்து
செப்பரியமனவாக்குக்கெட்டாதொன்றைத்
திகழ்கிரியைபாலெட்டிச்சேரலாமோ
தப்பரியவிந்நெறியினின்றாற்பேறு
சாலோகசாமீபசாரூபங்காணே.

(இ-ள்.) எப்படி-காணே - சுத்தசைவநெறி சதாசிவம் பொருளென்று சொன்னது அதுவே பொருளாயினும் இந்த அர்ச்சனை சாயுச்சியநெறியைத்தருவதற்கேதுவல்லது தானே சாயுச்சியமென்பதல்லவாம். அந்தமுறையல்ல திந்தநெறியிற் சாயுச்சிய மில்லையோவென்னில் அது கூடாது. சாயுச்சியமாவது எல்லாவற்றையுங் கடந்து செப்புதற்கரிதாகிய மன வாக்குக்கு எட்டாத ஒருபொருள். அதனை விளங்கிய கிரியையாலே யெட்டிக் கூடலாமோ. தவறற்றவிச்செயலிலே நின்றார்க்குப் பேறுவது சரியை முற்றினாற் சாலோகமுங் கிரியை முற்றினாற் சாமீபமும் யோக முற்றினாற் சாரூபமுமாமல்லது சாயுச்சியமாகாது. எ-று. (கசூ௨)

அசுத்தசைவன் மதமும் மறுப்புங் கூறுகின்றார்.

நெறியெல்லாஞ்சைவநெறிபோலநின்று
நிலைமைமூவருவுமொக்குமென்னக்கொண்டு
பிறிவறவேயருச்சிக்கைமுத்தியென்று
பேசியிடுமிவ்வசுத்தசைவனேயுனக்குக்
குறிகொண்முத்தியிடம்பிரமலோகமோதிருமால்
குலவியவைகுண்டமோகயிலைமலைதானோ
பிறிவிலைதான்மூன்றிடத்தும்போயிருந்துவருமோ
பிணக்கமாய்விடுங்கணக்கிற்பெறுவதில்லைக்காணே.

(இ-ள்) நெறியெல்லாஞ் சைவநெறிபோலநின்று நிலைமை மூவருமொக்குமென்னக்கொண்டு பிறிவறவே யருச்சிக்கை முத்தியென்று பேசியிடுமிவ்வசுத்தசைவனே - சுத்தசைவ நெறிபோலவே சொல்லப்பட்ட வழியெல்லா மிருக்கப் பதிநிலைமை பிரமா விட்டுணு உருத்திரனாகிய மூவருமொக்குமெனக்கொண்டு நீக்கமறப் பூசைசெய்தலே சாயுச்சியமென்று பேசும் அசுத்தசைவனே —உனக்குக் குறிகொண் முத்தியிடம் பிரமலோகமோ திருமால் குலவிய வைகுண்டமோ கயிலைமலைதானோ பிறிவிலைதான் மூன்றிடத்தும் போயிருந்து வருமோ பிணக்கமாய்விடுங் கணக்கிற் பெறுவதில்

லக்காணே - நீ மூன்றுமுதலும் ஒன்றென்றவிடம் முத்திநெறியாயின் பிரமலோகமோ விளங்கப்பட்ட வைகுண்டமோ கைலாசமலையோ அஃதன்றி நீக்கமறக் கொண்டபடியாலே மூன்றுதானத்திலும் பொருந்தியிருந்து வருவார்களோ! கணக்கு விசாரித்தாலோரிடமும் நிலைபெறாது பதப்பேறுமில்லையாம். இந்நெறியை விடுவாயாக. எ-று. (கசூங)

மிச்சிரசைவன் மதமும் மறுப்புங் கூறுகின்றார்.

வேதமாகமமிரண்டுமநாதியாதியென்று
விதியிரண்டுமொக்கக்கொண்டுவிளங்குசரிதாதி
யாதாரவைதீகமேலாகிநிற்கு
மசுத்தசுத்தமிச்சிரனேயறிவுதானுனக்கு
மீதானவுலகநெறிபொதுநெறியாமிதனை
மேலென்றுகொண்டிருந்தால்விதிபதமுத்தியுமின்
றோதாய்நீமந்திரத்தையாகமத்தைக்கொண்டே
யுயர்கருமமுடிவதுவுமுயர்பதமுத்தியதே.

(இ-ள். வேதம் ஆகமம் இரண்டும் அநாதி ஆதியென்று விதியிரண்டுமொக்கக்கொண்டு விளங்கு சரிதாதி ஆதார வைதீக மேலாகி நிற்கும் அசுத்தசுத்தமிச்சிரனே - வேதம் ஆகமம் என்னும் இரண்டும் விசாரிக்கில் வேதம் அநாதி ஆகமம் ஆதியென்று கொண்டு இரண்டினுமுண்டான விதியை ஒக்கக் கைக்கொண்டு சந்தியனுட்டானங்களொக்கக்கொண்டு வேதப்பிரகாரம் அதிகமாக ஆசாரம் விவசாரம் பிராயச்சித்தம் மூன்று மன்னிலையாகக்கொண்டுநிற்குமதுதானே முத்திவழியென்னும் மிச்சிரசைவனே— அறிவுதானுனக்கு மீதானவுலகநெறி பொதுநெறியாம் இதனை மேலென்று கொண்டிருந்தால் விதிபதமுத்தியுமின்று ஓதாய் நீ மந்திரத்தை ஆகமத்தைக்கொண்டே உயர்கருமம் முடிவதுவும் உயர்பத முத்தியதே - உன்னறிவுதான் உலகத்தின் மேற்பட்டதா யுலகநெறியைச் சொல்லுவதாய் எல்லாச்சமயத்துக்கும் பொதுவாய் நிற்கும் வேதநெறி நிலைமையென்று மந்திரமாகச் செபிக்கலாம். ஆகமத்திற்சொன்ன தந்திரமே சொள்ளத்தக்கது அப்படிக் கொண்டாலும் அதிற் சரியையாதியால் வருவதும் பதமுத்தியன்றிச் சாயுச்சியமன்று. ஆதலால் இதுவும் நெறியன்று எ-று. (கசூச)

சித்தாந்தசைவன்மதமும் மறுப்புங் கூறுகின்றார்.

சுத்தமாயையிற்றோன்றுந்தத்துவமேசிவமுந்
தோன்றியசத்தியுமாகுகின்றதவன்பேதம்
வைத்தசுத்தபுருடனேயான்மாவென்றும்
மாறின்முத்திகூறுகின்றசித்தாந்தசைவற்

குத்தமமாய்முத்தசித்தாஞ்சிவம்பாசமாமோ
வுடையாமைபக்காரியந்தானுயிராகிவிடுமோ
சத்தியமேயிதுபாசஞானமாகுந்தன்மையறியார்க்கு
முத்திதானுமில்லையாமே.

(இ-ள்.) சுத்தமாயையிற் றோன்றுந் தத்துவமே சிவமுந் தோன்றிய சத்தியுமாகும் நின்றசவன்பேதம் வைத்தசுத்தபுருடனே ஆன்மாவென்றும் மாறின் முத்திகூறுகின்ற சித்தாந்தசைவர்க்கு - சுத்தமாயையிற்றோற்றமான சுத்தவித்தை ஈசுரஞ் சாதாக்கியஞ் சத்தி சிவமென்னுந் தத்துவங்களைந்தி னில் நாலுஞ்சிவவடிவாம். சத்திதத்துவம் சத்திவடிவாம். அவன்பேதமொழிய மாயையிற் புருடனேயான்மாவென்றுகூறுஞ் சித்தாந்தசைவனே உனக்கு—உத்தமமாம் முத்தசித்தாஞ் சிவம்பாசமாமோ உடைமாயைக் காரியந்தான் உயிராகிவிடுமோ சத்தியமே இது பாசஞானமாகும் தன்மையறியார்க்குமுத்திதானுமில்லையாமே - பாசங்களைச் சிவனுருவாக்கினுய் உத்தமனுய் விடப்பட்ட வஞ்ஞானத்தை யுடையனுப் சித்தாகிய சிவன் பாசவடிவாகான். அறிவுவடிவாய ஆன்மா அசுத்தமாகிய மாயையாமோ இதுவிசாரிக்கிற் சத்தியமாக இது பாசஞானமாம். பொருள்கலந்துநின்ற தன்மையறியாதார்க்குப் போகமின்றிப் பதமுத்திதானுமரிதாம். எ-று. (ககூ)

அணுசைவமதமும் மறுப்புங் கூறுகின்றார்.

சூக்குமைபைசந்திமத்திமைவைகாரி
தோன்றுகின்றவாக்கின்முடிவேஞானமாகு
மாக்குபிரணவந்தான்மேலாயபரப்பிரம
மாகுமுத்தியெனுமணுசைவனேயிவைதா
ஞக்கியபாசச்சேர்வைசத்தமெல்லா
முதிப்பதான்மாவின்பாலுயிர்த்தொழிலோமுத்தி
வாக்கிறந்தபரம்பொருளைவாக்குக்குள்ளே
வைப்பதுவேபாசஞானவழக்கைவிடாய்நீயே.

(இ-ள்.) சூக்குமை பைசந்தி மத்திமை வைகாரி தோன்றுகின்றவாக்கின்முடிவே ஞானமாகும் ஆக்கு பிரணவந்தான் மேலாய பரப்பிரமமாகும் முத்தியெனும் அணுசைவனே - சூக்குமை பைசந்தி மத்திமை வைகரி என்னும் நாலுவாக்குமே பிரமபேதம். இதன்முடிவான அறிவும் அதன்முதலாகிய ஒங்காரமுமே உண்மைப்பொருளாகிய மேலானமுதலுமாமென்னும் அணுசைவனே—இவைதான் ஊக்கிய பாசச்சேர்வை சத்தமெல்லா முதிப்ப தான்மாவின்பா லுயிர்த்தொழிலோ முத்தி வாக்கிறந்த பரம்பொருளை வாக்குக்குள்ளே வைப்பதுவே பாசஞான வழக்கைவிடாய்நீயே - நீ கூறிய வாக்குகள் உயர்ந்த பாசக்கூட்டமாம். இச்சத்தங்களெல்லாந் தோற்றுவி

ப்ப தான்மாவின்றொழிலாம். ஆதலால் முத்தியாவது வாக்கிறந்தது இதனை வாக்குக்குள்ளாக்கியவிது பாசஞானமாம். இந்த வழக்கை நீ விடுவாயாக. எ-று. (கசுசு)

அவாந்தரசைவன் மதமும் மறுப்புங் கூறுகின்றார்.

பிரமத்தினொளிமூலந்தொடங்கிநாபியளவாம்
பேணுமால்கரியவொளிகண்டத்தினளவாம்
அரன்வைத்தவொளிநெற்றிமகேசனொளியுச்சி
யரியசதாசிவம்படிகந்துவாதசாந்தமளவாம்
விரிவைத்தவிதிற்பூசையதுமுத்தியென்று
மேவுமவாந்தரசைவர்க்கிதுயோகநெறியா
முரைவைத்தசாயுச்சியத்தின்முத்தியன்றே
வுன்னுயோகமதுவிட்டுமன்னுஞானநெறியே.

(இ-ள்.) பிரமத்தினொளி மூலந்தொடங்கி நாபியளவாம் பேணுமால் கரியவொளி கண்டத்தினளவாம் அரன்வைத்த ஒளிநெற்றி மகேசன் ஒளி உச்சி அரிய சதாசிவம் படிகம் துவாதசாந்த மளவாம் விரிவைத்த விதிற் பூசையது முத்தியென்று மேவும் அவாந்தரசைவர்க்கு - மூலாதாரந்தொடங்கி நாபியளவாகப் பொன்மயமான பிரமவொளியாகவும் அதுதொடங்கிக் கண்டமளவாகக் காரொளியான விட்டுணுவொளியாகவும் அதுதொடங்கிப் புருவமளவாகச் செவ்வொளியான வுருத்திரவொளியாகவும் அது தொடங்கி உச்சியளவாகத் தூமவொளியாகிய மகேசவொளியாகவும் அது தொடங்கித் துவாதசாந்தமளவாகப் படிகவொளியான சதாசிவ ஒளியாகவுங் கண்டு பூசைசெய்ய முத்தியாமென்று கூறும் அவாந்தரசைவனே— இது யோகநெறியால் உரைவைத்த சாயுச்சியத்தின் முத்தியன்றே உன்னுயோகமது விட்டு மன்னு ஞானநெறியே - நீ யோகநெறியைக்கூறி ஆன்மாவுஞ் சிவனு மொன்றென்னுஞ் சாயுச்சியச்சொல்லை யல்லவாக்கி, யோக முத்தியைப் பதப்பேறென்னாது முத்திப்பேறென்று கூறு மதனைவிட்டு ஞானநெறியினைக் கைக்கொள்வாயாக. எ-று. (கசுஎ)

பேதசைவன்மதமும் மறுப்புங் கூறுகின்றார்.

சதாசிவமேதெய்வமாமேல்கீழ்தன்வடிவே
தற்பரமாயவர்முகத்தாற்றந்திரஞானத்தின்
விதானமதாறத்துவாமெய்யினிற்கும்
வினையுமதனிடைநிற்குதிருவாணதீக்கை
யுதாசனனிற்பூசித்தாறத்துவாநீக்க
வுயிர்சுத்தனுமுத்தியடையும்பேதா
நிதானமிங்குயிர்ச்சுத்தியல்லான்முத்தி
நெறியன்றுமுத்திநெறிநோதியாய்நீயே.

(இ-ள்.) சதாசிவமே தெய்வமா மேல் கீழ் தன்வடிவே தற்பரமாய் அவர்முகத்தால் தந்திரஞானத்தின் விதானமது ஆறத்துவா மெய்யினிற்கும் வினையும் அதனிடைநிற்கும் நிருவாணதீக்கை உதாசனனிற் பூசித்து ஆறத்துவா நீக்க உயிர் சுத்தனும் முத்தியடையும் பேதா - சதாசிவமே சூரியமண்டலம், சந்திரமண்டலம், அக்கினிமண்டலம் சத்திமண்டலம், வித்தியாமண்டல மென்னப்பட்ட கீழ்மண்டலங்களிற் பிரமா விட்டுணு உருத்திரன் மகேசுரன் சதாசிவமென்னப்பட்ட உருவடிவுகளும் விந்து நாதம் பராபரம் பரமென்னப்பட்ட வருவடிவுகளுந் தானாய் நடுப்பட்ட பொருளென்றறிந்து அவருடைய ஈசானமுதற் சத்தியோசாத மீமுகிய பஞ்சமுகங்களிலே காமிகம் முதல் வாதுளமீறுக இருபத்தெட்டு ஆகமமும் நாலுமுகத்திலும் ஐந்தைந்தும் பஞ்சமமுகத்தி லெட்டுமாகத் தோன்றிய தந்திரஞானத்தின் விதியே மந்திராத்துவா பதாத்துவா வன்னத்துவா புவனத்துவா தத்துவாத்துவா கலாத்துவாவென்னும் ஆறத்துவாவும் முழந்தாள் நாபி கண்டம் நெற்றி தலையாக நிற்கும் புண்ணிய பாவங்களும் அவ்வவ்வத்துவாக்களிலே நிற்கும். இவற்றைத் தீட்சையாலே போக்கச் சுத்தனாகி முத்தனு முதாசனனாகிய அக்கினியிலே பூசையாக ஆன்மாச்சுத்தனாகி முத்தியாமென்னும் பேதசைவனே—நிதானம் இங்குயிர்ச் சுத்தியல்லான் முத்திநெறியன்றும் முத்திநெறி நேரறியாய் நீயே - இந்நெறியாவது உயிர்க்குச் சுத்தியா மல்லது முத்திநெறியல்லவாம். ஆதலால் முத்திநெறி நேர்மையை நீயறியாய். எ-று.

(கசுஅ)

அனுசைவன் மதமும் மறுப்புங் கூறுகின்றார்.

சைவநெறியாயிருப்பச்சிவன்வடிவற்றவனுந்
தருமுருவமழியுமெனுந்தகைமையினிந்தித்து
மெய்யருவேயுளதுருவமில்லையென்றுகொண்டு
வியன்வடிவைநிந்திக்குமனுசைவநீயே
யையன்வடிவான்மாக்கள்பொருட்டாற்கொண்ட
தவ்வடிவைநிந்தித்துச்சூனியத்தைமதித்தாற்
கைவருமவ்வுயிருக்குமரணமின்றேயென்று
காயத்தைநீக்கியிடுங்கணக்கதுவாய்விடுமே.

(இ-ள்.) சைவநெறியாயிருப்பச் சிவன்வடிவற்றவனும் தருமுருவ மழியுமெனுந் தகைமையின் நிந்தித்து மெய்யருவேயுள துருவமில்லை யென்றுகொண்டு வியன்வடிவை நிந்திக்கும் அனுசைவ நீயே - சைவசித்தாந்த முறைமையாய்நின்று சிவன்கொண்டவடிவமெல்லாம் அவன்வடிவன்று. பொருந்தியவுருவமெல்லா மழியும். அவன் வடிவற்றவனேயென்றும் திருமேனியைக்கொண்டு நிந்தையாய் அர்ச்சனை செய்வதைக் கைவிட்டு உளத்தே அர்ச்சனைசெய்வதே முத்தியென்றும் உருவத்தை நிந்திக்கும் அனுசைவனே நீதான்—ஐயன் வடிவு

ஆன்மாக்கள் பொருட்டாற் கொண்ட தவ்வடிவை நிந்தித்துச் சூனியத்தை மதித்தாற் கைவருமவ்வுயிருக்கு மரணமின்றேயென்று காயத்தை நீக்கியிடுங் கணக்கதுவாய் விடுமே - சிவன் ஆன்மாக்களை இரட்சிக்கவேண்டிக் கொண்டவடிவான அதனை நீக்கி உதாசனம்பண்ணி அவ்வடிவிற்குப் பிராணனாய் நிற்கும் முதலாகிய சுத்தசூனியமாகிய அறிவுயிரே முத்தியென்று கொண்டால் அறிவுக்கு மரணமில்லையென்று அவ்வறிவிருக்கு முருவை வெட்டினன்போல உனக்குநாசமாய்விடும் அது துருக்கர்மதமென் றிதனைக்கைவிட்டு நன்னெறியிலே நிற்குதி. எ-று. (கசுசு)

ஆதிசைவன் மதமும் மறுப்புங் கூறுகின்றார்.

அண்டமெல்லாம்பீடமாம்விந்துவாகு
மாவியெல்லாமிலிங்கமாம்நாதமாகுங்
குண்டகையுங்கோளகையுமிதுவேயென்று
கொண்டுநினைப்பதுமுத்தியெனுமாதிசைவா
குண்டகையாம்பீடந்தத்துவங்களெல்லாங்
கூடியவாறெங்ஙனேயருவாகியுயிர்தான்
பிண்டமதாமிலிங்கமதாய்நாதமான
பிடிபாடெப்படிச்சகயோகப்பேராமிதுவே.

(இ-ள்.) அண்டமெல்லாம் பீடமாம் விந்துவாகும் ஆவியெல்லாம் இலிங்கமாம் நாதமாகும் குண்டகையும் கோளகையும் இதுவேயென்று கொண்டுநினைப்பது முத்தி யெனுமாதிசைவா - பிருதுவி முதல் நாதமீறாக முப்பத்தாறு தத்துவமும் பீடமாகவும், அது விந்துவடிவாகவும், தத்துவத்தினிடத்தி லுயிர்களெல்லாம் இலிங்கமாகவும், அது நாதமாகவும், குண்டகை பீடமாகவுங் கோளகை இலிங்கமாகவுங் கைக்கொண்டு தியானஞ்செய்வதே முத்தியெனக்கூறும் ஆதிசைவனே—குண்டகையாம் பீடந் தத்துவங்க ளெல்லாங் கூடியவாறெங்ஙனே அருவாகி உயிர்தான் பிண்டமதாமிலிங்கமதாய் நாதமான பிடிபாடெப்படிச் சகயோகப் பேராமிதுவே - உனது குண்டகையான பீடமாகத் தனு கரண புவன போகமாய்ப் பலவானவுலகந் திரண்டதெப்படி? அருவான உயிர்கள் கோளகையான இலிங்கமாகிய நாதமானபடியெப்படி? இது சாயுச்சியமன்று. சகயோகமாமிதனைக் கைவிடுவாயாக. எ-று. (உ00)

பாசுபதபேதம் மூன்றனுள் பாசுபதன் மதமும்
மறுப்புங் கூறுகின்றார்.

நேசமுடனறிவுயிரேயெங்குநிறைவாகு
நிலைஞானமிதுவேயென்றுணர்ந்துசிவனெறிகள்
பாசமெனக்கைவிட்டுமுத்தண்டுபற்றிப்
பயில்சிகைநூல்பகைத்துச்சந்நியாசத்தேபயிலு

மாசுடையபாசுபதற்குண்டானமுத்தி
யப்புறமாமாயாவாதத்தணையவருமா
லீசனுயிர்பாசமெனுமிவையறிந்துபாசு
மேகவுயிரருள்சேர்வதிதுமுத்திநெறியே.

(இ-ள்.) நேசமுடன் அறிவுயிரே யெங்கும் நிறைவாகும் நிலைஞான மிது வேயென்றுணர்ந்து சிவனெறிகள் பாசமெனக்கைவிட்டு முத்தண்டுபெற்றிப் பயில்சிகை நூல் பகைத்துச் சந்நியாசத்தே பயிலும் ஆசுடைய பாசுபதற்கு - அன்போடுகூடிய உயிர்தானேயெங்கும் நிறைந்த பொருளாம். அப்பொருளெல்லா விடத்து முள்ளதான பொருளென்றுணர்ந்து சிவன் திருப்பணிகளாகிய சரியை கிரியைகளை நீக்கி, முத்தண்டுங் கரகபாலமும் கௌபீனமுமாய்ச் சிகாவுபவீதங் களைந்து சடைபுனைந்து தவம்புரிவதே முத்தியென்று கூறும் பாசுபதனே யுனக்கு—உண்டான முத்தி அப்புறமாம் மாயாவாதத்தணையவருமால் ஈசனுயிர்பாசமெனுமிவையறிந்து பாசமேக வுயிரருள் சேர்வதிது முத்திநெறியே - உண்டானமுத்தியானது புறச்சமயமாகிய மாயாவாதத்தினை யொக்குமாதலால் இந்த ஆன்மவாதம் நெறியல்லப் பதி பசு பாசமுண்டென்றும், பாசம் நீங்கிப் பதியோடுங் கூடுவதே முத்தியென்றுங் கொள்வாயாக. எ-று. (உ0க)

சூரியவாதிமதமும் மறுப்புங் கூறுகின்றார்.

மும்மண்டலம்விளக்கிமுழுத்தமண்டலமாய்
மூர்த்திகட்குக்கண்ணாகிமுழுதுயிருமொடுக்கி
யம்முறையேயதனையெழுப்பிப்புவிக்கீழோடி
யார்க்குமெட்டாவிரவியென்னுஞ்சூரியவாதிக்குச்
செம்மைகாசிபன்சேயாய்த்தக்கன்வேள்வியினிற்
சிவனின்றியவியுணப்போய்த்திருக்கண்ணும்பல்லு
மிம்மையிலேயிழந்துலகைவலம்வந்துதிரியு
மிவன்கடவுளன்றுவேறிறைகடவுளென்னே.

(இ-ள்.) மும்மண்டலம் விளக்கி முழுத்தமண்டலமாய் மூர்த்திகட்குக் கண்ணாகி முழுதுயிரும் ஒடுக்கி அம்முறையே அதனையெழுப்பிப் புவிக்கீழோடி ஆர்க்குமெட்டா இரவியென்னுஞ் சூரியவாதிக்கு - ஆதித்தனுவான் பூமி அந்தரஞ் சுவர்க்கமாகிய மூன்று மண்டலத்தையும் விளக்கமாக்கி நிறைவுபெற்ற மண்டலத்தையுடையனாய் மும்மூர்த்திகளுக்குங் கண்ணுமிடமுமாய் எல்லா ஆன்மாக்களுக்கும் ஒடுக்கமும் விழிப்புஞ் செய்து பாருக்குக் கீழேயோடி யாவர்க்கும் எட்டாதாயிருக்கும் இவ்விரவியை விழிக்குள்ளும் புறம்புந் தெரிசிக்க முத்தியாமென்னுஞ் சூரியவாதிக்கு—செம்மை காசிபன் சேயாய்த் தக்கன்வேள்வியினிற் சிவனின்றி அவியுணப்போய்த் திருக்கண்ணும் பல்லும் இம்மையிலே யிழந்து உலகை வலம் வந்து திரியும் இவன் கடவுளன்று வேறிறை கடவுளென்னே -

நீ ஆதித்தன் கடவுளென்றாய்; அவன் கடவுளாமாகிற் காசிபன்புதல்வனாய தக்ஷப்பிரசாபதி யாகத்திலே சிவனை யொழிந் தவியுண்ணப் போனனான்று சிவனாலே கண்ணும் பல்லுமுகுப்புண்டு இப்பிறப்பிலே காணப்பட்டு மேருவோடு கூடவுலகை வலம்வந்துதிரியும் அவன் கடவுளன்று. சிவனையே கடவுளென்று வணங்குக. எ-று. (உ0உ)

சந்திரவாதிமதமும் மறுப்புங் கூறுகின்றார்.

சந்திரனேகடவுளாமாருயிர்கள்யார்க்குந்
தண்மையுமாய்த்தேவர்தமக்குணவுமாக்கித்
தந்தவொருகலைதொழுவார்க்கின்பங்கணல்கிச்
சங்கரற்குக்கண்ணாகுமெனத்தனித்துவணங்க
நந்துமுத்தியாமென்னுஞ்சந்திரவா திக்கு
நாடுகலைதேய்ந்துவளர்ந்தத்திரிபுத்திரனாய்
முந்தவரன்காலினாற்றேய்ப்புண்டமதியோ
முத்திநெறிகொடுப்பானிம்முறைமைவிடாய்நீயே.

(இ-ள்.) சந்திரனே கடவுளாம் ஆருயிர்கள் யார்க்குந் தண்மையுமாய்த் தேவர்தமக்குணவுமாக்கித் தந்த ஒருகலை தொழுவார்க் கின்பங்கள் நல்கிச் சங்கரற்குக் கண்ணாகுமெனத் தனித்து வணங்க நந்து முத்தியாமென்னும் சந்திரவாதிக்கு - சந்திரனே உலகுக்குத் தெய்வமாம் எல்லாவுயிர்க்குங் குளிர்ச்சிசெய்பவனுந் தேவர்களுக்கு மருந்தினுமரிய அமுதத்தை யளிப்பானும் தோன்றினவளவிலே தொழுவார்க்குச் சுகத்தை நல்குவானும் இந்திராதி தேவர்க்கெல்லாம் மேலானவனும் சிவனுக்குக் கண்ணவானு மென்றறிந்து அவனைத் தலையாகக் கொண்டு அக்கினியாலே அமுதத்தையுருக்கி யருந்தியிருப்பார்க்கு முத்தியாமென்று கூறுஞ் சந்திரவாதியே யுனக்கு—நாடுகலை தேய்ந்து வளர்ந்து அத்திரி புத்திரனாய் முந்த அரன்காலினால் தேய்ப்புண்ட மதியோ முத்திநெறிகொடுப்பான் இம்முறைமை விடாய் நீயே - உன்கர்த்தாவாகிய சந்திரன்கலை நாடோறுந் தேய்ந்து வளர்வதாய் அத்திரிமுனி நேத்திரத்திலே பிறந்து சிவன்றிருவடியாலே துவையுண்டு முயற்களங்கத்தையுடைய இவனோ முத்திகொடுப்பான். இம்முறைமை விட்டுச் சிவநெறியைக் கொள்வாயாக. எ-று. (உ0ங)

வாமபேதமொன்பதில் வாமதந்திரிமதமும்
மறுப்புங் கூறுகின்றார்.

செவ்விநவயாமளத்தினெறியேபேணிச்
சேரும்வடிவெலாஞ்சத்தியல்லாதில்லை
அவ்வுடனைம்பானெழுத்துஞ்சத்தியாகு
மண்டமுதலருளாகுமருபரமுமிதுவே

யெவ்வறிவுமிதுவென்றவாமதந்திரனே
யிரவியின்கிரணமினனொழிந்துண்டாமோ
திவ்வியனுமிறையன்றிச்சத்திதானே
திகழ்முத்திதருமென்கைதெளியாதநெறியே.

(இ-ள்.) செவ்வி நவயாமளத்தின் நெறியே பேணிச் சேரும் வடிவெலாஞ் சத்தியல்லாதில்லை அவ்வுடன் ஐம்பானெழுத்தும்சத்தியாகும்அண்டமுதல் அருளாகும் அருபரமு மிதுவே யெவ்வறிவுமிதுவென்ற வாமதந்திரனே - சிறந்தவாமமாவது நவயாமளமென்பது. அது ஒன்பதுபேத மாகமமா யதனிற் பிரதானம் யாமளமாம். அதன்வழியைக் கைக்கொண்டு கூடத்தக்க வடிவெல்லாஞ் சத்தி வடிவே. அது பராசத்திமுதற் கிரியாசத்தியீறாக வாயிரபேதமாம். அதுவன்றி அகரமுத லைம்பத்தோரெழுத்தாகவு மவற்றின் பேதமாகிய அனேக வெழுத்துமாய்நிற்கும் அண்டமுதலாகச் சத்தியல்லாதில்லை. அறிவாவதும் அறிவிப்பதும் பஞ்சகிருத்தியஞ் செய்விப்பதும் அருள்தானே. சிவனுக்குமுடலுயிரறிவாவதும் இதுவே ஆதலால் இதனைத்தெரிசிக்க முத்தியாமென்று கூறும் வாமதந்திரனே— இரவியின் கிரணம் இனனொழிந்துண்டாமோ திவ்வியனுமிறையன்றிச் சத்திதானே திகழ்முத்தி தருமென்கை தெளியாதநெறியே - நீ கூறியபடி சத்தியேகர்த்தாவென்னில் சிவனொழியச் சத்தியில்லையாம். ஆதித்திய கிரணமெல்லாவற்றையும் விளக்குவதாயினும் ஆதித்தியனையொழிந் துண்டாகாதாற்போலத் தேவதேவனாகிய சிவனாலன்றிச் சத்திதானே தரவற்றன்று. சத்திதருமென்று நீ கூறினாய். அது தெளியவறியாதவனாகையாலே சொன்னாய். எ-று. (உ0ச)

மந்திரவாதி மதமும் மறுப்புங் கூறுகின்றார்.

தப்பிலாமந்திரங்களொன்றுகோடி
தான்முதலாநமசுவாகாவசட்டுவௌஷட்டு
மெய்ப்படுமும்பட்சுதாவென்றுநிற்கும்
வேறிவற்றாலெவ்வுருவும்வெளிப்படுவதிதனாற்
செப்பிடுமுத்தியதென்றுகூறுமுத்தி
செபமுத்தியாகுமொருதிருநாமமதனால்
அப்பெயரையுடையான்வந்தருளவேண்டு
மம்மொழிமுத்தியதாகாவன்னினைவைவிடாயே.

(இ-ள்.) தப்பிலா மந்திரங்க ளொன்றுகோடி தான்முதலா நமசுவாகா வசட்டு வௌஷட்டு மெய்ப்படு மும்பட் சுதாவென்று நிற்கும் வேறிவற்றால் எவ்வுருவும் வெளிப்படுவதிதனாற் செப்பிடு முத்தியதென்று கூறும்முத்தி - தவறில்லாத மந்திரங்கள் ஏழாய் அவை ஒன்றுகோடியாய் அதன்வகை நமவென்றுஞ் சுவாகாவென்றும் வசட்டு என்றும் வௌஷட்டு என்றும் உம் என்றும் பட்டெ

ன்றும் சுதாவென்றும் முடிவுகளா யிவை மூர்த்திகளுமாய்ப் பிரபஞ்சத்தை நடத்திநிற்கும் இதுதானே யறிவான பொருளென்றும் இதனை யறிவதே முத்தியென்றும் சொல்லும் மந்திரவாதியே இம்முத்திநெறி—செபமுத்தியாகும் ஒருதிருநாமம் அதனுல் அப்பெயரை யுடையான் வந்தருளவேண்டும் அம்மொழி முத்தியதாகா அந்நினைவை விடாயே - செபித்தலே முத்தியாகாது ஒருகர்த்தாவின் நாமமுரைப்பதாம் அந்நாமம் முத்திகொடாது அந்நாமத்தையுடைய கடவுளே வேண்டுமாதலால் இம்மந்திரத்தை யுடையவன் சிவனென்னும் நினைவைக் கொண்டு இந்தக் கருத்தை விடுகுதி. எ-று. (உ௦ரு)

இயந்திரவாதி மதமும் மறுப்புங் கூறுகின்றார்

அலகில்மந்திரமுந்தந்திரங்கடானு
மனைத்துயிருமியந்திரமேயாகுமிப்பா
லிலகுமட்டகருமமிப்பொருள்பொருளேயல்லா
தில்லையெனுமியந்திரவாதிக்கிதுவோமுத்தி
நிலவியவவ்வட்டகருமத்துக்கல்லால்
நீண்முத்திநெறியட்டகருமமாமோ
கலவிதனக்காமிதனைக்கைவிட்டிந்தக்
கண்ணுதலோன்ஞானத்தைக்கருதிடாயே.

(இ-ள்.) அலகில் மந்திரமும் தந்திரங்கடானும் அனைத்துயிரு மியந்திரமேயாகுமிப்பால் இலகுமட்டகருமம் இப்பொருள் பொருளேயல்லா தில்லையெனும் இயந்திரவாதிக் கிதுவோமுத்தி - எண்ணிறந்த மந்திரங்களும் எண்ணிறந்த தந்திரங்களும் எல்லாவுயிரும் இயந்திரத்தினு லுண்டாம். அதுவுமன்றி வசியம், ஆகருணம், மோகனம், உச்சாடனம், தம்பனம், மாரணம், வித்துவேஷணம், பேதன மென்னும் அட்டகருமமும், அணுமா, மகிமா, லகுமா, கிரிமா, ஈசத்துவம், வசித்துவம், பிராத்தி, பிராகாமியம் என்னு மட்டசித்திகளும் உண்டாவதாதலால் அதுவே பொருள் அதுவல்லது வேறுபொருள் இல்லையென்று கூறும் இயந்திரவாதியே உனக்கிதுவோ முத்திநெறி—நிலவிய அவ்வட்ட கருமத்துக்கல்லால் நீண்முத்திநெறி அட்டகருமமாமோ கலவிதனக்கா மிதனைக் கைவிட்டிந்தக் கண்ணுதலோன் ஞானத்தைக் கருதிடாயே - இந்தநெறி விளங்குகின்ற அந்த அட்டகருமம் அட்டசித்திக்கல்லாது பெரியமுத்தியாமோ. இது காமநெறிக்கல்லது முத்திநெறியாகாது. இவற்றைக் கைவிட்டுச் சிவஞானத்தைச்சேருவாயாக. எ-று.

அட்டசித்தியாவன "சிறுமைபெருமைசிக்கென்றல்நொய்மை அறிதலுலகறியவாழ்தல்—பிறிவறவே யாவரையு முன்காண்டல் எவ்விடமும்போய்வருதல் பாவுமட்டசித்திபயன்" என்பதனுலறிக. (உ௦சு)

ஔஷதவாதி மதமும் மறுப்புங் கூறுகின்றார்.

ஓடதிகள்வீழிமுதலனேகமுண்டவற்றை
யொருமண்டலங்கொண்டாலுடல்வேறாகும்
நீடுலகங்கிளம்புமிருமண்டலமும்மண்டலத்தி
னித்தமாமொருக்காலும்நீங்காதென்றுந்
தேடியருந்தித்திரியுமவுடதவாதிக்குத்
தின்னுமருந்தோமுத்தியுடலோமுத்தி
கூடிமுத்தியாக்குமோவிதுவமைத்தவுணவாற்
கூடவிட்டவீடுநெறிகுணமலக்காணிதுவே.

(இ-ள்.) ஓடதிகள் வீழிமுதல் அனேகமுண்டு அவற்றை ஒருமண்டலங் கொண்டால் உடல்வேறாகும் நீடுலகங் கிளம்பும் இருமண்டலம் மும்மண்டலத்தினித்தமாம் ஒருக்காலும் நீங்காதென்றும் தேடியருந்தித்திரியும் அவுடதவாதிக்கு - ஔஷதங்களாகிய வீழிசமூலம் வேம்பு கற்றாளை செம்முள்ளி வச்சனுவியாதி மற்றுமுள்ளவைகளை இடித்துத் தூளாக்கிப் பிரமாணமாக நாற்பதுநாட் கொள்ளத் தோலுரியுண்டு நரை திரைமாறும். பின்னும் நாற்பதுநாட்கொள்ள ஆகாசத்திலே கமனிக்கலாம். பின்னும் நாற்பதுநாட்கொள்ளச் சித்தியாகும். நித்தத்துவமாதலால் இதுவேமுத்தியென்று ஔஷதமுள்ள இடந்தேடித் தின்று திரியாநிற்கும் ஔஷதவாதியே யுனக்கு—தின்னு மருந்தோ முத்தி யுடலோ முத்திகூடி முத்தியாக்குமோ இது அமைத்த உணவால் கூடவிட்ட வீடு நெறி குணமலக்காணிதுவே - நீ தின்னுந் தழையும் வேருமோ முத்திதருவது? இவை தின்று சாரமுறுமுடலோ முத்திதருவது? அல்லது இரண்டுங் கூடியோ முத்தி தருவது? இது முன்னேயமைத்தவுணவாதலால் இவற்றோடுமுடல்விட்டுக் கூடுவது முத்தியாம். இது முத்திநெறியன்று. எ-று. (௨0௭)

## இரண்டாஞ்சூத்திரம்.

கருமவாதி மதமும் மறுப்புங் கூறுகின்றார்.

நல்வினைதீவினைமுன்னேசெய்தவூழாம்
நாடியதுபேறிழவின்பம்பிணிமூப்புடனே
யொல்லைமரணங்களிவைகருவுட்பட்ட
தொருவரானீக்கவொண்ணுபுசித்தன்றியொழியா
வெல்லையிதுவேயென்றுமுயற்சியுஞ்சோம்பதுவு
மிரண்டுமறன்முத்தியென்னுங்கருமவாதிக்குச்
செல்லுமுடலிற்செய்தசடமாங்கன்மஞ்
சென்றுமுத்திகொடுப்பதெங்கேதீங்கைவிடாய்நீயே.

(இ-ள்.) நல்வினை தீவினை முன்னேசெய்த வூழாம் நாடியது பேறிழவின்பம் பிணி மூப்புடனே ஒல்லை மரணங்கள் இவை கருவுட்பட்ட தொருவரால் நீக்கவொண்ணு புசித்தன்றி ஒழியா வெல்லை யிதுவேயென்று முயற்சி சோம்பதுவுமிரண்டும் அறல் முத்தியென்னுங் கருமவாதிக்கு - நல்வினை தீவினை இரண்டும் முன்னே அனுதியிலே செய்யப்பட்டதாய் அதனை ஆராயுங்காலத்துப்பேறு இழவு இன்பம் பிணி மூப்புச் சாக்காடு என்று சொல்லப்பட்ட ஆறும் அனுதியே கருவிலே யுள்ளதாய்வரும் ஆதலால் ஒருகர்த்தாவாலும் ஊழைநீக்க அரிது. இஃ தனேககோடி கற்பங் கூடினுலும் புசித்தன்றித் தொலைவுபடாது. இதுவே விதியென்று தானுய் முயற்சி செய்தல் தானுய் மடிவந்திருத்தல் செய்யாது சிந்தைநினைத்தது செய்துவருவதே முத்தியென்று கூறுங் கருமவாதியே உனக்கு— செல்லுமுடலிற் செய்தசடமாங் கன்மஞ் சென்றுமுத்தி கொடுப்பதெங்கே தீங்கைவிடாய் நீயே - இதற்கு முன்னுடலிலே செய்யுஞ் சடமாகிய கருமம் எங்கே போய் எவரையறிந்து முத்திகொடுப்பது? இதனைக் கைவிடுவாயாக. எ-று. ()

அத்துவிதவாமி மதமும் மறுப்புங் கூறுகின்றார்.

சித்தேதானன்மாவுஞ்சிவனுகுமதுவுந்
தேசமாமதுவுமெனத்தெளிவறிவுவந்தா
லெத்தையயின்றெவரோடேகூடினுலென்
னெல்லாமும்ஞானமாமெனமுன்கூறும்
அத்துவிதவாமியேசத்திதானே
யான்மாவாய்ப்பாசமாயரனுமாகில்
வைத்ததுயர்நாசமியோனிப்பிறவியெல்லா
மற்றந்தச்சத்தியாம்வழியைவிடாய்நீயே.

(இ-ள்.) சித்தேதான் ஆன்மாவுஞ் சிவனுகும் அதுவுந் தேசமாம் அதுவுமெனத் தெளிவறிவு வந்தால் எத்தையயின்றெவரோடே கூடினுலென் எல்லாமும் ஞானமாம் எனமுன்கூறும் அத்துவிதவாமியே - ஞானமாகிய சத்தியே ஆன்மாக்களாவதும் சிவனுவதும் பாசமாகிய பிரபஞ்சமாவதும் என்னுந் தெளிவான அறிவுகூடினவர்க்கு நறவமயின்றால் என் பார்ப்பார் நீசர் இவரி லெவரோடு கூடிக்கலந்தாலென் எல்லாஞ் சத்தியேயென்று கூறும் அத்துவிதவாமியே— சத்திதானே ஆன்மாவாய்ப் பாசமாய் அரனுமாகில் வைத்ததுயர் நாசமியோனிப்பிறவியெல்லாம் மற்றந்தச் சத்தியாம் வழியைவிடாய் நீயே - சத்திதானே ஆன்மாவுஞ் சிவனும் பாசமுமாகில் சத்தியே துக்கப்படுவதும் நசிப்பதும் நரகத்துறுவதும் யோனிகளிற் பிறப்பதுமாம். அந்த மயக்கவழியைக் கைவிடுவாயாக. எ-று. (உ0கூ)

துவிதவாமிமதமும் மறுப்புங் கூறுகின்றார்.

ஆன்மாவுஞ்சத்திபோற்சிவன்சத்தியாகு
மதனுக்குமலமுளவங்கதுதான்றீர்ந்தாற்
றானந்தத்தொழிலெல்லாம்வல்லதாகித்
தலமேலிற்சேருமெனுந்துவிதவாமிக்கு
வான்வாழும்பதம்வாராவிடாகினிகள்பூத
வகையிலொன்றாகிப்பலிகொண்டிறந்துபோகு
மேன்ஞானமறியாதுபாதாளத்தில்
விழுஞானந்தேடுமோவிதியலக்காணிதுவே.

(இ-ள்.) ஆன்மாவுஞ் சத்திபோற் சிவன் சத்தியாகும் அதனுக்கு மலமுள அங்கதுதான் தீர்ந்தால் தானந்தத் தொழிலெல்லாம் வல்லதாகித் தலமேலிற் சேருமெனும் துவிதவாமிக்கு - ஆன்மாவும் ஞானசத்திபோலே சுத்தமானசத்தியாம் அதனை மலம் பந்திக்கும் பந்தத்துக்கு அந்தச் சத்திபேதங்களை வழிபட்டவ்வழியிலே மலம் நீங்கினாற் தானுமந்தச் சத்திபோல வெல்லாஞ்செய்ய வல்லதாம் அதுதானே முத்தியென்று கூறுந் துவிதவாமியே யுனக்கு—வான்வாழும் பதம் வாரா விடாகினிகள் பூதவகையி லொன்றாகிப் பலிகொண்டு இறந்துபோகும் மேன்ஞானமறியாது பாதாளத்தில் விழும் ஞானந் தேடுமோ விதியலக்காணிதுவே - சுவர்க்கம் பொருந்தும் பதமுண்டாகாது பூதப்பிரேத பசாசு குய்யர் சித்தர் வித்தியாதரரென்னும் இவர்பதங்களிற் சிலநாட் பலிதேடி யுழன்று பிற்காலத்திற் பாதாளத்தில் விழும் ஞானமல்லது மேலான ஞானமறியாது. இவ்விதி வேதாகம விதியல்ல. இதனைக் கைவிடுவாயாக. எ-று. (உகo)

மிச்சிரவாமி மதமும் மறுப்புங் கூறுகின்றார்.

அறிவுடலவ்வுடற்கருவிசத்தியாகு
மரனுக்குமமரர்மானிடர்க்குமப்படியாம்
பிறிவறவவ்வுலகுயிருஞ்சத்தியென்று
பேசுமிச்சிரவாமிபேசிற்றெல்லாங்
குறிகுணமொன்றில்லாதசிவனைக்கண்டு
கொள்ளினுமிச்சத்தியல்லாதில்லையெனல்கொண்டே
யறியிலிவற்றுக்கிறுதிதோற்றமுண்டா
மப்பொருடான்வாக்கிறந்தவரும்பொருளதாமே.

(இ-ள்.) அறிவுடல் அவ்வுடற்கருவி சத்தியாகும் அரனுக்கும் அமரர் மானிடர்க்கு மப்படியாம் பிறிவற அவ்வுலகுயிருஞ் சத்தியென்று பேசும் மிச்சிரவாமி - பிரவஞ்சத்தில் அறிவாயும் உடலாயும் அவ்வுடற்கருவியாயும் நிற்பது சத்தியாம். சிவனுக்கும் அறிவாயும் உடலாயும் கரணமாயும் நிற்கும் பிரம விட்டுணு

க்களுக்குந் தேவர் மனிதர் முதலிய யாவர்க்கு மிப்படியாம். இச்சத்தியை வழி படவே முத்தியாம். நியாசம் அனுட்டானம் பூசை ஓமம் செபம் பால் பூ மணம் மது நறவிவைகளாற் தற்பணம் முதலிய சத்தியாகவே சிவலிங்கத்தையுந் தியா னித்துச் செய்ய முத்தியாம் என்னும் மிச்சிரவாமியே—பேசிற்றெல்லாங் குறி குணமொன்றில்லாத சிவனைக்கண்டு கொள்ளினும் இச்சத்தியல்லா தில்லையெ னல்கொண்டே அறியிலிவற்றுக்கிறுதி தோற்றமுண்டாம் அப்பொருடான் வாக்கிறந்த அரும்பொருளதாமே - இப்படி நீசொல்லப்பட்டதெல்லாம் அடை யாளமும் குணமுமற்ற சிவனைக்காணினும் நினைப்பினுஞ் சத்திவேணுமென்னுங் கருத்துக்கொண்டே. அப்படிக்கூறப்பட்ட சத்திபேதங்களுக்குத் தோற்றமும் ஈறுமுண்டாம். அந்தச்சிவன் மனவாக்கிறந்த பொருளாம். ஆதலால் குறித்தற் கரிது. அதனைக்குறித்தன்றிப் பிறிந்து சத்தியாலுங் கொடுக்கவரிது. எ-று. ()

வாமசித்தாந்தி மதமும் மறுப்புங் கூறுகின்றார்.

அழிவிலாதாரசத்திமுதற்பரையீறாக
வனுக்கிரகசத்தியதன்பேதமெல்லாம்
ஒழிவில்பரையாலேயுற்பவமாமந்த
வுயர்பரைச்செவ்வொளியிலேயொன்றுபடன்முத்தி
யிழிவிலவென்றுரைக்கும்வாமசித்தாந்தியேயிவ்
வியல்பினுக்குநாயகமுமில்லையோவுன்றன்
எழிலினுக்கங்கறிவானவொளியையோர்வடிவி
லேற்றிநீகாணிலிதற்கிறுதிவருங்காணே.

(இ-ள்.) அழிவிலாதார சத்திமுதற் பரையீறாக வனுக்கிரக சத்தியதன் பேதமெல்லாம் ஒழிவில் பரையாலே யுற்பவமாம் அந்தவுயர்பரைச் செவ்வொ ளியிலே யொன்றுபடன் முத்தி இழிவிலவென்றுரைக்கும் வாமசித்தாந்தியே - கேடில்லாத ஆதாரசத்திமுதற் பராசத்தியீறாக அனுக்கிரக சத்திகளேயாம். அந் தச் சத்திகளெல்லாம் எவ்விடத்தும் நிறைந்த பராசத்தியிலே யுற்பவிக்கப்ப டும். அந்தப் பராசத்தி செவ்வரத்தமலர் ஆதித்தன் செம்மணி உச்சித்திலகம் பர ம்பும் பார்வையொளி என்னும் பிரகாசத்திலே தெரிசிக்குமதுவே முத்தியென்று கூறும் வாமசித்தாந்தியே—இவ்வியல்பினுக்கு நாயகமு மில்லையோ உன்றன் எழிலினுக்கங்கறிவான ஒளியையோர் வடிவிலேற்றி நீகாணில் இதற்கிறுதி வரு ங்காணே - உன் வழக்குக்கு நிறைவாய் நிற்கும்பொருளை யொருவடிவிலேயாக்கி அவ்வடிவைக் கொள்ளில் அதற்கிறுதியுண்டாகும். அதுவன்றித் தனக்கு நாயக முமற்றதாம். இதனைவிடுயாக. எ-று. வாமபேதம் ஒன்பதும் முடிந்தது. (௨௧௨)

பைரவமதமும் மறுப்புங் கூறுகின்றார்.

அட்டபைரவர்கள்சூழாதிபைரவனே
யயன்றலைகொய்தான்மாறனுக்கையினைச்சுமந்தா
னெட்டுருவாயனந்தகோடிவடிவாயாணை
யெவ்விடத்துஞ்செலுத்தியெவ்வுயிர்க்குமுயிராமென்

றெட்டுபயிரவனேபானங்கொள்வானென்
றுன்னியுலையாதல்முத்தியெனல்மகேசனெல்லை
மட்டில்நிறுத்துவதன்றிமேலொளியைக்கொளுத்த
மாட்டானுற்பதமுத்திமருவுவதுமிலையே.

(இ-ள்.) அட்டபைரவர்கள்சூழ் ஆதிபைரவனே அயன்றலை கொய்தான் மாறுனக் கையினைச் சுமந்தான் எட்டுருவாய் அனந்தகோடி வடிவாய் ஆணை எவ்விடத்துஞ் செலுத்தி யெவ்வுயிர்க்கு முயிராமென் றெட்டு பைரவனே - அட்டவயிரவர்கள் சூழப்பட்ட ஆதிவயிரவமூர்த்தியே எவ்வுருவுக்கும் முதலாம் அவன் பிரமா ஐந்துமுகமானதுகொண்டு தான் ஐம்முகனுலுண்டானதால் ஆதி சிவனுண்டானு னென்பதுகொண்டு அப்பிரமன் நடுத்தலையை நகத்தாற்கொய்து அவ்வடையாளந் தோன்ற நின்று இது சுத்தபாத்திரமென்று ஐயமேற்குங்காற் பிரமசிரசு நிறைந்ததில்லை அதனை விட்டுணுகண்டு யான் நிறைப்பேனென்று நெற்றிவேர்வையை விடக் குனிந்தவளவிலே சூலத்தாலே நெற்றியிலே குற்றிக் கபாலம் நிறையவேற்றூர். அப்போது விட்டுணுவின் சரீரவிரத்த மெல்லாம் போய் மூர்ச்சித்து விழுமளவில் சூலத்தாலே குற்றிக் களேபரமாகக் கொண் டும் அட்டமூர்த்தியாயும் அனந்தகோடி வயிரவனுய்த் தனதாணை யெவ்விடத் தும் பரப்பி எவ்வுயிர்க்கு முயிராயிருப்பன் என்கிற பைரவனே—பானங்கொள் வானென்றுன்னி யுலையாதல் முத்தியெனல் மகேசனெல்லை மட்டில் நிறுத்து வதன்றி மேலொளியைக் கொளுத்தமாட்டானுற் பதமுத்தி மருவுவது மிலையே - விரும்பிய மதுபான இரத்தபானங்களை யருந்தி வீரதத்துவங் குறையாமல் அவ ன்றானுயிருப்பது முத்தியென்றூய். உன்னிறையும் உன்கர்த்தாவின் எல்லையும் மகேசனளவத்தனை நினைந்தமட்டிலே நிறுத்துவனல்லது மேலே மேலே ஒளி யைக் கொளுத்தமாட்டான். உடலின்றியொழிந்தாற் பலிப்பது மகேசமூர்த்தி யாம். அஃதல்லது குற்றமற்ற பதமுத்தியுங் கிடைப்பதில்லையாகும். எ-று. ()

காளாமுகன் மதமும் மறுப்புங் கூறுகின்றூர்.

அட்டமிகள்சோமவாரஞ்சிவராத்திரிக
ளாதிநோன்பதுசெய்யவஞ்ஞானநீங்கி
யிட்டமாயுபிரொளிபோயொளியோடெய்து
மிதுமுத்தியென்னுங்காளாமுகனேயுனக்கு
விட்டகலாவஞ்ஞானநோன்பாலேவிடுமோ
வினைநீங்குமல்லாதுவேறென்றுமோ
தொட்டவொளிமிக்கவொளிசூரியன்றாரகைபோற்
றேன்றுதுசாயுச்சியஞ்சொல்லிரண்டோன்றதுவே.

(இ-ள்.) அட்டமிகள் சோமவாரஞ் சிவராத்திரிகள் ஆதிநோன்பது செய்ய அஞ்ஞானம் நீங்கி இட்டமாய் உயிரொளிபோயொளியோடெய்தும் இது முத்தி யென்னுங் காளாமுகனே யுனக்கு - அட்டமி சோமவாரம் மாதசிவராத்திரி தெக்ஷணமூர்த்திவிரதம் முதலான விரதம் அனுட்டித்தால் அஞ்ஞானம் நீங் கும். அது நீங்கவே உயிரொளி அச்சிவனொளியோடே கூடிவிடும் ஆதித்தனொ ளியுடனே நட்சத்திரவொளி கலந்தாற்போலவென்று கூறுங் காளாமுகனே யுனக்கு—விட்டகலா அஞ்ஞானம் நோன்பாலே விடுமோ வினை நீங்குமல்லாது வேறொன்றாமோ தொட்டவொளி மிக்கவொளி சூரியன் தாரகைபோற் ருேன் றுது சாயுச்சியஞ் சொல்விரண் டொன்றதுவே - உயிரைவிட்டு நீங்காத அஞ் ஞானமானது விரதத்தாலே கெடுமோ? கன்மத்தை நீக்குமல்லது வேறாகாது. அதுவுமன்றி ஆன்மாவின் ஒளியும் மேலொளியுங்கூடி நட்சத்திரமும் சூரியனும் போலிருக்குமென்றாய். நட்சத்திரப் பிரகாசம் சூரியப் பிரகாசத்திலே மறைந்த ல்லது நட்சத்திரமுஞ் சூரியனு மொன்றானதில்லை. இது சாயுச்சியமன்று. பத முத்தியாம். எ-று. (உகச)

மகாவிரதி மதமும் மறுப்புங் கூறுகின்றார்.

இலிங்கமேயுயிரதுகைவிட்டான்முத்தி
யில்லையாமென்றுதலைகண்டம்பூணு
துலங்குகையேயரையொன்றிற்றரித்துக்கொண்டு
தோன்றியவேடத்துநிற்கைமுத்தியென்றே
யிலங்கவுரைக்குமகாவிரதிநீதா
னிங்ஙனங்கூறியதுபதமுத்தியல்லாற்
கலங்கிடுமோமுத்திநெறியிதனைக்கைவிட்டுக்
கரையிறந்தவொளிமுத்திகைக்கொள்கவன்றே.

(இ-ள்.) இலிங்கமே உயிரதுகைவிட்டால் முத்தியில்லையாமென்று தலை கண்டம் பூணூல் துலங்குகையே அரையொன்றிற் றரித்துக்கொண்டு தோன் றியவேடத்து நிற்கை முத்தியென்றே இலங்கவுரைக்கும் மகாவிரதி - இலிங்க மே உயிராகக்கொள்ளப்படும். அது கைவிட்டால் முத்தியில்லையாமென்று இலி ங்கத்தை தலை கழுத்து பூணூல் கை அரை யிவையிலே தரித்துத் தோன்றிய வேடத்து நெறிநின்று பணிசெய்தலே விளங்கப்பட்ட முத்தியென்று கூறும் மகாவிரதியே—நீதான் இங்ஙனங்கூறியது பதமுத்தியல்லாற் கலங்கிடுமோ முத் திநெறி இதனைக் கைவிட்டுக் கரையிறந்தவொளிமுத்தி கைக்கொள்கவன்றே - நீ இப்படிச் சொல்லியது சாயுச்சியமன்றாம். கலக்கத்தைத்தரும் பதமுத்தியாம். இதனைக் கைவிட்டு அளவற்ற ஒளி முத்தியைக் கொள்ளுக. எ-று. உட்சமயம் இருபத்துநாலும் முடிந்தது. (உகரு)

சித்தாந்தபேதம் எட்டில் ஈசுரவைக்கியவாதம் பாடாணமோட்ச
வாதம் இரண்டும் சிவாத்துவிதமாகவும், பேதவாதம் சிவசம
வாதம் இரண்டும் சிவாத்துவிதபேதமாகவும், சங்கி
ராந்தவாதம் ஈசுரவவிகாரவாதம் இரண்டும்
மிச்சிரவாதமாகவும் நிமித்தகாரண
பரிணாமவாதம் சைவவாதம்
இரண்டும் வாமசித்தாந்த பேதமாக
வுஞ் சொல்லப்பட்ட எட்டும் சைவசித்தாந்த
பேதமாய்த் தெரிசனவவதரத்திலுள்ளன. அவற்றுள்
சிவாத்துவிதமிரண்டில் ஈசுரவைக்கியவாத மதமும் மறுப்புங்
கூறுகின்றார்.

ஈசனுயிர்பாசமெனமூன்றதனுளீச
னேகனெண்ணிலுயிர்களிருவினைமாயையதாம்
பாசமாறிப்பிறந்துவருகாலமேகம்
பருதிமறைப்பதுபோலுமுடலில்வினையொத்தால்
நாசமாகுதல்செய்தாலிறைகுருவாயுணர்த்தல்
நாரமுநீருங்கலத்தலீசுரவைக்கியற்கே
மாசுவருமுன்னறிவுக்கறிவில்லாதிருத்தன்
மலத்தினாலெனவறிந்துமலமுண்டாக்குறியே.

(இ-ள்.) ஈசனுயிர் பாசமென மூன்றதனு ளீசன் ஏகன் எண்ணிலுயிர்கள் இருவினை மாயையதாம் பாசமாறிப்பிறந்து வருகாலமேகம் பருதிமறைப்பதுபோலும் உடலில்வினையொத்தால் நாசமாகுதல் செய்தால் இறைகுருவாயுணர்த்தல் நாரமும் நீருங் கலத்தல் ஈசுரவைக்கியற்கு - பதி பசு பாசமென்னும் மூன்றும் முதல். அவற்றுள் பதியொருவன். பசுக்கள் எண்ணிறந்தன. பாசம் புண்ணியம் பாவம் மாயையென மூன்றுவிதம். இதனுட் சிவனாலே ஆன்மாக்களுக்குக் கன்மத்துக்கீடாக மாயாவுட லுண்டாம். அவ்வுடலாலே மீளவுங் கன்மமுண்டாம். இப்படி மாறிப்பிறந்து வருங்காலத்து முகிலாலே மறைக்கப்பட்ட ஆதித்தனைப் போல ஆன்மாக்கள் புண்ணிய பாவங்களாலே பிறந்திறந்து திரியும். புண்ணிய பாவங்கள் ஒருமுகுர்த்தத்திலே இருவினையும் புசிப்பிக்குங் காலத்தாதல் கன்மந் தொலைந்த காலத்தாதல் சிவன் குருவடிவெடுத்துக்கொண்டு வந்து இரட்சித்து மாயாகாரியத்தை நீக்க ஆன்மாச்சுத்தனாய் நீரும்நீரும் சேருந்தன்மைபோலச் சிவனறிவும் ஆன்மாவறிவும் பொருந்தி முத்தியாமென்னும் ஈசுரவைக்கியவாதியே— மாசுவரு முன்னறிவுக் கறிவில்லாதிருத்தல் மலத்தினா லெனவறிந்து மலமுண்டாக் குறியே - மாயாபடலங் கூட்டுவதன் முன் சுத்தனானால் அறிவையறியாதிருப்பானேன்? அறியாதபடியாலே யென்றாய் அந்தவறியாமைகாண் மலமாவது. அதுவுமன்றி ஆன்மா அறிவிக்கவறியுமறிவு. சிவன் அறிவித்து நிற்கும் அறிவாதலால் இரண்டு மொன்றாய்ப் போகாது அன்னியமாயிருக்குமென் றறிவாயாக. எ-று.

(உகசு)

பாடாணமோட்சவாதி மதமும் மறுப்புங் கூறுகின்றார்.

ஆணவத்தாற்சான்மாயைகருமங்களளவி
லந்தகன்கோலாற்செல்லுமதுபோலாகு
நீணுற்றதுயர்நீங்கிவிகற்பியாம
னேர்போதமறக்கற்போற்கிடத்தல்முத்தியென்னும்
வீணுற்றபாடாணவாதிவிதிமுத்தி
வியன்முட்டைகருப்பம்விடமூர்ச்சைகம்பஞ்
சேணுற்றநேரங்கள்சேர்ந்தவர்க்குமுத்தி
சித்திப்பதாமிந்தச்சித்தத்தைவிடாயே.

(இ-ள்.) ஆணவத்தாற் சால்மாயை கருமங்கள் அளவில் அந்தகன் கோலாற் செல்லுமதுபோலாகும் நீணுற்ற துயர் நீங்கி விகற்பியாமன் நேர் போத மறக்கற்போற் கிடத்தல் முத்தி யென்னும் வீணுற்ற பாடாணவாதி-ஆணவமலம் அணுவியாக மாயையைப் பொருந்தும். அம்மாயையிற் கன்மவழியிலே குருடன்கையிற் கோல்போலத் திரியாநிற்கும். இப்படி நீண்டதுயரத்தைச் செய்யுங் கருவி கரணங்கள் நீங்கிக் கரணவிகற்பஞ் சிறிதுந்தோன்றாமல் அசைவற்றுப் பாறைக்கற்போலக் கிடப்பதே முத்தியாமென்று கூறும் பாடாண மோட்சவாதியே—விதி முத்தி வியன்முட்டை கருப்பம் விடம் மூர்ச்சை கம்பஞ் சேணுற்ற நேரங்கள் சேர்ந்தவர்க்கு முத்தி சித்திப்பதாம் இந்தச் சித்தத்தை விடாயே - நீ சொல்லுகின்ற இது முத்தியாகின் முட்டையிற் சினையிற் கருப்பத்தில் மரத்தில் விஷத்தில் மூர்ச்சைவந்தநேரத்தில் உடல் நீங்கும் நேரத்தில் கருவிகள் சுருங்கும் நேரத்தில் ஆன்மாக்களுக்கு முத்திப்பயன் கிட்டுவதாகவேண்டும். இந்தப் போதத்தைக் கைவிடுவாயாக. எ-று. (உகள)

சிவாத்துவிதபேதம் இரண்டிற் பேதவாதி மதமும் மறுப்புங் கூறுகின்றார்.

ஈசனருளாற்பாசத்தொகுதியெல்லா
மிருஞ்செம்பிற்களிம்புபோலிசைந்துநிற்குந்
தேசுதருரசகுளிகைதாக்கச்செம்பு
செம்பொன்னுமதுபோலச்சிவனுனீங்கி
நேசமுறும்பதத்திருப்பனெனும்பேதவாதி
நிகழ்செம்புகுளிகையினாற்பொன்னுவதன்றி
யாசிலாக்குளிகையதுவாகமாட்டா
வாம்பதமேற்பரமுத்தியாகுங்காணே.

(இ-ள்.) ஈசனருளால் பாசத்தொகுதி யெல்லாம் இருஞ்செம்பிற் களிம்புபோல் இசைந்துநிற்குந் தேசுதரும் ரசகுளிகை தாக்கச்செம்பு செம்பொன்னும் அதுபோலச் சிவனால் நீங்கி நேசமுறும் பதத்திருப்பனெனும் பேதவாதி - சிவன் திருவருளாலே பாசங்க ளெல்லாம் ஆன்மாக்களைச் செம்பிற் களிம்புபோலச் சகசமாய்ப் பொருந்திநிற்கும். அச்செம்பை விளக்கத்தைத் தருவிக்கும் இரசகுளிகைபோல அஞ்ஞானத்தை நீக்கும். அவ்வஞ்ஞானம் நீங்கவே நித்தசுத்தனாய்ச் சிவனைப்போலாகி மேற்பதத் திருப்பனென்னும் பேதவாதியே—நிகழ்செம்பு குளிகையினாற் பொன்னாவதன்றி யாசிலாக் குளிகை யதுவாகமாட்டா வாம்பதமேற் பதமுத்தி யாகுங்காணே - களிம்போடு கூடிய செம்பு இரசகுளிகையினாற் களிம்பற்றாலும் பொன்னாவ தல்லது தன்னைப் பொன்னாக்கின குளிகையாகமாட்டாது. இது சாயுச்சிய முத்தியன்று. பதமுத்தியாம். எ-று. (உகஅ)

சிவசமவாதி மதமும் மறுப்புங் கூறுகின்றார்.

அறிவுமூவகைக்குமுளபாசமறிவிக்கு
மியிர்சுட்டியறியும்பின்னருங்குளவிப்புழுப்போ
லிறைபேதிப்பித்துடலைத்தன்போலாக்கு
மிசைவுபோன்முத்தியென்னுஞ்சிவசமவாதிக்குக்
குறிபாசஞ்சடமுயிருக்குணர்விடமாமுயிருங்
குறிப்பதுதான்சிவனறிவினோடுங்கூடிற்
செறிகுளவிப்புழுச்செயல்கள்யோனிபேதஞ்
சேர்கைசாயுச்சியமோதிகழ்யோகங்காணே.

(இ-ள்.) அறிவு மூவகைக்குமுள பாச மறிவிக்கும் உயிர் சுட்டியறியும் பின் அருங்குளவிப் புழுப்போ லிறை பேதிப்பித்துடலைத் தன்போலாக்கு மிசைவுபோல் முத்தியென்னுஞ்சிவசமவாதிக்கு- பாசம் பசு பதி மூன்றுக்கு மறிவுண்டு. பாசவறிவாவது பற்றியெழுந்திருந்து சிந்தித்துற்ற பொறிவழியிலோடியிடும். பசுஅறிவு அறிவிக்குங் கருவிகளைக்கொண்டணைந்து பயன் கருதியனுபவியாநிற்கும். பதி அறிவு இப்படித்திரியும் ஆன்மாக்களைப் பக்குவங்கண்டவளவிலே புழுவைக் குளவிகொண்டுபோய்ப் போதத்தை யடக்கிவைக்கப் புழுக் குளவியைப்போலாய்விடுந் தன்மைபோலச் சிவனும் அவனைத் தன்வடிவ மாக்குவதாம். இதுவே முத்தியென்று கூறுஞ் சிவசமவாதியே நீசொன்னதில்—குறிபாசஞ் சடமுயிருக் குணர்விடமாம் உயிருங் குறிப்பதுதான் சிவனறிவினோடுங் கூடிற் செறிகுளவிப் புழுச் செயல்கள் யோனிபேதஞ் சேர்கை சாயுச்சியமோ திகழ்யோகங்காணே - குறிக்கப்பட்ட பாசத்துக் கறிவுண்டென்றாய். அறிவுண்டாயிற் பாசஞ் சடமாகாது. அது சடமாதலால் அறிவில்லை. அறியு மான்மாக்களுக்குப் பாசம் அங்கத்

துக்குச் சட்டைபோல அறியுந்தானமாகும். கண்ணாடி காண்பானுக்குக் காட்டுவதுபோலவாம். சிவன் ஆன்மாக்களை இரட்சிக்கவேணுமென்பது திருவுள்ளமாதலாலே பக்குவத்திலே குளவி புழுவைத் தானாக்கினாற் போலவாமென்றாய். அது யோனிபேதமல்லது குளவிக்கு நம்மைப்போலாக்க வேணுமென்னுங் கருத்தில்லை. குளவிக்கு யோனியும் உதரமுமில்லை. கண்டபுழுவைத் தன் கருப்பமாய்க் குறித்தெடுத்து எறும்புமுத லறியாமல் மண்ணூற் கூடுசெய்து வைக்கும். அது நாட்செல்ல அவ்வுடலுலர்ந்து போகக் குளவிவடிவாம். அவ்வளவிலே அது புறப்பட்டுத் தன்னிச்சைப்படிபோம். இதனைச் சாயுச்சிய முத்தியென்பதுமாகுமா. இது யோகமுத்தியாம். இதனை விடுவாயாக. எ-று. (உ௧௯)

மிச்சிரவாதம் இரண்டிற் சங்கிராந்தவாதமும்
மறுப்புங் கூறுகின்றார்.

உயிர்விளக்கமெனநிற்குமிறைவன்சிந்திதனு
முயிர்காந்தபசாசம்போ லுடல்பொறியைநடத்துஞ்
செயலுருவிட்டாற்சடமாமிதன்பழையமலத்தைச்
சிதைப்பளவிற்சிவன்றானாய்ச்சிவகரணமாகும்
வயின்முத்தியெனுஞ்சங்கிராந்தவாதி
வடிவைநடத்துவதுயிரேற்றன்வசத்தில்வருமோ
பயில்கரணாதிகள்பொறிகட்கறிவுண்டாமோ
பரனறிவுபாசமோபதிகலப்பாய்ப்பாரே.

(இ-ள்.) உயிர்விளக்கமெனநிற்கும் இறைவன் சிந்திதனும் உயிர்காந்தபசாசம்போ லுடல்பொறியை நடத்துஞ் செயலுருவிட்டாற் சடமாம் இதன் பழைய மலத்தைச் சிதைப்பளவிற் சிவன்றானாய்ச் சிவகரணமாகும் வயின்முத்தியெனுஞ் சங்கிராந்தவாதி - ஆன்மாவானது விளக்குப்போல நிற்கும் அவ்வான்மாவின் சந்நிதியிலே அந்தக்கரணங்கள் இந்திரியாதிகளையறிந்து புசியாநிற்கும் சிவன் சிந்திதனாய் நிற்பன். அஃதறியு முறைமை பூட்டை அச்சுநிற்கப் பூட்டை காரியப்படுவது போலாம். அங்ஙன மிவற்றை நடத்தும் ஆன்மாவின் ஆதிமலம் நீங்கவருங்காலம் கண்ணாடியின் ஒளிக்குள்ளே உருவந்தோன்றினாற்போலச் சிவனுருவம் வெளிப்படும். வெளிப்படின் ஆன்மா அந்தச் சிவனாய்விடுவன். சிவனாய்விடவே அளத்திற்பட்ட துரும்புமுதலிய யாவும் உப்பாய்விடுமோபோல ஆன்மாவுங் கருவிகரணங்களும் பழைய கரணங்குலைந்து சிவகரணமாய்விடும். இதுவேமுத்திநெறியென்னுஞ் சங்கிராந்தவாதியே—வடிவைநடத்துவது உயிரேல் தன்வசத்தில் வருமோ பயில்கரணாதிகள் பொறிகட் கறிவுண்டாமோ பரனறிவுபாசமோ பதிகலப்பாய்ப்பாரே - ஆன்மாவின் சந்நிதியிலே கரணங்கள்

செயற்பட அவத்தை வருமோ மறப்பு நினைவுவருமோ சுகதுக்கம் வருமோ பொறிகள் சேரவறியில் எல்லாமொருக்கால் ஒருங்கறியில் ஒன்றறிந்தொன்றறியுமோ. இதுநிற்கக் கண்ணாடியிற்றோன்று நிழல்போலச் சுத்தான்மாவிடத்திலே சிவன் பொருந்தினால் உருக்காட்டினார் வேறே யுண்டாகவேணும். பசுகரணஞ் சிவகரணமாயிற் பாசஞ் சிவனாகவேண்டும் "இருநிலனாய்த் தீயாகி" என்பதும் அவற்றோடு கூடிநின்றானென்பதல்லது அவையானென்னும் பொருள்படாது. ஆதலால் இது முத்திக்கருத்தல்லவென்றுணருக. எ-று. (உசுசு)

ஈசுரவவிகாரி மதமும் மறுப்பும் கூறுகின்றார்.

துளைக்குடத்தில்விளக்கெனவேயுயிர்பலவாயறியு
மாயினுஞ்சூழ்பொறிவசமாயவற்றையறிவிக்கும்
விளக்குமலபக்குவத்திலிருட்குவிளக்கேந்தும்
விதியினரனடிநீழல்வெம்மைமரனிழலா
லளிப்பதாமுத்தியெனுமீசுரவவிகாரிக்
கறிவாயினிந்திரியமறிவிக்கப்படுமோ
விளக்கினைக்கொள்பவன்முதலிநிழல்சேர்வுமொக்கும்
வேண்டியவணையாமரமுமிதுவோவுன்விதியே.

(இ-ள்.) துளைக்குடத்தின் விளக்கெனவே உயிர்பலவாயறியு மாயினுஞ் சூழ் பொறிவசமாய் அவற்றை யறிவிக்கும் விளக்குமல பக்குவத்திலிருட்கு விளக்கேந்தும் விதியின் அரனடிநீழல் வெம்மை மரனிழலால் அளிப்பதாம் முத்தியெனும் ஈசுரவவிகாரிக்கு - பலதுளைக்குடத்தி லேற்றியதீபம்போல ஆன்மாவெங்குமறிவாய்நிற்கும். அப்படி நிற்குமாயினும் அவ்வப் பொறிகளளவாய் அவ்வவற்றைக் கூடியறிந்துசெல்லும் இந்த ஆன்மாவுக்குமலபாகமுஞ் சத்திநிபாதமு முண்டாக இருளுக்கு விளக்கேந்திக் காணவேண்டுவோரைப்போல ஞானவிளக்கைச் சிவனருளாலே பெற்றுப் பொருளினாலே யவாவுற்று மிகவோடி வெம்மையிற் றிரிந்தானொருவன் மரநிழல் கண்டாறுவதுபோலத் திருவடிநிழலிலேயாறு மிதுவே முத்திநெறியென்று கூறும் ஈசுரவவிகாரவாதியே—அறிவாயின் இந்திரியம் அறிவிக்கப்படுமோ விளக்கினைக் கொள்பவன்முதலி நிழல்சேர்வுமொக்கும் வேண்டியவணையா மரமு மிதுவோ உன்விதியே - ஆன்மா விகாரியல்லன். இந்திரியவழியறியுமென்றாய். ஆன்மா இந்திரியவழியறியுமாயின் ஆன்மா அறிவற்றதாம். ஒருவன் இருளிலிருந்த பதார்த்தத்தையெடுக்கவேண்டி விளக்குக்கொண்டுபோய் எடுத்தாற்போல ஆன்மா அருளைக்கொண்டு சிவனையறிவனென்றாய். அப்படியாயின் ஆன்மா முதலியாம். அதுவுமன்றிப் பூமியின் வெம்மையாற்றாதவன் மரநிழல்சேர்ந் தாறுந்தன்மைபோலத் திருவடிநிழல் சேருமென்

ருய். மரம் தன்னை வைத்தவனை அறிந்தணையாது வெட்டினவனையறிந்து தள்ளாது அசேதனமாம் அப்படியே சிவன் அசேதனனாக ஆன்மாச் சேதனனாகவேண்டும். இது முத்திநெறியன்றென் றுணருக. எ-று. (உகுஎ)

வாமசித்தாந்தம் இரண்டில் நிமித்தகாரண பரிணாமவாதி மதங் கூறுகின்றார்.

புவனமெல்லாமறிவுவடிவாகுமன்றிப்
புகலுயிர்வேறிலைச்சிவனும்புகலுஞ்சத்தியுமே
யவமுயிர்பாசங்களெனவேறொன்றின்றதுவே
யரும்பணியும்பொன்னுமெனிலதுபிறிதாந்தொழிலாம்
நவவுயிரென்றொருமுதலுந்தனித்துநில்லா
நண்ணலருஞ்சத்திசிவநடிப்பேயிக்கலப்பும்
புவிமுதலாயாவையுமிங்கிவரேயென்கை
புகன்முத்தியெனுநிமித்தகாரணன்றன்புகழே.

(இ-ள்.) புவனமெல்லாம் புகழே - புவனம் யாவுஞ் சத்திவடிவாம் அதுவொழிந்து அவ்வுடலோடுகூடிய வறிவும் ஆன்மாவி னறிவாகக் காணப்படாது சர்வமுஞ் சிவனறிவேயாம். ஆகவே உயிர் சிவமும் உடல் சத்தியுமாம். இதுவல்லது வீணே ஆன்மாவுண்டெனவும் ஆன்மாவைப்பற்றிய பாசமுண்டெனவும் வேறாகக் காணப்படுவதில்லை. அது பொன்னும் பணியும் போலவென்னிற் பொன்னின்றொழில் பணியாம்; அதனாலே வேறொருபொருளுந் தனித்து நிற்கமாட்டாது. ஆதலாற் சொலற்கரிய சத்தி சிவநடிப்பே இப்பிரவஞ்சம் சத்திசிவநீக்கமில்லை ஆதலால் எவ்வுயிரு மெவ்வுடலுஞ் சத்தி சிவமேயென்று சொல்லுவது முத்தியென்பதே நிமித்தகாரண பரிணாமவாதிமதமாம். எ-று. (உகுஅ)

மறுப்புக் கூறுகின்றார்.

பாசமெல்லாமறிவென்றுமான்மாவின்றென்றும்
பதிகலப்பையறியாதுபதியாகப்பகரி
னாசமாவதுமில்லையானந்தத்தே
நண்ணுவாரில்லைநலமறிவாருமில்லை
யோசைதருமீசனேயுடம்புயிராய்மடிந்தா
லுயர்கதியுநரகமுமிங்குறுதுயரும்பிறவு
நீசநெறியுஞ்சிவனுய்க்கிற்கவேண்டும்
நீயுமாயாவாதிநேராகுமறியே.

(இ-ள்.) பாசமெல்லாம் அறிவென்றும் ஆன்மாவின்றென்றும் ப்திகலப்பையறியாது பதியாகப்பகரில் - நிமித்தகாரண பரிணமவாதியே பாசமெல்லாஞ் சத்தியமாகிய ஞானமென்றும் ஆன்மாவென் றுென்றில்லையென்றும் சிவனது கூட்டத்தை யறியாமல் அந்தக் கலப்பைக்கொண்டே பசுபாசங்களையும் சிவமுஞ் சத்தியுமாகச் சொல்லில்—நாசமாவதுமில்லை யானந்தத்தே நண்ணுவாரில்லை நலமறிவாரு மில்லை யோசைதரு மீசனே யுடம்புயிராய் மடிந்தா லுயர்கதியும் நரகமு மிங்குறுதுயரும் பிறவும் - பாசமென்று நீக்குவதுமில்லை; ஆனந்தத்தை அடைவாருமில்லை; நன்மையையறிவாருமில்லை; இசையையுடைய சிவனே இவையெல்லாமாயிறந்து பின்னுண்டாகவேண்டும். ஆதலினல் உயர்ந்த முத்தியும் தாழ்ந்த நரகமும் இடையிற் சுகதுக்கமும் மற்றவைகளும்—நீச நெறியுஞ் சிவனுய் நிற்கவேண்டும் நீயும் மாயாவாதி நேராகுமறியே - அசட்டு நெறிகளும் சிவநெறியாய் நிற்கவேணும். இப்படிக்கூறுவது மாயாவாதி முத்திக்கொக்குமென்றறிகுதி. எ-று.

சைவவாதி மதங் கூறுகின்ருர்.

அறிவாகியறியுமுயிர்கேவலத்திலுற்ரு
லறிவுவடிவொருகுறியுங்குணமுமில்லையாகுஞ்
செறியும்பின்சகலகலைவிளக்குறுப்புப்போலச்
சேர்வினையின்பயனுகர்ந்துதிரியுங்காலத்
துறையுமிருண்மலபாகஞ்சத்தினிபாதந்தா
னுறவிறைவன்குருவாய்வந்துணர்த்தவுணர்வாகிப்
பிறிவற்றுத்தானவனென்றிரண்டற்றெல்லாம்
பேதமறுமெனுமிதுவேசைவவாதிநெறியே.

(இ-ள்.) அறிவாகி அறியுமுயிர் கேவலத்திலுற்ருல் அறிவு வடிவொரு குறியும் குணமுமில்லையாகுஞ் செறியும் பின் சகலகலை விளக்குறுப்புப்போலச் சேர்வினையின் பயனுகர்ந்து திரியும் - அறிவாய் நின்றறியும் ஆன்மாவானது கேவலத்தி லுற்றபோது ஒன்றும் விகற்பித்தறிவற்றிருக்கும். கேவலத்தி லங்ஙனம் நின்ற ஆன்மாவுக்குக் கலாதிகள் விளக்குறுப்பான பண்டம்போல வந்து கூட அவற்ருேடுங்கூடி வினைப்பயன்றுய்த்துத் திரியாநிற்கும்—காலத்துறையு மிருண் மலபாகஞ் சத்திநிபாதந்தானுற இறைவன் குருவாய்வந் துணர்த்தவுணர்வாகி - அந்தக்காலத்திலே புண்ணிய பாவந் துலையொப்பாய் மலபாகமுண்டாகவே சிவன் குருவடிவாய் வந்து அறிவிக்க அறிந்து—பிறிவற்றுத் தான் அவன் என் றிரண்டற்று எல்லாம் பேதமறுமெனுமிதுவே சைவவாதிமதமே - ஆன்மாவுஞ் சிவனும் பிறிவற்று ஆன்மாவுஞ் சிவனுமென் றிரண்டற்று எல்லாவற்ருேடும் பேதமற்றிருப்பதென்னும் இதுவே சைவவாதிமதமாம். எ-று. (உ௲0)

மறுப்புக் கூறுகின்றார்.

சைவநீயான்மாவையறிவிலதென்றாய்முன்
சகலகருவியுங்கூடிலறிவுண்டாமென்றாய்
அவ்வறிவில்லாததறிவுண்டாவானே
னப்படியோவுயிர்நிலைமையதுநிற்கநேரே
செவ்வையான்மாவறிவுஞ்சிவனறிவுங்கூடிச்
சேரவொன்றாமென்றாய்திகழ்மாயாவாதி
யவ்வுரையோவறிவிப்பானறிவிக்கவறியு
மான்மாவாகான்போதமறகலப்பதுவே.

(இ-ள்.) சைவ கலப்பதுவே - சைவவாதியே நீ ஆன்மாவைக் கேவலத்தினறியாம னிற்பனென்றுங் கலாதிகூடி அறிவனென்றுஞ் சொன்னாய் அறியாமைகுணமாகில் அறியமாட்டான்; அறிவுகுணமாகில் அறிவற்றிரான் இப்படிச்சொல்வது ஆன்மகுணமல்லவாம். அதுநிற்க. தெரிசனத்திலான்மாவினறிவுஞ் சிவனறிவுங் கூடி யொன்றாமென்றாய். அஃதிரண்டும் ஓரறிவாமென்பது மாயாவாதிமதம்போலாம். ஆதலாற் கூடினாலும் அறியுமறிவும் அவ்வறிவு அறிவிக்க வறியும் ஆன்மாவும் ஓரறிவாகாது போதமற நீங்குங் கலப்பை நீயறியாமற் கூறினாய். அறியும் நெறி மேலே கேட்குதி. எ-று. ஈசுரவைக்கியவாதி முதற் சைவவாதியீறாகிய சித்தாந்தபேதம் எட்டும் முடிந்தது. (கசக)

## மூன்றாஞ்சூத்திரம்.

சித்தாந்தமுறைகூறுகின்றார்.

இப்படியாலுரைக்கின்றசமயங்களெல்லா
மிசைந்துமிசையாதாகுமிறைவனூலை
மெய்ப்படியாய்ச்சைவசித்தாந்தநீதி
விளங்கியபக்குவந்தானுமுப்பதாக்கி
யொப்பரியவானந்தத்தளவுங்கூறு
முயர்நெறியையானறிந்தவளவுரைக்கின்றேனா
லெப்படியுமாகமத்தினீதிகொண்டே
யிதனுண்மைதெளியவறிந்திடுமினியாவருமே.

(இ-ள்.) இப்படியாலுரைக்கின்ற சமயங்களெல்லா மிசைந்து மிசையாதாகும் - இந்தமுறைமையாக நாற்பத்தெட்டாகவும் எட்டாகவுஞ் சொல்லுகின்ற சமயநூல்களெல்லாவற்றினுஞ் சிறிது பொருந்துவதாயுஞ் சிறிது பொருந்தாததாயு மொக்கச் சொல்லாது மட்டுக்களிலே நிற்கும்—இறைவனூலை மெய்ப்படியாய்ச் சைவசித்தாந்த நீதிவிளங்கிய பக்குவந்தானும் முப்

பதாக்கி - இந்தச் சைவசித்தாந்தத்துக்குப் பொருந்துவதாகுஞ் சிவாகமத்தை உள்ளபடியாய்ச் சைவசித்தாந்த நீதியில் விளங்கச் சொல்லப்பட்ட தத்துவரூபம் தத்துவதரிசனம் தத்துவசுத்தி ஆன்மரூபம் ஆன்மதரிசனம் ஆன்மசுத்தி சிவரூபம் சிவதரிசனம் சிவயோகம் சிவபோகம் என்னும் பத்தவதரத்தையும் பன்னிரண்டு சூத்திரத்தாலுரைத்த விதன் தரிசனமுறைமை பார்த்தால் முப்பதவதரமாம் அப்படிப் பிரித்து—ஒப்பரிய வானந்தத் தளவு கூறும் உயர்நெறியை யானறிந்த வள வுரைக்கின்றேனுல் - உவமையில்லாத ஆனந்தத்தழுந்தலளவும் அப்புறமுஞ் சொல்லப்பட்ட உயர்ந்தவழியை யிதனுள்ளே என்னறிவுக்குத் தக்கவளவு சொல்லுகின்றேன் ஆதலால்—எப்படியு மாகமத்தி னீதிகொண்டே யிதனுண்மை தெளியவறிந்திடு மினியாவருமே - இங்கேசொல்லு மெவையும் சிவாகமமாகிய முந்நூலி னுண்மையே ஆதலால் இதனுண்மையை யாவருந் தெளியவறிந்துகொள்ளுக. எ-று. ()

மேற்சொன்ன முப்பதவதரத்தின் பெயரினை
இரண்டுசூத்திரத்தாற் கூறுகின்றார்.

ஓங்குபூதப்பழிப்புப்பொறிநீங்கியுணர்த
லுயர்கரணசுத்திகலாதிகளையொழிவித்த
றாங்குசுத்ததத்துவதூடணந்தத்துவத்தின்
றருமுருவந்தரிசனமேசுத்திதாந்தகையே
பாங்குகேவலங்காண்டலதீதமான்மாவின்
பகருண்மையுயிர்விளக்கஞானதரிசனந்தா
னீங்குஞானதீதம்பரைகாட்சியோகம்
நிகழ்போகமதீதநிலைசாக்கிராதீதம்.

(இ-ள்.) ஓங்கு பூதப் பழிப்புப் பொறிநீங்கி யுணர்தல் உயர்கரணசுத்தி கலாதிகளையொழிவித்தல் தாங்கு சுத்ததத்துவ தூடணந் தத்துவத்தின் றருமுருவந் தரிசனமே சுத்திதாம் - விளங்கப்பட்ட பஞ்சபூதப் பழிப்பு பொறியறவுணர்தல் அந்தக்கரணசுத்தி கலாதிஞ்ஞானநிராகரணம் இவையிற்றைநடத்துஞ் சுத்ததத்துவ தூடணம் இவற்றோடு புறக்கருவிகளுமாகிய தத்துவரூபம் தத்துவதரிசனம் தத்துவசுத்தி ஆகிய பாசவகை எட்டும்—தகையே பாங்கு கேவலங் காண்டல் அதீதம் ஆன்மாவின் பகருண்மை உயிர்விளக்கம் - இந்த முறைமையிலே பாங்குபடக் கேவலம் கேவலதரிசனம் கேவலாதீதம் ஆன்மரூபம் ஆன்மதரிசனம் என ஆன்மாவின் நெறியைந்தவதரமும் — ஞான தரிசனந்தா னீங்கு ஞானதீதம் பரை காட்சி யோக நிகழ்போகம் அதீதநிலை சாக்கிராதீதம் - ஞானதரிசனம் ஞானதீதம் பரைதரிசனம் பரையோகம் பரைபோகம் பராதீதம் என்னுமாறும் சாக்கிராதீதமும். எ-று.
(உசரு)

இதுவுமது.

சுத்தவத்தைசுகவடிவுசுகாதீதஞ்சிவமாந்
 தோன்றுபரமானந்தஞ்சொல்லருயோகந்தான்
மெத்திவருபோகமான்மலாபமானந்தமேவிடு
 விளங்குலோகமீட்டன்மிகுகுருவே
யத்தன்மையானந்தமானபடியறித
 லவனேவற்படிநிற்றலாகுமுப்பான்வகையுஞ்
சித்தமுறவறிந்துசிவஞானநீதி
 தெளியும்வகையாலுரைப்பன்சிறக்கவிந்நூலகத்தே.

(இ-ள்.) சுத்தவத்தை சுகவடிவு சுகாதீதஞ் சிவமாம் தோன்றுபரமானந்தஞ் சொல்லருயோகந்தான் மெத்திவரு போக மான்மலாப மானந்த மேவிடு விளங்குலோக மீட்டல் முப்பான் - முன்சொன்ன சாக்கிராதீதத்துடன் சுத்தவத்தை சுகசொரூபம் சுகாதீதம் சிவரூபம் தோன்றப்பட்ட பரமானந்த தரிசனம் சொல்லுதற்கரிய பரமானந்தயோகம் மிகுந்துவரப்பட்ட பரமானந்தபோகம் ஆன்மலாபம் பரமானந்தமேவீடு விளங்கப்பட்ட உலகப் பழிப்பென்னும் பதினொரவதரமும் ஆகிய முப்பதவதரமும்—மிகு குருவே அத்தன்மை ஆனந்தமானபடி யறிதல் அவனேவற்படி நிற்றலாகும் வகையும் சித்தமுறவறிந்து சிவஞான நீதி தெளியும்வகையா லுரைப்பன் சிறக்கவிந்நூலகத்தே - அந்த முறைமையிலே மேலான ஆசானே ஆனந்தவடிவாய் வந்தமுறைமையும் அவனேவலாகக்கண்டு நிற்றலுமாகியவிவற்றைப் பொருந்தவறிந்து சிவஞானதரிசனத்தைத் தெளியும்படியாக யான் இந்நூலிலே விளங்கச் சொல்வேன். எ-று. (உசச)

மேவிந்த முப்பதவதரத்தின் முதலான ப்ஞ்சபூதப்பழிப்பையும் அதனை நீக்கும் முறைமையுங் கூறுகின்றார்.

பஞ்சபூதப்பழிப்புப்பகருங்காலைப்
 பார்புனறீகால்வெளியாய்ப்பரந்தவைந்து
மிஞ்சியவையைந்துடனேயாங்குணங்களைந்து
 மிகுமண்ணினீரிணலுதீயின்மூன்றும்
புஞ்சமெனுங்காவிரண்டுவெளியொன்றாகும்
 புகழ்குணமுமத்தன்மைபொருந்தியிமெண்டம்
வஞ்சமறநிரவுநீர்மானளவுமாயை
 வண்டமுல்கால்சதாசிவம்வான்வருஞ்சத்தியளவே.

(இ-ள்.) பஞ்சபூதப் பழிப்புப் பகருங்காலைப் பார் புனல் தீ கால் வெளியாய்ப் பரந்தவைந்து மிஞ்சியவையைந்துடனேயாம் - பஞ்சபூதப் பழிப்

பென்னும் அவதரத்தைச் சொல்லுமிடத்துப் பிருதுவி அப்பு தேயு வாயு ஆகாயமென விரிந்த வைந்தையும் மிகுத்துச் சொல்லப்பட்ட மயிர் எலும்பு தோல் நரம்பு தசையென்னும் பிருதிவின் குணமைந்தும், நீர் உதிரம் சுக்கிலம் மூளை மச்சை யென்னும் அப்புவின்குணமைந்தும், ஆகாரம் நித்திரை பயம் மைதுனம் சோம்பென்னும் தீயின்குணமைந்தும், ஓடல் இருத்தல் கிடத்தல் நடத்தல் தத்தலென்னும் வாயுவின் குணமைந்தும், காமம் குரோதம் லோபம் மதம் மார்ச்சரியமென்னும் ஆகாயத்தின்குண மைந்துமாக இருபத்தைந்துடனே மண்டலமுள்ள விடமெங்குங் காணப்படும்—குணங்களைந்தும் மிகுமண்ணின் நீரினலும் தீயின் மூன்று புஞ்சமெனுங் காலிரண்டு வெளியொன்ருகும் புகழ்குணமும் அத்தன்மை பொருந்தியிடும் - சத்தப் பரிச ரூப ரச கந்தமென்னுமைந்துகுணம் பிருதுவிக்காம். கந்தம் நீக்கிச் சத்தப் பரிச ரூப ரசமென்னும் நாலுகுணம் அப்புவுக்காம். கந்தம் ரசம் நீக்கிச் சத்தப் பரிச ரூபமென்னும் மூன்றுகுணம் தேயுவுக்காம். கந்தம் ரசம் ரூபம் நீக்கிச் சத்தம் பரிசமிரண்டும் வாயுவுக்காம். கந்தம் ரசம் ரூபம் பரிசமென்னும் நாலுநீக்கிச் சத்தமொன்றும் ஆகாயத்துக்காம். இதுவொழியப் புகழப்பட்ட நீங்காக்குணம் ஒவ்வொன்ரும். அது பிருதுவி கந்தத்தையும், அப்பு ரசத்தையும், தேயு ரூபத்தையும், வாயு பரிசத்தையும், ஆகாயம் சத்தத்தையும் நீங்காது. இப்பூதங்கள் காணப்படுவது பஞ்சப் புலன்களாலேயாம். அது சத்தத்திலாகாயமும், பரிசத்தில் வாயுவும், ரூபத்தில் அக்கினியும், ரசத்தில் அப்புவும், கந்தத்திற் பிருதுவியுந் தோன்றும். பூதங்கட்குப் புலன்கள் காரணமாகவுங் காரியமாகவும் வழங்கும்—அண்டம் வஞ்சமற நிரவு நீர் மானளவு மாயை வண் தழல் கால் சதாசிவம் வான் வருஞ் சத்தியளவே - காரணமான வடிவு பிருதுவி மேருத்தாரகமாயண்டமளவும், அப்பு பிரகிருதியளவும், தேயு மாயையளவும், வாயு சதாசிவதத்துவமளவும், ஆகாயம் சத்திதத்துவமளவுமாய்க் கலந்து நிற்கும். எ-று. (உ௬௫)

பூதாதிகளுக்குருவாதி கூறுகின்ருர்.

பூதாதிக்குருவமேகடினமாதி
புகல்சொருபநாற்கோணம்பிறைமூன்றுகோண
மீதறுகோணம்வட்டஞ்சுபாபமதுகிடத்தல்
வீழ்தலெழுனிறைதனிற்றல்விதியாகுமேலே
மீதானவியாத்தியண்டமளவுநாட்டும்
வியாபகந்தான்வருஞ்சத்திவிசேடநானுவுருவ
மீதானகுணமணுவாய்விரிதனிறமஞ்சு
மிகுமுலகென்பதுகாட்சிசுத்திவிடுவதுவே.

(இ-ள்.) பூதாதிக்குருவமே கடினமாதி - இந்தப் பஞ்சபூதங்களுக்கு உருவாதி பத்துக்குணமுங் கூறுமிடத்துப் பிருதுவி உரத்துத் தரிக்கும். அப்பு குளிர்ந்து பதஞ்செய்யும். தேயு சுட்டொன்றுவிக்கும். வாயு சலித்துத் திரட்டும். ஆகாயம் நிரந்தரமாயிடங் கொடுக்கும்—புகல் சொருபம் நாற்கோணம் பிறை மூன்று கோணமீதறுகோணம் வட்டம் - சொருபமாவது முறையே சதுரம் பிறை திரிகோணம் மேற்பட்ட அறுகோணம் வட்டமுமாம்—சுபாபமது கிடத்தல் வீழ்தல் எழல் நிறைதல் நிற்றல் விதியாகும் - சுபாபமாவது மண் கிடக்கும் நீர் பரக்கும் தீ வளரும் கால் நிறையும் விண் தரிக்குமாம்—மேலே மீதான வியாத்தி அண்டமளவும் - மேலே சொல்லிய அண்டம், பிரகிருதி, மாயை, சதாசிவம், சத்தியளவும் வியாத்தியாம்—நாட்டும் வியாபகந்தான் வரும் சத்தி - பொருந்தப்பட்ட வியாபகம் முன்சொன்னபடி அண்டமுதற் சத்தியளவுமாம்—விசேடம் நானுவுருவம் - விசேடமாவது பிருதுவி தாது நவரத்தினம் பஞ்சவன்னமாம். அப்புத் தாது சத்தசமுத்திர முதலானவை. தேயு உதராக்கினி பூதாக்கினி விந்துவாக்கினி காட்டாக்கினி படிகாக்கினியெனவும் பிறவுமாகப் பேதிக்கை. வாயு பத்தா யெழுபத்தீராயிரமாம். ஆகாயங் குடோதாதியாகை—மீதானகுணம் அணுவாய் விரிதல் - குணம் அணுவாய் மண்ணாகை தண்ணீராகை வெம்மை யழலாகை வாயு குருவெளியாகை இரந்தரமாகிய வெட்டவெளியாகையாம்—நிறம் அஞ்சு மிகுமுலகென்பது காட்சி சுத்தி விடுவேதுவே - நிறம் பொன்மை வெண்மை சிவப்புக் கறுப்புப் புகையென ஐந்தாம். தரிசனமாவது உலகமென்பது பஞ்சபூதமெனக் காண்டல். சுத்தியாவது இவை சட மிவற்றை நடத்துஞ் சுத்தமாயையினுல் ல, வ, ர, ய, ஹ என்பனவற்றை நடத்துவார் சுத்தமாயாகாரியத்தை நடத்தியிருக்கும் பிரமா விட்டுணு உருத்திரன் மகேசுரன் சதாசிவனென்னு மிவரென்றும், இதனைத் தெய்வமென்று கொள்ளுவானும், இவற்றின் சேர்வை யுயிரென்று கொள்ளுவானும், ஊலோகாயதன் சாருவாகன் ஆதலாலிதை நீங்கியிருப்பதாம். எ-று. (உரசு)

பஞ்சபூதங்களுஞ் சடமெனக் கண்ட மாணுக்கன் அவற்றைக்
கண்ட பொறிகளே ஆன்மாவெனத் துணிதல்

இகல்பூதமான்மாவன்றெனவேநீங்க
விவற்றுடனேயுலகமுடல்காரியமையைந்துந்
தகுநிறையுநாடிகள்பத்தவையுநீங்குந்
தானீங்கியுணர்ந்திருந்தான்றுவில்பொறிகண்டே
யகமதின்ஞானமுமிப்புலன்ஞானந்தானு
மைந்துபொறியாதலாலான்மாவேறில்லை
நிகழ்வதிதுதானிமிடமாத்திரையிலுணரு
நீருயிர்வேறறியுமென்பதில்லையெனநின்றனனே.

(இ-ள்.) இகல் பூதம் ஆன்மாவன்றெனவே நீங்க இவற்றுடனே உலகமுடல் காரியமையைந்தும் தகுநிறையும் நாடிகள் பத்தவையும் நீங்கும் - பூதமரன்கூட்டுவதல்லது தானாய்க் கூடாதொன்னுக்கொன் றிகலுடைத்துச் சடமாதலால் ஆன்மாவல்லவென நீங்கவே இதனோடொத்த பூதகாரிய மிருபத்தைந்து பிரவஞ்சமு மெண்பத்துநான்கு நூறாயிரம் உடற்பேதத் தகுதியையுமுடைத்தாயவ்வுடலோடு பத்துநாடிகளும் எழுபத்திராயிரம் பேதமாகிய விவையெல்லாம் நீங்கும்—தானீங்கி யுணர்ந்திருந்தான் தாவில் பொறிகண்டே அகமதின் ஞானமுமிப்புலன் ஞானந்தானும் ஐந்துபொறியாதலால் ஆன்மா வேறில்லை நிகழ்வதிதுதானிமிட மாத்திரையிலுணரு நீருயிர் வேறறியுமென்பதிலையென நின்றனனே - இப்பூதங்கள் ஆன்மாவன்றெனக் கண்டு பொருந்தி இவற்றையு மிவையாகிய பிரவஞ்சத்தையுங் காயத்தையும் பொய்யெனக் கண்டு உள்ளே விழித்துணர்ந்தவனுக்குச் சோத்திராதி சீவித்தலால் இங்ஙனஞ் சீவித்ததியாதென வினவ இவற்றின் செய்தியறிந்தானாய் இச்செயலையுடைய பொறி புலன்களே ஆன்மாவென்று நீர் சொன்னது அவைதானே உள்ளுமுணர்வதானது புறமுமறிவாய் நின்றது. அவைதாமே உடலாயு முணர்வாயும் நின்றனவும் இப்படி இவை விளங்குவது காற்றாடி திரிகை சுழல்காற்றுப்போல நிமிடத்திற் சுழன்று வரும் இவற்றின் கூட்டரவே ஆன்மா நீர் உயிர் வேறறியுமென்பதில்லையென நின்றான். எ-று. (உ௬எ)

அதுகண்ட ஆசிரியர் பொறியறிவுணர்தல் வகை
கூறுகின்றார்.

இந்திரியநானென்றாலிவைசடங்களாகு
மிவைதன்னிற்கண்டுகேட்டுண்டுயிர்த்துற்றறியு
மந்தவுயிராதலாலிவைசடமேயாகு
மன்றியொன்றஞ்சறிவாமோவஞ்சறிவதானன்
முந்தியொன்றையொன்றறியமாட்டாதைந்தும்
முழுமாயைக்காரியவாங்காரத்திற்றோன்றி
நந்துகன்மத்தாலிங்கறிகருவியாகி
நண்ணுமைந்நாலுமூன்றிரண்டொன்றாய்நயந்தே.

(இ-ள்.) இந்திரிய நானென்றால் இவை சடங்களாகும் இவைதன்னிற் கண்டு கேட்டுண்டுயிர்த்துற்றறியும் அந்தவுயிராதலால் இவை சடமேயாகும் அன்றி யொன்றஞ்சறிவாமோ வஞ்சறிவதானன் முந்தியொன்றையொன் றறியமாட்டாதைந்தும் - உலகமுமுடலும் நீங்கியிருந்தவன்றனக் குணர்வுவர நிகழ்ந்தது புலனறிவாதலாலே புலனாற் பற்றியறியு மிந்திரியங்களைக் குறித்ததுவே ஆன்மாவென்றான். அப்படியல்ல அவையுஞ் சடமாகும். அவை கண்டுகேட்டுண்டுயிர்த்துற்றறிந்து நிற்றலாற் சடமல்லவெனில், அவை சடமே அவையிற்றிலே கூடிக் கண்டு கேட்டுண்டுயிர்த்துற்றவையிற்றின்பயனையுமறிந்து செல்வ

தான்மாவே ஓருடலுக் கோரறிவன்றி ஐந்தறிவாகாது. ஐந்தறிவுண்டானாலும் கண்ணைச் செவியறியாது; இவ்விரண்டையுந் துவக்கறியாது; இம்மூன்றையுஞ் சிங்குவையறியாது; இவை நாலையுங் கிராணமறியாது. ஆகவே இவையைந்தும் ஆன்மாவல்லவாய்ச் சடமாம்—முழுமாயைக்காரிய ஆங்காரத்திற்றோன்றி - மாயாகாரியமான ஆங்கார தத்துவத்திலே தோன்றி—நந்து கன்மத்தால் இங்கறி கருவியாகி - மிக்க கன்மத்தாலே ஆன்மாவுக்கறிகருவியென்று பெயராகி—நண்ணும் ஐந்து நாலு மூன்றிரண்டொன்றாய் நயந்தே - பூதங்களின் மண்முதலாக இயற்கை ஐந்தாகவுஞ் செயற்கை ஐந்தறிவு நான்கறிவு மூன்றறிவு இரண்டறிவு ஓரறிவெனவும் நிற்கும். எ-று. (உ௯உ)

பொறிக்குருவமாதி கூறுகின்றார்.

பொறிக்குருவஞ்சத்தமணமுருவிரசம்பரிசம்
புகழுவானுதியாய்ப்பொருந்தல்சொரூபந்தா
னிறைத்தறியுந்தானமாய்நிற்றல்சுபாபந்தா
னேரைந்துநிமிடத்திற்சுழலல்விசேடந்தான்
குறித்தவற்றாற்குறியாததறிதல்குணமிச்சை
கொளுத்தறன்மாத்திரையளவேவியாத்திவியாபகந்தான்
அறைத்தசத்தாதியளவறிவையாதெனவுணர்த
லவையறியாதெனவுணர்தல்சுத்தியாவறையே.

(இ-ள்.) பொறிக்குருவம் சத்தம்மணம்உரு இரசம் பரிசம் புகழும்வானுதியாய்ப் பொருந்தல் - இந்திரியங்கட்குப் பத்துக்காரியங் கூறுமிடத்து உருவமாவது சத்தப் பரிச ரூப ரச கந்தமென்னுமைந்தும் ஆகாயம் வாயு அக்கினி அப்பு பிருதிவிகளோடே கூடப் பொருந்திய வவதரம்—சொரூபந்தான் நிறைத்தறியுந் தானமாய் நிற்றல் - சொரூபமாவது இவ்விந்திரியங்களோடு கூடியறிதற்கறிவிக்குந் தானமாய் நிற்றலாம்—சுபாபந்தானேரைந்து நிமிடத்திற் சுழலல் - சுபாபமாவது இவையைந்து நிமிடமாத்திரத்திலே ஆன்மா வொற்றித்தறியும்படி விகற்பித்து நிற்றலாம்—விசேடந்தான் குறித்தவற்றாற் குறியாததறிதல் - விசேடமாவது முன்பு குறித்தவற்றைக் கொண்டே காணப்படாதவற்றையுங் கண்டதுபோல அறிவிப்பது—குணமிச்சை கொளுத்தல் - குணமாவது இச்சை செல்லுமிடமாகை—தன்மாத்திரையளவே வியாத்தி - வியாத்தியாவது தனக்குச் செல்லுமெல்லையளவுமாம்—வியாபகந்தான் அறைத்தசத்தாதியளவு - வியாபகமாவது தன்னுடம்பைவிட்டு நீங்காது வானுதிகள் சத்தாதிகள் செல்லுமிடமெல்லாஞ் செல்வதாம்—அறிவை யாதென வுணர்தல் அவையறியாதெனவுணர்தல் சுத்தியாவறையே - நிறமாவது அவற்றின்றன்மை யறிதல். காட்சியாவது ஞானேந்திரியமென்றும் மாயையிற்றரப்பட்ட தத்துவமாதலாலிவை சடமென்றுமறிதல். சுத்தியாவது இவை ஆன்மாவறிதற்குக் கருவியன்றித் தாமறியாதென்று அறிந்து நீங்குதலாகச் சொல்லுக. எ-று. (உ௯௩)

சத்தாதிக்குருவமாதி கூறுகின்றார்.

சத்தாதிக்குருவமேவான்குணமதாகை
தானவற்றால்விளங்கல்சொரூபஞ்சுபாபமதுதான்
வைத்தவுடலொடுகலத்தல்விசேடமேலறிகை
வண்பொறியதளவும்வியாத்தம்வியாபகமேவிடுகை
வித்தாதல்குணநிறமுமவற்றின்வாய்மை
விரிவிவற்றைக்காண்பதுவேதரிசனமாஞ்சுத்தி
பொத்தாயவறிதலென்றுகோடலிவையொடுங்க
வுளமாவதிந்திரியவொடுக்கமாமே.

(இ-ள்.) சத்தாதி-ஆமே - புலன்களைந்தின் தசகாரியமுங் கூறுமிடத்துச் சத்தமுதலானவற்றுக் குருவமாவது பூதவழியிற் காண்டல். சொரூபமாவது அவ்வாணுதியாலே தன்றன்மை தோற்றப்படுவது. சுபாபமாவது ஓரறிவுமுதல் ஐயறிவளவும் அதுவதுவாய் நிற்பது. விசேடமாவது தன்னெல்லை புறம்புமேவிட்டு நிற்கை. வியாத்தமாவது சோத்திராதித் தானமளவுமுண்டாகை. வியாபகமாவது அவற்றைக் கூடியே புறத்திலுள்ளளவுஞ் சென்றறிவிக்கை. குணமாவது புறக்கரணமாயறியுஞ் சுகதுக்கங்கட்கு மூலமாகை. நிறமாவது ஓசையாயும் வெம்மை தட்பமாயும் விகற்பமற்ற காட்சியாயும் விகற்பவிரசமாயும் கந்தமாயுமிருப்பது. தரிசனமாவது இவை புறமறிவிக்குங் கருவியென்று காண்டல். சுத்தியாவது இவை சடமென்று காண்டலாம். எ-று. (உ௬௪)

கன்மேந்திரியங்கட்குருவமாதி கூறுகின்றார்.

ஆங்கவ்விந்திரியவழித்தாங்கன்மேந்திரிய
மவைசோத்திராதிமுதல்வாக்காதியறியு
மீங்கிவற்றுக்குருவாகைவாணுதியாகை
யிகன்மாயையளவுதொழிற்படுகைசூக்குமத்துந்
தாங்கலத்தல்வாணுதிநிகக்கொள்ளலுடல்க
டன்னளவுமாயைதன்னளவுமாதல்
போங்கருவிபோகைதொழில்சடம்புத்திசெய்தல்
பொருந்துமிவைபொறிநீங்கவுடல்போகல்காணே.

(இ-ள்.) ஆங்கவ்விந்திரியவழித்தாங் கன்மேந்திரியம் - அந்த இந்திரியவழித்தாகுங் கன்மேந்திரியங்களைந்தும்—அவை சோத்திராதி முதல் வாக்காதியறியும் - அவைகளைச் சொல்லுமிடத்துச் சோத்திரவழித்தாம் வாக்கு; துவக்கின் வழித்தாம் பாதம்; சட்சின்வழித்தாம் பாணி; சிங்குவையின் வழித்தாம் பாயுரு; ஆக்கிராணத்தின் வழித்தாம் உபஸ்தம்—ஈங்கிவற்றுக்குருவாகை வாணுதியாகை இகன்மாயையளவு தொழிற்படுகை சூக்குமத்துந் தாங்கலத்தல் வாணுதி நிகக்

கொள்ளலுடல்கடன்னளவும் மாயை தன்னளவுமாதல் போங்கருவி போகை தொழில் சடம் புத்தி செய்தல் பொருந்துமிவை பொறிநீங்க உடல்போகல் காணே - இவற்றின் தசகாரியங் கூறுமிடத்து உருவமாவது ஆகாயமுதலாய் வழங்குகை; சொருபமாவது மாயையளவுந் தொழில் வழங்குகை; சுபாபமாவது சூக்குமத்துந் தூலம்போல நிற்றல்; விசேடமாவது வான்ருெழிலைக் காரணமாகக் கொள்ளுதல்; வியாத்தியாவது உடலளவும் நிறைதல்; வியாபகமாவது மாயையளவு நிறைதல்; குணமாவது நிறைவு குறைபெறுதல்; நிறமாவது தொழில் தரிசனமாவது சடமென்றறிதல்; சத்தியாவது பொறி நீக்க நீங்குதலாம். எ-று.

பொறிகளைந்தும் சத்தாதியைந்தும் வாக்காதியைந்தும் வசனுதியைந்தும் சூக்குமைமுதலான வாக்குகளுலுமாக இருபத்துநாலு கருவியும் நீங்கினவவதரம் பொறியறவுணர்தலாம். (உகரு)

அந்தக்கரணசுத்தி கூறுகின்ருர்.

புலனறியாவகைபொருந்துமாணுக்கனிவற்றிற்
புகாதிருந்துபார்த்தளவினினைவுவந்துபுகலா
லிலேவேறிங்கறிவதொன்றீரிரண்டாங்கரண
மிவைபற்றுநிச்சயிக்குமெழுந்துசிந்திக்கும்
நலமாகுமான்மாவிக்கரணமேயென்ன
நாலாகியுயிர்வருமோநான்நாலுதொழிலா
லுலகிலதுதன்ருெழிலேத்தானறியாததனு
லுயிர்க்கின்பங்கரணமொழிந்துயிரன்றென்றுணரே.

(இ-ள்.) புலனறியா வகை பொருந்தும் மாணுக்கன் இவற்றிற்புகாதிருந்து பார்த்தளவில் - பொறி புலன்களுந் தொழிலும் விட்டுணர்ந்திருந்த மாணுக்கனை விளந்தபடி கேட்டவளவிலே—நினைவுவந்து புகலால் இலே வேறிங்கறிவதொன்று ஈரிரண்டாம் கரணமிவை பற்றும் நிச்சயிக்கும் எழுந்து சிந்திக்கும் நலமாகும் ஆன்மா இக்கரணமேயென்ன - அப்படியிருந்தவளவிலே நினைவு வந்துதித்து விகற்பித்துக்கண் டிவ்விடத்தினீர் வேறறியுமென்பதில்லை; அந்தக்கரணங்களுலுமேயறிவது. ஆன்மாவுமவையே ஒன்றிலே பற்றுவதும் நிச்சயிப்பதும் எழுந்திருப்பதுஞ் சிந்திப்பதுமாதலால் இக்கரணங்களுலும் காணுமறிவென்ருனென்றபோது—நாலாகி உயிர் வருமோ நால் நாலு தொழிலால் உலகிலதுதன் ருெழிலைத் தானறியாததனுல் உயிர்க்கின்பங் கரணமொழிந் துயிரன்றென்றுணரே - கரணங்களறிவாயின் நாலுதொழிலும் நாலாயிருக்குமோ ஆன்மா நாலாகுமோ கரணங்களுலும் நாலுதொழிலாய் உயிர்க்குப் பயன்படுவதல்லது தானுய்ப்பேதியாது அறுவகை யிரசபேதமுமுறுவானையன்றி யவை தன்குணமறியாதது போலவாம். ஆன்மா இவையாய் நிற்பதன்றி இவை அறியமாட்டாதென்றறிவாயாக. எ-று. (உகசு)

கரணங்களுக்குருவமாதி கூறுகின்றார்.

இன்னுமக்கரணவுருப்பற்றிநிச்சயித்தங்
கெழுந்திருந்துசிந்திக்கைசொரூபமற்கடப்பித்
துன்னுகரிபாம்பாகைசுபாபமெரிகொள்ளி
சுழலுகறங்காதல்குணம்பிடித்தல்விடாதாகை
தன்விசேடந்தான்முந்தல்வியாத்திமானளவு
தருவியாபகமறிவுதன்னளவுஞ்செல்கை
பின்னமறல்வன்னமிவைசடமென்றல்காட்சி
பெருஞ்சுத்தியிவைநீங்கல்பெயர்த்திருநீபிறித்தே.

(இ-ள்.) இன்னுமக்கரணவுருப்பற்றி நிச்சயித்தங் கெழுந்திருந்து சிந்திக்கை - கரணங்களுக்குத் தசகாரியங் கூறுமிடத்து மனதுக்குருவம் பற்றுதல்; புத்திக்குருவம் நிச்சயித்தல்; ஆங்காரத்துக்குருவம் எழுப்புதல்; சித்தத்துக்குருவஞ் சிந்தித்தல்—சொரூபம் மற்கடம் பித்துன்னு கரி பாம்பாகை - சொரூபமாவது மனங் குரங்கின்றொழில்; புத்தி பித்தன்றொழில்; ஆங்காரம் ஆனையின்றொழில்; சித்தம் பாம்பின்றொழிலாம்—சுபாபம் எரிகொள்ளி சுழலு கறங்காதல் - சுபாபமாவது எரிகொள்ளி காற்றாடி பம்பரம்போல விரைவிற் பற்றி நிச்சயித்தெழுந்து சிந்தித்தலாம்—குணம் பிடித்தல் விடாதாகை - மனம் பிரதானமாகப் பற்றினதைப் புத்தி நிச்சயித்தலும், ஆங்காரங் கொண்டெழுந்திருத்தலும், சித்தம் சிந்தித்தலுமாம்—தன் விசேடந்தான் முந்தல் - ஆன்மாவின் இச்சை செல்லுமுன்னே கரணங்கள் முந்திச் செல்வது விசேடமாம்—வியாத்திமானளவும் - வியாத்தியாவது ஆன்மதத்துவமளவுஞ் செல்லுகை—தரு வியாபகம் அறிவு தன்னளவுஞ் செல்கை - வியாபகமாவது ஆன்மபோதஞ் செல்லுமளவுஞ் செல்வதாம்—பின்னமறல் வன்னமிவை சடமென்றல் காட்சி பெருஞ்சுத்தி இவை நீங்கல் பெயர்த்திரு நீ பிறித்தே - நிறமாவது தன்றன் றொழிலிற் பேதியாததாம். தரிசனமாவது சடமென்று காண்டலாம். இவை தானாய்ப் பற்றி நிச்சயித்தெழுந்திருந்து சிந்திப்பது செய்யாதெனவறிவது சுத்தியாம். இவற்றை நீங்கியிருப்பாயாக. எ-று. (உ௯)

கலாதிஞ்ஞான நிராகரணங் கூறுகின்றார்.

கரணங்கள்நீங்கியபின்குணஞ்சீவிக்கையின்றாற்
காலங்கூட்டிடுநியதிவரையுமுடன்கலைதான்
கிரியையினையெழுப்பும்வித்தையறிவதனைக்கொடுக்குங்
கிளரிராகமாசையினைக்கெழுமிப்பிக்கு
மிரையிவற்றைக்கலைகாலநியதிசத்தி
யிவைவித்தைசுத்தவித்தையிராகமீசுரமாம்
பிரகிருதிமாயைகளைச்சதாசிவமுஞ்சிவமும்
பிரேரிப்பித்திடுமிவற்றைப்பிரேரிக்குமருளே.

(இ-ள்.) கரணங்கள் நீங்கியபின் குணஞ் சீவிக்கையினுற் காலங் கூட்டி டும் நியதிவரையு முடன்கலைதான் கிரியையினை யெழுப்பும் வித்தை அறிவுத னைக் கொடுக்கும் இளரிராகமாசையினைக் கெழுமிப்பிக்குமிவரையிவற்றை - அந் தக்கரணங்கள் நீங்கியிருந்த மாணுக்கனை விளைந்தபடி கேட்கவே இவனுமிருந்து பார்த்தவளவில் தன்வேதனைப்படுவது குணங்களாதலாற் குணங்களும் அக் குணங்களுக்கு மூலமாகிய கலாதிகளையுங் கண்டுணர்ந்து, காலம் இறந்தகாலம் நிகழ்காலம் எதிர்காலமென அனுபவத்தாக்கியும் நீக்கியும் அனுபவிப்பதும் மேலு மோரனுபவத்தைக் கிளப்பியுங் கூட்டாநிற்கும் நியதியுணவுக்கிச்சை செல்வினு மெல்லையின்மேற் செல்லாமல் அதுவரையும் கலை தொழிலைச் செய்விக்கும். தொழிலாவது அறிவையெழுப்புதலாம். வித்தை எழுந்திருந்து செல்லும்பயனை அறிவிப்பிக்கும்; இராகம் அப்படி யெழுந்தபோதே ஆசையையெழுப்பிநிற்கும்; மாயை தனுவாதியுமாய்ப் பிரிந்து கருவியிலு மெண்ணப்பட்டு நிற்கும் பிரகிருதி யிலே யுற்றழுந்தப்பண்ணும். இவை தானிருப்பன இவற்றை—கலைகால நியதி சத்தியிவை வித்தை சுத்தவித்தை யிராக மீசுரமாம் பிரகிருதி மாயைகளைச் சதா சிவமும் சிவமும் பிரேரிப்பித்திடுமிவற்றைப்பிரேரிக்குமருளே - இந்த எழுதத்து வத்தையுஞ் சுத்ததத்துவங்கள் பிரேரிப்பிக்கும். அவை கலை காலம் நியதி மூன்றையுஞ் சத்திதத்துவம் செலுத்தும், வித்தையைச் சுத்தவித்தை செலுத் தும், இராகத்தை ஈசுரதத்துவஞ் செலுத்தும், மாயையைச் சிவதத்துவஞ் செ லுத்தும், பிரகிருதியைச் சாதாக்கியதத்துவஞ் செலுத்தும், இவையைந்தையும் சிவசத்தி செலுத்தும். எ-று.

இவ்வேழையுமைந்தையும் நடத்தும்படி சிவன் இச்சைவைத்து எல்லாவற் றையுமறிந்து செய்விப்பன். அந்தக் கிரியாசத்தியாலே ஆன்மாவுக் கறிவேயா னபோது சிவதத்துவஞ் செலுத்தும், தொழிலேயானபோது சத்திதத்துவஞ் செலுத்தும், அறிவு தொழிலொத்தபோது சதாசிவதத்துவஞ் செலுத்தும், கிரி யையேறி ஞானங் குறைந்தபோது ஈசுரதத்துவஞ் செலுத்தும், ஞானமேறிக் கிரியை குறைந்தபோது சுத்தவித்தியாதத்துவஞ் செலுத்தும், இந்தக் கலாதி களைச் சுத்ததத்துவம் நடத்துகிறபடியாவது காலமும் நியதியும் கலையும் தொழி லாவதன்றி வேறில்லாமையாற் சத்திதத்துவஞ் செலுத்துதலாம் வித்தையறி வுண்டாய் நடத்தும் அதனைச் சுத்தவித்தை நடத்துவதாம். இராகம் ஆசை யிலே செலுத்துமிதனை ஈசுரதத்துவம் நடத்துவதாம். மாயை உலகமுண்டாத லும் வளர்த்தலும் இறத்தலுஞ் செய்விப்பது; அது அறிவாதலாலதனைச் சிவதத் துவஞ் செலுத்தும். புருடதத்துவம் இச்சாஞானக்கிரியை மூன்றுங் கூடி நிற்ற லாற் றொழிலறிவொத்த சதாசிவம் இதனைச் செலுத்துமென்றறிக. இங்கே பிர கிருதியென்றது புருடதத்துவத்தையெனக் கொள்க. (உகூஅ)

கலையாதிக்குருவமாதி கூறுகின்றார்.

கலையாதிக்குருவமேகஞ்சுகமாஞ்சொருபங்
கருதுமுயிர்க்கிச்சைதொழிலறிவுகலப்பித்த
னிலைகொள்சுபாபஞ்சுத்தாசுத்தமாகை
நேர்குணமேபாய்க்கியமாம்வியாத்திமாயையளவு

நிலவுவியாபகமாணவத்தளவுநிற்ற
லீடுவிசேடங்குணங்கணிறைவுபொருந்துதலா
மலகினிறமளாவலிதுகாண்டல்காட்சி
யருளுடம்பாய்நிற்பதிதன்சுத்தியாமே.

(இ-ள்.) கலையாதிக்குருவமே கஞ்சுகமாம் - இக்கலாதிகளுக்குத் தசகாரியங் கூறுமிடத்துக் கலைமுதலான கருவிகளேழுக்கும் உருவமாவது ஆன்மாவுக்கதிருக்குமவுடலாம். வித்தை கலை இராகம் மூன்றில் இச்சாஞானக் கிரியையும் நியதியாய் நியாபகமாயும் இவற்றுக்கு மூலங் காலமாயும் ஐந்துதத்துவத்தாலுஞ் சட்டையானவுடலாய் ஆன்மாவுக்கு மாயை மயக்கிநிற்கும் இந்த வடிவாகையே உருவம்—சொருபங் கருதுமுயிர்க் கிச்சை தொழிலறிவு கலப்பித்தல் - சொருபமாவது ஆன்மாவுக் கிச்சாஞானக்கிரியைகளாய் அறிவித்துநிற்றல்—நிலைகொள் சுபாபம் சுத்தாசுத்தமாகை - சுபாபமாவது மேற் சுத்ததத்துவங்களைக் கூட்டியும் கீழ்ச் சுத்ததத்துவங்களைக் கூட்டியும் பயன்கொள்ளுதலாற் சுத்தாசுத்தமாமென்று நிற்பதாம்—நேர் குணமே பாக்கியமாம் - குணமாவது போகத்தைத் துய்க்கும் பாக்கியங்களாகை—வியாத்தி மாயையளவு - வியாத்தியாவது அசுத்தமாயையளவாகக் காரியப்பட்டு நிற்றலாம்—நிலவு வியாபகம் ஆணவத்தளவும் நிற்றல் - வியாபகமாவது அஞ்ஞானமெவ்வளவுண் டவ்வளவும் பேர்வழங்க நிற்றல்—நீடுவிசேடங் குணங்கள் நிறைவு பொருந்துதலாம் - விசேடமாவது சாத்துவிதாதி குணங்கள் நிறைவுபொருந்துதலாம்—அலகில் நிறமளாவல் - நிறமாவது அறிவுமறியாமையு மொத்துநிற்றல்—இது காண்டல் காட்சி - இவையிற்றைச் சடமெனக்காண்பது தரிசனமாம்—அருளுடம்பாய் நிற்பதிதன் [சுத்தியாமே - சத்தியிலே தானடங்கி நிற்றல் இவற்றைச் சுத்திசெய்தலாம். எ-று. ()

புருடனே ஆன்மாவென மறுத்துக் கூறுகின்றார்.

நியதிமுதற்கருவிகளைஞ்சுடன்கூடுநேரம்
நேயமாம்புருடனுமெனுநிலைமைகொண்டே
யுயிர்பிறிதொன்றலப்புருடன்றானேயிந்த
வுபர்கருவியனைத்தினிலுமோடியடங்குதலா
லயனிலுயிரிவைதாமேபிறிதொன்றில்லை
யகன்றகுணபேதங்களனைத்துமிதன்செயலே
யியலுமெனின்மாயையினிற்றோன்றியேழாகி
யிருக்குஞ்சுத்தாசுத்தமிவையலக்காணுயிரே.

(இ-ள்.) நியதிமுதற் கருவிகள் அஞ்சுடன் கூடுநேரம் நேயமாம் புருடனுமெனும் நிலைமை கொண்டே உயிர் பிறிதொன்றலப் புருடன்றானேயிந்த உயர் கருவி அனைத்தினிலும் ஓடியடங்குதலால் - நியதிமுதலான பஞ்சகருவிகளுங் கூடிநிற்குமவதாம் நிச்சயமான புருடதத்துவமாம். ஆகையாலே யிந்தப் புருட

னே ஆன்மாவாம். அதுதானெவ்விடத்தினு முயர்ச்சி தாழ்ச்சிகளாக வோடி மீண்டு திரிகையாலே நீர் வேறறியுமென்கிறதில்லை—அயலிலுயிரிவைதாமே பிறி தொன்றில்லை அகன்ற குணபேதங்கள் அனைத்துமிதன் செயலே யியலுமெ னின் - இந்தக் கலாதிகளே ஆன்மாவாவது; வேறொன்றில்லை. நானூற்றைம்ப தாக விரிந்த குணபேதங்களை யெழுப்பியடக்குவதும் கரணங்களிற் கூடுவதும், இந்திரியங்களிற் செல்வதும், மேலுமறிவதும் மிக்க புருடன்செயலே. ஆதலா லிதுவே ஆன்மாவென்று நீ சொன்னய் அப்படியல்ல—மாயையினிற் றோன்றி ஏழாகியிருக்குஞ் சுத்தாசுத்தம் இவையலக்காணுயிரே - மாயையிலே தோன்றி ஏழுபேதமாய்ச் சடமாய்ச் சுத்தாசுத்தமென்று பேராயிருக்குங் கலையாதிகள் ஆன்மாவன்றென் றிவற்றை நீங்கியிருப்பாயாக. எ-று. (உச0)

சுத்ததத்துவதூடணங் கூறுகின்றார்.

ஈங்கிவைதான்வேண்டுமோயிவையலவேலிவற்றை
யிசைந்தறிவித்தருளுக்குமியைவதாகித்
தேங்குஞானமாய்த்தொழிலாய்க்கலப்பாகிஞானஞ்
சிறிதாகித்தொழிலேமுன்சேரவேறி
யோங்கியவத்தொழில்குறைந்துஞானமேறிவரலா
லொருகாலுமொடுங்காதாலுத்தமன்றுனெனலாத்
தாங்காதான்மாவையேதானறிவித்திடலாற்
றருமான்மாவேறில்லையென்றுசாற்றினனே.

(இ-ள்.) ஈங்கிவைதான் வேண்டுமோ இவையலவேலிவற்றை யிசைந் தறிவித்தருளுக்கு மியைவதாகித் தேங்கு ஞானமாய்த் தொழிலாய்க் கலப் பாகி ஞானஞ் சிறிதாகித் தொழிலே முன் சேரவேறி யோங்கிய அத்தொ ழில் குறைந்து ஞானமேறி வரலால் - இக்கலையாதிக ளறியாதென்றீ ரிவை யறியவேண்டுமோ இவையறியாவாயின் இவற்றை யறிவிப்பதான சத்தி யறிவிக்க நிற்குமதாய்ச் சிவதத்துவம் ஞானமாயும் சத்திதத்துவங் கிரியை யாயுஞ் சதாசிவ தத்துவஞானமுங் கிரியையுமொத்தும் ஈசுரதத்துவங் கிரி யையேறி ஞானங்குறைந்தும் சுத்தவித்தை ஞானமேறிக் கிரியை குறைந் தும் வருகையாலும்—ஒருகாலு மொடுங்காதால் உத்தமன்று னெனலாத் தாங்காதான்மாவையே தானறிவித்திடலாற் றருமான்மா வேறில்லையென் று சாற்றினனே - ஒருகாலத்தும் ஒடுக்கமற்றிருக்கையாலும், சிவன்வடிவு களு மிவைதாமேயென்று சொல்லத்தக்கதாய் நிற்கையாலும், மெத்தெனு மலான்மாக்களை யறிவித்துச் செல்லுதலானும் ஆன்மாவென்று வேறு நீர றியுமென்கிறதில்லை. எல்லாவற்றையுமறிவதிந்தச் சுத்ததத்துவமாமென்று சொல்லி நின்றான். எ-று. (உசக)

சுத்ததத்துவத்துக்குருவமாதி கூறுகின்றார்.

சுத்ததத்துவத்துருவநின்மலமாஞ்சொரூபந்
தொடருமொருமலரிருமலர்க்குடலாஞ்சுபாபம்
நித்தமழியாதாகைவிசேடமீசற்கிடமாம்
நிகழ்குணங்களசுத்தமாயைநிறுத்தலாகு
மொத்தவியாத்தியுஞ்சத்தியளவதாகு
முயர்வியாபகஞ்சிவன்றனுயர்குணங்களாகை
யத்தினிறம்படிகமிவையறிதறெரிசனந்தா
னருளொடுசேர்ந்ததுவாகையதன்சுத்திகாணே.

(இ-ள்.) சுத்ததத்துவத்துருவம் நின்மலமாம் - சுத்த தத்துவங்களுக்குத் தசகாரியங் கூறுமிடத்துச் சுத்ததத்துவங்களுக் குருவமாவது அசுத்த மாயாமலம் பொருந்தாதபடியாலும், சிவசத்தியிருக்கையாலும், நெருப்பிருக்கும் விறகையும் நெருப்பென்றாற்போல நின்மலமென்பதுருவமாம்—சொரூபம் தொடருமொருமலரிருமலர்க் குடலாம் - சொரூபமாவது விஞ்ஞானகலர்க்கும் பிரளயாகலர்க்குந் தனு கரண புவன போகங்களைக் கொடுக்குமதாம்—சுபாபம் நித்தமழியாதாகை - சுபாபமாவதி அநாதியாயழிவற்று நிற்றலாம்—விசேடம் ஈசற்கிடமாகை - விசேடமாவது சிவன் கொண்ட வடிவுகளுக்கிருப்பிடமாகை—நிகழ் குணங்கள் அசுத்தமாயை நிறுத்தலாகும் - விளங்கப்பட்ட குணமாவது அசுத்தமாயையையு மதன் காரியங்களையு மடைவுபட நிறுத்தி நடத்துவதாம்—ஒத்த வியாத்தியுஞ் சத்தியளவதாகும் - இவற்றுக்கு வியாத்தி விந்துவளவாம்—உயர் வியாபகம் சிவன்றனுயர் குணங்களாகை - உயர்ச்சியான வியாபகமாவது சிவவடிவமெவ்வளவுண்டா மவ்வளவுமிடமாகை—அத்தினிறம் படிகம் இவையறிதறெரிசனந்தான் அருளொடுசேர்ந்ததுவாகை அதன்சுத்தி காணே - இவற்றின் நிறம் படிகம்போலுஞ் சத்திவன்னமாதல், தரிசனமாவது இவையுஞ் சிவசத்தி அறிவித்தாலன்றி அறியாதென்பதாம், திருவருளோடு சேர்ந்து இவற்றை நீங்கிநிற்பது சுத்தியாம். எ-று. (௨௪௨)

தத்துவரூபம் தத்துவதரிசனம் தத்துவசுத்தி கூறுவாராய்ப்
புறக்கருவியினியல்பு கூறுகின்றார்.

என்றிவற்றைபகற்றுவிப்பவெல்லாநீங்கி
யிருள்விழிபோனின்றவனையெதிர்வினவவவனு
மொன்றுமெனக்குத்தெரியாதிருள்போலவிகற்ப
முள்ளவையுங்கழன்றதுன்னலாவதில்லை
நின்றவிருளேதென்னவதுநிற்கமுன்னே
நீயென்றுநின்றவஞ்சவதரங்கடனினு
மின்றகன்றகருவியாறுருகுமவற்றி
னியல்பாயபுறக்கருவியறுபதுமேவிசைப்பாம்.

(இ-ள்.) என்றிவற்றையகற்றுவிப்ப எல்லாம் நீங்கி இருள் விழிபோ ணின்றவனை யெதிர்வினவ அவனும் - என்றிந்தவடைவே பஞ்சபூதம் பொறி கரணம் கலாதி சுத்ததத்துவங்களை ஐந்தவதரமாக நீக்கிவிடப் பொருந்திய அறிகருவிகளெல்லாம் நீங்கி நின்றவனை விளைந்தபடி கேட்ப அவனிருளிலே விழித்தவனைப்போல நின்றான் அதனை வினவினவளவிலே அவனும்—ஒன்றுமெனக்குத் தெரியாதிருள்போல விகற்பமுள்ளவையுங் கழன்ற துன்னலாவ தில்லை - நானிவற்றை நீங்கியிருந்தவளவில் ஒன்றுந் தெரியக் கண்டதில்லை, அறியத்தக்கவையுண்டோவென்று கருதினவளவில் கருதத்தக்கவையெல்லாங் கழன்றபடியா லொன்றுமில்லையாயின் விழித்த விழியைப் புறவிருள் மறைத்தாற்போல அறிவை மறைத்துக்கொண்டதிருள்—நின்றவிருளேதென்ன அதுநிற்க - இப்படி மறைத்தவிருளேதென்று கேட்ட மாணக்கனைப்பார்த்து அவ்விருளின்காரியம் மேலறிவிக்கின்றோம் —முன்னே நீயென்று நின்றவஞ்தவதரங்கடனினும் - முன்னே நீ நானென்று நின்ற பஞ்சபூதப் பழிப்புமுத லைந்தவதரத்தினிலும்—இன்றகன்ற கருவியாறாறும் அவற்றினியல்பாய புறக்கருவி அறுபது மேவிசைப்பாம் - இப்போது நீங்கிய கருவி பஞ்சபூதப்பழிப்பில் பூதமைந்தும் பொறியறவுணர்தலில் ஞானேந்திரியம் கன்மேந்திரியம் புலன் என்னுங் கருவி பதினைந்தும் அந்தக்கரணசுத்தியில் கரணம் நாலும் கலாதிஞ்ஞான நிராகரணத்திற் கலாதிகளேழும் சுத்ததத்துவதூடணத்திற் சுத்ததத்துவங்களைந்துமாகத் தத்துவமுப்பத்தாறும் நீங்கவே அவற்றின் காரியமாயும் காரணமாயும் காரியகாரணமாயுமிருக்குங் கருவி அறுபதும் மேற் சொல்லுவாம். எ-று.

புறக்கருவி அறுபதினுட் காரணமானகருவி ஐந்து; காரண
காரியமான கருவி இருபத்தெட்டுமென்றிக் காரிய
மானகருவி இருபத்தேழுங் கூறுகின்றார்.

சத்தியினிற்றோன்றும்வாக்காதிநான்குந்
தானிவன்வாக்கெழுப்பியிடுமதுதான்றன்மூலந்
தொத்ததொருவிந்துவிலேநாதமாஞ்சூக்க
முயருஞ்பைசந்தியுந்தியிலுதானன்கூடச்
சித்தமயின்முட்டையினிற்சலம்போலாகுஞ்
சென்றுகண்டத்தளவுசெவிக்குணராவோசை
மத்திமையாம்வாக்குவைகரிதானெட்டு
வகைதோன்றிச்சொற்பொருளாய்வழங்கியிடுங்காணே.

(இ-ள்.) சத்தியினிற்றோன்றும் வாக்காதிநான்குந் தானிவன்வாக்கெழுப்பியிடும் - சத்திதத்துவத்திலேதோன்றும் சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரியென்னும் நாலுவாக்கும் ஆன்மாவெடுத்தவுடலிற் கருமேந்

திரியத்தில் வாக்கென்னுந் தத்துவம் வசனிக்கும் வசனத்தை இந்த வாக்குக்களெழுப்பும் அஃதெழுப்புமாறு—அதுதான் தன்மூலத்தொத்ததொரு விந்துவிலே நாதமாஞ் சூக்க முயரும் பைசந்தி யுந்தியி லுதானன் கூடச் சித்தமயின் முட்டையினிற் சலம்போலாகுஞ் சென்று கண்டத்தளவு செவிக்குணராவோசை மத்திமையாம் வாக்கு வைகரிதா னெட்டு வகை தோன்றிச் சொற்பொருளாய் வழங்கியிடுங்காணே - அந்த வாக்குத்தான் மூலாதாரத்திலே நின்றும் பிரணவத்திலே யொருநாதமாக வெழுந்திருந்து சூக்குமையாகி நாபியளவிலே திரண்ட நாதம் விந்துவாகிய வட்டமாயையினுள்ளே இவன் செல்லுவதாக நினைத்த சொற்பொருள் எழுத்துக்கள் புலப்பட்டும் புலப்படாதாயும் உதானவாயுவாலே பஞ்சவன்னமுங் கூடிநிற்கை போலப் புறம்பேதோன்றி யுள்ளே பிறக்கவொண்ணாததாய்த் தோன்றும் மயில்முட்டைபோல வுருக்கருப்பதிந்து பைசந்தியாகி உதானவாயுவாலே கண்டமளவு சென்றவாறே யோசையான முழக்கமாய்த் தனக்குக் கேட்கப்பட்டு நிற்கும் மத்திமையாகி மேற் கண்ட மிடயந் தலை யென்பதனிலே உண்ணாக்கைப்பற்றி வாயங்காந்து கூடிப் பல்லு நாக்குண்ணாக் கதர மூக்கென்னும் ஐந்துதானத்திலே புறப்பட்டுப் பிறர்க்குக் கேட்கத்தக்கதாக வாக்கை வசனிப்பிக்கும் வைகரியாகி இவை நாலுநிமிடத்தில் இந்த வாக்காலே புறப்பட்டு வழங்காநிற்கும். எ-று. (உ௬௪)

இதுவுமது.

மந்திரங்களொருகோடிசுவாகாவென்று
 மருவுநமவென்றும்வசட்டுவௌஷட்டென்றும்
முந்துசுதாவென்றுமும்மென்றும்பட்டென்று
 முதிக்குமுதலெழுகோடியாம்வன்னமுதலா
நந்துபராசத்தியானுதவிந்துத்தோன்றி
 நாதத்தேமூன்றுசுரநடந்ததுதானீண்டு
சிந்துமகாரம்மற்றைப்பத்துமாஞ்சத்தி
 திருமேனியின்முப்பத்தைந்துஞ்சேர்ந்திடுமே.

(இ-ள்.) மந்திரங்க ளொருகோடி சுவாகாவென்றும் மருவுநமவென்றும் வசட்டு வௌட்டென்றும் உந்துசுதாவென்றும் உம்மென்றும் பட்டென்றும் உதிக்கும்முத லெழுகோடியாம் - மந்திரங்களேழுகோடியாம், அவை சுவாகா, நம, வசட், வௌஷட்டு, உம், பட், சுதா வென்றோன்றொருகோடியாக எழுபேதமாக வழங்கும்—வன்னமுதலா நந்துபராசத்தியால் நாதவிந்துதோன்றி நாதத்தே மூன்றுசுர நடந்ததுதானீண்டு சிந்துமகாரம் மற்றைப்பத்துமாஞ் சத்தி திருமேனியின் முப்பத்தைந்துஞ் சேர்ந்திடுமே - அட்சரந்தோன்றுமிடத்துப் பராசத்தியாலே பிரணவமாகிய மாயையிலே அகார இகார உகாரமாகிய மூன்றுவிந்துபிறக்கும், அதிலே ஆ ஈ ஊ என்

னுமூன்றுநாதம் பிறக்கும்; இவையாறிலுநின்று பத்தக்கரம்பிறக்கும்; இப்ப தினாறும் மாதிருகையென்று பெயராய்ப் பராசத்தியின் சூக்குமரூபமாம் ககரமுதல் க்ஷகாரமீறாக முப்பத்தைந்துந் தூலதேகமாம் இப்படியாமக்கரம் ஐம்பத்தொன்றும் இவற்றின்விரிவு ஆகமத்திற்காண்க. எ-று. (உசரு)

இதுவுமது.

அச்சத்திமாதிருகையதனிலோங்கார
மானபதமுதலாகவறையுமெண்பத்தொன்று
மெச்சுபதம்வன்னத்தேயுண்டாகும்பதத்தின்
மேவுமந்திரம்பதினொன்றவையீசானாதி
நச்சுபதந்தனிலிருப்பார்புவனநாயகரா
நண்ணுமவரிருநூற்றொடிருபத்துநால்வர்
வைச்சகலைமுன்சத்திதன்னின்வருமிந்த
வகையைந்துந்தத்துவத்தேமருவிநிற்குங்காணே.

(இ-ள்.) அச்சத்திமாதிருகை அதனிலோங்கார மானபதமுலாக வறையுமெண்பத்தொன்றும் - அந்தச் சத்தியின் திருநாமம் மாதிருகையென்று பெயரா மந்தமாதிருகையின்பேதமாக அகார உகார மகாரமாகவும் விந்து நாதமாகவும் ஓம்என்றுவடிவாம் இவ்வடிவுமுதலாக இரண்டக்கரந்தொடங்கி யெட்டக்கரமளவாகப் பதமாய்ப் பதமெண்பத்தொருபேதமாம்—மெச்சுபதம் வன்னத்தேயுண்டாகும் - இப்பதங்களுக்குத் தோற்ற மட்சரத்திலேயாகும்—பதத்தின்மேவு மந்திரம் பதினொன்று - இந்த எண்பத்தொரு பதத்திலு மிருக்குந்தேவதைகட்கு முதலாகத் தோன்று மந்திரங்கள் பதினொன்றும்—அவை ஈசானாதி - எல்லாவற்றுக்கும் முடியான சதாசிவமந்திரம் ஈசானாய் மூர்த்தாயென்றும் எல்லாத்துக்கும் முகமான வுருத்திரவடிவமான மந்திரம் தற்புருட வத்திராயவென்றும் எல்லாத்துக்குமிதயமான அகோர மூர்த்தமாகியமந்திரம் அகோர இருதயாயவென்றும் எல்லாத்துக்குங் குய்யத்தானமான வாமதேவ வடிவமான மந்திரம் வாமதேவ குய்யாயவென்றும் எல்லாத்துக்கும் வடிவமான சத்தி மூர்த்தியான மந்திரம் சத்தியோசாதமூர்த்தியேயென்றும் இனி அங்கங்களாகிய இருதயாயநம சிரசேசுவாகா சிகையேவசட் கவசாயஉம் நேத்திராயவௌஷட் அத்திராயபட் உபாங்கேப்பியோசுதாவென ஒவ்வொருகோடியா யேழுகோடியுமேழாய் எழுமாறாய்ஆறுமைந்தும் பதினொன்றாய் விரியாநிற்கும்—நச்சுபதந்தனிலிருப்பார் புவனநாயகராம் - இந்த எண்பத்தொரு பதத்திலுமிருப்பார் புவனேசுரராகிய வீசுரபேதமாம்—நண்ணுமவ ரிருநூற்றொ டிருபத்துநால்வர் - இந்தப் புவனேசுர நாயகமாகப்பொருந்து முருத்திரர்க ளிருநூற்றிருபத்துநாலுபேராம்—வைச்சகலை முன்சத்திதன்னின் வருமிந்த வகையைந்துந் தத்துவ

த்தே மருவி நிற்குங்காணே - நிவிர்த்திமுதலாகிய பஞ்சகலைகளுஞ் சத்தி தத்துவத்திலே தோன்றிப் பிருதுவிமுதற் பஞ்சபூதங்களிலே வியாத்தமாய் நிற்கும் இவையைந்துவகையும் தத்துவமுப்பத்தைந்திலும் வியாத்தமாய் நிற்கும் சிவதத்துவமிவற்றிற்கு நாயகமாக விவ்வகையே சடத்துவாக்க ளாம். எ-று. (உ௬௬)

இதுவுமது.

கலையைந்துமந்திரமைந்தாறும்நால்வாக்குங்
கருதுமற்றையமூன்றுஞ்சுத்ததத்துவத்தி
னிலையைந்துஞ்சுத்தமாமசுத்தமாயையினி
னீளுபிரகிருதியினின்மூளுமுக்குணமு
மலைவில்புத்தியிலடைந்தாலாறும்பினுண்டா
மவையடைவேசாத்துவிதராசததாமதமாங்
கலவுமிதிற்சாத்துவிதராசததாமதமாங்
கருதுமிராசதந்தாமதத்தினுமிக்கணக்கே.

(இ-ள்.) கலையைந்து மந்திரமைந்தாறும் நால்வாக்குங் கருது மற்றைய மூன்றுஞ் சுத்ததத்துவத்தினிலை யைந்துஞ் சுத்தமாம் - பஞ்சகலைகளும் பதினொருமந்திரமும் நாலுவாக்கும் புவனங்களும் பதங்களும் வன்னங்களும் சுத்ததத்துவங்களைந்துமாகிய வகையெல்லாஞ் சுத்தமாயையிற் றோற்றமாம்—அசுத்தமாயையினின் நீளு பிரகிருதியினின் மூளுமுக்குணமுமலைவில் புத்தியிலடைந்தாலாறும் பினுண்டாமவை யடைவே சாத்துவித ராசத தாமதமாங் கலவுமிதிற் சாத்துவித ராசத தாமதமாங் கருது மிராசதந் தாமதத்தினு மிக்கணக்கே - அசுத்தமாயையிற் பகுதியாய்ப் பிரகிருதியிலே தோன்றும் மூன்று குணமும் அவற்றினுமஞ் சாத்துவித மிராசதந் தாமத மாமிவை யலைவற்ற புத்திபேதத்தி லாறுகுணமுண்டாம். அவை சாத்துவிதத்திலிராசதம் சாத்துவிதத்திற் தாமதமென்றும், இராசதத்திற் சாத்துவிதம் இராசதத்திற் தாமதமென்றும், தாமதத்திற் சாத்துவிதம் தாமதத்தில் இராசதமென்றுமாறும் முன்னேசொன்ன மூன்றுமாக ஒன்பதுபேதமாய் அவை பொருந்தின வகையிலேயுற வனேகமாம். எ-று. (உ௬௭)

இதுவுமது.

சாத்துவிதமறிவொழுக்கம்வாய்மைநன்றிமுதலாய்த்
தருமிராசதமியானெனதுமிஞ்சிக்
கூர்த்தகொலைகளவுகாமாதியினின்முயல்கை
கொள்ளுதாமதமடிசோம்பாதிகுறிகேடா

மூர்த்தநற்குணத்திரண்டாமன்னறிவுமிஞ்சல்
　　மூதறிவின்மடிவருதல்கொலையின்பங்கொலைதா
னேர்த்ததறியாதாகைபின்னதுதான்மிகுகை
　　நிலையினதுவேறுபடனேரொன்பான்குணமே.

(இ-ள்.) சாத்துவித மறிவொழுக்கம் வாய்மை நன்றி முதலாய்த் தரும் - இந்தக் குணங்களிற் சாத்துவிதகுணம் ஞானம், நன்னெறி நடக்கை, சத்தியஞ்சொல்லுகை, அன்புமுதலான நற்குணங்களைத் தரும்— இராசத மியானெனது மிஞ்சிக் கூர்த்தகொலை களவு காமாதியினின் முயல்கை - இராசதமானது யான் செய்தேனென்று மென்னதென்றும், மிகுத்துச் சொல்லப்பட்ட கொலை, களவு, காமாதிகளின் முயற்சிப்பட்டுச் செல்வதாம்—கொள்ளுந் தாமதமடி சோம்பாதி குறிகேடாம் - தாமதத்தின் கொள்கையாவது மடி., சோம்பு, நித்திரை, மயக்கமாதி தீக்குணங்களாம்—மூர்த்த நற்குணத்திரண்டாம் மன்னறிவு மிஞ்சல் மூதறிவின் மடிவருதல் கொலை யின்பங் கொலைதான் நேர்த்ததறியாதாகை பின்னதுதான் மிகுகை நிலையினது வேறுபடல் நேரொன்பான் குணமே - இக்குணவடிவின் நற்குணமாகிய சாத்துவிதத்திலிராசதம் சாத்துவிதத்திற்றாமதம், இராசதத்திற் சாத்துவிதம் இராசதத்திற்றாமதம், தாமதத்திற் சாத்துவிதம் தாமதத்தில் இராசதமெனவொன்பதாம். சாத்துவிதத்திலிராசதமாவது நமக்கே போதமென்னுமறிவு மிகுதல்; சாத்துவிதத்திற் றாமதமாவது அவ்வறிவினிடையிலே மடிவந்திருத்தல்; இராசதத்திற் சாத்துவிதமாவது கொலை முதலியவற்றிலே இப்படிக் கொல்கின்றோமே யென்னுமறிவுண்டாகை; இராசதத்திற்றாமதமாவது கொலைமுதலியவை செய்ததிலுணர்வுபற்றாதிருப்பது; தாமதத்திற் சாத்துவிதமாவது தான் செய்யும் மடியாதி நன்னெறியிலே மிகுதல்; தாமதத்திலிராசதமாவது அம்மடியாதியை நற்குணமாக மதிக்கையாக ஒன்பதுகுணமாம். எ-று. (உ௪௬)

இதுவுமது.

மண்ணினிலெட்டடப்புவினிற்பதினாறங்கி
　　வழிமூவெட்டுயிர்முப்பத்திரண்டுவெளிநாற்ப
தெண்ணிரவியாறெட்டுமெதியைம்பத்தாறு
　　மிசையுமிந்திரற்கறுபானுலதாகும்
நண்ணுபிரசாபதிக்கொன்பதிற்றெட்டுயயனேர்
　　நாட்டியவெண்பானகுநாரணற்கொன்பானெட்
டுண்மையனக்தேசற்குத்தொண்ணூற்றாறு
　　முயருமறுநூற்றிருபானாற்பிறவுமுன்னே.

(இ-ள்.) மண்ணினில் எட்டு அப்புவினிற் பதினறு அங்கிவழி மூவெட்டு உயிர் முப்பத்திரண்டு வெளி நாற்பது - பிருதிவியின் மேற்பட்டிருக்கும் பசாசுக்கெண்குணமாம்; அப்புவினிற் சரிப்பார்க்கு மிராக்கதர்க்கும் முன்குணமெட்டுடனே தன்குணமெட்டுமாகப் பதினறும்; தேயுவினிற் சரிப்பார்க்கும் யட்சர்க்கும் முன்குணங்களோடு தன்குணமெட்டுமாக இருபத்துநாலாம்; வாயுவினிற் சரிப்பார்க்கும் கந்தருவருக்கு மிம்முறைமையிலே முப்பத்திரண்டு குணமாம்; ஆகாயத்திற் சரிப்பார்க்கும் பூதங்கட்கும் முப்பத்துமுக்கோடி தேவர்கட்கும் முறைமையிலே நாற்பதுகுணமாம்; இவற்றின்செய்தி கீழே பிராசாதத்திற் சொல்லப்பட்டதனிலறிக—எண்ணிரவிஆறெட்டு - எண்ணிச் சொல்லப்பட்ட ஆதித்தன்குணம் நாற்பத்தெட்டாம்—மதிஐம்பத்தாறும் - சந்திரனுக்குக் குணமைம்பத்தாறும்—இசையுமிந்திரற்கறுபானலதாகும் - தேவேந்திரனுக்கு அறுபத்துநாலாம்—நண்ணு பிரசாபதிக் கொன்பதிற்றெட்டும் - பொருந்தப்பட்ட பிரசாபதியென்பானுக்கு எழுபத்திரண்டு குணமாம்—அயனோர் நாட்டியவெண்பானும் - பிரமாவுக்கு நாட்டிச்சொல்லப்பட்ட குணமெண்பது பேதமாம்—நாரணற்கெண்பானெட்டு - ஆதியாகிய பரமபுருடனுக் கெண்பத்தெட்டுக் குணமாம்—உண்மை அனந்தேசற்குத் தொண்ணூற்றாறும் உயருமறுநூற்றிருபானல் பிறவுமுன்னே - சத்தியமாக வனந்தேசராகிய வுருத்திரற்குத் தொண்ணூற்றாறும் ஆகக்குணமறுநூற்றிருபத்துநாலும் பிறவுங் கொள்க. எ-று.

பிறவுமென்றது மானிடர்குணம் தன்ம ஞான வைராக்கிய மைசுவரியமென்னும் நாலில், தன்மத்திலே பத்துக்குணமும், ஞானத்திலெண்பதும், வைராக்கியத்திலெழுபதும், ஐசுவரியத்திலைம்பதும், அதன்மம் அஞ்ஞானம் அவைராக்கியம் அனைசுவரியமிவற்றினு மப்படியாக எறிக்குறைந் தொன்பது குணத்தின் பேதமாக வருங்குணம் நானூற்றைம்பது. இவற்றின் விரிவெல்லாம் பரமேச்சுவரமென்கிற ஆகமத்திலெ காண்க. உரையில் விரிக்கிற் பெருகும். எ-று.

(உசக)

இவற்றிற்குருவமாதி கூறுகின்றார்.

ஆயுமித்தத்துவங்களெண்ணில்கோடி
யான்மாவின்விகற்பமெல்லாங்கருவியாகு
மேயுமிவற்றுக்குருவமெல்லைகாண்ட
லிவற்றினுக்கோரறிவில்லைச்சடமென்றல்காட்சி
மேயவிவைநீங்குதலேசுத்தியாகு
மென்றிவற்றைநீங்கவிருந்தத்துவாதீதந்
தூயநெறிநீங்காதுபெத்தசகலந்தான்
றேன்றிநின்றவிடமுத்திசகலமெனச்சொல்லே.

(இ-ள்.) ஆயுமித்தத்துவங்கள் எண்ணில்கோடி ஆன்மாவின் விகற்ப மெல்லாங் கருவியாகும் - ஆராயப்பட்ட தத்துவமெண்ணுங்காலத் தெண்ணிலக்கமற்ற கோடிபேதமாம். இப்படிச் சொல்லப்பட்ட ஆன்மாவுக்கு இச்சைமுதலாக எழுந்திருக்கப்பட்டவை யெல்லாங் குணக்கருவிகளாம். அவை சொல்லிற்றொலையாதாம். இதுநிற்க—ஏயுமிவற்றுக்குருவம் எல்லை காண்டல் - இந்தத் தத்துவங்கட்கெல்லாமுருவமாவ தவற்றின் காரியப்படுதலையறிவதாம்—இவற்றினுக்கோரறிவில்லைச் சடமென்றல் காட்சி - இவற்றுக்கிப்படியறிவிக்குந் தன்மையுளவாயினும் ஆன்மாவினறிவாலறிவதன்றிச் சடமென்றுகாண்டல் தத்துவதரிசனமாம்—மேய இவை நீங்குதலே சுத்தியாகும் - பொருந்தியவிவற்றை நீங்குவதே தத்துவசுத்தியென்று பேராம்—என்றிவற்றை நீங்கல் இருந் தத்துவாதீதம் - இப்படியென்று கண்டிவையிற்றை நீங்குவதே பெரிய தத்துவாதீதமாம்—தூயநெறி நீங்காது பெத்த சகலந்தான் தோன்றிநின்ற இடம் முத்தி சகலமெனச் சொல்லே - இந்நெறியினீங்காதாயெல்லாஞ்சீவிக்கநிற்பது பெத்தசகலமாம். அஃதன்றியவைதாந்தோன்றி நிற்பது முத்திசகலமாம். எ-று. (உ௫௦)

அவத்தையிற கேவலம் கேவலதரிசனம் கேவலாதீதங்
கூறுகின்றார்.

தெரியவத்தைகேவலமுஞ்சகலமுஞ்சுத்தமுமாந்
திகழுமிவைபெத்தமுமுத்தியுமெனவேயாறும்
விரிவிவற்றிற்சகலமுமுன்விதித்தவாறு
மிஞ்சுகேவலபெத்தமெய்யொடுங்குகாலந்
துரியாதீதஞ்சொல்லுமுத்திகேவலநீ
தோன்றுதென்றிருந்தவிடமதுகலைகள்குறிக
ளுருவருவேநெறிகொளிச்சாஞானமின்றிமலம
தொன்றுமேவியாத்தமாயுறுதல்காணே.

(இ-ள்.) தெரியவத்தை கேவலமும் சகலமும் சுத்தமுமாம் திகழுமிவை பெத்தமும் முத்தியுமெனவே ஆறும் - அவத்தையாவது கேவல சகல சுத்த மென மூன்றுபேதமாம்; இவை மூன்றினும் பெத்தகேவலம் முத்திகேவலம், பெத்தசகலம் முத்திசகலம், பெத்தசுத்தம் முத்திசுத்தமென ஆறுபேதமாக விளங்கும்—விரிவிவற்றிற் சகலமும் முன்விதித்தவாறும் மிஞ்சு கேவலபெத்த மெய்யொடுங்குங்காலந் துரியாதீதஞ் சொல்லும் முத்தி கேவலநீ தோன்றுதென் றிருந்தவிடமது கலைகள் குறிகளுருவருவே நெறிகொளிச் சாஞானமின்றி மலமதொன்றுமே வியாத்தமா யுறுதல்காணே - விரித்துச் சொல்லப்பட்டவாறிற் பெத்தசகலம் முத்திசகலமிரண்டும் முன்னேசொல்லப்பட்டது நின்றநாலிற் பெத்தகேவலமாவ தெல்லாவான்மாக்களுமொ

டுங்கி மாயையிலே கிடக்குமிடமென்றும் துரியாதீதப்பட்டுக் கிடக்குமிடமென்றும் சொல்லப்படும், முத்திகேவலமாவது அவற்றுள் வடிவற்றழியாத காரியத்தான் முதன்முப்பத்தொரு தத்துவத்தினுஞ் சொல்லிலதாய்ச் சுத்ததத்துவங்களோடு கூடியறிவின் விகற்பத்தொழின் மேலாணுயமலமொன்றுமே வியாத்தமாக மற்றுள்ளவிகற்பநீங்கி யிருளில்விழித்த விழியிருடானேநிறைந்து நிற்பாரைப்போல நீநின்றுனக்கொன்றுந் தெரிந்ததில்லையென்று சொல்லிநின்ற விடமேயாம். எ-று. (உருக)

கேவலமாணவத்தினியல்பாகுமாணவந்தான்
கிளர்கருவியாலேறுமவத்தையைந்தா
மேவியவைவிட்டிறங்குமவத்தையைந்து
மிகுமுறையேநாலீரேழீரெட்டேழைந்து
தாவுமாறுருறுமாமேழைந்தையைந்து
தருமூன்றுமிரண்டொன்றுஞ்சாருஞ்சாக்கிரமு
மோவுசொப்பனஞ்சுழுத்திதுரியமேதீத
முயர்சகலஞ்சுத்ததத்துவமுணர்ந்துகொள்ளே.

(இ-ள்.) கேவலம் - கொள்ளே - இதனுட்கேவலாவவத்தை யாணவமலத்தின்காரியமாம், சகலாவவத்தை மாயையின்காரியமாம் சுத்தாவத்தை சுத்தமாயையின்காரியமாம் அவற்றுள் ஆணவத்தின்காரியந்தான் மேலாலவத்தை கீழாலவத்தை யென்றிரண்டுவிதமாம்; அவற்றுள் மேலாலவத்தை யிருளாகிய வதீதத்திலே கிடந்தானை அறிவிக்குங் கருவியுங்கூடி மேலே போகந்துய்த்தற்பொருட்டுச் செல்லுவதாம். கீழாலவத்தையாவது புசிப்பு நீங்கி மலமேயாக விறங்குமவதரமாம்; இவைதாம் துரியாதீதம் துரியம் சுழுத்தி சொப்பனம் சாக்கிரமென்றுஞ் சாக்கிரஞ் சொப்பனஞ் சுழுத்தி துரியந் துரியாதீதமென்றுமாய் ஏறுமிறங்குமவதரம் இவற்றுக்குக் கருவி காலமும் நியதியும் கலையும் இவற்றைச்செலுத்துஞ் சத்திதத்துவமு மென நாலுகருவியுந் துரியாதீதத்துக்காம்; காலமுதலேழுஞ் சுத்ததத்துவமஞ்சும் பிராணவாயுவும் பிரகிருதியுமாகிய பதினாலுகருவியுந் துரியத்துக்காம்; இப் பதினாலுடனே சித்தமு மபானவாயுவுமாகிய பதினாறு கருவிகளுடனுஞ் சுழுத்தியிலாம்; இப்பதினாறுடனே நின்றவெட்டுவாயுவும் சத்தியும் வசனாதியும் ஆகாயமுமாகிய முப்பத்தைந்தும் சொப்பனத்திலாம் இம்முப்பத்தைந்துள் மேற்சொன்ன எட்டுவாயுக்களும்நிற்கப் பூதங்களுங் கரணங்களும் சோத்திராதியும்வாக்காதியுமாகிய நாற்பத்துநாலுகருவியும்சாக்கிரத்திலாம் வசனாதி தொழிலாதலாற் கருவிப்பாற்படாது புருடனும் பிராணவாயுவும் மாயையும் விகற்பியாதாதலானீக்கி முப்பத்தாறும் கீழாலவத்தைக்கறிவிக்குங் கருவிகளாகிய பூதங்களைந்து கலாதிகளாறு சுத்ததத்துவங்களைந்தாகப்

பதினாறும் நீங்கப்பட்டுப் புறக்கருவியில் வசனாதியும் வாயுக்களுங்கூட்டப்பட்டு முப்பத்தைஞ்சாய்ப் புருவத்தானத்திலே சாக்கிரமான கருவிகடோன்றினும் அவற்றிற்செல்லாது தேரோட்டுவான் வடிக்கயிறும் முட்கோலுங்கொண்டு செலுத்தாநின்றாற்போல அசைவற்றுநிற்பதாம் சாக்கிராவத்தையிலே ஞானேந்திரிய கன்மேந்திரியம்பத்தும்நீங்க இருபத்தைந்தோடுங் கண்டத்தானத்திலே நிற்பதுசொப்பனமாம் இதிலே யிறங்கும்போது மேறும்போதும் முப்பத்தாறோடுஞ்சாக்கிரத்திலே நிற்குமுறைமைபோலப் போகந்துய்க்குமது சூக்குமதேகமாம்; இவற்றிவிருபத்திரண்டு கருவியும் நீங்கச் சித்தமும் பிராணவாயுவும் பிரகிருதியுமாகிய மூன்றுகருவியோடு மிதயத்தேநினைவுமாத்திரமாய் நிற்பது சுழுத்தியாம் இதிலேசித்தம்நிற்கப் பிராணவாயு மூலப்பிரகிருதியோடு நிற்பதுதுரியமாம் இதிலேபிராணவாயு நிற்கப்பிரகிருதியோடு கிடப்பதுதுரியாதீதமாம் இது கீழாலவத்தையாம், நிமிடத்திற் சகலத்திலுமப்படி யிருவகையும், சுத்தத்திலுமப்படியிருவகையுமாகும், இதனுட்சகலத்துக்கருவி கேவலம்போலாம், சுத்தத்துக்கருவி சுத்ததத்துவமாம், அவையைந்து நாலுமூன்றுஇரண்டுஒன்றாகும், சாக்கிரத்திலதீதம் சாக்கிரத்திற்துரியம் சாக்கிரத்திற்சுழுத்தி சாக்கிரத்திற்சொப்பனம் சாக்கிரத்திற் சாக்கிரமெனமேலும் சாக்கிரந்தொடங்கிக் கீழுஞ்செல்வதுமாயையின் விகற்பமாதலா லவைமாயையிற் குணமேழிலே காண்க, சுத்தாவத்தை மேலான துரியாதீதஞ் சிவதத்துவத்தைக்கொண்டு காண்டலாம்; மேலானதுரியஞ் சிவதத்துவத்தையுஞ் சத்திதத்துவத்தையுங் கொண்டறிதலாம் மேலான சுழுத்தி சிவஞ் சத்தி சாதாக்கியங்களைக்கொண்டறிதலாம் மேலானசொப்பன மிவற்றுடனே யீசுரதத்துவமுங் கொண்டறிதலாம், மேலானசாக்கிரஞ் சுத்ததத்துவமைந்தினாலுமறிவதாம்; இவைமேலாலவத்தையையறியு மவத்தையைந்து, கீழாலவத்தையையுமறியு மவத்தை மேலான சாக்கிரமுதலானவாம். ஆகவிவைபத்தும் ஞானிகள்காணுமவத்தைகள். ஆகவவத்தை முப்பத்துமூன்றாகும். எ-று. (உருஉ)

ஆன்மரூபமான்மதரிசனங் கூறுகின்றார்.

ஈங்கிதனிற்கேவலத்தின்செயலைக்காண்ட
லீதுகேவலத்தினதுகாட்சியென்ப
தோங்கியதுகேவலமாமிதனைநீங்கி
யுணர்தலேகேவலாதீதமாகும்
நீங்கிநின்றவிருளேதென்றவன்றான்கேட்ப
நின்னிலையும்பிறநிலையுந்தெரியாமனின்போ
லாங்குருத்தலாணவங்காணெனவிதுவோவென்றே
யறிகுவதுகாணுன்றனுன்மாவென்றறியே.

(இ-ள்.) ஈங்கிதனிற் கேவலத்தின் செயலைக்காண்டல் ஈது கேவலத்தினது காட்சியென்ப - இங்கிதனுள்ளே ஆணவமலத்தின் செய்தியெல்லா மறிவது கேவலதரிசனமாம்—ஓங்கியது கேவலமாம் - இப்படிக்கொத்தது கேவலமென் றறிவது கேவலமாம்—இதனை நீங்கி யுணர்தலே கேவலாதீதமாகும் - கேவல மிதுவென்றறிந்து நீங்குவதே கேவலாதீதமாகும்—நீங்கி நின்றவிருளேதென் றவன்முன் கேட்ப நின்னிலையும் புறநிலையுந் தெரியாம னின்போலாங்குருத்தல் ஆணவங்கா ணெனவிதுவோ வென்றேயறிகுவது காண் உன்றன் ஆன்மாவென் றறியே - இத்தனையுமறிவிக்க நானறிந்தேன் இந்த இருளாகி நின்ற தெதுதா னென்றான் அதுகேட்டு உன்னிலையும் கருவிகளினிலையுந் தெரியாமலவைகளை யுன்போலக் காட்டுமதுவே ஆணவமலமென்று சொல்லக்கேட்டு இதுவோஆண வமென்று கண்டாயே இதுகாணுன்மாவென் றுன்னுண்மையையறிகுதி. எ-று.

ஆன்மவிலக்கணம் பலபடக்கூறுஞ் சமயிகள் கொள்கையை
மறுத்ததனுண்மையைக் கூறுகின்றார்.

எடுத்தவுடலினினிற்குமான்மாத்தன்னை
யேகத்தேசத்தென்றுமெங்குநிறைவென்று
மடுத்தவுடலளவென்றுமறியாதென்று
மறிவென்றுமொளியென்றுமணுவருவமென்றுங்
கடத்தைநடத்திடுங்கருவிநாயகமாமசுத்தங்
கருதுசுத்தஞ்சுத்தாசுத்தங்கரணங்கீழ்மேற்
பிடித்ததாம்பிரமமாம்பேர்பொறிகள்குணமாம்
பேர்ச்சொல்லாம்பிறவுமாமென்பதுபேதமையே.

(இ-ள்.) எடுத்த - பேதமையே - எடுத்தவுடலிலே நிற்குமுறைமையான ஆன்மாவை ஏகதேசியென்பார், எல்லார்க்குமோரான்மாவென்பார், உடலளவும் நிறைவென்பார் அறிவற்றதென்பார் அறிவு தானாயிருக்குமென்பார் ஒளியாயிருக்குமென்பார் அணுவாயிருக்குமென்பார் அருவமென்பார் உருவமென்பார் அருவாரூபமென்பார் சரீரத்தை நடத்திடுமென்பார் கருவிகளுக்கு நாயகமென்பார் சுத்தமென்பார்அசுத்தமென்பார் சுத்தாசுத்தமென்பார் மனமென்பார் புத்தியென்பார் சித்தமென்பார் ஆங்காரமென்பார் பிருகிருதியென்பார் புருடனென்பார் மூலாதாரத்திலென்பார் விந்துவிலென்பார் சரீரந்தானென்பார் ஐம்பொறிகளென்பார் குணமென்பார் மேலுஞ் சமயிகள் சொல்லுவதெல்லாம் ஏகதேசமாத்திரத்தை இவையல்லவாயிருக்கும் ஆன்மாவின்வடிவை மேலேசொல்லுவாம். எ-று. இவர் கொள்கை சமயங்கடோறுஞ் சொல்லுமுறைமையிற் கண்டு கொள்க. ஈண்டுரைக்கிற் பெருகும். (உருச)

இதுவுமது.

அருக்கனிற்கண்போலுமசிற்படிகம்போலு
மரன்றனதுசன்னிதியாமருளினாலே
நெருக்குபொறிகண்டுகேட்டுண்டுயிர்த்துற்றறிந்து
நின்றிடுமெப்பசுத்துவத்தாற்பசுவெனப்பேராகி
விரிக்குமலத்தினைக்கண்டவறிவுகாணுண்மை
விளங்கிடுமேற்பாரென்னமேவியெல்லாமறிந்தே
நிரைத்தநானேசிவனுநீழுடலாடத்தி
நிற்போனுநானெனத்தற்போதநிகழ்த்தினனே.

(இ-ள்.) அருக்கனிற் கண்போலும் அதிற் படிகம்போலும் அரன்றனது சன்னிதியாம் அருளினாலே நெருக்குபொறி - தன்னுண்மையென்ப தான்மா வெப்படி யிருக்குமென்னில் ஆதித்தனுங் கண்ணும்போலவும் ஆதித்தனும் படிகமும்போலவும் சிவனது சன்னிதியென்றபெயராய்க் கிரியாசத்தியாலே கண்ணுதித்தனைக் கூடினவாறே சுட்டாமற் காட்டுவதனைக்கொண்டு சுட்டிக்காணுமது, ஏகதேசத்திலே காணுந்தன்மை படிகமாதித்தனாலே வன்னங்களைப்பற்றி யவ்வன்னந்தானாய் நிற்குமுறைமைபோல இந்திரியங்களோடேகூடி யிந்திரியங்கடானாயுங்கொண்டே—கண்டுகேட் டுண்டுயிர்த்துற்றறிந்து நின்றிடுமெப்பசுத்துவத்தாற் பசுவெனப் பேராகிவிரிக்கும் - அவ்விந்திரியங்களாய்க்கொண்டு நிற்கும்படி கண்ணாய்க்கண்டுஞ் செவியாய்க்கேட்டும் வாயாய்த்துய்த்தும் கிராணமாயுயிர்த்தும் பரிசமாயுற்றும் கரணங்களாய்ப்பற்றி நிச்சயித்து எழுந்து சிந்திக்குங் குணங்களாயும், பச்சென்றுணவத்துக்குப்பெயர். அவ்வாணவத்தோடு கூடுதலாற் பசுவென்று பேராயும் விரிவித்து—மலத்தினைக் கண்ட வறிவுகாணுண்மை - அப்படித் தன்னிலைமையாகிய விருட்டன்மையைக் கண்டாயே கண்ட அறிவு காணுன்மருபம்—விளங்கிடும் மேல்பாரென்ன - இவ்வறிவே நாமென்று கண்டறிந்து நீ முன்னர் நான்றானென்ற விடமெல்லாம் பார்த்துக் காணென மீளவும் இந்திரியவழியேயோடிக் கண்டு சொல்வான்—மேவியெல்லாம் அறிந்தே நிரைத்த நானே சிவனும் நீழுடலம் நடத்திநிற்போனும் நானெனத்தற்போத நிகழ்த்தினனே - அவ்விந்திரியமளவும் பார்த்து நாந்தாமாயிருந்த தெல்லாமறிந்து நீங்கினவனெனக்கண்டு நானே சர்வமு மறிகையு நீங்குகையுஞ் செய்தறிவேன் நிரைத்தபடி சிவனாகச்சொல்லப்பட்டதும் நம்மைத்தான் நாந்தாமாயிருந்துடம்பைநடத்துகிறோம் நாம்தானே சர்வமுமென்றுசொல்லி ஆன்மபோதஞ் சீவித்தபடியாலே யொன்றும்பாராமல் வந்தவழிசொல்லி நின்றான். எ-று. (உ௫௫)

ஆன்மாவே சிவமுமெனக் கூறிய மாணாக்கனை மறுத்து
அவ்வுண்மையைக் கூறுகின்றார்.

நீசிவமாயாவுமுன்வசமதாகில்
நித்திரையில்வைத்தபொருள்கவர்ந்தவனையறியாய்

நேசமறவருமகிதமகற்றமாட்டாய்
நெறிபொறிகணிற்கையிலேயொருவன்கையி
லாசின்மணியாழியைநீகொடுத்தயர்த்துவருந்தி
யவ்வாழிவாங்கினவர்க்கண்டுநினைத்தலினு
லாசைவந்துகேட்டலானீசிவனன்றுகு
மாதலாலுனையறிவித்திடுமருளையறியே.

(இ-ள்.) நீசிவமாய் யாவுமுன்வசமதாகில் நித்திரையில் வைத்தபொருள் கவர்ந்தவனை அறியாய் நேசமற வரும் அகிதமகற்றமாட்டாய் - நீயெல்லாம் பார்த்து நானெல்லாமறிந்தேனென்றும் நானெல்லா மறிவிப்பேனென்றும் நானே சிவன்றானுமென்றும் கூறிநின்றாய்; நீ சிவனுமாகில் நீயவத்தையிலே கையிலே பிடித்துக்கொண்டு கிடந்த பொருளைத் தன்வசமற்றநேரத்திலே களவிலே கொண்டுபோனவனை யறிந்தாயில்லை; அதுவொழியத் துக்கம்வந்தவளவிலே அதனை நீக்கியிருந்து விடமாட்டாய்—நெறி பொறிகள் நிற்கையிலே ஒருவன் கையில் ஆசின்மணி ஆழியை நீ கொடுத்தயர்த்து வருந்தி அவ்வாழி வாங்கினவர்க்கண்டு நினைத்தலினால் ஆசைவந்து கேட்டலால் நீ சிவனன்றாகும் - இந்திரியங்களுன் வழித்தாகினிவ் விந்திரியமெல்லாஞ் சீவிக்கும்நேரத்தேயொருவன் கையிலே உன்னுடைய இரத்தினமோதிரத்தைக் கொடுத்து அவன் கொண்டுபோனபின் மறந்து தேடி யார்கையிலே கொடுத்தோமென் றறியாமற்றிகைத்து வியாகுலப் படும்நேரத்திலே வாங்கினவனெதிர்ப்பட அவனைக்கண்டபோது நினைவுவந்து வாங்குதற்காசையாய்க் கேட்டு வாங்குகையால் நீ சிவனுமல்லக் கருவியுமுன்வசமல்லவாகும்—ஆதலால் உனை அறிவித்திடும் அருளை அறியே - இப்படியுன் சுதந்தரவானியாதலா லுன்னையறிவிக்கும் அருளுண்டதனையறிவாயாக. எ-று.

இத்துணையும் பதிமுதுநிலையும் கன்மநிலையும் ஆன்மவுண்மையும் ஆன்மதெரிசனமுமாகிய சூத்திரம் நாலுமடங்கிற்று. இந்நாலினுள்ளே தசகாரியத்திற் தத்துவரூபம் தத்துவதரிசனம் தத்துவசுத்தி, ஆன்மரூபம் ஆன்மதரிசனம் ஆன்மசுத்தியுமடங்கிற்று. இவற்றுட் பஞ்சபூதப்பழிப்புமுதற் சைதன்னியதரிசனவவதரமளவுமடங்கிற்று. (உருசு)

## ஐந்தாஞ்சூத்திரம்.

ஞானதரிசனஞ் சொல்லத்தொடங்கிச் சிவசத்திநடத்து முறைமைகூறுகின்றார்.

இந்திரியாதிகளறியுமுயிராலந்த
விந்திரியமான்மாவாலியாமறிவோமென்று
சிந்தைசெயாவவ்வுயிருமருளாலுன்னல்
செய்விப்பான்றனையறியாச்சிவன்றானேசெலுத்து

மெந்தவழியாலுமிறைசந்நிதியிலியங்க
விறைவனசையான்காந்தத்திரும்புபோல்வன்
மூந்தவிவனடத்துகின்றமுறைமைஞான
முதற்கிரியையிச்சையெனுமுறைமையுறுநின்றே.

(இ-ள்.) இந்திரியாதிகளறியும் உயிரால் - சோத்திராதிகள் சத்தாதிகளை யறியுமிடத்துத் தாமறியாதான்மாச் சென்றறியாநிற்கும்—அந்தவிந்திரியம் ஆன்மாவால்யாமறிவோமென்று சிந்தைசெயா - அந்தவிந்திரியங்களும் ஆன்மாவாலே யல்லோ வறிகின்றேமென் றறியமாட்டாவாம்—அவ்வுயிரும் அருளாலுன்னல் செய்விப்பான்றனை அறியாச் சிவன்றனே செலுத்தும் - அந்த ஆன்மாவுஞ்ஞான மறிவிக்கவறியும், அங்ஙனமறியுமாயினும் அறிவிக்கின்றானை யறியமாட்டாவாம் சிவனுடைய சத்தியே செலுத்தும்—எந்தவழியாலும் இறை சந்நிதியி லியங்க இறைவன் அசையான் - எந்தவழியாலுஞ் சிவனது சந்நிதியிலேயியங்கச் சிவனுமசைவற்று நிற்பன்—காந்தத்திரும்புபோல்வன் - இரும்பை யலிக்குங் காந்தம் போல விருப்பன்—மூந்த இவனடத்துகின்ற முறைமை ஞானம் முதற் கிரியை இச்சையென்னும் முறைமையுறும் நின்றே - இவன்முற்பட்டு நடத்துமுறைமை ஞானத்தாலறிந்து கிரியையாலியற்றி இச்சையாற் கலந்து திரோதானத்தான் மறைத்திவனிச்சை ஞானங் கிரியைபோலத் தெரியாமுறைமை பொருந்தும்படி நிற்கும். எ-று. (உருஎ)

இதுவுமது.

சத்திதான்சுத்ததத்துவங்களினைச்செலுத்தத்
தருசுத்தமறுவகையாய்த்தான்கலாதிநடத்த
மெத்தியவக்கலாதிகளைத்தத்துவங்கணடத்த
மேதகுவாக்காதியால்வசனத்தைவிரிக்க
வைத்தவக்கரங்களினுன்மனுதிபொறிபூத
வகைசெலுத்தமற்றுள்ளவிரிவையெல்லா
மெய்த்தருநற்பதங்கள்புவனங்களுயகர்கள்
விரித்துநடத்திடமருவும்வியனுலகந்தானே.

(இ-ள்.) சத்திதான் சுத்ததத்துவங்களினைச் செலுத்த - சிவசத்தியாகிய இச்சாஞானக்கிரியை சுத்ததத்துவங்களை அதிட்டித்து அக்கினியுங் காட்டமும் போலத் தாங்களிவையாய்நின்றுநடத்த—தருசுத்தம் அறுவகையாய்த் தான்கலாதி நடத்த - அந்தச் சுத்ததத்துவங்களைந்தும் மந்திரம் பதம் வன்னம் புவனம் தத்துவம்கலைகளென்னுஞ் சுத்தசடாத்துவாக்களாயும் இந்தமந்திரேசுரர் பதேசுரர் வன்னேசுரர் தத்துவேசுரர் புவனேசுரர் கலேசுரரிவர்களாய் அதோமாலையை யிற்காலம் நியதிகலைவித்தையிராகம் புருடனிவையிற்றைநடத்த—மெத்தியஅக் கலாதிகளைத் தத்துவங்கள் நடத்த - மாலையயானிறைவுபெற்ற கலாதிகளேழை

யும் அருளானிறைவுபெற்ற சுத்ததத்துவங்கள்செலுத்த—மேதகுவாக்காதியால் வசனத்தைவிரிக்க - சுத்தமாயையில் வாக்குக்களினலே வசனுதிகளைவிரிக்க—வைத்தவக்கரங்களினல் மனுதிபொறிபூதவகைசெலுத்த - வைத்துச்சொல்லப் பட்ட சூக்குமபஞ்சாக்கரத்தினலும் ல, வ, ர, ய, ஹ, என்னுமெழுத்துக்களி னலும் கரணங்களையும் பொறிகளையும் பூதங்களையும் நடத்த—மற்றுள்ளவிரிவை யெல்லாம் மெய்த்தகுநற்பதங்கள் புவனங்கள் நாயகர்கள் விரித்துநடத்திடமருவும் வியனுலகந்தானே - இந்தத்தத்துவங்களால் விரிந்தவிரிவையெல்லாம் பதங் களும் புவனங்களும் கலைகளும் கலந்துநின்று தனித்தனி தத்துவங்கடோறும் நடத்தவிவ்வகையே மருவிவரு மகன்றவுலகையெல்லாஞ் சிவனடத்துவனென் றுகூறுமுறைமை யிவ்வகையாம். எ-று. (உருஅ)

இதுவுமது.

பொறிகரணங்களையுயிர்போற்போதம்போதத்தைப்
பொருந்திநடத்துஞ்செயலப்போதவுணர்வுணர்ந்தே
அறிவினதுசெயலோநாமெனவுணர்வுற்றிருப்ப
வப்போதுவிளக்கெனவுமருணன்மதியெனவுங்
கறைவிடியுங்காலமெனவொளிவந்துற்பவிக்குங்
காரொளியேஞானமாங்கலைஞானவிந்து
அரியசபைபாசவொளிபிராசாதவொளிக
ளல்லாததிவ்வொளியென்றறிந்துன்னிப்பாரே.

(இ-ள்.) பொறி கரணங்களை உயிர்போற் போதம் போதத்தைப்பொருந்தி நடத்திடுஞ் செயல் அப்போதவுணர்வுணர்ந்தே - இந்திரியங்களையும் கரணங் களையும் ஆன்மாவறிவு கொடுக்கும்போது நீக்கமறநிற்குமுறைமைபோல ஆன்ம போத மறிவிக்கவறிவது சிவபோதமதனை நீங்காமல் நின்றறிவிப்பது இப்படி யோபொருந்திய அறிவுக்கறிவாய் நிற்கிறபடியென்றறிந்துணர்ந்து—அறிவினது செயலோநாமென உணர்வுற்றிருப்ப - நம்முடைய செயலின்மைகண்டு அதனுற் சேட்டையற்றிருந்து நம்முடையவறிவை நாமென்றறிந்து திரியும்படி பிராண னய்நின்றறிவிக்கின்றது சிவஞானமோவென்று அவ்வறிவைப்பற்றி யுற்றிருக்கு மளவிலே—அப்போது விளக்கெனவும் அருணன்மதியெனவும் கறைவிடியுங் காலமென ஒளிவந்துற்பவிக்கும் - அந்தவவசரத்திலே விடியற்காலத்தினிருள் மிக்கு நீங்குமாபோலவும் விளக்குப்போலவும் ஆதித்தனுதிக்குநேரத்தருணேத யம்போலவும் இரவின்மதியுதயம்போலவும் அவ்விரண்டையுமரவு தீண்டப்பட் டிருப்பதுபோலவும் ஒளி மெல்லமெல்ல மனக்கவலையறத் தோன்றுநிற்கும் மன க்கவலையற்றபோதே—காரொளியே ஞானமாம் - அந்தத் திரோதாயி மறைத்து க்காட்டுமொளியே ஞானதரிசனமாவது—கலைஞானம் விந்து அரிய அசபைபாச ஒளி பிராசாத ஒளிகள் அல்லாததிவ்வொளியென்றறிந்துன்னிப்பாரே - கலைஞான

த்தாலுண்டான பிரகாசம், அசபை, விந்து, நாதம், ஆதாரம், பிராசாதம், வேதாகம சாத்திரத்தையறியும் பிரகாசங்கள், உலோகத்தா லுண்டான வொளிகள் இவை பாசம்நீங்காமற் றோன்றுமொளிகளாகையாலே அவ்வொளிகள் பதப்பிராத்தியைக்கொடுக்கு மித்தனையத்தனையாதலால் அவைகூடாதவொளியென்றறிந்து கருதியுணர்க. எ-று. ஞானச்சுடர்விளக்காய் நின்றாயென்றும் வருனவற்றாற் காண்க. (உருக)

ஞானம்வரும்வழியுங் குறியுங் கூறுகின்றார்.

நம்பரமாங்குருவைவழிபாடுசெய்த
னற்கருணையடியவர்மேல்வழிபாடுநாளு
மும்பனருச்சனைபலகாலுன்னலோசை
யொழித்தொடுங்கித்தனித்திருக்கினுதிக்குஞானங்
கம்பமொடுபுளகங்கண்டந்தித்தித்தல்
களநீர்வந்துறுதல்களந்தழுதழுத்தல்புளித்தல்
வெம்பிநீர்விழிபொழிதல்விதிர்விதிர்த்தலுண்டேல்
மிக்கிருள்போயஞ்ஞானம்விட்டோடிவிடுமே.

(இ-ள்.) நம்பரமாம் குருவை வழிபாடு செய்தல் - நமக்கு மேலான பொருளாகிய குருவைப் பரம்பொருளாகக் கண்டு வழிபடுதல்—நற்கருணை அடியவர் மேல் வழிபாடு நாளும் - கருணைநலமுடைய தம்பிரானடியார்களளவிலே நாள் தோறும் வழிபாடுசெய்தல்—உம்பன் அருச்சனை பலகால் உன்னல் ஓசையொழித் தொடுங்கித் தனித்திருக்கில் உதிக்கும் ஞானம் - சிவபூசை பலகாலுஞ்செய்தல்; சிவனைத் தியானத்திலே கண்டு ஓசையடங்கியிருத்தல் ஆகிய இவற்றால் ஞானம் வந்துதிக்கும்—கம்பமொடு புளகம் கண்டம் தித்தித்தல் களம் நீர்வந்துறுதல் களம் தழுதழுத்தல் புளித்தல் வெம்பி நீர் விழி பொழிதல் விதிர்விதிர்த்தலுண்டேல் மிக்கிருள்போய் அஞ்ஞானம் விட்டோடிவிடுமே - ஞான முதிப்பதற் கடையாளமாகிய சரீரமருக்குற்றாற்போல நடுங்கல், பயம்வந்தாற்போல மயிர் முகிழ்த்தல், கண்டத்திலே நீரோடியிறங்குதல், தித்தித்திருத்தல், கண்டந் தழுதழுத்தல், கண்டம் புளித்திருத்தல், உன்னுமளவிலே வெம்பிக் கண்ணீர் மிக வருதல், மிக்க நடுக்கம்வருதல் இவையுண்டானபோதே மிக்க அஞ்ஞானம் கெட்டோடும்; மெய்ஞ்ஞானமுண்டாம். எ-று. (உகூ0)

ஞானமுயிர்க்காதாரமென்று கூறுகின்றார்.

காணுங்கண்ணுக்கிரவியொளியேபோலுங்
கவருநிறப்படிகத்துக்கலரிபோலும்
பேணிநடப்பார்க்குமிகுபூமிபோலும்
பிறங்குபூதநாலுக்குமாகாயம்போலுங்

தாணுவாமுடலதனுக்குயிரேபோலுந்
 தகுநாவாய்தோணிகட்குச்சலதிபோலு
நீணாளவாமலர்க்குநீரேபோலு
 நிகழ்ஞானமுயிர்தனக்காதாரமெனநினையே.

(இ-ள்.) காணும் கண்ணுக்கிரவி யொளியேபோலும் - காணத்தக்க கண்ணுக்குக் காட்டான இரவியொளிபோலவும்—கவரும் நிறப் படிகத்துக்கு அலரிபோலும் - நிறங்களைக் கவரும் படிகத்துக்கு இரண்டையுமொன்றெனும்படி பற்றுவிக்கும் ஆதித்தனைப்போலவும்—பேணி நடப்பார்க்கு மிகு பூமிபோலும் - தான் பேணி நடப்பார்க்கு ஆதாரம் பூமியானாற்போலவும்—பிறங்கு பூதம் நாலுக்கும் ஆகாயம்போலும் - விளங்குகின்ற நாலுபூதத்திற்கும் ஆகாயமாதாரம் போலவும்—தாணுவாமுடல் அதனுக் குயிரேபோலும் - நிலைபெற்ற வுடலுக் கவ்வுடலை நிலைபெறுக்கு முயிர்போலவும்—தகு நாவாய் தோணிகட்குச் சலதிபோலும் - தகுதியான சோங்கு கப்பல் முதலான வுருக்களுக்குச் சமுத்திரம்போலவும்—நீணாளவாம் மலர்க்கு நீரேபோலும் - நீண்ட நாளத்தையுடைய நீர்ப்பூவுக் காதாரம் நீராமாறுபோலவும்—நிகழ் ஞானம் உயிர்தனக்கு ஆதாரமென நினையே - விளங்கும் ஞானம் ஆன்மாவுக்காதாரமென்பதறிந் ததனைத் தியானிக்குக. எ-று. (உ௬௧)

ஞானநிலை கூறுகின்றார்.

இப்பொருளேஞானதரிசனந்தானென்றிங்
 கெக்கருவியுநீக்கியிலங்குயிரின்செயல்க
ளப்பொருளன்றென்றேயாவையுங்கூடாம
 லவற்றைபகன்றவைவசமற்றவத்தையிற்கூடாமற்
தப்பாமல்நெதிபண்ணத்தர்ப்பணத்தைத்
 தான்விளக்கவருமொளிபோற்றலைப்படுமேஞான
மொப்பறவேயிப்பொருளினுறநிற்பையாயி
 னுன்செயலற்றருளிஞானமுனைக்கவருங்காணே.

(இ-ள். இப்பொருளே ஞானதரிசனந்தான் - இப்படி ஞானத்தின்வழித்தாக நிற்கும் பொருளே ஞானதரிசனமென்று சொல்லப்படும்—என்றிங்கு எக்கருவியும் நீக்கி - என்னுந் தியானங்கொண்டு கீழ்த் தரிசித்த முறைமையிலே அறியுமுயிரகலக் கூடியறியுங் கருவி நீங்குமென்றும் அறிவிப்பான்வசமாகத் தன்செயலு நீங்குமென்றும் நீக்கி—இலங்குயிரின் செயல்கள் அப்பொருளன்றென்றே யாவையுங்கூடாமல் அவற்றை அகன்றவைவசமற்று அவத்தையிற் கூடாமல் - அவ்வறிவின் போதபேதத்தை நீங்கி அதீதத்திற் சேராமலும்—தப்பாமல் நெதிபண்ணத் தர்ப்பணத்தைத்தான் விளக்கவரு மொளிபோற் றலைப்படுமே ஞானம் - தவறுபட்டுக் கவலையினிறங்காமல் மேலே பலகாற்றியானிக்கக்

கண்ணாடியைவிளக்க ஒளிமிகுதியாமாறுபோலச் சிவஞானந் தோன்றும்—ஒப் பறவே இப்பொருளின் உற நிற்பையாயில் உன்செயலற் றருளிஞானமுனைக் கவருங்காணே - உவமையிறந்த ஞானத்திலே யுறைக்கில் உன் போதத்தை மறைத்து ஞானமேலிடுங்காண் அவ்வழியிலே நிற்குக. எ-று. (உசுஉ)

ஞானவளர்ச்சியுவமைமுகத்தாற் கூறுகின்றார்.

பாசியினிற்கல்லுவிடாதெறியுமதுபோலும்
படரெரியைவாயுவாற்பலிக்குமதுபோலும்
பேசுமில்லைக்கம்பொன்றாய்ப்பிரித்தல்போலும்
பெரும்புடவைக்குடிலிழையாய்ப்பிரித்தல்போலும்
தூசினைத்தூசாக்கியிடுமதுபோலும்பளிங்கிற்
றொல்லிரவிதானுறைக்குமதுபோலுஞ்சொன்னூ
லாசையுடன்பலபடியாய்நவிலுமதுபோலு
மருளிலுறைத்திடிலிந்தவருள்வெளிப்பட்டிடுமே.

(இ-ள்.) பாசியினில் கல்லுவிடாதெறியும் அதுபோலும் - குளத்தில் நீர் பாசியாலேமறைப்புண்டால் அதனை ஒருகல்லெறிந்தவிடத்தே பலகல்லெறிய வப்பாசிநீங்குமாபோலவும்—படர்எரியை வாயுவாற்பலிக்கும் அதுபோலும் - விரிந்தவக்கினி விளங்காதநேரத்து விளக்கும்படி வாயுவையுண்டாக்கப் பலகால்வீசி யுந்துருத்திகளாலூதியு மெழுப்புமுறைமைபோலவும்—பேசும் இல்லைக் கம்பொன்றாய்ப் பிரித்தல்போலும் - தானடங்குவதாகச் சொல்லப்பட்ட வீட்டை யோவ்வொருகம்பாகப் பிரிக்குமதுபோலவும்—பெரும்புடவைக்குடில் இழையாய்ப்பிரித்தல்போலும் - பெரியபுடவையாலேவளைக்கப்பட்டகுடிலைஇழையாகவாங்குவதுபோலவும்—தூசினைத் தூசாக்கியிடும் அதுபோலும் - புடவையையழுக்கற வெற்றுமதுபோலவும்—பளிங்கில் தொல்லிரவி தானுறைக்குமதுபோலும் - படிகக்கல்லிலே ஆதித்தனுறைக்குமதுபோலவும்—சொல் நூல் ஆசையுடன் பலபடியாய் நவிலும் அதுபோலும் - நூற்சொல்லை யாசையோடே கூடப் பலகாலும் நவிலுவதுபோலவும்—அருளில் உறைத்திடில் இந்தவருள் வெளிப்பட்டிடுமே - ஞானத்திலே யுறைத்துநிற்க இந்தஞானம் பிரகாசிக்கும் இதனைக்கைவிடாதே யுறைத்துநிற்குதி. எ-று. (உசுந)

ஞானதரிசனங் கூறி ஞானதீதமும் பரைதரிசனமுங் கூறுகின்றார்.

இதுஞானதரிசனமாமிதனகத்துளடங்கி
யாதுமிசையாதிதுதானுகிநிற்கி
லதுஞானாதீதமவ்வொளிதோன்றியகலா
ததனிலுறையாதுநெகிழாதருளின்செயலாய்ப்
பொதுவானசெயலதனினின்றிடுவையாயிற்
புக்கவொளியெவ்விடத்தும்பொதுவொளியாய்நிறைந்து
கதிரானமுறுகினபோலாகுமதுதானே
கருதுபரைதரிசனமென்றறைபுநூற்கருத்தே.

(இ-ள்.) இது ஞானதரிசனமாம் - இப்படிச்சொல்லப்பட்டது ஞானதரிசனமாம்—இதன் அகத்துளடங்கி யாதுமிசையா திதுதானுகிநிற்கில் அதுஞானுதீதம் - இந்தஞானத்துள்ளேயடங்கித் தன்விகாரமா யாவையும்பொருந்தாதிதன் வசத்திலிருக்கில் அதற்குஞானுதீதமென்று பெயராம்—அவ்வொளிதோன்றியகலாது அதனிலுறையாது நெகிழாது அருளின்செயலாய்ப் பொதுவானசெயலதனின் நின்றிடுவையாயில் - அந்த ஒளி தோன்றினவிடத்து அதனிலுறைப்பதுஞ் செய்யாது நெகிழ்ப்பதுஞ் செய்யாதருளின் செயலாய்ப் பொதுவான செயலிலேநிற்பையாயின்—புக்கஒளியெவ்விடத்தும் பொதுவொளியாய் நிறைந்துகதிரானமுறுகினபோலாகும் அதுதானே கருது பரைதரிசனமென்றறையும் நூற்கருத்தே - தன்னிடத்தே புக்கவொளியெவ்விடத்து மொக்கப்பொதுவான ஒளியாய் நிறைவுபெற்று ஆதித்தன் மத்தியானமான போதுபோலநிறைந்தவொளியாய்நிற்குமதுதானே கருதப்பட்ட பரைதரிசனமென்று சொல்லுமாகம நூலின்கருத்து. எ-று.

(உசுச)

பரையோகமும் பரைபோகமும் டராதீதமுங் கூறுகின்றார்.

அப்பரைதானுட்பரனுக்ககலாதாகு
மாதியந்தமும்பரக்குமகன்மறைப்பையுடைத்தா
மொப்பில்சூக்குமமாகுமெங்குந்தானுகி
யொருவராலளப்பரிதாயொளிருமதின்செயலு
னெப்பொழுதுங்கருணைவடிவாகைசாந்த
மியல்பாகுமிச்சைஞானங்கிரியைக்கிடமாங்
கப்பிலாவோங்கொளியாமாங்கதுதானிறைவன்
கருதுவடிவாமென்னுங்கற்றவர்நூற்கருத்தே.

(இ-ள்.) அப்பரைதானுட்பரனுக் ககலாதாகும் - அந்தப்பராசத்திதான் அதற்குயிரான பரனுக்குள்ளிட்டு நீங்காததாம்—ஆதியந்தமும் பரக்கும் - சுத்தமாயையிலு மசுத்தமாயையிலும் காரியசத்திகளானும் காரணவிதியானும் விரிவாகும்—அகன்மறைப்பை யுடைத்தாம் - அங்ஙனம்பரந்ததாயினு மஞ்ஞானங்கூடாதமறைப்பை யுடையதாம்—ஒப்பில் சூக்குமமாகும் - உவமையற்ற சுத்தசூக்குமவடிவுமாம்—எங்குந்தானுகி ஒருவராலளப்பரிதாயொளிரும் - எவ்விடமுந்தானுயிருந்தும் ஒருவராலுமளந்தறிதற் கரிதாய்விளங்கும்—அதின்செயல்தானெப்பொழுதுங் கருணைவடிவாகை - அப்பரையின் குணச்செயல் சந்ததமுங்கருணைவடிவாகையாம்—சாந்தம் இயல்பாகும் - எல்லாவற்றையு மடக்கிக்கொள்ளுவதேயியல்பாம்—இச்சைஞானங் கிரியைக்கிடமாம் - இச்சாஞானக்கிரியையிவற்றுக்கிடமுமாம்—கப்பிலாவோங்கொளியாம் ஆங்கதுதானிறைவன் கருதுவடிவாமென்னுங் கற்றவர்நூற்கருத்தே - அந்தப்பரைதானே நீக்கமற்றுக்கேடுபடாதபிரகாசமுமாம் அவ்விஃறவற்கு விகாரவுருக்களுமாமென்றும் சிவாகமமறிந்த சாதுக்கள் சொல்லுவார்கள். எ-று.

(உசு[illegible])

இதுவுமது.

இதுசத்தியனேகமருவுருவாயுமிக்க
விறைவனூர்க்குயிராகிக்கரணமாகித்
திதமுற்றகுணம்பொறிகளாகியுயிருடலாய்ச்
சேர்சாங்கமுபாங்கமாய்த்தேசமொடுபொருளாய்க்
கதிவைத்தபொருளாயவிலிங்கபீடமுமாய்க்
கருதியநற்குணமாதல்பரைவியாத்தங்கண்டால்
இதமித்ததுவாதலியோகம்போக
மிதன்பயனுமோசையின்பமிசைதருனே.

(இ-ள்.) இதுசத்தியனேகம் அருவுருவாயும் மிக்கவிறைவனூர்க்கு உயிராகிக் கரணமாகித் திதமுற்றகுணம் பொறிகளாகி உயிருடலாய்ச் சேர்சாங்கமுபாங்கமாய்த் தேசமொடுபொருளாய்க் கதிவைத்தபொருளாய் இலிங்கபீடமுமாய்க் கருதியநற்குணமாதல் பரைவியாத்தங்கண்டால் - இந்தப்பராசத்தி திரோதானமுதல் அனேகமருவாயு முருவாயுமிருக்குஞ் சத்திகளுமாகிச் சிவனுக்குயிராகவறியுமதுவும், பற்றிநிச்சயிக்கும் கரணங்களும், அறதியுற்றகுணங்களும் இந்திரியங்களும் பிராணவாயுவுமுடலுமா யதனோடுஞ் சேருஞ்சாங்கோபாங்கமுமாய் இருக்குமிடமாய்ச் சரிக்குமுலகமாய், அளிக்கும்பொருளாய்ப் போகவுருக்களாய் மோகவுருக்களாய் இருவகை முத்தியுண்டாக்கப்பட்டஇலிங்கபீடமுமாகிச் சிவனினைந்தகுணமாய் நிற்பதனைத் தரிசித்தல் பரையில்வியாத்தமாம்—இதமித்ததுவாதலியோகம் - இதினுறையாமல் நெகிழாமல் அதன்வசமாய்த் தன்னைமறையநிற்பது பரையோகமாம்—போகமிதன்பயனு மோசையின்பமிசைதருனே - இவ்வியோகத்திற்குப் பயனாகிய சுகவோசையனுபவிப்பது பரைபோகமாம். எ-று. (உசரு)

இதுவுமது.

சங்கோசைகடலோசைமுழவோசைமணியிற்
ருளோசைசுரும்போசைசேகண்டியோசை
யங்குயிர்நாதத்தோசையானைவாக்கோசை
யருவிநீரோசையருள்வயிரினோசை
துங்கயாழோசைபலவோசையுமுற்கொண்டு
தோன்றுவதேபரையில்வருபோகமாங்கோன்றி
யிங்கிவற்றைவிடுவதுவேபரையாதீத
மிவ்வொளிக்குட்சிவமுளவென்றினியுணராய்நீயே.

(இ-ள்.) சங்கோசை கடலோசை முழவோசை மணியிற்ருளோசை சுரும்போசை சேகண்டியோசை அங்குயிர்நாதத்தோசை யானைவாக்கோ

சை அருவிநீரோசை அருள்வரியினேசை துங்கயாழோசை பலவோசையு முன்கொண்டு தோன்றுவதே பரையில்வருபோகம் - சங்கு கடல்வாச்சியம் எறிமணிவண்டு சேகண்டியோசை உயிரினெவ்விடத்தும் நிறைந்தநாதங்கள் யானைபிலிற்றல், அருவிகொம்பு, யாழ்நரம்பெனும் பலவோசையும் முன்னேகொண்டுதோன்று மிவையெல்லாம் பரையோகமாம்—ஆங்கொன்றி இங்கிவற்றை விடுவதுவே பரையாதீதம் - இவ்வோசை யெல்லாம் விளங்கவதனி லுருகி யிதனைநீங்கியிருப்பதே பரையாதீதமாம்—இவ்வொளிக்குட் சிவமுளவென்றினியுணராய் நீயே - இந்தக்கேடுபடாத ஒளிக்குள்ளொளியாகச் சிவனுண்டென் றுணர்வாயாக. எ-று. ஞானதரிசனமுதற் பராதீதமளவு முடிந்தது. (உசுஎ)

சாக்கிராதீதமுஞ் சுத்தாவத்தையுங் கூறுகின்றூர்.

இப்பரையுமொழியவொருபொருளுளவோவதுதா
னிதற்புறம்போவிதற்குள்ளோவித்தொடுகூடிடுமோ
வொப்பிலொளிவேறுண்டோவுப்புநீராமோ
வுரையுமிதன்குணமிதுவோவிதுநீங்கவுண்டோ
வப்பொருளேதெனத்திகைத்தல்சாக்கிராதீத
மதனிலைந்தவத்தையுள்வதுசுத்தவவத்தை
தப்பிலாவெயில்போலும்பரையொளியவ்வொளியைத்
தருமிரவிபோலுமரன்ருங்கியுணர்நீயே.

(இ-ள்.) இப்பரையுமொழிய ஒருபொருளுளவோ அதுதானிதன்புறம்போ இதற்குள்ளோ இத்தோடு கூடிடுமோ ஒப்பி லொளிவேறுண்டோ உப்புநீராமோ உரையுமிதன்குணமிதுவோ இதுநீங்கவுண்டோ அப்பொருளேதெனத் திகைத்தல் சாக்கிராதீதம் - நீரிந்தப்பரையொழிய வேறேயொருபொருளுண்டென்றீர்; அப்பொருள் இப்பரைக்குப்புறம்பாய் நிற்குமோ உள்ளடங்கிநிற்குமோ இதனேடுகூடிநிற்குமோ வெளுப்பும் சிவப்பும்போல வொளிவேறுபட்டு நிற்குமோ உப்பும்நீரும் கலந்ததுபோலப் பிரிவின்றிநிற்குமோ அதுவொருமுதலா யிதுதன்குணமாய் நிற்குமோ இதனிற்றட்டாமனிற்குமோ அப்பொருளெப்படி யிருக்குமென்று திகைத்து நிற்றல் சாக்கிராதீதமாம்—அதனில் ஐந்தவத்தையுள அது சுத்தவவத்தை - அந்தத்திகைப்பிலே சுத்தசாக்கிரஞ் சுத்தசொப்பனஞ் சுத்தசுழுத்தி சுத்த துரியம் சுத்ததுரியாதீதமென ஐந்தவத்தைப்படும்; அதுசுத்தவத்தையாம்—தப்பிலாவெயில்போலும் பரையொளிஅவ்ஒளியைத்தரும் இரவிபோலும் அரன்ருங்கியுணர்நீயே - பரைக்குஞ் சிவனுக்குமுவமை பரையொளி தவறில்லாத வெய்யில்போலும் சிவனெளி அந்தவெய்யிலைத்தரும் ஆதித்தன் போலுமென்றும் கண்டறிவாயாக. எ-று. (உசுஅ)

## ஆருஞ்சூத்திரம்.

சுகரூபதரிசனங் கூறுகின்ருர்.

இறைவன்ருனறிவுருவோவறியாதவுருவோ
வெதுவடிவவ்வவற்றிலொன்றிசையுமோதான்
அறியிலிச்சித்துமலவசித்துமலவாகு
மவனித்தனுயிவற்றுக்காதாரமாவன்
குறியிவற்றிலிருளிலொளிகூடாதவ்வொளியுங்
குல்விருளினின்றிடாவதனுலிந்த
நெறியதனிற்சித்தொடசித்துருவாய்நிற்பன்
நீள்சித்தின்முன்னசித்துநின்றிடாவே.

(இ-ள்.) இறைவன்ருன் அறிவுருவோ அறியாதவுருவோ எதுவடிவு- நீரிந்தச் சத்திக்குமேலாகச் சிவனுண்டென்றீர்; அந்தச் சிவன் அறிவான வடிவோ, அறிவற்ற உலகவடிவோ, எதுதான் வடிவென வினுவுமிடத்து —அவ்வவற்றிலொன் றிசையுமோதான் - அவற்றி லொவ்வொன்ருகப் பொருந்துதலாமோவெனின்—அறியில் இச்சித்துமல அசித்துமலவாகும் - அவன்வடிவு விசாரிக்கில் இந்தச் சித்துமல்ல, அந்த அசித்துமல்லவாம்— அவன் நித்தனுய் இவற்றுக்காதாரமாவன் - அந்தச் சிவன் அநாதியாயவ் விரண்டுக்கு மாதாரமாய் நிற்பன்—குறி இவற்றில் இருளில் ஒளி கூடாது அவ்வொளியுங் குலவிருளின் நின்றிடா - இன்னுங் கேள்; அசத்திருள் சத் தொளியாதலால் இருளிலே ஒளிகூடாது, ஒளியிலே இருள்கூடாது—அத ஞல் இந்தநெறியதனிற் சித்தொடசித்துருவாய் நிற்பன் நீள் சித்தின்முன் அசித்து நின்றிடாவே - ஆகையால் இந்தமுறைமையிலே சித்திலுமசித்தி லுங் கூடிநிற்பன், அதுவன்றி முன்சொன்ன சித்துமசித்தும் ஒன்றின்முன் ஒன்று நில்லாது. எ-று. (உ௬௬)

பிரபஞ்சமுறைமை கூறுகின்ருர்.

உலகுயிராய்த்தோன்றிநின்றிறுதல்செய்யு
மோவாதுதுக்கமுடன்சுகமுமுண்டா
மலகில்குணங்குறைந்துநிறைவாகிநிற்கு
மாதாரமசுத்தசுத்தமாயையாகுங்
குலவுதேவர்கண்முதலாநரகர்ருய்க்
கோடிபேதங்களெல்லாநீமிந்த
நிலைமைகேடாய்க்காலவெல்லைநீங்கா
நீசேலாடுமிதுநீணுலகினெறியே.

(இ-ள்.) உலகு-நெறியே - உலகமென்பதான்மாக்களாய், அவர்களுக்குத் தனுகரணாதியாய், தோன்றி நின்றிறுதல்செய்தும் அவர்க்கொழியாத துக்கமுமொழியாத சுகமுமுண்டாய், எட்டுமுதல் எண்ணிறந்த குணங்களேறியுங் குறைந்தும் நிறைவாகியும் நிற்கும்; அவற்றுக்காதாரம் சுத்தமாயை அசுத்தமாயையாகும். கொள்ளப்பட்ட பிரமன் மாலாதி தேவர்கள்முதலாய் மலத்திற் கிருமியீறுக அநேககோடிபேதமாம். அவை காலவெல்லைப்பட்டிறந்து பிறந்து ஊஞ்சலாடும் முறைமைபோல மாறிமாறிச் செல்லாநிற்கும் இது உலகத்தினெறியாம். எ-று. (உஎ0)

அசித்தாகிய பிரவஞ்சஞ் சடமென்பது கூறுகின்றார்.

கனவுநெடும்பேய்த்தேரிந்திரசாலமுறையுங்
கருத்துநினைவும்பழுதைகடற்றிரைகளவையுஞ்
சினைகுடம்பையவைவீடுஞ்செங்கதிர்முன்பனியுஞ்
சேர்பொறியின்வகையறிவுஞ்சிறந்தவாக்குரையு
மனையவைநின்றழிந்துண்டாவதுபோலேநேரே
யகலவுயிருந்தோன்றியழிதலாலிவற்றை
முனைவனுடலுணர்வென்றுசொல்லார்நல்லோர்
மூவுலகுமசத்தெனவேமொழிவர்காணே.

(இ-ள்.) கனவு-காணே - கனவு பொய்யாமாபோலவும், பேய்த்தேரசத்தாமாபோலவும், இந்திரசாலமேபோலவும், நினைவு பேதிக்குமாபோலவும், குமிளி தோன்றி மறையுமாபோலவும், பழுதைமாறிக் காட்டியழிதல் போலவும், கடற்றிரையெழுந்து மடியுமாபோலவும், முட்டைக்கூட்டிலுயிர்கள் விட்டகலுமாபோலவும், ஆதித்தன்முன் பனிபோமாறுபோலவும், இந்திரியங்களறிவு கணத்திற்கெட்டுண்டாமாபோலவும், வாக்கிற்சொல்லுத் தோற்றமுமீறுமுண்டாவதுபோலவும் முறையே ஆன்மாத் தொட்டதுபற்றி விட்டது மறந்தெல்லாவுலகமுமழிந்துண்டாய் வருதலால் இவற்றைக் கர்த்தாவின் உடலென்றும் அறிவென்றும் நல்லோர் சொல்லார்; எல்லாவுலகும் அசத்தென்றே சொல்லுவார். எ-று. (உஎக)

சத்தவரைசெய்துணர்த்துகின்றார்.

சத்துணரப்படாதுநிழல்போலநிற்குமென்னிற்
றருப்பனுமிலைத்தானும்புணரமாட்டா
துத்தமரைக்கொண்டிடாததமர்களைத்தள்ளா
துடன்கலந்தோர்தமைக்கைக்கொண்டுணர்வுகொடுத்திடா
நித்தியமாகாதுமுயற்கோடுபோலு [து
நீடுமாகாயப்பூப்போலாமைமுதுகின்
வைத்தமயிர்க்கயிறுபோற்பொய்யாய்ப்போகு
மற்றிந்தச்சத்துமல்லமன்னனுருத்தானே.

(இ-ள்.) சத்துணரப்படாது நிழல்போல நிற்குமென்னில் - சத்தாகிய ஞானஞ் சிவன்வடிவம் அந்தத்திருவடி நிழலிலே மணற்பொடியின் விதனப்பட்டோர் மரநிழலிலாறுவதுபோலவாறினோர்க்குத் துயரந்தீர்க்குமதுவே சிவன்வடிவமெனில்—தருபயனுமில்லைத்தானும் புணரமாட்டாது - அப்படி மரநிழல்போலப் பொருந்தின் நிழல்சேர்ந்தாலும் பயனில்லை அது தானுய் நம்மை யணைத்துக்கொள்ளமாட்டாது—உத்தமரைக் கொண்டிடாத தமர் களைத் தள்ளாது - உத்தமரிவரென்று கைக்கொள்ளமாட்டாது, அதமரிவரென்று வந்தடைந்தவர்களைத் தள்ளமாட்டாது—உடன்கலந்தோர்தமைக் கைக்கொண்டுணர்வு கொடுத்திடாது - தன்னைச் சேர்ந்தோரைத் தன்னிடத்திருத்தி யறிவிக்கமாட்டாது—நித்தியமாகாது - அழியாததாகி நில்லாது —முயற் கோடுபோலும் நீடுமாகாயப் பூப்போல் ஆமைமுதுகின் வைத்த மயிர்க்கயிறுபோல் பொய்யாய்ப்போகும் மற்றிந்தச் சத்துமல்ல மன்னனுருத்தானே - முயற்சி கோடுபோலும், ஆகாயப்பூப்போலும், ஆமைமுதுகின் மயிர்க்கயிறுபோலும் நிழலுவமைதானே பொருளுவமமாதலாலிந்தச் சத்துந் தலைவன் வடிவமல்லக் காண்குதி. எ-று. (உ௭உ)

சத்துமசத்துஞ் சதசத்துமல்லவென்று கூறுகின்றார்.

ஆதலாற்சத்துமலவசத்துமல்ல
அரியசதசத்துமல்லவாகுமப்பொருடா
னீதலவாமிவைமனவாக்காலுணருமதனு
லிவையிற்றையன்றென்றதாகுமப்பொருடா
னேதுமனவாக்கிறந்தசுத்தமாதலினு
லுறையாதுதன்போதமொன்றுமறநின்றே
நீதியினுனீயவிழவிருந்துபார்க்கி
னிகழுமச்சுகருபநிலையாகுங்காணே.

(இ-ள்.) ஆதலாற்சத்துமல அசத்துமல்ல அரியசதசத்துமல்ல வாகும் அப்பொருடான் - இப்படிச்சந்த சத்துக்கள் மனவாக்காலறியப்படுதலால் அழியப்படு மருவானசத்துக்கும் ஆகாயம்போலும் வெயில்போலு-மறிவில்லையாமதனுல் ^ஞானமுமல்ல அஞ்ஞானமுமல்லக் கலந்த நிலைமையுமல்லவாம்—ஈதலவாமிவை மனவாக்காலுணரு மதனுலிவையிற்றை யன்றென்றதாகு மப்பொருடான் - இதனியல்பல்லவாம் இவை மனவாக்காலறியப் படுகையால் அப்பொருள் மனவாக்கிறந்ததாதலா லிவையன்றென்றதாம்—ஓதுமனவாக்கிறந்த சுத்தமாதலினுல் - சொல்லப்பட்ட மனவாக்கிறந்தஞானமாதலால்—உறையாது தன்போதமொன்று மறநின்றே நீதியினு னீயவிழவிருந்து பார்க்கில் நிகழுமச்சுகருப நிலையாகுங்காணே - இப்பொருளினுறையாது தன்போதமொன்றுமற நின்றவிழவிருந்தால் விளங்குமச்சுகருபம் நிலையாகு மறிகுதி. எ-று. (உ௭௩)

சுகரூபதரிசனம்கூறிச் சுகாதீதங் கூறுகின்றார்.

ஒளிக்கிரவியெனவுமின்னுள்ளொளியதெனவு
முயருநவமணிகடனினுட்சுடரதெனவும்
களிப்புடனேயுருகும்பொன்னிற்சுடரதெனவு
நாடுசலத்துள்ளிரவிநாட்டுமொளியெனவும்
விளைத்தபடிகத்தூணின்மத்தியானத்தின்
மேவுமொளியெனவுமேலோங்கல்சுகரூபங்
கிளைப்பறவிப்பரையாதீதத்தடங்கியிருக்கக்
கிட்டிடுமச்சுகத்தழுந்தலதீதமாங்கேளே.

(இ-ள்.) ஒளிக்கிரவியெனவும் - ஆதித்தப்பிரகாசத்திலே விழியுறைத்தாலாதித்தனொளி தோன்றுவதுபோலவும்—மின்னுள் ஒளியதெனவும் - மின்னையுறைத்துநோக்கினால் ஒளிக்குள்ளொளிதோன்றுவது போலவும்—உயருநவமணிகடனின் உட்சுடரதெனவும் - மிக்க நவமணிகளினூடே விளங்குஞ் சுடர்போலவும்—களிப்புடனேயுருகும் பொன்னிற் சுடரதெனவும் - செறிவுடனேயுருகின பொன்னுருவதன்முன்னுள் விளங்குமொளிபோலவும்—நாடுசலத்துள்ளிரவி நாட்டுமொளியெனவும் - தெளிந்த நீரின் மத்தியானத்திலிரவி கிரணமுள்ளே விளங்குமொளிபோலவும்—விளைத்த படிகத்தூணின் மத்தியானத்தின் மேவுமொளியெனவும் - ஒளியுண்டாகும் படிகத்தூணின் மத்தியானநேரத்திற் பொருந்து முள்ளொளிபோலவும்—மேலோங்கல் சுகரூபம் - மேலே விளங்குவதும் சுகரூபமதாம்—கிளைப்பற இப்பரையாதீதத் தடங்கியிருக்கக்கிட்டிடும் அச்சுகத்தழுந்தல் அதீதமாங் கேளே - ஆகாயத்திலே வாயவடங்கினாற்போலப் போதக்கிளைப்பற்றிருந்த போதவ்வொளிவந்துதோன்றும்; தோன்றிய சுகத்திலழுந்துவது சுகாதீதமாம். அவ்வழுந்துதலை மேலே கேட்பாயாக. எ-று. (உஎ௬)

தன்செயலறவேண்டுமென்று கூறுகின்றார்.

நிற்குமதுபாவியாதுபாவகத்தைவிடாது
நேரதுதாமென்னுதுநிலைகுறிக்கொண்ணுது
பற்றறவுமாகாதுபற்றவுமாகாது
பாதமெனிலடியென்றாலுமிரண்டாகு
முற்றியதுநாமென்றான்மோகமாகு
முழுதுநாந்தாமென்றாற்பழுதுபட்டுமுடியும்
அற்றநிலைதனிற்பதைப்பற்றிருப்பையாகி
லச்சுகமாமுருவம்வந்தடையுங்காணே.

(இ-ள்) நிற்குமதுபாவியாது - சுகரூபதரிசனப்படுவதுமுறைமையாய் நிற்கவுமொண்ணாது—பாவகத்தைவிடாது - பாவகம் விட்டிருக்கவுமொண்ணாது—நேரதுதாமென்னாது - அந்தநேர்தானே நேரென்று தரிசிக்கவொண்ணாது—நிலைகுறிக்கொண்ணாது - அந்நிலையிலுறைக்கவுமாகாது—பற்றறவுமாகாது - உறையாமல் விட்டிருக்கவுமாகாது—பற்றவுமாகாது - உன்னியிருக்கவுமாகாது—பாதமெனிலடியென்றாலு மிரண்டாகும் - அப்பொருளில்விழித்துயிரென்று கொள்ளிலுமிரண்டாகும்—முற்றியதுநாமென்றால் மோகமாகும் - அதுநாமென்றுதியானித்தா லதுவுமஞ்ஞானமாம்—முழுதுநாம்தாமென்றாற் பழுதுபட்டுமுடியும் - எல்லாநாமேயென்றால் ஆன்மவாதமாய்க் குற்றமாம்—அற்றநிலைதனில் பதைப்பற்றிருப்பையாகில் அச்சுகமாமுருவம் வந்தடையுங்காணே - நீ நின்றநிலையிலே சும்மாவிருந்துவிடிற் சுகசொரூபந்தோன்றும் அறிகுதி. எ-று. (உஎரு)

நிட்டைமுறை கூறுகின்றார்

உயிரெனவும்பரையெனவுஞ்சிவமெனவுமூன்றா
முருக்காணவிலையானுமுயிர்நடத்தலானும்
பயிலுமிடத்துச்சுட்டவரியதெனலானும்
பார்த்ததெல்லாமப்பதியின்செயலோதலானும்
வியனுலகமிவனாலேசேட்டித்தலெனினும்
வியந்துணர்ந்தார்க்குணர்வரியனாய்க்கோடலானும்
பயனளித்தல்கொளல்காணப்படுதலானும்
பார்த்தழுந்தாதிவையாகும்பதைப்பற்றுப்பாரே.

(இ-ள்.) உயிரெனவும் பரையெனவுஞ் சிவமெனவுமூன்றா முருக்காணவிலையானும் - இந்தச்சுகத்துக் கதிதமாவது முன்னே குறித்தறியப்பட்டஆன்மாவெனவுங் கூடிநின்ற பரையெனவும் மேற்றோன்றுவதான சிவமெனவுமூன்றுருவுங் காணப்படாதாக நினைத்தலானும்—உயிர்நடத்தலானும்-ஆன்மாவைநடத்துமென்று நினைத்தலானும்—பயிலுமிடத்துச் சுட்டவரியதெனலானும் - நிற்குநேரத்திலொன்றுஞ் சுட்டிக்காணவரிதெனலானும்—பார்த்ததெல்லா மப்பதியின் செயலோதலானும் - தோன்று வெளியெல்லாஞ் சிவன்செயலல்லவோவென்று சொல்லுதலானும்—வியனுலகமிவனாலே சேட்டித்தலெனினும் - அகன்ற பிரவஞ்சமிந்தப்பொருளாலே நடத்தப்படுமென்று சொல்லினும்—வியந்துணர்ந்தார்க்குணர்வரியனாய்க் கோடலானும் - தன்னையகலா துணர்ந்தார்க்கு முணர்தற்கரியனாய்க் கொள்ளுதல் காணப்படுதலானும்—பார்த்தழுந்தா திவையாகும் பதைப்பற்றுப்பாரே - இப்படிப்பட்ட நினைவுண்டாகவே நிட்டைகூடாதாமாதலால் இவற்றிற்போதமழுந்தாது பதைப்புநீக்கி வறிதேயிருந்துபார்க்குதி. எ-று. (உஎசு)

## ஏழாஞ்சூத்திரம்.

ஆன்மநிலை கூறுகின்ருர்.

இப்படிக்காணப்படாதுயிர்க்குநிலைகேடோ
வேகதேசந்தானேவிதுவதுவாய்விடுமோ
அப்படியாஞ்சிவன்ருனேயுயிரறிவதாமோ
வன்னிலைதானறிவற்றுநிற்குமோதான்
ஒப்பிலாவுயிர்சத்தோசதசத்தாமோ
வுரையாதவசத்தோவிங்கேதென்றுண்மையினுற்
செப்பியருளிரென்னவுயிரின்றன்மை
திருந்துநிலையிற்செய்திபொருந்துநிலைபகர்வாம்.

(இ-ள்.) இப்படி - பகர்வாம் - இப்படிப்பார்த்தழுந்தின வவசரத்தின் ஆன்மாவினிலைகாணப்படாது தானுயிராதலால் அவ்வுயிர் நிலைகெட்டுப் போனதோ ஓரிடத்திலே யொதுங்கிநிற்குமோ ஆன்மாத்தான் சிவனுய்விடுமோ அப்படிப்பிரகாசித்தசிவன்ருனுன்மவறிவாமோ அதுவாகிஅறிவற்றுக் கிடக்குமோ அதுவன்றி உவமையற்ற உயிர் அறிவாமோ அறிவுமறியாமையுமாமோ சொல்லப்படாதசடமோ இவற்றிலேதென்றெனக் கருளுவீரென்றுகேட்க அதற்கவ்வுயிரின் முறைமையினைச்செவ்விதாக விளங்கவிந்நூலகத்தே சொல்வாம். எ-று. (உஎஎ)

இதுவுமது.

அறிவிக்கவறியுமுயிர்சத்தசத்தன்ருகு
மரியசதசத்துமலவருவுருவமன்ருங்
குறியதுதான்கூடியதுதானுகிநிற்குங்
குணமிதற்குச்சதசத்தின்குறியதுவேயாகும்
நெறியதுதான்கூடியதிற்றன்போதங்கலந்து
நிலையதனைக்குறித்தலானிலத்தியனீர்போலு
மிறையதனிற்பெத்தசித்தும்பெத்தசத்துமாகி
யிசைந்ததனிற்பயன்கொள்வானென்னுமுயிர்நிலையே.

(இ-ள்.) அறிவிக்க அறியுமுயிர் சத்தசத்தன்ருகும் - ஆன்மாவாவது அறிவிக்க அறிவதாம்; அது ஞானமுமல்லச் சடமுமல்லச் சிவனறிவிக்கத் தான் ஞானத்தைக் கூடியறியுமதாம்—அரிய சதசத்துமல வருவுருவமன்ரும் - அரிய சத்துமசத்துங்கூடிநிற்குஞ் சதசத்துமல்லவாம் அருவுருவுமல்லவாம்—குறியதுதான் கூடியது தானுகிநிற்கும் - இதற்கடையாளங் கூடியதுதானுய் அக்கினியின்றன்மைபோலத் தன்போதமேலிட்டுநிற்கும்—

குணமிதற்குச் சத்தசத்தின் குறியதுவேயாகும் - இதன்குணஞ் சதசத்தென்னுங் குறியையுடைத்தாம்—நெறியதுதான் கூடியதிற்றன்போதங் கலந்துநிலையதனைக் குறித்தலால் நிலத்தியனீர்போலும் - இதுநிற்கும்வழிகூடினவற்றிலே தன்போதங்கூடி மேலிட்டுத் தானதுவென்னத்தக்கதாக நிலத்தியல்பிலே நீர்திரிந்தாற்போலநிற்கும்—இறையதனிற் பெத்தசித்தும் பெத்தசத்துமாகி - சிவனாலே பெத்தசித்து பெத்தசத்து என மலங்கட்டுண்டவறிவென்றாகும் பெயராகி—இசைந்ததனிற் பயன்கொள்வான் - கூடியதனிலதுவாய்நின்று பயனனுபவிப்பன்—என்னுமுயிர் நிலையே - இதுவேயான்மாவின் நிலைமையென்று சொல்லப்படும். எ-று. (உ௬௪)

இதுவுமது.

அசத்தொடுசேர்ந்திடுநேரமசத்தெனலுமாகும்
அரியசத்தாதலினாற்சத்தெனலுமாகு
மிசைத்திரண்டுமறிதலாற்சதசத்துமாகு
மிதற்குளெழும்போதத்தைமுளைப்பியாதே
இசித்தவொளியுள்ளடங்கியிறந்தொடுங்காதடங்கி
லிப்படிக்காண்பதுசிவனுக்கின்பசத்தியெனும்பேர்
பசைத்தசுகாதீதத்தேபயில்வையாயிற்
பரமன்வெளிப்படுவனதுபாராய்நீயே.

(இ-ள்.) அசத்தொடு சேர்ந்திடுநேரம் அசத்தெனலுமாகும் - அஞ்ஞானத்தோடுகூடினால் ஆன்மாவை யஞ்ஞானியென்னலாம் அதுநித்திரையிற் சேருமது—அரிய சத்தாதலினாற் சத்தெனலுமாகும் - சத்தோடு சேர்ந்தாற் சத்தென்றுசொல்லலாம் அதுபரையுணர்சாக்கிரம்—இசைத்திரண்டும் அறிதலாற் சதசத்துமாகும் - இரண்டோடுமிசைந் திரண்டையு மறிதலாற் சதசத்துமாகும் அதுபுருஷ ரூபமாம்—இதற்குளெழும் போதத்தை முளைப்பியாதே - இந்த நிலைமைக்குள்ளேயுண்டாகும் போதத்தைத் தோற்றுவியாமல்—இசித்தவொளியுள்ளடங்கி யிறந்தொடுங்கா தடங்கில் - இந்தவொளியுள்ளடங்கி யிறந்தொடுங்காதடங்கினால்—இப்படிக்காண்பது சிவனுக்கின்பசத்தியெனும்பேர் - இப்படிக்காணப்பட்டது சிவனுக்கின்பசத்தியென்று பெயராம் இதுசுகாதீதம்—பசைத்தசுகாதீதத்தே பயில்வையாயிற் பரமன் வெளிப்படுவனது பாராய்நீயே - விருப்பமான சுகாதீதத்தேபயிலுவையாயின் அங்கேசிவப்பேறும் அதனைப்பதறாது நீகாண்பாயாக. எ-று. (உ௬௫)

## எட்டாஞ்சூத்திரம்.

சிவனேகுருவாகவந்தருளுமுறை கூறுகின்றார்.

இவ்வுயிரையிறைவனளித்திடுமுறைமையதுதா
னிலங்கியமாணாக்கனித்திரையிலிசைந்தானைச்

செவ்வையிலேதண்டினாற்குருவெழுப்புமதுபோற்
செறிமலத்தாற்செனனத்தேதிரியுமான்மாவை
வவ்வியெழுப்பிப்போதம்வருவிக்குமதுவும்
மன்னவன்றன்மகன்வேடர்வகையிற்சேர்ந்தானை
யிவ்வியல்பன்றெனவணைத்துத்தானாக்குவதும்போ
லிறைவன்மலநீக்கியின்பமாக்கிவிடுங்காணே.

(இ-ள்.) இவ்வுயிரை இறைவன் அநுக்கிரகிக்குமுறைமையைத்தான் இலங்கிய மாணாக்கன் நித்திரையி லிசைந்தானைச் செவ்வையிலே தண்டினாற் குருவெழுப்புமதுபோல் செறிமலத்தால் செனனத்தேதிரியும் ஆன்மாவை வவ்வியெழுப்பிப்போதம் வருவிக்குமதுவும் - செறிந்தமலத்தினாலே செனனமரணங்களிலே திரியாநிற்கும் ஆன்மாவாகிய பிராணிகளைச் சிவனனுக்கிரகிக்கு முறைமையாவது விளங்கியமடங்களிற் சீடனானவனித்திரையாயுறங்கினானை ஆசாரியன் செவ்வையேயெதிர்ப்பட்டு நின்று கைத்தண்டாற்றட்டி யெழுப்பிப் போதிக்குமது போலவும்—மன்னவன் தன் மகன் வேடர்வகையிற் சேர்ந்தானை இவ்வியல்பன்றென அணைத்துத் தானாக்குவதும்போல் இறைவன் மலநீக்கி யின்பமாக்கி விடுங்காணே - இராசாவின் மகன் பிறந்தவன்றே வேடரோடுகூடி அவர்செயலாயொழுகினானைப் பின்பு அவ்வரசன்கண்டு நீயிவர்கள்குலமல்ல நம்புதல்வனாகும் நம்வழியிலேவாவென்று பிறப்புணர்த்தித் தாமாக்குவதுபோலவும் சிவன் ஆன்மாக்களைக் கன்மவசமாக்கி மலபாகம் வருமளவும் பார்த்திருந்து உண்மையுணர்த்தினாலிவனறிவனென்னு மவதரத்திலே கண்டணைத்துத் தம்மையுணர்த்தியுணர்ந்தானாகச் செய்துவிடும். எ-று. (௨௮௦)

சத்திநிபாதவகை கூறுகின்றார்.

ஆக்கும்வகைமூவுயிர்க்குஞ்சத்திநிபாதத்தா
மதுதீவிரதரமுதலாயொன்றுநாலாமதனி
னேக்குமொருமலத்தோர்க்குநாலிரண்டோர்க்கெட்டு
நூதனமாமும்மலத்தார்க்கீரெட்டாகுந்
தேக்குதீவிரதரமந்ததரமாதிநாலிற்
சிவமுன்னலவனுதல்சேர்வையர்தல்
போக்குவரவிலதாதலிரண்டோர்கீழ்மேற்
புகழ்கிரியையுறழ்தல்போதமறத்தலாம்புகழே.

(இ-ள்.) ஆக்கும்வகை மூவுயிர்க்குஞ் சத்திநிபாதத்தாமது தீவிரதரமுதலாயொன்றுநாலாம் - திருவருளாகிய சத்திநிபாதமுண்டாகும்வகை மூவகை ஆன்மாக்களுக்குமுள் அவை தீவிரதரமுதல் ஒவ்வொன்றுக்குநாலாகப் பதினாறு

பேதமாம்—அதனின்னோக்கும் ஒருமலத்தோர்க்குநாலு - அவற்றுள்எவ்வுயிரின் செயலு மெவ்வுலகினெறியுங் கரதலாமலகம்போலக் கண்டிருக்கும் ஒருமலத்தா ராகிய விஞ்ஞானகலர்க்குத் தீவிரதரமந்ததரம் தீவிரதரமந்தம் தீவிரதரதீவிரம் தீவிரதரதீவிரதரம் எனநாலுபேதமாம்—இரண்டோர்க்கெட்டு - இருமலத்தோ ராகிய பிரளயாகலருக்கு தீவிரமந்ததரம், தீவிரமந்தம், தீவிரதீவிரம், தீவிரதீவி ரதரமென்னும் நாலும் முன்நாலுமாகஎட்டு—நூதனமாம் மும்மலத்தோர்க்கிரெ ட்டாகும் - புதிதாகிய மும்மலத்தையுடையோராகிய சகலருக்கு மந்ததரமந்தத ரம், மந்ததரமந்தம், மந்ததரமந்ததீவிரம், மந்ததரதீவிரம், மந்தமந்ததரதீவிரம், மந்தமந்ததீவிரம், மந்ததீவிரம், மந்ததீவிரதரமென வெட்டுமாகப் பதினறுபே தமாம்—தேக்கு தீவிரதரம் மந்ததரம் ஆதிநாலில் சிவமுன்னல் அவனுதல் சேர் வையாதல் போக்குவரவிலதாதல் - நிறைவுபெற்ற விஞ்ஞானகலருக்குத் தீவிர தரமந்ததரமுதற் சத்திநிபாதம்நாலில் மலபாகமும் நாலுவகையாம் அவை அதம பக்குவம் மத்திமபக்குவம் உத்தமபக்குவம் உத்தமோத்தமபக்குவமென்பனவாம். அவற்றில் அதமபக்குவஞ் சிவன் நமக்குமேலென்றுணர்வதாம்; மத்திமபக்குவஞ் சிவன்போல வடிவுபெறுதல்; உத்தமபக்குவம் நீங்காச்சேவைபண்ணுதல்; உத்த மோத்தமபக்குவமனுயிருப்பதாம். அது அசமாத்தகலுஷர் சமாத்தகலுஷர் மந்தி ரேசுரர் வித்தியேசுரராம்—இரண்டோர் கீழ்மேல் புகழ்கிரியையுறழ்தல் போத மறத்தலாம் புகழே - பிரளயாகலரும் முன்போல நாலுபேதமாம் இவர் கன்மபா கமும் மலபாகமும் நாலாம். அதுகீழ்ப் பிருதுவியப்புக்களிலுருத்திரராய்ச் சிவனு லுண்டாயதென்னும் நினைவுவருதல், மேலேஅக்கினிவாயு ஆகாசங்களிலுருத்தி ரராய்ச் சிவச்செயலாய்த் தங்களைப்பாவித்திருத்தல், பிரமவிட்டுணு உருத்திர ராய்புகழப்பட்டகிரியாசத்தியின் வசத்தாய்க்கிருத்தியஞ்செய்தல் அதுதங்களுட லுங்கரணமுஞ் சிவனுடலாகக்கொள்வது, கீழ்நோக்கியவும் மேல்நோக்கியவும் போதமறந்து வீரர் சீகண்டராதியவதரமாம் புகழையுடைத்தாதலாம். எ-று. ()

சத்திநிபாதவகைகூறித் தீட்சாபேதங் கூறுகின்றார்.

சகலர்க்குமந்ததரமந்தமெனவிரண்டுந்
தருநாலாவெட்டாகுஞ்சரியைவகைமுறையே
பகரரம்பைநீர்பச்சைமரநனைந்தவிறகு
பசுமையில்காட்டங்கரிசெம்புப்பொடிபொற்சோதி
தருநயனபரிசவாசகமானதசாத்திரயோசஞ்
சமயவிசேடநிருவாணஞானஞ்சாரப்
புகல்கின்றவவுத்திரியுநாலாறுகும்
போற்றுமிவையாகமத்திற்புகன்றநெறியாமே.

(இ-ள்.) சகலர்க்குமந்ததரம் மந்தமெனவிரண்டுந் தருநாலாவெட்டாகும் - சகலர்க்குச்சத்திநிபாதம் மந்ததரம் மந்தமெனஇரண்டுபகுதியாய்ச் சரியையாதி நாலுக்குமெட்டாம்—சரியைவகை முறையே - மந்ததர மந்ததரம், மந்ததர மந்

தமெனச் சரியைக்கும், மந்ததர மந்ததீவிரம், மந்ததர தீவிரமெனக் கிரியைக்கும், மந்த மந்ததர தீவிரம், மந்த மந்த தீவிரமென யோகத்திற்கும், மந்ததீவிரம், மந்ததீவிரதரமென ஞானத்திற்குமாக எட்டாம்—பகர் அரம்பை நீர் பச்சைமரம் நனைந்தவிறகு பசுமையில் காட்டம் கரி செம்புப்பொடி பொற்சோதி - அவ்வெட்டில் அரம்பைத்தண்டிலக்கினி பற்றினாற்போலத் தவஞ்செய்வாரைக் கண்டு தவஞ்செய்திடையிலே விடுவது மந்ததரமந்ததரம், நீரில் நெருப்புப்போலச் செய்யும் சரியை மெய்யெனக்கொள்வது மந்ததரமந்தம், இவை சரியை; பச்சைமரத்தி லக்கினி பற்றுவதுபோலக் கிரியைநினைவுபற்றி அருமைகண்டு விடல் மந்ததரமந்ததீவிரம், நனைந்த விறகிலக்கினிபோலப் பற்றவரிதாய்ப் பற்றினால் விடாதாகை மந்ததரதீவிரம்; இவை கிரியை; உலர்ந்தவிறகிலக்கினி போலப் பற்றினது விடாமற் பிடித்தல் மந்தமந்ததரதீவிரம், கரியிலக்கினிபோலக் காட்டின யோர்கஞானம்பற்றல் மந்தமந்ததீவிரம், இவை யோகம்; செப்புப் பொடியிலக்கினிபற்றின பொருளைப் பற்றுவிடாமற் பிடிப்பதுபோல ஞானத்தைப்பற்றல் மந்ததீவிரம், சுவணத்திலக்கினிஙகெப் பற்றியுருக்கிக் கலப்பதுபோல ஞானத்திலழுத்தல் மந்ததீவிரதரம், இவை ஞானமாம்—தகுநயனம் பரிசம் வாசகம் மானதம் சாத்திரம் யோகம் சமய விசேட நிருவாணம் ஞானஞ் சாரப் புகல்கின்ற அவுத்திரியும் நாலாறுகும் போற்றும் இவை ஆகமத்தில் புகன்ற நெறியாமே - இவையுடையோரைத் தீட்சிக்குமுறைமையும் சட்சுதீக்ஷை, பரிசதீக்ஷை, வாசகதீக்ஷை, மானததீக்ஷை, சாத்திரதீக்ஷை, யோகதீக்ஷையென்னுமாறும் இவையங்கமாயுள்ள அவுத்திரிதீக்ஷையும் சமய விசேஷ நிருவாண ஞானமாகிய நால்வகையாய் முன்னைய அறுவகையிலும் ஒன்றிற்கு நாலாக இருபத்துநாலாகும். துதிக்கப்படுகின்ற இவைகள் ஆகமங்களிற் கூறுமுறைமையாம். எ-று.

நிருவாணதீக்ஷையே ஞானதீக்ஷையாகவும் வேறுபடுத்தோதியது அனுட்டிப்பின் வேறுபாட்டாலடையும் முத்திபேதங் கருதியென்க. இது முத்திவகை கூறுமுரையிற் காண்க. அறுவகைத்தீக்ஷையாவன அத்துவாமார்க்கங் குறியாமற் குறுத்துப் பாசங்கழலப் பார்த்தல் சட்சுதீக்ஷை, அப்படிப்பார்த்துச் சிவஅத்தம்வைத்தல் பரிசதீக்ஷை, அப்படிக்குறித்து மந்திரமுபதேசித்தல் வாசகதீக்ஷை, அப்படிக்குறித்து யோகவழியால் சீடனது இருதயத்திற் பிரவேசித்துச் சிந்தித்தல் மானததீக்ஷை, ஆகமப்பொருளையுபதேசித்தல் சாத்திரதீக்ஷை, யோகத்தாற் சீடனுடைய இருதயத்திற் பிரவேசித்துச் சிவனைப் பாசம்பறியப் பார்த்துச் சிவனிடத்திலே யோசித்தல் யோகதீக்ஷை. இவை அவுத்திரிக்கருகரல்லாதவர்க்குச் செய்வதும் அவுத்திரிக்கங்கமெனவுமறிக. எ-று. (உஅஉ)

பதமுத்தி பரமுத்திவகை கூறுகின்றார்.

இவ்வகைத்தீட்சைகளினாற்பேறுநானுலாம்
இலங்குமிவைநாதமார்க்கம்புத்ரதிமார்க்கந்தான்

செவ்விதினிற்சகமார்க்கஞ்சன்மார்க்கமாகச்
சேருமவைநாலுன்காய்த்திகழுமங்கதினேர்
அவ்வியநெஞ்சத்தாரைவிளக்கியளித்திடுதல்
அரன்பணிதானவனுகையம்முறைமைகழன்று
திவ்வியமாந்திருநோக்கமாதிசேர்ந்தோர்
சிவஞானநெறிபெற்றசேர்வையிசைத்திடுவோம்.

(இ-ள்.) இவ்வகைத் தீட்சைகளினுற் பேறு நால்நாலாம் - இப்படிச் சொல்லப்பட்ட தீக்ஷைகளாற் பெறும்பேறு பதமுத்தியும் சகளசாயுச்சியமும் நிட்களசாயுச்சியமுமெனப் பதினறுபேதமாம்—இலங்குமிவை தாதமார்க்கம் புத்திரமார்க்கந்தான் செவ்விதினிற் சகமார்க்கம் சன்மார்க்கமாகச் சேருமவை நாலுன்காய்த் திகழும் அங்கதினேர் - இவை விளங்குந் தாதமார்க்கம் நாலு, புத்திரமார்க்கம் நாலு, சிறந்த சகமார்க்கம் நாலு, சன்மார்க்கம் நாலாகப் பதினறும்; அவை உருத்திரபதம், ஈசுரபதம், சதாசிவபதம், சிவபதமென்பவற்றடையுமவை பதமுத்தியும், சகளசாயுச்சியமும், நிட்களசாயுச்சியமுமாம்—அவ்வியநெஞ்சத்தாரை விளக்கி யளித்திடுதல் அரன்பணிதானவனுகை யம்முறைமை கழன்று திவ்வியமாந் திருநோக்கமாதி சேர்ந்தோர் சிவஞான நெறிபெற்ற சேர்வையிசைத்திடுவோம் - அவை வருமாறு அஞ்ஞானநெஞ்சுடையாரை அஞ்ஞானம் நீக்கியளித்தல் அரன்பணிசெய்தல் அவன்வடிவம்போல்கை அவன்ருனுகையாம் அம்முறைமை நீங்கத் திவ்வியமாகிய சட்சுதீக்ஷைமுதலிய அறுவகைத் தீக்ஷையுடையோரும் சிவஞானமுறையைப் பெற்றபேற்றையு மிதன்பின் சொல்வாம். எ-று.

உதாரணம் உருத்திரரீசர்க்குச்சதாசிவர்க்குநேரே தெரித்தசிவனுக்கடிமைசேர்பு. உருத்திரராதியுருவருகுசேர்கை தெரித்தபுத்திரமார்க்கச்சேர்பு. இலயசிவன்வடிவதாகுமுறை திவ்வியநிலையிற்சகமார்க்கநேர்பு. அவ்வவ்வுருவிலருவினிற்சேர்ந்திடுதல் செவ்வேசாயுச்சியமாய்ச் செப்பு. என்பனவற்ருற் காண்க. அறுவகைத் தீக்ஷையுடையோருஞ் சிவஞானிகளாவாரென்பதற் குதாரணம் நோக்கான்மாயைபரிசத்தானுண்மைவினைமந்திரச்சொல்லாற் ருக்குஞ்சுத்தமாயையதூதியானந்தன்னுற்சாருமலம் பார்க்குமிகுபாவனையாலே பகைத்ததிரோதம்யோகத்தாற் றேக்குமான்மபோதமிவைசேரக்கழலுங்கண்டீரே. என்பதனுலறிக. (உ௮௬)

இதுவுமது.

அந்தரத்தோர்தேவர்முதல்விஞ்ஞானகலர்க
ளவரீருயடைவதெல்லாம்பதமுத்தியாகும்
இந்தவகைரவுத்திரியாலுண்டாகுமவைதா
மிசைந்தசரிதாதியினுலிவர்க்குமேல்ாக

வந்தபதப்பெரும்பேறுமருவுநிருவாண
வகையினோர்தீவிரதரவகையிற்சேர்ந்தோர்
தந்தமதுநிலைமையினையுரைக்கின்ஞானத்
தகைமையாநன்னெறியின்றன்மையாமே.

(இ-ள்.) அந்தரத்தோர் தேவர்முதல் விஞ்ஞானகலர்களவரீறு அடைவ தெல்லாம் பதமுத்தியாகும் - அவுத்திரிதீக்ஷைக் கருகரல்லாதவர்களுக்குச் செய்யப்படுஞ் சாமானிய சமயதீக்ஷைமாத்திரத்திலே அனுட்டானங்கள் கைவிட்டுத் திரிந்தோர்க்குப் பிசாசர், குய்யர், சித்தர்முதலானவர் பதமாம்; மந்திரசெப அனுட்டானங்களால் இந்திரன்முதலானவர் பதமாம்; அனுட்டானம், தானம், மகேசுரபூசை செய்வோர்க்கு விஞ்ஞானகலர், பிரளயாகலர் பதமாம்—இந்த வகை அவுத்திரியாலுண்டாகு மவைதாமிசைந்த சரிதாதியினுலிவர்க்கு மேலாக வந்தபதப் பெரும்பேறும் - இங்கே விதித்த பகுதியான அவுத்திரிதீட்சையாகிய விசேடமாகிய சமயதீக்ஷை விசேடதீக்ஷைகளினு லிசைந்த முறைமைகளிற் தாதமார்க்கம் புத்திரமார்க்கம் சகமார்க்கங்களிற் பொருந்தி அவ்வழியிலே நின்றால் இவர்க்குப் பயனுவது விஞ்ஞானகலர்க்கு மேலாகிய சாலோக சாமீப சாரூபபதங்களாம்—மருவு நிருவாணவகையினோர் தீவிரதரவகையிற் சேர்ந்தோர் தந்தமது நிலைமையினையுரைக்கின் ஞானத்தகைமையா நன்னெறியின் றன்மையாமே - பொருந்தப்பட்ட நிருவாணதீக்ஷையாகிய ஞானதீக்ஷையினின்றோர் தீவிரதரவகையிலே சேர்ந்தவர்; அவர்நிலைமை சொல்லுகில் சன்மார்க்கமாகிய ஞானமார்க்கத்தார் இவரில் ஓதல்முதலேந்தின்பின் தெளிந்து நிட்டைகூடினோர் சாயுச்சியமுத்தியைப் பெறுவர்; ஓதல்முதலியவற்றிலே நின்றுடல்விடுத்தோர் பதமுத்தியிலிருந்து சிவானுபோகமனுபவித்தொருசன்மம் பூமியிலேவந்து புண்ணியவான்களாயிருப்பார்க்குப் புத்திரராகி நிட்டைகூடிச் சாயுச்சியம் பெறுவார். எ-று.

நிட்டைகூடாது கேட்டதனைச் சிந்தித்தல் தெளிதலினின்றோர் சுத்ததத்துவ புவனங்களில் அபரமுத்தராகவிருந்து அங்கே பரமுத்தியையடைவரன்றி மீளாரென்பதறிக. சாலோகமாதி பதமுத்திபெற்றோரும் ஓதலாதியினின்றோரொப்பத் தத்தம் பதமுத்திகளிலே போகத்தை நுகர்ந்து பின் நிருவாணதீக்ஷை பெற்று ஞானமடைந்து பரமுத்தியைப் பெறுவர். (உ௪௪)

பத்திமார்க்கமுங் கூறுகின்றார்.

பாலர்மிகுதூர்த்தர்விலைமாதர்குட்டம்
பகரிழிநோய்கொண்டார்கள்கைகால்கள்குறைந்தோர்
ஆலுநீசத்தொழிலோரவர்களேனு
மறக்கரைத்தபத்தியாரதிதீவிரதரமாஞ்

சிலத்தாரவர்களேற்சிவஞானதீட்சை
தெரிசனத்தாற்செய்துதெரிசிப்பிக்கலாகும்
ஏலுமிதுமார்க்கநெறிவழியினில்லா
வெரியினிடைப்பட்டவைபோலேநீங்கியிடுமே.

(இ-ள்.) பாலர் மிகுதூர்த்தர் விலைமாதர் குட்டம் பகரிழிநோய் கொண்டார்கள் கைகால்கள் குறைந்தோர் ஆலுநீசத்தொழிலோர் அவர்களேனும் - ஏழுவயதுக்குட்பட்ட பாலராயினும், மிக்க தூர்த்தத்தொழி லுடையோராயினும், பொதுமகளிராயினும், குட்டமென்னுமிழிநோய் கொண்டவர்களாயினும் அவயவங்குறைந்தவர்களாயினும், அசைவுபட்ட சண்டாளர்முதலான வங்கிஷ ஈனரா யிழிதொழிலைச் செய்வோராயினும்—அறக்கரைத்தபத்தியார் அதிதீவிர தரமாஞ் சிலத்தாரவர்களேல் - கம்பமும் புளகமுங் கண்ணீருமாகிய பத்தியோடுங்கூடிப் பிரவஞ்சவாழ்க்கையிலே யகப்படாது சிவனளவில் வழிபாடு மிகவுடையராமாகில்—சிவஞான தீட்சை தெரிசனத்தாற்செய்து தெரிசிப்பிக்கலாகும் - இவர்களுக்கு ஞானதீட்சையாகப் பார்வையினுற் செய்து ஞானவுபதேசஞ் செய்யலாம்—ஏலுமிது மார்க்கநெறி வழியினில்லா எரியினிடைப்பட்டவை போலே நீங்கியிடுமே - பொருந்திய இவை தோஷமென்று சொல்லும்வழியிற் சொல்லப்படாது அக்கினியிலகப்பட்ட காட்டாதிகள்போல அவர்களிடத் தஞ் ஞானமெல்லாங் கெட்டுப்போம். எ-று. (உசுரு)

சிவஞானிகளுக்குக்கொடுக்குந் தானபலன் கூறுகின்றார்,

நீசர்களாய்க்குறைந்தவராயுலகநெறியில்ராய்
நிர்க்குணராய்நிந்திக்கப்படுமுடலினர்களா
யாசையராய்ப்புறப்பூசையற்றவரானுலு
மகத்திலறிவேவடிவாயிருப்பாராயின்
நேசமுடனவர்க்கிடுமுண்கொடுப்பவைகளெல்லா
நேர்திலத்தினளவேனுநீண்மேருவளவா
யோசைவரும்பயன்பலிக்குமென்றுவேத
முத்தமவாகமமெல்லாமுரைக்குங்காணே.

(இ-ள்.) நீசர்களாய்க் குறைந்தவரா யுலகநெறியிலராய் நிர்க்குணராய் நிந்திக்கப்படுமுடலினர்களாய் ஆசையராய்ப் புறப்பூசையற்றவரானுலும்- உலகத்தில் ஞாதாக்கள்குலமில்லாதவராய் மெய்குறைந்தவராய் உலகத்தோர் நெறிதப்பச் செய்பவராய் நற்குணமிலராய் எல்லாராலும் நிந்திக்கப்படுமுடலையுடையராய் ஆசைமிகவுடையராய் புறப்பூசைகாணப்படாதவராயிருந்தாரானுலும்—அகத்திலறிவே வடிவாயிருப்பாராயின் - சிவஞானச்செய லுள்ளேயுடையரா யிருப்பாராயின்—நேசமுடன் அவர்க்கிடுமுண் கொடுப்பவைகளெல்லாம் நேர்திலத்தினளவேனும் நீண் மேருவளவாய் - இந்த ஞாதாக்களுக் கமுதுசெய்யப்பண்ணித் திரு

மேனிக்கு வேண்டுவனகொடுக்கின் அவைஎள்ளளவாயினும் மகாமேருவளவாய் மிகுத்து—ஓசைவரும்பயன் பலிக்குமென்று வேதமுத்தம ஆகமமெல்லா முரைக்குங்காணே - கீர்த்தியுண்டாகும் பயன்பலிக்குமென்று வேதத்தினும் உத்தமமான ஆகமத்தினுமுரைக்கப்படுமோதலால் அவர்களை வழிபடுக. எ-று. (உஅசு)

சிவஞானிகளியல்பு.

பந்தத்திற்செகந்தன்னிற்பற்ளுென்றற்றுப்
பரமொழியப்பயிலாதபரத்தினரைப்பிறர்கள்
நிந்தித்தறுதித்தல்வடுப்படுத்தல்விரையளித்தல்
நீளவையினீக்கலவைநெறிகொள்ளல்செய்தால்
அந்தத்துக்கஞ்சுகங்கள்காணுராகி
யகிதமிதங்கெட்டவராயரும்பொன்னுமோடு
மெந்தத்தன்மையதென்றுகுறியாராகி
யிருப்பவரேபரமஞானிகளென்போரே.

(இ-ள்.) பந்தத்திற் செகந்தன்னிற் பற்ளுென்றற்றுப் பரமொழியப் பயிலாதபரத்தினரை - பந்தமாகிய தத்துவாதிகளிலுஞ் செகமாகிய புத்திர மித்திர களத்திர போகபோக்கியங்களிலும்ஆசையற்று மேலான ஞானமொழியப்பயிற்சி செய்யாத பரநெறியோரை—பிறர்கள் நிந்தித்தறுதித்தல் வடுப்படுத்தல் விரையளித்தல் நீளவையினீக்கல் அவை நெறிகொள்ளல் செய்தால் - அஞ்ஞானத்தார் நிந்தித்தல் வாழ்த்தல் ஊறுபடுத்தல் மணவிரைகளாற் குளிர்ச்சிசெய்தல் மிக்க சபையோர் முன்னரில்லாமல் நீக்குதல் சபையோர் முறைமையாகக் கொள்ளல் முதலியன செய்தால்—அந்தத் துக்கஞ் சுகங்கள் காணுராகி யகிதமிதங் கெட்டவராயரும்பொன்னுமோடு மெந்தத் தன்மையதென்று குறியாராகி யிருப்பவரே பரமஞானிகளென்போரே - அவர்செய்தவற்றிற் துக்கப்படுதல் சுகப்படுதல் செய்யாம லிதமகிதமிரண்டுங் கெட்டவராய்ப் பதார்த்தத்தளவிலே ஓடு மரியபொன்னுமொக்கக் கொள்பவராயிருப்பவரே மேலாகிய சிவஞானிகளென்று சொல்லப்படுவர். எ-று. (உஅஎ)

ஞானபேதங் கூறுகின்ளுர்.

வேறு.

இந்தமுற்பாசமோடுபசுபதிஞானமூன்ளு
முந்தியபாசஞானமான்மாமுன்னிட்டுக்காணும்
அந்தவப்பசுஞானந்தானப்பதியருளாற்காணும்
சந்திடும்பதிஞானந்தான்பதியினுனடத்துங்காணே.

(இ-ள்.) இந்தமுற்பாசமோடு பசு பதி ஞான மூன்ளும் - முன்னைய இந்தப் பாசம் பசு பதியென மூன்று முதலுக்கும் பாசஞானம் பசுஞானம் பதிஞான

